சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

(00)

# திருவிளையாடல்

## நாடகம்.

(*)

22650

இஃது
திரிசிரபுரத்தைச் சேர்ந்த திருமயம்

கிருஷ்ண பாரதிகள் அவர்களால்

இயற்றப்பட்டது.

[(...)]

ஷை.யார் பவுத்திரர் சாமிஅய்யர் புத்திரராகிய

மூந்துவையரால்

மசூலிபட்டணம்.
டோவ் முத்திராக்ஷரசாலையில்
அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

விலம்பி௵ சித்திரைமீ

இதன் விலை ரூபா ௨

1898




உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# கிருஷ்ணபாரதிகள்

## சரித்திரச்சுருக்கம்

இந்நூலாசிரியராகிய கிருஷ்ணபாரதிகள், திரிசிரபுரம்ஜில்லாவில் திருவயம் என்னும்கிராமத்தில், கலிசகம் [illegible]த்துக்குச்சரியான சாதாரணவருடம் பங்குனிமாதத்தில், பிராமணஜாதியில, மழநாட்டுப்ரஹத்ஜனம் என்னும் அந்தணர் மரபில் அவதரித்தனர். இவரது பிதாவின்பெயர் வேங்கடராமய்யர். மாதாவின்பெயர் அன்னபூரணியம்மாள். இவர் பால்யத்தில தமது பிதாவிடத்திலே வித்யாப்பியாசம்செய்யப்பெற்றுத் தமிழில் நல்லதேர்ச்சியை அடைந்தனர். தமிழைத்தவிரச், சிறிது, சம்ஸ்கிருத பாஷையும் அப்பியசித்துச் சங்கீத வித்தையிலும் வேண்டியதேர்ச்சியைஅடைந்தனர்.

இவ்வாறு தென்மொழி வடமொழிகளிற் பயின்று, ஸங்கீத ஸாஹித்யங்களில் வல்லவராகிப் பாரதிகள் என்று சிறப்புப்பெயர்பெற்று, நெடுநாள் தம்மூரிலேயே அநேகருக்குக் கல்விகற்பித்துக்கொண்டு வாசம்செய்துவந்தனர். அக்காலத்தில் அவ்வூரில் மழைவளம்குறைந்து விளைவில்லாமல் கொடிய க்ஷாமம் உண்டாகியது. அதனால பாரதிகள தம்மூரைவிட்டுச் சேலஞ்சில்லாவில், நீர்வளமும்நிலவளமும் பொருந்திய வேலூரென்னும் ஓரூரில், தமது குடும்பசகிதம் சென்று அங்கு இருபது வருஷகாலம் இருந்துவந்தனர்.

இங்ஙனம் தமது வித்வத்தால் காலக்ஷேபம் செய்துவருகையில், தாம் கற்ற கல்வியால் அழியாது நீடும் ஓர் பெரும்பயனைப் பெறவேண்டி, ஓர் சிறந்த நாடககாவியம் செய்ய உத்தேசம்கொண்டு, பகவத்விஷயமானதும், பக்தியைத் தருவதும், கேட்பவர்க்கு இரஞ்சனமானதும், நீதி, அன்பு, பொறுமை, முதலிய நற்குணங்களைப் போதிப்பதுமான சரித்திரமொன்றைக் கீர்த்தனமாகச் செய்யநினைத்து, திருவிளையாடற்புராணமென்னும் ஹாலாஸ்யமான்மியத்தை எடுத்துக்கொண்டு, மிகவும் பாடுபட்டுத், தமக்கு நேர்ந்த பல இடையூறுகளையும் பொருள்பண்ணாது, அருமையாக அதனை பபாடிமுடித்துப், பரீதாபி வருஷம் புரட்டாசிமாதத்தில, மதுரையில்சென்று அநேகபுலவர்களும் பிரபுக்களும் கூடிய பேரவையில், யாவரும் கேட்டு ஆனந்தித்துக் கொண்டாடும்படி, அதனை அரங்கேற்றித், தாம் நெடுநாளாகப்பெறமுயன்ற பெரும்புகழைப்பெற்றனர். இவ்வரியநூலைத் தாம் வேலூருக்குப் போகுமுன்னமே பாடத்தொடங்கி, நடுவில அநேக விக்கினங்களால் முடிவுசெய்யக் கூடாமல், பின்பு, தம்மூருக்கு வந்து நெடுநாளைக்குப் பின்னர் செய்துமுடித்தனரென்று கேள்வி.

இதன்பின், திருவரங்கமான்மியம், திருத்தவத்துறைமான்மியம், திருவன்பிலாலந்துறைமான்மியம், குமாரசம்பவம், பிரபோதசந்திரோதயம், முதலான அநேக நூல்களைக் கீர்த்தனையாகச், செய்து பல மாணாக்கர்களுக்குப் போதித்து, கலிசகம் [illegible]த்துக்குச்சரியான பிரபவவருஷம் ஆம்பசிமாசத்தில், த

மதுளவது வயதில், சந்நியாசம் பூண்டு, பரிபூரணதசையை அடைந்தனர். இவருக்குப் பிள்ளைகள் அறுவர்; பெண்கள் நால்வர்.

பாரதிகள் அரோகதிடகாத்திரராக நெடுங்காலம் ஜீவித்திருந்ததன்றியும் மரணபரியந்தம் தமது விடாமுயற்சியிலும் மனவலிமையிலும் எவ்வளவேனும் தளர்ச்சியடைந்ததில்லை. இதற்கு திருஷ்டாந்தம், இவர் சித்தியடைவதற்கு மூன்று நான்கு வருடங்களுக்கு முன்னே மாத்திரமே எழுதிய "விருஷபவாகனமகோற்சவகீர்த்தனை"யே போதுமானது. இவர் வித்தியாவிஷயத்திலன்றி லௌகிகவிஷயங்கள் பலவற்றிலும் மிக்க தேர்ச்சியுள்ளவர். கண்கண்டது கைசெய்யும் என்றபடி பல சிற்பநுட்பமான காரியமும் செய்யவல்லவர். யாவரையும் வசீகரம் செய்யும் சாமர்த்தியமும் ஒருவருக்கும் அஞ்சாததீரமும் செருக்கும் உள்ளவர்.

பாரதிகள் சிறிதுகாலம் உத்தரராமாயணகீர்த்தனை பாகவதகீர்த்தனை முதலிய பல நூல்களைப் பாடியுள்ள அனந்தபாரதிகளிடத்தில் கல்வி பயின்று கொண்டிருந்ததாகவும், பின்பு, அவரது நரஸ்துதிசெய்யும் சுபாவத்தை வெறுத்து அவரை விட்டு நீங்கிவிட்டதாகவும் சொல்வார்கள். பாரதிகளுக்கு காலத்து வித்துவான்களில் முக்கியமான நண்பர், கல்விக்கடலாய்க், கவிமுகிலாய் வடிவெடுத்திருந்த திரிசிரபுரம் மஹாவித்துவானாகிய மீனாக்ஷிசுந்தரம்பிள்ளையவர்களுக்கும் சிறிதுகாலம் வித்தியாபோதகராயிருக்கப் பெற்ற திரிசிரபுரம் வித்வவேதாந்த விவேகசிகாமணியாகிய ஆறுமுகம்பிள்ளையவர்கள். பிள்ளையவர்கள் பாரதியவர்களுக்குக் கல்வி விஷயத்தில் ஒருவாறு குருபாவத்தை வகித்திருப்பினும், வயசிற் சமானமானவரன்றியும், பாரதிகளிடத்தில் மிக்க விசுவாசமும் மதிப்பும் கொண்டவர். இவர் திருவிளையாடற் கீர்த்தனைக்குக் கொடுத்துள்ள சாற்றுகவியைப் படிப்பவர்களுக்கு இவ்வுண்மை எளிதில் விளங்கும்.

பாரதிகள் திருவிளையாடல் அரங்கேற்றம்பண்ணுதற்காக மதுரைக்குச் சென்றபொழுது, அங்குமேற்படி நூலைப் பாரதிகளைப்போலவே கீர்த்தனையாகச் செய்து காட்டுக்கோட்டைச் செட்டிகளின் ஆதரவைப்பெற்றிருந்த சுப்பிரமணிய ஐயர் என்பவரும் தமது நூலை அரங்கேற்றும்படி வந்திருந்ததாகவும், பாரதிகள் நூலுக்குமுன் தமது நூலை பிரகாசியாதோ என்னும் ஐயுறவினால், தம் நூலைப் பாரதிகள் அநுமதியோடு முன்னதாக அரங்கேற்றுவித்துக்கொண்டு சென்றதாகவும் கேள்வி.

திருவிளையாடற் கீர்த்தனையை முதனூலாகிய பரஞ்சோதிமுனிவர் புராணத்தை ஒட்டியே செய்திருப்பினும், சிற்சிலவிடங்களில் ஆதிநூலாகிய ஸம்ஸ்கிருதத்தை அநுசரித்தும், இதரநூலாசிரியர் சம்பிரதாயங்களை அநுஷ்டித்தும் மாறியிருக்கின்றனர். உக்கிரபாண்டியர் திருஅவதாரப்படலத்தில் மதுரைநகரத்தார் கெய்விளையாட்டு விளையாடினதாகவும், வளையல்விற்றபடலத்தில் வளைசெட்டியாக வடிவெடுத்த வந்தசுவாமி தம் முகத்திற் சிறிதும் குறுவேர்வையைக் கைத்தாற் பெண்கள் மீது படுமாறுதெறித்ததாகவும் கூறியிருப்பதனாலும் இன்னும் இது போன்ற சிற்சில பேதங்களாலும் இது காணப்படும்.

பின்வரும்கீர்த்தனை பாரதிகள் மதுரையில் மீனாட்சிஅம்மைசன்னிதானத்தில்பாடியது.

கலியாணி ஆதி.

பல்லவி

மலயத்வசபாண்டியராஜகுமாரீ நல்வாக்கருள்வாய்
மதுரைமீனாக்ஷிசுந்தரவல்லியே சாமளவல்லியே கோமளவல்லியே

அநுபல்லவி.

கலையணியுஞ் சடாதரியேசீல காதராகிய சுந்தரமூர்த்திக்குத்
தலைமையாகும்மதுரைவளர்ஜகஸாக்ஷிமீனாட்சி கடாட்சிபருசாடசரி மலய

சரணங்கள்.

மாலயனுக்கரிதாகுந்திருவடி மேலணிதண்டைசிலம்போடரைநால்
மாலையுடன்ரவிகோடியுதிக்கின்ற மாமுடியும்ரத்நஆர உரகமணி (கொண்டோய்
மாலைகளுந் தும்பை மாலைகளுங் கொன்றை மாலைகளும் வில்வ மாலைகளுங்
மாலுக்கிளையவளே ஜகனமோகினி மாயேயென்ன தாயேயுன் சேயைஅறிவாயே
மலயத்வஜ

வண்டிசையுங்குழலொண்டொடியேபுரை கண்டமுதேநகை கொண்டவளே பூ
மண்டலம் விண்டலம் நின்றபசுந்தங்க மாமலைதனைவளை கரும்பராபரையே
அண்டருடன்பல தொண்டர்களும்நறும் புண்டரீகனமுனி யென்றவரும்பலர்
கொண்டேநிதமபணி கின்றபதத்திருக்கோணிஷட்கோணிஸர்வாணிகலைவாணி
மலயத்வஜ (வையை

௩ நித்தியமாமுண்ட தத்தினிலேமனம் வைத்திடுதொண்டர்க்கித் தவினை
கற்றிவிடும்பூரணத்திசமர்த்திரூ காம்பிகையேபால கிருஷ்ணனைகவிக கருளே
வெற்றிபெறுஞ்சிவசத்திமெஞ்ஞானத்தினவித்தேசுந்தரரிடத்தில வளர்நாற்
பத்துமுக்கோணத்தினுற்றவளேஈசன்பாரிஉதாரிஓங்காரிசிங்காரியே மலய

சரித்திரச்சுருக்கம் முற்றும்.

———(...)———

உ

சிவமயம்.

சிறப்புப்பாயிரம்.

பெருங்கருணை சோடசாவதானி

முத்தழகையங்கார் அவர்கள் இயற்றியது.

ஆதிபெருங் கலியாண்டு நான்கா யிரத்துத் தொளாயிரத் தைம்பதின மேற், சொன்மூன்று சாலிவா கனவருட மாயிரத் துடனேழு நூற்றி னெழுபான், தொடர்நானதி னிகழ்பரீ தாபிகன் னியினமுதற் றேனைநாள வளா பக்கமும், ஆதியைய நதியுடைய புதியபுத வாரமுஞ் சத்தமா ரத்தமீனும் பதிபுகழ்தருதினத் ததிநிகொண மதுரையம் பதியிளதிமதிமிலைநத, பழ முதலெனுஞ் சுந்த ரேசர்திரு விளையாடல பகர்பெருங காப்பியமதாய, பாடலசெய் பரஞ்சோதி மாமுனி மொழிந்தபடி பதவிருத்தம் பிறவுமின, பாடக ரிசைக்குமா னாடக மெனும்விசை பசுந்தமிழத் தேன ருமையிலைப், பொதியவரைமுதியவரை கிகர்கலைவலோரும் புராணமுறை தெரியுமறையோர், புண்ணிய ரமேகரோமெ னணியுறை யாறுகாற பொறபீட மீதவைவரும்

போற்றிமகிழ் வுறவரங் கேற்றினு னூற்றினுயர் பொன்னிவட பால்விளங்கு
நன்னாட்டு மணிமல்கு சோணாட்டில் விபவம் பொருந்துதிரு வையநகரில்வாழ், ..
திசையத் திகழுமறை நாட்டுப பெருஞ்சனத் தந்தணரின் மந்திரியைசேர், ஆ
வரில் வேங்கட்ட ராமவே தியனீன்ற வனககவுணியகுலீனன், ஆரணத்தன்
னைவி பூரணத் தனயுகன அபராய தார நூபன், அப்பாவைய யப்பெயரொடு
பாரெலாம்புகழு மதுலகவி கிருஷ்ணய்யனே

———(0)———

மதுரை—அஷ்டாவதானம்,

## நாகலிங்கம்பிள்ளை யவர்களியற்றியது

சாற்றுகலி நான்கா யிரத்துத் தொளாயிரத் தைமபதுடன் மூனறதின
மேற், சாலயவா கனவருட மாயிரத் தெழுநூற்றி னெழுபத்துநானகுசார்
ந், தக்கபரி தாபிநா மத்திலகு சம்வற சரவகன்னி மதிலேகர், தானை
தேதியில பூர்வப க்ஷநதுதியை சௌமியவா ரமுமத்தமும், ஏற்றசு தி
னத்திற் பரஞ்சோதி மாமுனிவ னெம்பிரான் றெனகூடலில, எளிதிறபுரிந்
ததிரு விளையாடலெட்டெட் டினுக்கும்வட மொழியினின்றும், இனியநறு
மிழிற் புராணஞ்செய் காதையினை யெறிதிரைப் பொனனிநதி சூழ்ந், தெண்
ணிலவள மூறறஞ்சோ ணாட்டிற் பசுந்தள விலங்குமானி மாரபனமுததர், போ
ற்றுதிரு மாலமுருக வேளிருவர் சன்னிதி பொருந்தியெக் காலுமழியாப், புண்
ணிய நிலாவுதிரு வயநகரிள மேன்மைமித பூசுரர் குலாதிபதியாம், பனிதன
வேங்கடராம னினிதினருள் புத்திரன் புந்தியினி லெனறுமதுரை; புரியரசு
புரிசோம சுந்தரக் கடவுளிரு பொன்னடியை மறவாதவன், சாற்றிறையி லு
ளவிலக்ஷணகவிஞர்கொண்டாடி நாவலரும்பாவினமிக்க, மயமதுரா கவிகிருஷ்ண
பாரதி வடித்ததிப்த ரசவாரி கொணடிகிளினில, நலலோர்கரு மெல்லோர்க்
குமானந்த மீக்கொள்ள நாடகச செய்யுளாக்கி, கவிலரங் கேற்றினு னறகா
ற் பீடமிசை நாவலர்கள் துதிசெய்யவே.

———[0]———

## செய்யூர் தெட்சிணாமூர்த்திக்கவிராயரியற்றியது.

தடந்திகழ் தருஞ்செவி யடிக்கொடு நெடும்புய நவழ்நதிடு பிறங்க லிடை
வாய், தவம்பெறு மறைஞ சீத வமுதருங் கிரணமால தவளவெண ஞூழலி மதி
யம், சநதத மூவர்தாரகு வாய்ந்ததென வெணகோடி தாஙகியோங் கிப்பரவு
றும், தானமொரு மூனறும் பொழிந்தடைக் திசைமேவு தந்தா வளங்கடாங்
கும், நெடும்பவி கனிக்கவிரு தின்கூல முங்கரைய கிலைபெற்ற வாகதமாம்,
நீசசற்ற வெள்ளமா வேழ்பரிகொ ளாழியான் நேயமுற வெய்து நெறியை,
நெகிழா திருநதளவு முயர்புரிசை வாழகூட னிதநியம குணமெட்டினென,
திருமலை மழுவாளி மானேளி யருளாளி கினறேங்கு சோதியாதி, படங்கொ
டு விளஙகுறு திறநகடெ விபூண் படைத்தான படைத்த செலவன், பண
புற ரழற்கட பிரானமனவிளை யாடலாம் பறறுமறு பத்து நானகும்,
பரஞ்சோதி கூறுக தமிழகவிலயய நாடகப் பாவினில்வறை விற்கூறிநற, பஞ்
சல க்ஷணமபுண ருஞ்சேட னுந்தலை பரிந்தசைப் பசெய்தனன, வடம்பயி

செழுந்தரள மன்பரோ டேடிமென் மடவியர்க ணித்தெறிய வாண், மனைதொ
றுந் தெண்ணிலா வெலிரித் தார்சோழ மாமகர நாட்டின்மேவும், வாருலாம்
பொன்னிக்கு வடபாற் பொருந்துநீண் மாத்திருநயப்பதியில்வாழ், மறையவ
ர்கள் குலரத்ன மாங்கல்வி யகடலை மாந்திய கிருஷ்ணய்யனே

———(*)———

திரிசிரபுரம் வித்வவேதாந்த விவேக சிரோமணியாகிய

ஆறுமுகம்பிள்ளை அவர்களியற்றியது.

பொருணயமுஞ் சொன்னயமும் பானயமு மிசைநயமும் பொலிந்து தோன்
இருநயமும் பெறவெவர்க்கு மியற்செவியோ ளெம்மாக்குக கினிமையாக (ற
அருணயஞ்சேர் கூடனகர்க் கீசனணி யாடலைநா டகமாச செய்தான்
திருநயமப் பாவைய னெனுங் கிர்ஷ்ண பாரதிமா செலவ வானே.

அறுதிபதி பசுபாச மெனப்புகலா கமப் பொருளா யரிய முன்னூல
மறுதிபதிந் தலாக்கரிதாம் பூரணமே மூலலிங்க வடிவ மாகிக
கறுதிபதி மானமுற்றுங் கனபருக்கா லாடல்புரி காதை முற்றுந
தறுதிபதி யெனுங்கிருஷ்ண பாரதிமா டகமாகச் சாற்றி னனே

———()———

திரிசிரபுரம் மகாவித்துவான்.

மீனாக்ஷிசுந்தரம்பிள்ளை அவர்களியற்றியது.

பரவுதிரு வாலவாய்ப் பெருமானு ராடன்று பத்து நான்கும்
உரவுசெறி பலபதமாப் புனைந்துரைத்தா ரியாவர்க்கு முவக்கு மாறு
கரவுதவிர் வளம்பொலியுந் திருநயத்தி லெஞ்ஞான்று களிப்போனை மேன்மை
வரவுதவி ராதபுகழ்க் கிருஷ்ணபா ரதியெனுமா மறையோன் ருனே.

———[*]———

கும்பகோணம்காலேஜ் தமிழ்ப்பிரதமபண்டிதர்

திரிசிரபுரம்தியாகராஜசெட்டியார் அவர்களியற்றியது.

மாமேவு திருவால வாயிணிடத் தருட்கடலாய் வைகு மெம்மான்
தாமேவு விளையாடற் சொற்பொருணத் பத்திநலந் துலங்கி மேவ
பாமேவு செந்தமிழா ற பாடியுலகத் தனைகழுலித் ரைபயிற் பொனசேர்
பூமேவு திருநயம்வாழ் கிருஷ்ணபா ரதிப்பெயர்ப்பூ சுரனெனு கோனே.

———(*)———

திருநயம் — மாத்ருபூதேசவரசாஸ்திரிகள இயற்றியது.

சீருலவு திலமக ளுதறற்கை மேனனவொளிர் திருவால வாய்த்தலத்தில்
திருமாலு மயனுமறி யாதகரு வடிவுடித தேவதே வன்புரிந்த
ஏருலவு விளையாட லறுபத்து நான்கையும் பின்தத்து முதென்ன வுணரி
யாவரும் விருப்புறச் செந்தமிழ்ப்பாடக மாவியற்றுர் தனைகை நகரும்
தேருலவு பொன்னகரு மானமுள மீதுறாத திருவொப் பிலுக்கு வடபால
திகழ்திரு நயப்பதியில வேங்கடராமவே தியனுதவு சுதனிலகுநன
சீருலவு செஞ்சடைச் சோமசுந் தரனடியை நித்தநினை சித்தனவள்ளி
நேசனுக கோயபான கிருஷ்ணபா ரதிநாம நிபுண கவி யெனகுரவனே.

சிறப்புப்பாயிரம்முற்றும்

## படல அகராதி.



முற்றும்.



திருச்சிற்றம்பலம்.





# திருவிளையாடற்புராண

## நாடகம்

### விநாயகர்வணக்கம்—நேரிசைவெண்பா.

சீருலவு மீசன் திருவிளையாடற் கதையைப்
பாரிலுறு நாடகமாப் பாடுதற்கு—ஏரிலுறும்
சங்கமலிச் செங்கையுடைத் தந்தித் திகழுஞ்சரணத்தின்
துங்கமலர்த் தாமரை துணை.

தரு—ராகம், மத்தியமாவதி தாளம், ஆதி.

பல்லவி.

கணபதி சரணம் ஜயஜய கணபதி சரணம்

அநுபல்லவி

குணகரனே பரனே சுபகரனே—கோலமேவு பாசாங்குசகரனே, கணபதி

சரணங்கள்.

சோதிவிநாயகனே—பசுந்—தோகைவாகனுக்கு மூத்தவ நகனே
திசுந்தரிமகனே திருவிளை யாடல்நாடகத்துக் கருள்செய்கஜ முகனே

உ மங்களகரம்காணும் உன்னுடை வரத்தினலே நல்லவாக்குகள் தோணும்
அங்கமதுவைபூணும் திருவிளை யாடல்நாடகத்துக்கருளசெய்ய வேணும்

௩ தொண்டருக்கிதவானே கொடுந் தும்பிமுகாசுரனை வென்றஸ்ரீமானே
அண்டர்களபணிவோனே திருவிளை யாடனாடகத்துக்கருளசெய்தோனே

## சுந்தரேசர்தோத்திரம்

விருத்தம்

செந்திரு வளஞ்சுரக்குந் திருவால வாயி னின்று
சிந்தைசெய் திருநா லெட்டுத் திருவிளை யாடல செய்து
சந்தத மடியார்க் காகச் சாநித்யம் புரியும் சோம
சுந்தரக் கடவுள் செம்பொற் றுணையடி வணங்கு வேனே.

இராகம் சுருட்டி, தாளம் திரிபுடை.

பல்லவி.

கருத்தி னுனதடி நினைக்க வெனக்கருள்வாய்—ஸ்ரீசுந்தரேசா கருத்தில்

அநுபல்லவி.

மருத்து வன்பழியை யகற்றிப்பின்னயிரா
வதத்துக்குறுசாபம் துரத்திமதுரைந
கரத்தையமைத்தும லயத்துவசனுக்கரு
கயற்கண ணியைமக ளெனத்தந்தவனே கருத்தில்

சரணங்கள்

செனித்ததடாதகை மணத்தைச்செய்துநீதி
செலுத்தி ரஜதவம் பலத்துள்நடித்துயர்
அனத்தைக்குடபசிக் களித்தன்னகுழியும்
அழைத்துவையையுமங் கழைத்ததெய்வமே கருத்தில்

தனிக்கடலைவர வழைத்துமலயத்வ
சனைபபொன் னுலகைவிட் டழைத்துக்கிரும
ரனைத்தந்துசத்திசக் கரத்துடனேசெண்டும்
அளித்தவனியுங்கைக் கொடுத்தவரசே கருத்தில்

தடக்கடலசவற விடுத்திந்திரன்முடி
தகர்த்துவடமலை யடுத்துடபெருநிதி
எடுத்தந்தணமுனி வருக்குமறைநடபொருள்
இருக்கும்வகைதெரிந் துரைக்குமண்ணலே கருத்தில்

௪ விலைக்களவிலமணி யளித்தொருவருணன்
விடுத்தகடலைவற் றடித்துமதுரையைச்
சதுஷ்கூடபுரமென் றுரைக்கச்செயதுசித்த
சரித்திரம்புரிந்தா தரிக்குமையனே கருத்தில்

௫ பருத்தகருங்கல்லா னையைக்கரும்பருந்தும்
படிக்கிசைந்தமண ராலும்புங்கயங்கொன்று
விருத்தனைக்குமார னுருசெய்துமுதி
விருப்பினபடிமாறி நடிக்கின்றவனே கருத்தில்

௬ சமிககரியகொடும் பழிக்கஞ்சிமகாபா
தகந்தத்தவிர்த்தாசி ரியர்க்குதுனைவியை
ரமிககநினைந்தசி டனைசசெகுத்துவாள
ரவைச்சங்கரித்தவி டபத்துவசனே கருத்தில்

௭ கிழிக்கவருமாயப் பசுக்கடிந்துதென்னன்
கெலிக்கும்படிசாமந் தனுக்கருளிபடரி
செழிக்குமுவைவாகி ழியைத்தநதுவணிகத்
தெருக்குளவளைவிற்ற முதற்கடவுளே கருத்தில்

௮ கிடத்துடனஷ்டசித் தியைச்சொல்லிசென்னிக்குச
சிறக்கும்வாசலதிறந் தடைத்தொருசெழியனை
படைக்குநீர்பபந்தல்வைத் தடுமிரசவாதம்
பலிககசசெய்தருளன் பருக்கெளியனே கருத்தில்

௯ தெறித்தசோழனைம டுவிற்றள்ளிப்பின்னொரு
திருத்தொண்டனுக்குத்தன் டுலபைகொடுத்துமுன்
குறித்தமாமனாக வழக்குரைத்துவர
குணறகுசசிவனுல கிணக்குநதுயயனே கருத்தில்

௰ முனைத்திந்தனைச்சுமை வகித்துலவிதிரு
முகத்தைவரைந்துசசே ரனுக்கனுப்பித்தக
மணிப்பலகைவாணி னைசக்குதவியவன
மனைக்கிசையிலவாது வெலச்செய்தவனே கருத்தில்

௧௧ தவிக்கும்பன்றிக்குட்டி களுக்குமுலைப்பாலு
தவிப்பின்னவைக்குமந் திரித்தனத்தைத்தந்து
பலித்திடுங்கரிக்கு ருவிக்குபதேசித்துப
பழிப்பிலநாரைக்குமுத் தியைத்தந்தவனே கருத்தில்

கஉ புரந்துக்காலவாய்ப்பே ரமைத்துச்சுந்தரப்பேர்
பொறிக்குங்கணைதொடுத் தினிக்குந்தமிழ்மணம்
விரிக்குஞ்சங்கப்பல கையைக்கொடுத்துத்தரு
மியைக்கனகக்கிழி பெறச்செய்தவனே கருத்தில்

கங தருக்கமிகுநக்கீர னைக்கரையேற்றிச்செந்
தமிழ்க்கிலக்கணமகத்தி யனைக்கொண்டறிவித்துப்
பெருக்குந்தமிழ்ச்சங்கை யகற்றியிடைக்காடன
பிணக்குத்தீர்த்தருளுங் குணக்குஞ்சரமே கருத்தில

கச ஜகத்தில்வலைவீசித் துதிக்கும்வாதவூரர்
தமக்கைநெழுந்திலமுப பொருட்டுப்பயன்சொல்லிப்
பலத்தநரியைக்க வனப்பரிகள்செய்து
பரிக்கொருநரியா முடுக்குமீசனே கருத்தில்

கரு அணைக்குமணைச்சமண் திறைக்குவருஞ்சுரம்
அகற்றிப்பலசம ணரைக்கழுவிலிட்டுக்
கினைத்துயரும்வன்னி மரத்துடனிலிங்கம்
மறைபுமதுரைக் கழைத்தவள்ளலே. கருத்தில்

## அபசாரக்ஷமை

### விருத்தம்.

திருவளரும் புராணமு மாறுட் காதைம்
சிறந்ததிரு வாலவாய்ப் புகழை யீசன்
உருவளரம் பிகைக்குரைக்க முருக வேளக்கேட்
முனைத்ததைக் கொண் டகத்தியராய்ந் தோதும் வண்ணம்
பெருமுபரஞ் சோதிமுனி தமிழ்ப்பா வாகப்
பேசினார் யானதைநா டகமாக் கூறல்
கருடனா முனமெலூர் கொசுகுபறந் திட்டாற் போலக்
காட்டினேன பேதைமைபா ராட்டினேனே.

வல்லார்முன் னென்னதுசிற் றறிவினாலே
மதுராபு ரேசர்விளை யாடலமுற்றும்
பல்லோர்சொற் கேட்டுளறும் கிளியைப் போலே
பரிந்துபிந துளறுவதாற் பயனே தென்றும்
சொல்லாரும் பாவலரும் மலருங் கொண்டு
துணையடியிற் சூட்டியமெய்த் தொண்டர் போலே
கல்லாரும் வில்லாரு மெறிந்த பேரும்
காட்சிபெற்ற தேயிதற்குச் சாட்சி யாமே.

சோறுக்குத்தரும்பொருளும், கலக்கமின்றியறிந்து
சொலவிப்போதிக்குநதுணி வுண்டோ
நிலைக்கும்நவரசத்தின் விளக்கமும்வண்ணவகை
நெறிகண்டோதவுந்துணி வுண்டோ
ஓலிக்கும்ராகப்பரீக்ஷை தாளப்பரீக்ஷைதெரிந்
துசரிக்கவுந்துணி வுண்டோ நலமின்னதென்
றுணர்ந்திலேன் குற்றமின்னதென் றுணர்ந்திலேன் சொல்லிமெய்ப்பிக்க
உணர்ந்திலேன் சாமிமெய்ப்பிக்க உணர்ந்திலேன் ஒன்றுமிலமல
ஒருபிதவிக்குருடன் ஒண்டொன்னரிப்பதுபோல்
பொருள்சேருன்றன்புகழைப் புகழத்துமாசையாற்சொன்னேனே சாமி

முன்னரீயு மைக்குச்சொன்ன தறிந்துகும்ப
முனிக்கதைச்சணமுகன்சொன்ன
பின்னதையம் முனிசொன்ன துணர்ந்தேடன்பு
பெருகுபரஞ் சோதிசொன்ன
தனைமொருநாடகம் பண்ணத்துணிந்ததினென்
தவறுவெளிப்படுத்த லானேன
உனனுங்கவிவலவ ரென்னகவிதையிதென்
றேதிகிநதிக்கப்பட லானேன
மன்னுஞ்சுபமொழிய சுபமொழியுங்காணுவென்
மதியைத்தெரிவித்திட லானேன
மின்னுமணிவிளங்கும் பன்னகபூஷணுவென்
விரசமறிவித்திடலானேன் ஆகையாலெந்த
விதத்திலுறசொலவதெனது மதத்திலல்யாதுந்தோணுமல
பிதற்றிலுமுன்சித்தத்தின இதத்திலுந்கொண்டுபொறுத்தே
வெள்ளைமொழியிதுவென் றெள்ளிவிடாமற்றநனத
பிள்ளைமகிழவதுபோல சாமி

## நூற்பெருமை

### விருத்தம்

பகரொணு வீசன் காதை பலகோடி சரித்ர மாகும்
தொகையிலோ ரெழுத் துரைத்தாற் றெடர்பவக் தொலையு மென்றே
குகனசொல முனியகஸ்த்யர் கூறிய நெறிகண் டந்த
மகிமையான் றெரிந்த மட்டும் வகுத்ததை யுரைசெய் வேனே.

தோடிராகம்,—ரூபகதாளம்.

பல்லவி

பெறவொணுதமோக்ஷந்தரு மிதுசிவகதையே

குறுமுனிமுகவாரிஜ மலரில்பெருகும்சுதையே பெறவொ

அநுபல்லவி

பெறவேண்டும் பேறுகள் பெறுவதல்லால் முடிவில்
பிறவா ருக்கும் மருந்திது பெறவொ

சரணங்கள்.

௧ மதுராபுர நாதன்செய்து வந்ததுமுன் னாலே
ஒன்றுந்திரு விளையாடலை மகிழ்ந்துகேட்பதாலே
மதியாமலைதனாலே சங்க நிதியோடிலைசவாலே பத்ம
நிதியாதிதன் பாலே பெற்ற நிதிபதியைப்போலே
நிதியுந் தருமும் மேலே
நீளும்புகழுடனே நெருங்குமொருக்காலே பெறவொ

௨ மரணம்வரி லெமதண்டனே வாராமலே முடுக்கும்
வானோருல கதிலேசென்று மனமும்படி விடுக்கும்
சாரூபம்வருதடுக்கும் அருள் னரியபோகம்கொடுக்கும் சிவ
சாயுஜ்யம்செய்யத லெடுக்கும் ஐயன் திருவடிக்கிழொடுக்கும்
பெருகும் இன்பம் தொடுக்கும்
பீடுறவெக்காலும் பிரியாமலேதடுக்கும் பெறவொ

௩ பக்தசம்பத்துடனே பெறு பொருளும்வந்து கூடும்
பொருதும்பகை நடுக்கமுகொண்டு புறங்காட்டியேயோடும்
மெத்தநலம் தேடும் மங்கலத்தை யுறச் சூடும் நோ
யற்றவாழ்வும்பீடும் சூறை வற்றசெல்வத் தோடும்
புத்தி யறிவும் நீடும்
பூர்ணாயிசுடனே போகபாக்யம் கூடும் பெறவொ

அவையடக்கம்

விருத்தம்.

காருநீ ருநகையிறும் பதரு மாமிக்
நானகுமலர் பானமணிநெல விவற்றிற் கூடில்
பாருலகில விலைமதித்துக் கொள்வார் போலே
பங்கயன்மால் தேடியுங்கா ணாத மூர்த்தி
சிருடருந் திருவிளையாட் டதனிற் சேர்ந்த
செவ்விகொண்டென புனமொழியா லிசைத்த விந்தப்
பெருமரும் நாடகப்பா வினத்திற் குற்றம்
பேசிலார் கலவிதிகழ் மாசிலாரே.

முந்தியயன் றந்தபொற்று மரையில் சகதி
முதலவர்படிந் தடைந்துளபே றதுபோ லிப்போ
தந்தமகா தீர்த்தத்தில மனிதருஞ்சென
றுயமுத்தி பெறுகினென் றதுபோல நீல
கந்தரனே றியகதையைக் குகனுற் கோர்ந்து
கடமுனிவர் சொலப்பரநஞ்சா றியும் புகன்றார்
செந்தமிழக்கீர்த் தனையாக யானும் சொன்னேனே
தெருளுவீ ரென்பிழைதீர்த் தருளு வீரே.

சாவேரி ராகம், சாபுதாளம்.

பல்லவி

குற்றம்பொறுக்கவேணும் நல்லோரே குணக
குன்றின்மேலவிளக்கும் வல்லோரே.

அநுபல்லவி

முத்திபுரத்தில்வாழும் கர்த்தன்சரிதையிந்த
முறையெனவுணர்ந்துமுனை ராமதும்சொனுமென்றன் குற்றம்

சரணங்கள்

பூர்வமீசனுரைத்த சங்கிதையிலாலவாய்ப்
புகழையுமகத்தச சொலலி விரித்தாரே
சார்வபௌமனாகிய குகனறிந்ததைக்கும்ப
சம்பவ முனிவர்க்குச் சரித்தாரே
ஏவையாகவம்முனி யறிந்துவடமொழியால
இருமூன்றுயிரமாவிஸ் தரித்தாரே
ஆர்வமுடையபாஞ் சோதிதமிழக்கவிமூ
வாயிரத்துமுநூறு விரித்தாரே
சேர்வையாயிவர்கூற நானுமதற்குப பின்னர்
சிங்கங்கர்சசிக்ஷவொரு முயலுஙகூவிய தென்ன
பார்வைக்கி தொருநா டகமாகவுலகில் மனனை
பைந்தமிழறியாவென னேழைமையினுற்சொன்ன குற்றம்

கன்னகநதிமுதலாச் சேரும்வாரிதிதன்னில்
கால்வாயுஞ்சேருமன்றோ கோணமல்
புங்கமிகும்பெரியோர் சொலலைக்கொள்ளுவீரெனறன்
புன்சொல்லதையுந்தடை பூணமல
அங்கமிகுந்தவிலக்கியமுமிலக்கணமும்
ஆய்ந்தவுங்கள்போலகூறந் தோணமல்
துங்கமுடையதொண்டர் துதிக்கக்கீர்த்தனையாகச்

சொல்லத் துணிந்தேன் சற்றும் நாணமல்
பொங்கும் வாரியுண்டவர் அகத்திய லகமுய்யப்
புனிதமாக் கியமுகில் போலே நீங்களுந்துய்ய
திங்கள ணியும்கூடல் நாதர்க்கி னிமைசெய்யத்
தீதகற்றி யடியார் செவிக்கமு தெனப்பெய்யக் குற்றம்

இத்தரை யிலகர முதலாமெ ழுத்துக்கள் போல்
எங்கும் பரவி யெள்ளெண் ணெயும்போலே
சத்தகோ டிமந்திரங் களுக்குள்ளுந் தெழுத்தேயா
தாரமாயிருப்பதுன் மையினலே
சத்துக்க ளுரைக்குங்கா தையைச்சொல்ல இலக்கண
சம்பிரதா யம்அறிவே ஞேமேலே
தத்துப்பித் தாகவே அன்னைமுன் குளறிய
சவலைமொ ழிக்கிணையா யொருக்காலே
மத்திம மொழியினல் அறைந்திட்டா லும்நீக்க
மகிமையுள்ளவுங்களா லாமேயலது சேர்க்கச்
சித்தமாயிருக்கிறீர் அரைச்சொல் முழுச்சொல்லாக்கத்
தெரிந்தோர்கடனென்றெண்ணி மொழிந்தேனுங்களால் நோக்க குற்ற

கடவுளர்வணக்கம். தோடயம் — விருத்தம்

அருவுருவாய் முதலிடையாய்க் கடையு மாகி
அனைத்துயிர்க்கு முயிராகிச் சாக்ஷி யாய்நின்
றரியவொரு முச்சிறப்பும் பொருந்தி வாழும்
ஆலவாய்த் தலத்தில் முளைத் தெழுந்து சோதிச்
சொருபமதாய்ச் சிவக்கொழுந்தாய் வளரும் சோம
சுந்தரக்க டவுளடியார்க் காகச் செய்த
திருவிளையா டலையொருநா டகமாச் சொல்லச்
சிந்தித்தேன் தோடயத்தை முநதித் தானே.

தோடயம். — நாட்டைராகம், ஜம்பைதாளம்.

அயனரிதேடிய ஜக தீசன் அணிமதுராபுர நகர் வாசன்
கயல்விழிமாதுள மகிழ் நேசன் கதையை யான்பாட ஆஆ
உயரிருவானவர் பயம் நீக்கும் ஒருகொம்பிஞலசு ரனைத் தாக்கும்
ஐயவருள்பூண்டவ னியைக் காக்கும் தந்திமுகன் துணையே ஜயஜய

வரைமகளாகிய உமை பாகன் வடிவினில்நீடிய விடைவாகன்
திருவிளையாடிய கன யோகன் திருப்புகழைப் பாட ஆஆ
சுரபதிமாமகள் மண வாளன் சுருதிகள்தேடிய இருதாளன்
[illegible] [illegible] [illegible] துமம் துணையே ஜயஜய

[illegible] [illegible] புரமெரிதருமிள [illegible] கைபூணி
க[illegible]ருலவியமழு மிருக டாணி க[illegible]தலையயான்பாட ஆஆ
சதுமுகன்ஆகமகிழ கலி யாணி ச[illegible]ருகதொழவருள் திரிகோணி
மந்தரவுதவிய கலை வாணி மலரடிகள் துணையே ஜயஜய

ச தவமுறும்அடியவ ரநு கூலன் சதிமறலியையுதைத் திடும்காலன்
பவமகலவேயருள் குண சீலன் பண்பிசையைப் பாட ஆஆ
அவனடிதொழுவரும் சுரர் பந்தி அணிமுடிமிசைதன தடிபொருந்தி
நவமணிசிதறவே செயும் நந்தி நாதன்றருள் துணையே ஜயஜய

ரு மாதங்கமாகிய தனை யுரித்தோன் மாரனைநுதல்விழி யாலெரித்தோன்
ஏதங்கள்யாவையு மப கரித்தோன் இன்னிசையைப்பாட ஆஆ
வேதங்கள்தேடரும் சிவனை யொரு வேசித னாடலை யகற்றவரும்
தூதங்கமாம்படி யனுப்புந்திருச சுந்தரர்தாள் துணையே ஜயஜய

சு முந்தியமூவர்க்கு முதல் நாதன் முடியடிநடுவிகந் தவ
சுந்தரமூர்த்திக்கி னிய தூதன் சுபகதையை ப்பாட
ஐந்தெழுத்தாலம ணர்கள் பூட்டும் அருங்கல்லுடனேகட லையுமீட்டும்
அந்தமிலெழுபிற வியுந தாட்டும் அப்பர்தாள் துணையே ஜயஜய

எ [illegible]பரமருளிய கறைக் கண்டன் இருவினையிருளகற் றியசண்டன்
[illegible]கையுள தொண்டருக் குத் தொண்டன் சரித்திரத்தைப் பாட ஆஆ
சகமகிழ்காழியி லுதித் தடர்ந்த சமணரைக்கழுவுற ச்செய் துயர்ந்த
மகிமைபெருகும்ஞான சம் பந்த வள்ளல்தாள் துணையே ஜயஜய

அ ஆணிப்பொன்மாமலைதனை வளைத்தோ னறுபத்துமூவர்க்கருள் விளைத்தோன்
பேணிக்கொள்வாருளமதில்முளைத்தோன் பெருமையைக்கொண்டாடஆ
ஆணிக்கையாகுமன் பதிலநேரும் ஆதியைத்தொழுதவரடிசேரும்
மாணிக்கவாசகரருள்சாரும் மலரடிகள்துணையே ஜயஜய

மங்களம். விருத்தம்

ஆதிபக வனுக்குமூ வருக்கு மிந்தி
ராதிதே வருக்குமுனி வருக்கும் நந்தி
நாதருக்கும் கணபதிவே லருக்கும் தொண்டர்
நால்வருக்கு மிக்கதைமுன் னுரைத்தோ ருக்கும்
நீதகலும் அடியார்க்கு மிதையன்போடே
செப்புவர்கருங் கேடபவர்க்கும் யாவ ருக்கும்
மாதுமையங் கயற்கணிக்கும் மதுரா நாதன்
மங்களத்தை வளம்பெறயான் வழுத்து வேனே.

சுருட்டி ராகம், ஆதி தாளம்.

பல்லவி.

மங்களம் சுந்தர மங்களம் அங்கயற்கண்ணி தன்கணவருக்கு மங்களம்

அநுபல்லவி.

கங்கைவளர் காத்ரருக்கு நாடுந்திரி நேத்ரருக்குத்
துங்கவேத ஸ்தோத்ரருக்கு த்வாதசாந்த க்ஷேத்ரருக்கு மங்களம்

சரணங்கள்

[illegible]ரனைக் காத்தவர்க்கு ஐராவதத்துக் கிருடிசாபம் தீர்த்தவர்க்குச்
[illegible]தயிருள்நீத்தவர்க்குத்தொண்டரிடத்துச் செழுங்கருணை பூத்தவர்க்கு

அந்திவண்ணம் பூண்டவர்க்கு அவனிமுழுதாண்டவர்க்கு
விந்தைசெய்யும்தாண்டவர்க்கு மேலும்புகழ்நீண்டவர்க்கு மங்கள

உ பூமதியைத் தரித்தவர்க்கு மதம்பொழியும் போதகத்தை யுரித்தவர்க்கு
காமனங்க மெரித்தவர்க்கு முப்புரமெரி காணமெள்ளச் சிரித்தவர்க்கு
சாமகான லோலருக்கு தண்டதர காலருக்கு
மாமவுன சீலருக்கு வைமிகுந்த சூலருக்கு மங்கள

ரு வாரிதியையழைத்தவர்க்கு ஆலகாலத்தை வாரியுண்டுபிழைத்தவர்க்குப்
பாரிலெனறும்தழைத்தவர்க்கு லீலைகளறு பத்துநாலுமிழைத்தவர்க்குப்
பாரிஜாத நாதருக்குப் பங்கஜைச மேதருக்கு
சீருலவும் வேதருக்குத் தேடரும்பொற் பாதருக்கு மங்கள

பாயிரம் முற்றும்.

வெண்பா க, விருத்தம் அ, கீர்த்தனை எ.

உ
சிவமயம்

புராணவரலாறு.

திருக்கைலாசச் சிறப்பு.

விருத்தம்.

கூடலெம் பெருமா னன்பு கூர்ந்துதொண் டருக்காச் செய்த
ஆடல்நா லெட்டிரண்டு மரியநா டகமாச் சொல்ல
மாடவீ டருள்பு ராண வரலாற்றை யுரைக்க முந்தித்
தேடருந் திருககை லாயச் சிறப்பினை புகலு வேனே

சௌராஷ்டர ராகம், ஆதி தாளம்

திருக்கயிலாசச் சிறப்பினைக் கேளும் மண்ணில்
திரிகாலத்திலும் அழியாமல் நீளும்

அநுபல்லவி

திருக்கைக ளைக்குவித்துத் திருமாலயன்முனிவோர்
சென்னிமேல் வைத்துத்துதி செய்ய வரமளித்து
இருக்குமு தல்மறையின் முடிதனை யுங்கடந்த
ஈசனவீற் றிருப்பதம் இருப்பிட மாயுயர்ந்த திருக்கயி

சரணங்கள்

மகவானுலகுமா யவனுலகும் நிலை
மாறிவருகின்றபோ திலுமிலகும்
மகிமையைக்கொண்டுவரு மூழிதோறும் தன
வலிகெடாமலேநிலை நின்றுமீறும்
பகரும்தெய்வமக்கையர் பாடலொலியுமாடும்

பரதநாட்டியவொலியும் மத்தளத்தின்ஞெலியும்
மிகவும்யானைகளொலி யும்மருவியொலியும்
விண்டலந்தன்னில்நிறைந் தெண்டிசையம்நிறைக்கும் திருக்கயி

உ அன்னலைச் சிந்தித்தசை யாதநேகமும் கண்ணீர்
அருவியும்நீறணிமே னியும் யோகமும்
பக்குவமெகாண்டமுனிவோர் களையடுத்து உள்ளம்
மகிழ்ந்திடத்தன துசா ரூபம்கொடுத்து
வெண்மையுள்ளவஸ்திரம் விரித்ததுபோலருவி
வெள்ளமுமெய்ப்பொருளைத் தேடித்தூங்காமலதூங்கி
பண்ணும்விரதமுனிவர் கண்களில்நின் றுவரும்
பாஷ்பநீரும்பெருகி வாய்ப்பபச்சிறந்துயரும் திருக்கயி

ந கோட்டுமலரும்நறும் கொடிமலரும் நீரில
குலவும்மலரும்பசுந் செடிமலரும்
பாட்டுமலர்களும்கொண் டசனடிமேல் பூசை
பணிந்துசெய்யும்தொண்டர்கள் சூழஒருபால்
கோட்டானைகளும்புலி களும்சர்ப்பங்களும்உண்மை
கூர்ந்தமுனிவர்களைக் கண்டாதியிற்பூசித்த
நாட்டமூன்றுடையபவ னுகவுட்கொண்டவரை
நண்ணுவதனைக்கண்டு விண்ணும்மண்ணும்புகழும் திருக்கயி

## சூதரைத்துதித்து முனிவர்கள் சிவகதை சொல்லவேண்டல்.

விருத்தம்

கயிலையரன் சன்னிதிக்கன் சிவதீர்த் தத்தின்
கரையினிலோ ராயிரக்கால் மண்ட பத்தில
இயமநிய மங்களுடன் புலித்தோ லின்மேல்
இருந்திலகும் சூதபுரா ணிகரைப் பார்த்தே
அயனினைம கோதரனே டுக்ர வீர்யன்
அரபத்தன் சதானந்தன் முதலோ ரெல்லாம்
வயமுறையும் தங்கள்மனத் தையம் தீர
மதிக்கின்றார் அஞ்சலித்துத் துதிக்கின்றாரே

சாவேரி — ஆதி

பல்லவி

சூதமுனிவரே ஆதிபகவன்கதை தொடுத்துச்சொல்ல வேணும்
எங்களுக்கருள் கொடுத்துச்சொல்ல வேணும்

வேதவி யாசமுனி யருளாலு லகில் மன்ன
விளங்கும்பு ராணம்பதி னெட்டும்வ கையாச் சொன்ன சூதமுனி

சரணங்கள்.

க மேருமத் தரும்தென்னிப் பொருப்புமு தலனந்தம்
விடையேது றையும்பதி வளமைசொன் னதில்பநதம்
சாருமின், பருமுகியின் திருவதெ னும்பிரபந்தம்
தந்தேர்ந்தர் கண்டுடன் மாற்றினர் நீரேயெந்தம் சூதமுனி

௨ பற்றிவ ரும்சந்தேக முதலாங்குற் றமும் தாழும்
படிக்கெங்க ளுக்குச்சொல்லக் கேட்டுவக் கதிற்சூழும்
சிற்றறி வகன்றுள்ளம் தெளியவில் லையே நாளும்
திறமைகண் டருளசெய்ய வேணுமின் னமும் கேளும் சூதமுனி

௩ சாற்றரூர் தலங்கடகுள் முதலாம கிமை பூணும்
தலமுந்தீர்த் தங்களுக்குள் நலமாந்தீர்த் தமுந்தோணும்
மூர்த்திக ளுக்குளருள மூர்த்தியா கவும் [illegible]
மூன்றும்வி ளங்கும்சிவ ஸ்தலமொன்று ரைக்க வேணும் சூதமு

## சூதமுனிவர் புராணவரலாறு முனிவர்களுக்குக் கூறல்

விருத்தம்.

முனிவர்களிவ் வாறுரைக்கத தெரிந்து சூதர்
முகமலர்ந்து புராணமூ வாறுட் காநதம்
தனையிருமுச சங்கிதையாச் சனத்கு மாரன்
சங்கரன்மா லயன்சூதன் கதிரோன் சொலத்
தனிவளரும் சஙகிதைக்கு ளீசன் சொனன
சஙகிதையின பொருளையுமைக் குரைக்கும் போதே
அனைமடிமீ திருந்துகதை முழுது முள்ளத்
தாக்கினு னறிரணடு நோக்கினனே

குகனறிநது கும்பமுனிக் குரைத்தா னங்ஙனட
கொண்டதுவே யகஸ்தியசங் கிதையா நின்றிச்
சகமதிற்பேர் கேடடளவி லின்பம் வீடு
தருந்தலமொன றதிற்சொ லுமத் தலம்யா தென்னில்
மகிமைதரும் திருவால வாயென் றோத
மகிழநதவரம் முனிவரைப்பார்த் ததைமெங கட்குப்
பகருமிப்போ தெனத்துதிக்க மனங்கொண் டனபு
பரிக்கினூர் சூதர்மொழி விரிக்கின் றரே.

தரு சௌராஷ்டிரராகம், ரூபகதாளம்

௧ பராணவர லாறுகேளும் புண்ணியமுனி வோரே பெருங்
கராசலத்தை யுரித்தணியுமுக் கண்ணனுக்கடி யாரே

௨ பண்டுநான்முகன் காசித்தலத்தில் பரிமேதம்செய்யத் தொடுத்தான் தவ
மண்டும்மைமிசா ரணியவாசிகள் வரும்படிசசொல்லி விடுத்தான்

௩ அகஸ்தியர்சன காதியர்சுகர் அத்திரிபரத் வாசர் சக்தி
மிகுத்தவசிட்டர் வாமதேவர்வான் மீகிவருணர் வ்யாசர்

௪ புலஸ்தியர்கவு சிகர்கவுதமர் போதாயனர் [illegible] போதும் தவ
நலத்தில்மிகுந்த கௌக்கர்காசிபர் நாரதர்முதல் [illegible]

௫ மகத்தொழில்முடித் தனைவருமுயர் [illegible] டாடினூர் இந்த
ஜகத்தைவிதிக்கும் பிரமதேவரும் [illegible] கூடினூர்

௬ நின்றமுனிவ ரனைவருங்காசி நிமலனடியிற் பணிந்து முத்தி
மண்டபத்திலி ருந்தறமுதல் வசனித்தணியா யிருந்து

௭ வசிட்டமுதல் முனிவர்நாரத மாமுனிமுகம் திரும்பி எங்கும்
ப்ரசித்தமாகவே மூன்றுலோகமும் பார்த்துவந்தீரே விரும்பி

௮ திவ்யமாகிய ஸ்தலமும்லிங்கமும் தீர்த்தமும்சிறக் தேற்க ஒரு
சைவஸ்தலத்தின் மகிமையெமக்குச் சாற்றுவீரென்று கேட்க

௯ மகிழ்ந்துகலைக ளனைத்தும்சனத்கு மாரரிஷியின் பாலே படித்
துகந்தவ்யாச ரிடத்தில்கேளுமென் றேதிரைதன் மேலே

௰ வேதவ்யாசர் குகனுரைத்திட வேதந்தொட்டொருக் காலே கலை
யோதுமகஸ்த்ய முனியைக்கேட்டுநீ ருணர்வீரென்றுரிப்பாலே

## முனிவர்கள் அகத்தியரை சிவகதைசொல்ல வேண்டுதல்.

விருத்தம்.

மாதவ வியாசர் இந்த வகைசொலக் கண்டு தேர்ந்த
போதமா முனிவோ ரெல்லாம் பொதியமா தவர்பாற் சென்றே
ஓதரும் தமிழ் வளர்க்கும் ஒண்முனி லேயென் றோதி
வேதமோர் ஆயி ரம்போல் விளங்கிடத் துதிக்கின் றாரே.

பந்துவராளிராகம் ஆதிதாளம்

பல்லவி

கூறவேணும் கும்பமுனியே கூறவேணும்

அநுபல்லவி

கூறவேணும் சிவபத்தி மீறவேணும் இருவினை
மாறவேணும் சென்மம்கடைத் தேறவேணும்கிருபைசெய்து கூறவே

சரணங்கள்

ஆருத்ரா க்ஷவிபூதி தாரணமுஞ் சிறப்போடிப்
பாரில்நாரி பாகன்புகழ சேரும்ஓர்த லத்தைக்கண்டு கூறவே

காவினில்வ ரும்முனிவர் ஆவியைக்கு டித்திடும்வா
தாவில்வ லனைக்கொன்ற தேவனேக ருணைவைத்துக் கூறவே

சந்திரன்ற விக்கிடறு தந்துயர்விண் ணளவுறும்
விந்தமாம லையின்கரு வந்தணித்தி டும்முனியே கூறவே

ஆதியில்வ்ருத் ரனைச்சம்ப பேதிசங்க ரிப்பதற்கம்
போதியைக்கு டித்திடும்ப்ரக் டாதியைக்கொள் ளும்முனியே கூற

வாமதேவ னுமையவள் மாமணந்தன் னிலேதெற்குப்
பூமிநிறுத் தப்பொதியு மாமலைவ ரும்முனியே கூறவே

சண்முகரி டத்திலேகின் றுண்மையெழுத் தைத்தெரிந்து
தென்மொழித னைப்பொழிந்த கணமணியா கும்முனியே கூறவே

பூவிலுள்ள வருவந்த பாவலர்த மிழ்க்கிசைந்த
திராவிடசூத் ரத்தத்தைநத தேவனேய ருள்புரிந்து கூறவே

## அகத்தியர் முனிவர்களுக்கு ஆலவாய்ப்பெருமை கூறுதல்.

விருத்தம்

வசையறுஞ்சீர் வசிட்டாதி முனிவோரேத்த
மகிழ்ந்தகஸ்த்யர் முத்திமண் டபத்தில நான்கு
திசையிலுறும் சேவல்களை ங்கரன்வி சாகன்
தெக்ஷிணா மூர்த்தியையும் பணிநதெ மக்குப்
பசுபதியம் பிகைக்கருளசங கிதையைச செவ்வேள
பகர்ந்தவற்றி லெட்டெட்டா டலுஞ்செய் தீசன்
இசைபெறுமுச் சிறப்புமுள ஆலவாய
யிவ்வுலகிற் சிவனுலகென் றியம்ப லாமே.

அருமைபெறு முனிவர்களே யத்தலத்தே
அமையுமொரு முச்சிறபபு மதிலெங் நாளும்
தருமூலகிற் பலவுயிர்க்கும் அருள்செய் தோங்கும்
சங்கரன்செய் திருவிளையாட் டிருநா லெட்டும்
பெருமலையைத் துளைத்தவே லவ னெனக்குப்
பெரிதிதென்றே விளம்பியவா றுமக்குச் சொல்வேன
ஒருமையுடன் கேட்டறிவீ ரென்று கும்பத்
துதித்திட்டார் விதிமுறையாப் பதித்திட் டாரே.

புராணவரலாறு முற்றும்.

ஆக. விருத்தம் ௭, கீர்த்தனை ௩, தரு ௧

## தலவிசேடம்

விருத்தம்.

சீருலவு முனிவர்களே கேட்பீரீண்டு செப்புகின்ற திருவால வாயைப் போலித் — தாரணிமீ தொருதலமு மதிலே செம்பொற் றாமரைபோ லேயொருதீர்த் தமும்பொற் கொன்றைத் — தாரணியும் சோமசுந் தரமா லிங்கம் தனைப் போலே லிங்கமுமூ வுலகும் சென்று — பாருமரி தென்றுமுத ற்றலவி சேடம் படித்திட்டா ரெழுகடலைக் குடித்திட் டாரே.

சாவேரி ராகம், திரிபுடை தாளம்.

பல்லவி

தலத்தின் மகிமைகண் டொப்ப தரிதரிதே உரைக்கவேமுப்பு
வனத்தி னுக்குட்பல தலத்து மிதுபெரிதே

அநுபல்லவி

நலத்தினடியவர்க் காகவேமொழிந்த நாலுபதினறுலீலைகள்பொருந்த
நிலத்திலவிளையாடும்சுந்தரர்க்குமுந்த நேயமாகுமாலவாயெனச்சிறந்த தல

சரணங்கள்

க அவனியிற்றரும தலம்பெரிதவற்றில் அதிகமாஞ்சிவ க்ஷேத்திரம்
அவற்றி லறுபத்தெட் டதிகமவைதம்மில் ஆகும்பதினாறு காத்திரம்
கவனமாக்கேளு மவற்றில்நாலுதலம் கதித்ததென்றுசொல்லும் சாஸ்திரம்
கனகசபைகாசி காளத்தியாலவாய் கனத்ததென்றும்வேதஸ் தோத்திரம்
இவையிற் காணத்தில்லை யிருக்கக் காசி தனில்
இசைந்தார்ச் சிக்கக்காளத் தியிற்ப லமே தெனில்
பவிகமாகுமிக பரமிதுகா தினில்
பரிந்து கேட்கிலின்ப வீடளிக்கும் தனித் தலத்தி

உ நினைக்கச்செல்வமும்கேட்கஅறமும் தர் சனத்துக்கின்பமுங்கொடுக்குமே
நிரந்தரமும்வசித் திருந்தவர்க்கு மோக்ஷ நிலைமைதருநெறி யடுக்குமே
கனத்தகாசிமுதற்றலத்தில் மறுமையில் கதியளிக்குமிசை யெடுக்குமே
காயத்துடனசீவன் முத்திதந்துபர கதியிலிதுபின்னே விடுக்குமே
தனிக்கும்பலதலம் தேடிப்போய் மெய்க்கும்
தவஞ்செய் வதினிய பாலுடன்று சிக்கும்
அனத்தைக்கைவிட்டு முழுங்கைதனை நக்கும்
அவனுக்கிணையாகும் பெருமைகொண்டி ருக்கும் தலத்தி

ங அங்கமுடனன்ய ஸ்தலத்திலேபரிமே தாதிமகம்செய்த பேறுமே
அகிலதானங்கள் செய்தபேறும் இஷடி அனைத்தையும்புரிந்த பேறுமே
கங்கைநதிமுத லாடும்பேறுமுயர் காசிமுதல்தங்கும் பேறுமே
கருதுமிதில்வதிந் தோர்க்குளங்கைநெல்லிக் கனிபோல்வரும்பல பேறுமே
வன்கொடும்பிரமஹத்திமுதற் சுற்றி
வருகும்பாதகம் ஐந்தையும கற்றிப்
புங்கமிகுந்தல கெங்கினும்ப்ர சித்தி
பூண்டிலங்கும்சீங்கள் வேண்டும்சீவன் முத்தித் தலத்தின்

ச மதியந்தோறும்சாந் த்ராயணத்தைசெய்து வருகும்பலனிதில் பாருமே
வாசம்செய்துண்ட போசனத்தைசெய்த மகிமையினால்வந்து சேருமே
பதியுமொருதிங்கட் பட்டினியிங்கோர் நாள் பட்டினியிருக்கில் சாருமே
பகரும்நாலுமாத விரதபலனஷ்டமி பரிந்து நோற்றிடில் நேருமே
துதிகொளாறுதிங்கள் நோற்கும்பலன் ஒரு
சோமவாரநோன் பிதிலிருக்கில் தரும்
சதிர்கொளாண்டொன்று நோற்கும்பயன் அரும்

பின்பல்வகைப்பூசை செய்பயனுந தங்கும்
பெருகும்பலதவம் செய்பலனும் எங்கும்
பண்புயரும்பல கேள்வியால்வி ளங்கும்
பலனுந்தருமிதில் இருப்பவர்க்கி லங்கும் தலத்தின்

விருத்தம்.

விதிமுதனுட் கைலைமுதற் றலமோர் தட்டும்
விளம்பியவித் தலமுமோர் தட்டுந் தூக்க
அதிககனங் கண்டதினு லுலக மூன்றுள்
ஆலவா யுயர்ந்ததென்று ரதற்கு நாமம்
நதிபெருகும் சிவநகரம் சமட்டி வித்யா
நகரமுத்தி புரங்கன்னி புரந்தென் கூடல்
மதுரைநகர் கடம்பவனம் த்வாத சாந்தம்
வண்மையாம் காரணத்தா லுண்மை யாமே

தலவிசேடம் முற்றும்.

ஆக விருத்தம் ௨ கீர்த்தனை க ஆக ௩

———*———

## தீர்த்தவிசேஷம்.

### பொற்றாமரையின் உற்பத்தி கூறுதல்.

விருத்தம்.

பூத்தெழுங் கடம்பு சூழ்ந்து பொருந்திய வால வாயாம்
க்ஷேத்திர மகிமை யாவும் தெரிந்தெவ ருரைக்க வல்லோர்
வாய்த்தவத் தலத்திற் செம்பொன் வாரிச மலர்கள் மேவும்
தீர்த்தமா மகிமை தன்னிற் சிலதெடுத் துரைசெய் வேனே.

தரு. ரீதிகவுளை சாப்பு

க தீர்த்தவரலாறு கேளும்த வமுனி வோரே அஷ்ட
மூர்த்திதிருவடிக் கன்புசெய்யக்கனி வீரே
௨ கங்கைமுதலாம் நதியும்கருங்கடல் நீரும் மே
கங்களும்தோற்றமுன் னுகவுண்டானது பாரும்
௩ நிட்களமாகிய சுந்தரமூர்த்திதன் னுலே மூல
விக்ரகத்திற்சக ளங்கொண் டெழுந்தார்முன் னுலே
௪ வெண்மதிசூடும் சடையுமரவணி நூலும் முக்
கண்ணொளியும்திரி சூலகபாலமும் மேலும்
௫ வாமத்தி லங்கயற் கண்ணியுமையவள் வாழ வெகு
சேமத்துடன்நந்தி யாதிகணங்களும் சூழ
௬ செம்பொனொளிதிக்கெங்கும் வீசஉரகக ரமும் ஞனி
செய்யும்மகவான் புரமும்மலரயன் புரமும்

ஏ அங்கமிருந்தவை குந்தபுராமுங்கண் டோதும் வெள்ளி
அங்கிரியும்புகுந் தாலவாயில்வரும் போது

அ மாலயனும்மக வானும்முனிவரும் வணங்க இரு
நாலுதிசையும் பரவும்கணுதிபர் இணங்க

கூ சூழுமவர்க்கரும் பேறுகொடுத்தருள் புரிந்து நிதம்
வாழுமிலிங்கம் தனில்புகுமெலலையில பரிந்து

ய நந்திமுதலோர் பணிந்துதுதித்தன்பு பூணும் சோம
சுந்தரலிங்கம் தனக்குநீராட்டவும் வேணும்

கக மந்தாகினிமுதல் ஆறில்லையாகையி ஞலே முத்தி
தந்தாளும்தீர்த்தமொன் றுண்டாக்குமென்றுரிப்பாலே

கஉ மூலலிங்கத்துக்க டுத்ததென்கீழாகக் காட்டினர் திரி
சூலத்தினலே தடாகமுண்டாகவே நாட்டினர்

கங நாட்டவும்அண்டவில் லகிழிந்தாழிநீர் கதிக்கும் வெள்ளம்
காட்டவும்கைகொண் டமைத்துத்தம்வேணியில் பதிக்கும்

கச தெய்வநன்னீரைக் கலநதுபெருநதீர்த்தம் ஆககினர் பல
சைவகணத்துடன் சாரும்நந்திமுகம் நோக்கினர்

கரு எண்டிசையிற்பல தீர்த்தங்களுக்குமுன் னமே இநகு
கண்டதனலாதி தீர்த்தமென்னும்பெயர் ஆமே

கசு இன்னமுண்டாக்கும்நற் றீர்த்தமெவைகட்கும் இலங்கும் நலம்
மன்னுதலாலே பரமதீர்த்தமென்று விளங்கும்

கஎ தங்கள்மருள்கெட மூழகினபேர்பல வாகும் சுப
மங்கலத்தைப்பெற லாலேசிவதீர்த்த மாகும்

கஅ பேதைமைசெய்யும் பிறவிஉகற்றுமெய் ஞானம் தரும்
ஆதலினல்ஞான தீர்த்தமென்னும்பிர மாணம்

ககூ இத்தடத்தாடி எழுத்தைந்தையும்நினைத் தெண்ணினர் முத்தி
பெற்றிடலால் முத்திதீர்த்தமெனும்நாமம் பண்ணினர்

## பொற்றாமரைத்தீர்த்தத்தின் மகிமைகூறுதல்

விருத்தம்

இந்தநீர் படிந்துதர்பப ணுதி யைச்செய்
தெழுத்தைநதும் ஓதியெமக் கும்நீ ராட்டில்
அந்தரணி யுளதீர்த்தம் முற்றும் பெய்தல்
ஆகும்நீங் களும்தோய்ந்தர்ச் சிப்பீர் [illegible]
சுந்தரமூர்த் தியுமொழிநதத் தடத்தி [illegible]
குழந்தபல கணங்களையும் தோய்ந்தி [illegible]
அந்தமிருந் [illegible] கத் துடப்பு குமதய [illegible]
[illegible] மாய்ச சலை [illegible]

இதுவுமது.

இருந்தபின் அத்தீர்த் தம்கொண் டிலிங்கமா முடிமே லாட்டி
திருந்திய விதியாற்பூசை செய்துயர் சந்தி யாதி
பொருந்திய கணத்தோர் வேண்டும் பொருளெலா மடைந்தா ரிப்பால்
வருந்தம வியக்கஞ்ச மகிமையு மினிசசொல் வேனே

மோகனராகம், சாப்புதாளம்.

பல்லவி.

கீர்த்திமிகுந்திடும் தீர்த்தமகிமைதன் மேர்த்தியை என்ன சொல்வேன்

அநுபல்லவி

நாற்றிசையிலுள்ள தீர்த்தங்களுக்கெல்லாம்
ஏற்றமதாயுற்ற மூர்த்திகரம்பெற்ற கீர்த்தி

சரணங்கள் [யேறும் பல

பார்த்திடில்பாவத் தொடர்ச்சியறும் ஸ்நானம் பணின்ல் அபீஷ்டம்கை
தீர்த்தமும்ஆம்பலனிதிலேசித்தம் சேர்ந்தாடவேவரும் கூறும்
ஆர்த்தவிதிப்படிமந்திரத்தைச்சொல்லி ஆடிற்பல தீர்த்தந்தோறும் ஆடி
வாய்த்தமறையவர்கெப்பொருளுந்தானம் வண்மையி னீந்திட்ட பேறும்
தோற்றும் நினைவுவே ருகியொருக் காலே
தொட்டாலும்பாவங்கள் ஓடடாதெது போலே
தேற்றும்மனமறியாமல்தொடின் மேலே
செந்தீசுடாமல விடுமோ அது போலே
தேடிநிதம் பத்தி கூடியிதில்நத்தி
ஆடிற்சீவனமுத்தி நாடிவரும்சித்தி கீர்த்தி

உ உற்றநிலாடிப்பரனையும்தேடி யுவந்துதொழக்கதி அடுக்கும் பல
சுத்தநூலுக்குட் சொலும்பரிசுத்தத்தில சுத்தமென்றேபுகழெடுக்கும்
சித்தம்விரும்பாதபேருமிதிலஸ்நானம் செய்யில்துறக்கத்தில்விடுக்கும் யனம்
பத்திகொண்டாடித்தருப்பணம்செயயில பலமகம்செய்பலன் கொடுக்கும்
மற்றஸ்தலங்களி லேயிருநது ஸ்நானம்
மாதவம்பூசையோமம்விரதம் தானம்
சத்தியமாகச் செயும்தருமம் த்யானம்
தம்மைச்செயும்பலன் தனனிலுமெய் ஞானம்
தநகுமிதி லாடிக் கங்கிலவைநாடி
இங்குசெயிலகோடி பங்குவரும் நீடி கீர்த்தி

உதித்தநாளில்அந் நீராடில்சென்மம் ஒழியும்கும்பமேடம் தேளும் மூப்
பதுக்குமாடிப் பிதிர்பிண்டம்வைக்கில் பவமவர்க்கில்லையெந் நாளும்
விதித்தவாறுபிதிர்க்களுக்கென்நீர் விடுக்கில் அயர்கட்குக் கேளும் அதில்
பதித்தனள்ளென் [illegible]மாண்டும்பர் பக்கத்தரசது நீளும்
[illegible]ளதீர்த்தம்தொழக் கொண்ட
[illegible]ளும்அதி லொன்றை

மதித்தமூழ்கிக்கடப்பத்தரு நின்ற
வனத்தனைப்பூசைசெய்யப்பிறப் பென்ற
வாரிக டந்தருள் வாரிப டிந்திருள்
சேருமனம் தெருள் சாரும்நிசப்பொருள் கீர்த்தி

௪ பேறுதருந்தானந் தவமுதற்செய்து பெறும்பலனத்தட மீது நலம்
கூறுமடியவர்க்கீந்துவரும்பேற்றில் கோடியிலொன்றுக்கொவ் வாது
மாறுகொள்முற்பவந்தோறுமொழுக்கம்மகம்விரதங்கள்பொய்யாது செய்து
தேறும் அருந்தவச்சித்தருக் கல்லதிச் சென்மத்திலாடக்கிட் டாது
வேறுவேறுய்நதி தீர்த்தம்பல விதம்
விளங்கினுலும் அவையிதற்குச் சதம்
நூருயிரத்தில் ஒருபங்கிலே சதம்
நூருயிரத்தில் ஒருபஙகிலே மிதம்
நுவலலா மல்ல துவமையா வல்ல
தெவையுண்டாஞ் சொல்ல அவனிமேல் நல்ல கீர்த்தி

௫ செங்கதிரைமதி சேர்கையிலாடல் செயும்பலனென்றுக்குறு வரும்
திங்கட்பிறப்பதி லாடிலவரும்பலன் செபபவென்ருல்பத்து நூறு
பொங்குந்தலாம்சித்திரைபபிறப்பிலாடில் புண்ணியம்நூறுக்குநூறு வரும்
அங்கமுறும்அய னங்களிலாடிற் சொலும்பலநூறிரு நூறு
தங்கும்பலன்லக்ஷம் பங்குபராகத்தில்
தர்ப்பணம்செய்யத் தரும்விதிபாதத்தில்
அங்கிலாடிச்செயும் தருப்பணத்தில்
ஆகும் அனந்தம் பலன்சோமவாரத்தில்
ஆயுங்கதிர்மதி தோயிற்படிவதி
லேயனந்தம்கதி யேயருளும்மதி கீர்த்தி

௬ சீராமகரமுழுதும்ப்ரயாகையில் சென்றுமந்தாகினி யாடும் பலன்
ஆராயில்ஈதில்மனுமுறையோர்தினம் ஆடல்புரிந்திடில் நீடும்
ஈராறுதிங்கள்படிந்துமைபாகனை ஏற்றும்நியமத்தால் சூடும் பலன்
தீராமலடிக்கு நன்மகப்பேறு சிறக்கவுண்டாந்திறம் கூடும்.
நேராகக்கண்டதி ஞலறத்தின் பலம்
நேருந்தொடப்பெருள் சேருமங்கைத் தலம்
நீரையுட் கொள்ளவின் பம்பெறுநும் நலம்
நின்றதிலாடவே வீடருளும் பலம்
நீடவறிந்தாதி சேடனுலுங் க்யாதி
பாடவிசையாதிக் கூடற்புரத் தாதி கீர்த்தி

## பொற்ருமரைத்தீர்த்தத்தின் திருநாமம்கூறல்

(ஆசிரியவிருத்தம்)

பெருமைதரு மிந்தமா தீர்த்தமுன் னவர்சொலும் பெயரினேடவர்வே ளியிற்
பெருகு மந்தாகினிப் புனல்கலந் திடலிஞற் பெரியசிவ கங்கை யெனவும்
ஒருமைகொண் டுலகுள்ள தீர்த்தங்க ளுக்கதிக உத்தமம் பெற்றி திலால்

உத்தமத் தீர்த்தமன மெண்ணுவது தாலினு லுயர்காம தீர்த்த மெனவும்
தருமமுதல் நாலுபொரு ளுந்தருகுமானதால் தருமமிகுதீர்த்தமெனவும்
தனதருமையாலர்த்த தீர்த்தமென வும்முத்தி சால்முத்திதீர்த்தமெனவும்
இருமையும்பற்றிவரு டாவமெனும்விறகினுக் கெரியாகமேவிமலர்கொண்
டிரணியக்கமலம்வர லாலேபொற்றாமரை யெனும்பெயர்க்கேதுவிதுவே

விருத்தம்.

இப்படித் தலத்தின்மிக்க பெருமையு மிதழ்செழிக்கும்
பொற்பது மத்தீர்த்தத்தின் பெருமையும் புகலக்கேட்டோர்
ஒப்பிலாப போகம் வீடு முறுகுவ ரென அறிந்த
வைப்பினி லுயருங் கும்பமாமுனி மொழிந்திட் டாரே.

## தீர்த்தவிசேஷம் முற்றும்.

விருத்தம் ச. ஆசிரியம் க கீர்த்தனை க. தரு க. ஆக எ.

———*———

## மூர்த்திவிசேடம்.

## சோமசுந்தரமூர்த்தியின் [illegible] கூறல்.

விருத்தம்.

திருவால வாய்ப் பொற் கஞ்ச தீர்த்தத்தின பெருமை யெல்லாம்
ஒருவாம லுரைக்க வல்லோ ருளரோ முத்தி
தருவான்முக் கண்ண னாதத தலத்தினி லறிவானந்த
உருவாய்வந் திலிங்க மாக வுதித்தவா றினிசசொல வேனே

சங்கராபரணம், சாப்பு.

பல்லவி

மூர்த்திவரலாறுகேளும் சிவன் முத்திபுரத்திலு சித்ததிலேவாழும் மூர்த்தி

அநுபல்லவி

மூர்த்திக்கெல்லாமாதி மூர்த்தியென்றே மெத்த
கீர்த்திவிளங்கியருள் பூர்த்தியொடு மிருந்த மூர்த்தி

சரணங்கள்

க மேருமந்தரம்கேதாரம் துய்ய வெள்ளியங்கிரி கங்கையோரம் தங்கும்
வாரணவாசிகம்பீரம் வளர் மாதவமுற்சொண்டா காரம்
சேரும்பராபரச் சிவலிங்கங்கட்கு முந்தச்
சாரும்கடம்பிடையிற் சைவலிங்கமா வந்த மூர்த்தி

கோலுமத்தலம்லிங்கம்யாவ மருள் குறிகொண்டிதுக்குப்பின்புமேவும் இனி
போலொளிமிகுதென்சுந்தாவுமிவை பொருந்துமேதுவிரண்டால் கூவும்
சிலமெய்யொளிமுர்றுந் திரண்டோருரு வாய்த் தேறும்
மூலலிங்கமென்றே மூவுலகமுங் கூறும் மூர்த்தி

அந்தமென்னுங் கையுஞ்சூடி மேனி அழகுபூண்டிருப்பதுமாடிக் கொண்டு
மந்தகாசத்துடன் நீடி மெய்யில வளரும்உமையழகுங் கூடிச்
சந்ததமும்விளங்கும் தகைமை யினால் சோம
சுந்தரனெனத்தேவர் சொல்லித்துதித்த நாம மூர்த்தி

௪ தருவுக்குமூலத்தில்நீரை விடச் சாகைதழைப்பதுபோற்சீரைப் பெற்றுப்
புரியும்வியட்டிலிங்கமேரே செனறும் போற்றும்பலனைத்தருதிப்பாரை
உருவுள்ளுலகத்துக்குள்ளே சுமட்டி கொண்டு
அருமையுமூலத்துள்பார்க் கருளைபொழியு மொண்டு மூர்த்தி

௫ அகிலசராசரமெங்கும் வ்யாபி ஆகவேநிறைந்திலங்கும் அநத
மகிமைதன்னிலுங்காளத்திதங்கும் புகழ வழுதிகைப்பிரம்படிபொங்கும்
பகவான் திருமேனியில பட்டதழும்பு மந்தச
சகலஉயிர்களுக்கும் தாக்கினதே சிறந்த மூர்த்தி

———(...)(*)(*)(...)———

## மூலலிங்கவிசேடங்கூறுதல்.

விருத்தம்.

இருநிலத் தெத்தலத்தில் யாவனெண் ணன்கி ரண்டு
திருவிளையாடல் செய்த தேவன்மற் றவனுக் கொப்பா
விரியுமெவ் வுலகின் பாலும் விளம்புதற் கரிதாந் தன்மை
அருமையாக் கேளு மென்றே யகத்திய முனிசொல் வாரே

சௌராஷ்டர ராகம், சாப்பு தாளம்.

பல்லவி

லிங்கங்களுக்குட் சிறப்புயரும் மூல லிங்கவிசேஷத்தைக் கேளும்

அநுபல்லவி.

பங்கைபடருமெய் யன்கறைகந்தரன் வாழூர்திருக்கயி லாசமுதற்சிவ லிங்க

சரணங்கள்.

க பாரில்மலைக்குள்மகாமேருப்போலும் பண்ணுமகத்திற்பரிமேதம்போலும்
தாருக்குள்ளேகற்பகத்தருப்போலும் தானங்களிலன்னதானத்தைப்போலும்
லிங்கங்க

உ வானவருக்குள்மகாதேவர்போலும் மந்திரங்கட்குட்பஞ்சாக்ஷரம்போலும்
மானிடருக்குள் மறையவர் போலும் மாவிரதத்திற்கு வ்ரதத்தைப் போலும்
லிங்கங்க

௩ மின்னுமணிக்குட்சிந்தாமணிபோலும் மேலாந்தத்துட்சிவதத்வம்போலும்
மன்னுந்துதிக்குட்சிவஸ்துதிபோலும் மாதலத்துள்காசியைப்போலும்
லிங்கங்க

தீர்த்தங்களுக்குட்பொற்றாமரைபோலும் தேனுக்களிற்காமதேனுவைப்போலும்
மூர்த்திக்குள்ளேசோமசுந்தரர்போலும் முத்தருக்குட்சிவபத்தரைப்போலும்
லிங்கங்க

## சோமசுந்தரலிங்க மகிமை உரைத்தல்.

விருத்தம்

கூறரிய மூலலிங்கம் கண்டோர் பாவம்
குலிசமருந் திரவியெரி சிங்கம் கோபம்
வீறுகரு டன்வாயு லோபம் காமம்
விளங்குசிவ ஞானமிவ்வா றிரண்டின் முன்னே
மீறுமலை நோயிருள்பஞ் சானை நோன்பு
வித்தைபணி முகில்குணம் ...
டாறிரண்டும் நசித்திடுதல் போல ...
அடையுமதன் மகிமையினி ...

கல்யாணி ராகம், சாப்பு தாளம்.

பல்லவி

இந்தவுலகில் கதம்பவனந்தனில் வாழும்
சுந்தரலிங்க மகிமைதனைச்சொலக் கேளும்.

அநுபல்லவி

மந்தரம்மேருகைலாசம்ஸ்ரீபர்வதம் வாரணவாசி ... ம்
அந்தலிங்கமெல்லாம் வந்துதொழுநிதம் ஆநந்தம்தந்துறு ... னதம்

சரணங்கள்

க சீலத்துடன்ப்ராதக்காலத்திலேசென்று சேவித்திடலதனாலே நாலு
தென்கடல்சூழும் புவிமுழுதும்தானம் செய்தபலன்வரும் பாலே
மேலுச்சிக்காலத்தில் சேவித்திடில்மறை வேதியர்தங்கட்கன் பாலே உள்ள
மெய்த்திடவாயிரம் கோதானமீபலன் மேவும்தவப்பயன் போலே
கோலத்துடனந்தி வேளையிலேசென்று கும்பிடக்கோடிகோ வீந்தபலனுண்டு
மாலைத்தருமர்த்த ஜாமத்திலே கண்டு வந்திக்கமாமேதம்செய்தபலனண்டும்

உ புண்ணியம்சேரிந்தக் காலங்கள்தோறும் புகுந்துதரிசித்த பேர்க்கு இக
போகங்களையும் கொடுத்தீசன்தாமரைப் பூவடிநீழலில் சேர்க்கும்
திண்ணமுடன்நாமம் காதிலுறிற்பத்துச் சென்மவினைகளைப் போக்கும் நூறு
ஜென்மவினைகள் நினைக்கிலகலும் தெரிசிக்கவீரடி பார்க்குள்
... சென்மவினைதீரும் ராஜசூயயாகமாயிரத்தைப்பாரும் [ரும்
பன்னும்பலன் ...த்தோர்க்காயிரம்சேரும்பரிமேதப்பலனபார்த்தவர்க்கேசா
இந்தவுலகில்

ந ... வாகும் ... னாலே அபிஷேகத்தையொரு நேரம் செய்யில்
அன்னியமிக்க மனந்தங்களுக்குநீர் ஆட்டிடிபதாமந்த ஸாரம்
பொன் ... கலந்தபிஷேகங்கள் பூசையீரொட்டுப. சா ...
போற்றிப்புரிந்திடிற் புண்ணியமாதி பொருள்நாலையுந்தரும் தீர
மங்கலமாகச்சிவாகமந்திற்கூறும் ... மொருக்காந்திரவிய ...
அங்கங் ... ரவே யா... டிலவுரு ... அமிர்தா... மேத ...
... பல

ச வன்னமலரொன்றருச்சிக்கிற்பூமிக்குள் ஆரூம்லிங்கம்தோறும்நாடி தங்க
மாமலர் நூறுகொண்டர்ச்சித்திடும்பலன் வந்துலபிக்குமே தேடி
மன்னியொருக்கால் நறும்புகையீந்திடில் வாக்குமனமெய்யும் கூடி செய்த
வன்பிழையாயிரம் நீங்கும்விளக்கிடில் வந்திடும்சாரூபம் நீடி
அன்னநிவேதனம் தன்னவிழ்க்கோருகம் அன்னாலுலகி லிருக்கத்தரும்சுகம்
மின்னும்பளிதவிளக்கிடில்மெய்யகம் வெண்ணிறமுறுதற்கண்ணும்வருமுகம்
இந்தவுலகில்

——(*)(*)——

## சோமசுந்தரர்திருநாமம்உரைத்தல்.

ஆசிரியம்.

சந்ததம் வளர்சோம சுந்தரன் மகுடசுந் தரன்மான் மதச்சுந் தரன்
சமட்டிவித் யாபுரே சன்கடம் பவனசுந் தரன்முத்தி புராநா யகன்
கந்தமிகு சண்பகச் சுந்தரன புகழ்பெருகு கன்னிகா புராநா யகன்
கல்யாண சுந்தரன் பழியஞ்சு சுந்தரன கருதரிய மதுரை நாதன்
சிர்தைமகி ழபிராம சுந்தரன் பூலோக சிவலோக நாத னருளும்
சீருயர் கருப்பூர சுந்தரன் மகிமைவளர் திருவால வாய்ச்சுந் தரன்
அந்தமிகு மட்டாள சுந்தரன் யாவர்க்கு மருள்மூல லிங்க முதலா
அகில நிறை பெறவந்த சைவலிங் கந்தனக் கனந்தநா மங்க ளுளவே

விருத்தம்.

இந்தமகா லிங்கத்தின் முன்னொ ருக்கால்
இயற்றியமந் திரமோமம் தருமம் தானம்
வந்தணுவி னளவுசெயின் மேரு வாகும்
மகிமையெவ ராளந்துரைக்க வலவோர் முத்தி
தநதிடுமித் தலம்போலே தலமும் செம்பொற்
றாமரைபோற் றீர்த்தமுமெய் பொளிவித் தாகும்
சுந்தரமா லிங்கம்போ லிலிங்க மும்முத்
தொல்லுலகு மில்லையெனச் சொல்லி னூர்.

## மூர்த்திவிசேடம்முற்றும்.

ஆக விருத்தம் ச. ஆசிரியம் க. கீர்த்தனை ங.
ஆதிபீடிகைமுற்றுப் பெற்றது.

————(*,[(°° * °°,)](*,————

*******************************
* ஸ்ரீமீனாக்ஷிசோமசுந்தரேசர் *
* திருவடிகளே துணை. *
*******************************

முதலாவது.

# இந்திரன்பழிதீர்த்தபடலம்.

அவதாரிகை. — விருத்தம்.

விண்ணவர் பெருமான்முன்னாள் விருத்திரா சுரனைக் கொன்ற
எண்ணரும் பழிவி டாம லெத்தலங் களினும் தேடி
மண்ணினி லுயர் கடம்ப மாவனம் தனிலே வாழும்
அண்ணலை யிறைஞ்சிப் பூசித் தகன்றவா றுரைசெய் வேனே.

## குருவைக் காணுமல் இந்திரன்தேடுதல்.

விருத்தம்.

ஆதியுகம் தனிலேகற் பகவி ருக்ஷத்
தடிநிழலி லரியணைமீ திருநத ரம்பை
மாதரினு டல்கண்டும் பாடல் கேட்டும்
வாசவன்மோ கக்கடலில் மயங்கும் காலைப்
போதமிகும் குருவந்தா ரவர்க்குப் பூசை
புரிந்திடா திருந்திடக்கண டகன்று ரத்தால்
மாதனம்ஞா னம்கல்வி மலிநம் கொள்ள
வாடினன் பின்குருவைத் தேடி னனே.

மோகனம், சாப்பு

பல்லவி

தேடித்திரிநதலைந் தானே தங்கள் தேசிகனை இந்த்ரன் தானே

அநுபல்லவி

தேடிக்கண் கெட்டபின் சூரியநமஸ்காரம்
செய்வது போலேதன் செல்வங்கள் போனபின் தேடி

சரணங்கள்

க ஆசானிருக்கு மிடந்தன்னில் நோக்கியே
அவ்விடத்தில்லாமை கண்டருள் தேக்கியே
பாசங்களைகெடுத் திட்டமுனிவர்
பலர்கள் விளங்கும் பதிசென்று தாக்கியே தேடி.

உ மும்மண்டலத்திலும் தங்கும்இடம் நண்ணி
முற்றிலும் காணுமலஆலோசனை பண்ணி
எம்முடையகுரு வானவரெவ்விடம்
ஏகியிருக்கின்று ரோவென்றெண்ணு தெண்ணித் தேடி

ங எங்கெங்கும்ஆராய்ந்து பார்த்தாலும் காணும
லேசங்கைகொண்ட மனம்சற்றும் நாணுமல்
புங்கமலரயன் தங்கும்தலத்தும்
புகுந்தங்குமில்லா தயின்தொன்றும் தோணுமல் தேடி

## பிரமன்இந்திரனைப் பார்த்துக்கூறல்.

### விருத்தம்.

திசைமுகன்றன் னிருக்கையிலும் பார்த்த வன்பொற்
சேவடியிற் பணிந்தனைத்தும் சொன்னு னந்த
வசனமெலாம் அறிந்துகுரு வருமட் டேநது
வட்டாவின் றுவனசுர குலததில வந்தோன்
இசையுளசெய் கையினுலும் அறிவி னுலும்
ஏற்றமுடை யோன்றலைமூன் றுடையோ னனை
விசுவரூ பனைக்குருவாய்க் கொள்வா யெனறு
விதித்திட்டான் இந்திரன்சம் மதித்திட டானே.

அரவிந்த னிதுரைக்க வவனெண் ணத்தை
அறியாம லேயுவந்திந் திரனவ் வாறே
குருவென்றே விசுவரூ பனைவ ரித்துக்
கொண்டவன்மா யத்தையறி யாம லய்யா
ஒருமகஞ்செய் திடவேண்டு மென்று னபபோ
தும்பருக்காக் கம்வாக்காற் சொலித்த னக்கு
வருவதறி யானவுண ருக்கு க்ஷேமம்
வருகவெனக் கருதிமகம் புரிகின றனே.

### தரு. காம்போதி, சாப்பு.

க ஆகண்டலன்தெய்வ லோகந்தனிற்சிறப் பாகும் நலம்பெற நாளும் மிக்க
யாகஞ்செய்யும்போதி லேகவடாக நடநததைச் சொலலுவேன் கேளும்

உ வானவர்கோனுக் கொருகுருவாக வரித்துக்கொள்ளும்பிர தாபன இகல்
தானவருக்குள் மகிமைசிறந்த தலைமூன் றுள்ளவிச்வ ரூடன் [கொடும்

ந தேவர்களுக்கவிர்ப் பாகமெல்லோர்க்கும் தெரியும்படியாகக்கொடுததான
பாவிஅசுரருக்கும் அவிர்ப்பாகம் பரோக்ஷமதாவியத் தொடுத்தான்

ச செய்யுமகத்தின் கவடிந்திரன்ஞான த்ருஷடியினுற்கண்டுபிடிததான் மலர்க்
கையினில்வச்சிரம் தன்னையெடுத்தநத கள்போலிதழினைக்கடித்தான்

ரு கோவத்துடன்மாறு பாடுபுரியும் குருவிச்வ ரூபனைக் கிட்டினை கிட்டித்
தாவித்தனித்தனி யாகவவன்முத் தலையும்விழும்படி வெட்டினன் [னும்

சு வெட்டிமுன்சோம பானததைச்செய்து விளங்குமுகம்காடையாகப் பின்
கட்டுமதுபானம் தன்னைபபுரியு முகமூர்க்குருவிய தாக

எ அன்னமருந்து முகம்சிச்சிலிப்பக்ஷி யாகவவைகளைப் போக்கி அஙகு
மன்னுமுதிரத்தைப்பேயுணணச்செய்யவே வாசவனைச்சூழ்ந்துதாக்கி

அ சீறிவந்தேப்ர்ம்ஹ ஹத்திமஹாபாவம் சித்தமாப் பற்றிட லாலே அது
மாறும்வகைஎந்த வாறென்றுவிண்ணுள்ள வானவர்யோசித்திப்பாலே [ரிந்

கூ பைந்தருக்கள்மாதர்மண்ணீரிடத்தும் பகுத்துப்பிரார்த்தித்துச்சேர்க்கத்தெ
திந்தமகாப்பழி தீர்க்கும்வகையெங்கட் கெனனென்றந்நால்வரும்கேட்க

ய நீரினிடத்து நுரையாயுமிந்த நிலத்தினிடத்துவ ராயும் செய்ய
காரிகையார்தம் மிடத்திலேதீணடாத கன்றிடும்பூப்பதுவாயும்

௧௧ கப்புமரத்தில் பிசினுருவாயும் கழியக்கடவதென் றும்பர் கூற
இப்பழியைச்சுமக் கின்றதாலெங்களுக் கென்னலமென்றுவிளம்ப

௧௨ தாரணிதன்னிற் பறித்தகுழியதுதன்னாலெக்காலமும் மாற தூய
நீரையிறைக்கும்போ தெல்லாம்சுரந்து நிதமும்பொலிவுபெற்றூற

௧௩ மாதர்களுக்கு ப்ரசவம்வரைக்கும் மகிழ்நருடன்போகம்மீறப் பின்
போதுமரங்களை வெட்டவெட்டத்துளி ருண்டாகவுமவர் கூற

௧௪ இவ்வரம்பெற்றந்தநால்வரும்தங்க ளிருக்கையிற்சேர்ந்தாரப்போதுமிக்க
செவ்விபெருகச் சுரபதியுள்ளம் செழித்திருந்தான்சபை மீது

## விருத்திராசுரன்உதித்தல்.

விருத்தம்

இந்திரனிவ் வாறிருக்கத் துவஷ்டா மைந்தன்
இறந்தவகை அறிந்துவெகுண் டுயிர்த்துச சீறி
அநதநிமி ஷம்கொடிய யாகம் செய்ய
அம்மகக்குண் டததிலிருந் திருகண் செநதீச
சிந்திடவாளெயிறதுக்கிச் சினத்தாகாசம்
திசைமுழுதும் செவிடுபட வார்த்துபபொங்கி
வந்ததொரு கொடியவிஷம் போலே வ்ருத்ரன்
வரக்கண்டார் அமரர்பய மிகக்கொண டாரே

புன்னாகவராளி, சாப்பு.

பலலவி

விருத்திரா சுரனுதித்தான் மிக
மருத்துவன்தன்னுடன வானவர்நடுஙக விருத்திரா

அநுபலலவி

நித்தமோ ரம்பெய்யும்தூரம் சென்று நீணடுநீண்டிப்படித் தானேவிஸ்தாரம்
மெத்தவு திக்கும்சரீரம் தர்மம் விரும்பாமலடுங்கொடு வினைபோலன்னேரம்
விருத்திரா சு

சரணங்கள்

௧ தானவர் கோனசினத் தோங்கிச செய்யும்
தனைதுவேள்விக்குண் டத்தெரிநீஙகி
வானவர்கோனுயிர் வாங்கிக் கொண்டு
வருவாயென்றேவும் பிதாமொழி தாஙகி விருத்திரா

௨ சிநதுவடவையைப போலே மிகச்
சீறிச்சினத்துவரக்கண்டிப் பாலே
இந்திரன்வெள்ளானை மேலே யிருந்
தெதிர்வரத்தாக்கிப்பற் கடித்தானமென்மேலே விருத்தி

௩ புண்ணியம்தனைபபாவம் சதிக்க வந்தாற்
போலெதிர்த்தாசுரன் முன்னமர் கதிக்க
விண்ணவர்கோனுள்ளம் கொதிக்க வஜ்ர
வேலெடுத்தேவீசிமெய்யினிற் பதிக்க விருத்திரா

௪ இருப்புலக்கையினாலே யடித்தான் அது
இந்திரன்தோளிற்பட் டவசமாத் துடித்தான்
திருப்பியும்வெகுண்டிதழ் மடித்தான் கண்ட
தேவரெல்லோர்களும்பயந்திட நடித்தான் விருத்திரா

## இந்திரனுக்குத்திருமால்வச்சிராயுதம்பெறஉபாயங்கூறல்

### விருத்தம்

கண்டகவிருத்திரனால் வீழ்ந்தவிந்திரன்
கண்விழித்து மூர்ச்சைதெளிந் திவன்முன்னின்று
சண்டைசெய வலியிலமென் றெண்ணிச் சென்றச்
சதுமுகனைத் தாழ்ந்துதன திடுக்கண் யாவும்
விண்டுசொல இந்திரனோ டேகி மாயன்
மெய்யடியிற் பணிந்துவந்த விதத்தைச் சொல்லக்
கொண்டல்வணன் நன்றெனக்கேட் டதற்குபாயம்
கூறுவான் வலாரிமனம் தேறுவானே.

### சந்தவிருத்தம்.

மகபதியுன்கையி னுறுகுலிசம்வெகு வயதுகழிந்தது இனிமேலே
மருவலர்தங்களை வெலவலிதந்திடு மறுகுலிசம்வரு வகைகேளாய்
அகலவரும்பய உததியிலும்பர்கள் அசுரருடன்கடை யுமுனாலே
அவர்படைதம்மொடு செலுவதுகுந்தக மதுவருமென்றுநம் அருளாலே
மகிமைமிகுந்ததி சிமுனியிடந்தனில் வலியவேதந்தவர் வெகுகாலம்
வருகுதலின்றிய னைவருமிருந்தது மறைமுனிகண்டவை உணலாலே
பகழிகளம்முனி நெடுமுதுகென்பொடு பதியுமிரந்ததுபெறுவாயேல் [யே
பலமுறுமென்பது கொடுகுலிசம்செய்து பகையைவெ லுந்திற முறுவா

### திபதை. கல்யாணி ராகம், சாப்பதாளம.

௧ செப்பிநெடுமாலனுப்பத்தேவேந்திரன் தேவர்கள்தம்முடனடினை விரைந்
தப்பொழுதேகித் ததீசிமகாமுனி ஆச்சிரமம்வந்து கூடினன

௨ கூடியதேவரைப்பார்த்தம்முனிஅன்பு கூர்ந்தினிதாயெனக் கேட்கக முகம்
வாடியிளைத்துவந் தீர்களிவ்வண்ணம் வரும்மூலம்யாதெனக் கேட்க

௩ பாவிவிருத்திர னாலேமெலிந்துநம் பாதம்கதிஎனச் சார்ந்தோம் அந்தத்
தீவினைமாற்றி அருளக்கடாக்ஷம்நீர் செய்குவீரென்றன்பு கூர்ந்தோம்

௪ ஏதெனில்தேவரீரங்கத்திருப்பதென் றிந்திரன்சொல்லவுமனைத்தும் கண்ட
மாதவன்சூரியனைக் கண்டகமலம்போல் வாயமலர்ந்தனபகம் நிறைத்து

௫ நாயும்நரியும் நமனுமெரியும் நமதுநமதென்னும் நோயும் தந்தை
தாயும்நமதென்னும் போலேஎமதென்னும் தன்மையாமாறிக் காயம்

௬ கோளரவின்தோலும்பக்ஷியிருக்கும் குடம்பையும்தானெனல்போலே ஐவர்
வாழுமிக்காயத்தை யானெனஎண்ணில் மதிமோசம்ஆகையி னாலே

௭ ஆனபலபிணி யுற்றஉடம்பீந் தறமும்புகழையும் சேர்ந்து பெறு
வேனெனில்யாக்கை எடுத்தபயனிதே மெய்யென்றுயோகத்தில் சார்ந்து

௮ பார்த்துள்ளேபிர்ம நாடிவழிக்கொண்டு கபாலம்கிழிந்திடத் தாவினார் தவம்
வாய்த்தபயனால் வரும்விமானத்தேறி மாதேவன் லோகத்தில மேவினார்
௯ மேவும்முனிவனளித்தமுதுகென்பை விசுவகர்மாப்பரிந்தெடுத்தான் அதைச
சீவியோர்வச்சிர மாகச்செய்திந்திரன் செங்கமலக்கையில கொடுத்தான்
௰ தக்ஷணமேஐயி ராவதமேறியே தானைக்கடலுடன் சூழ்ந்தான் சூழ்ந்
தக்ஷணம்விர்த்திரன தங்குமிடம்தேடி ஆகண்டலன்வந்து சேர்ந்தான்.

## இந்திரனுக்கும்விருத்திராசுரனுக்கும்யுத்தம்.

விருத்தம்

வானவர்கோன் இந்தவிதம் குலிசம்பெற்று
வந்தனன்பண் டாழியிலே ஒளித்திருந்த
சேனைசமுத் திரமெனவே ஆர்த்துக்கூடச்
செருக்களத்தில வந்துகலந் திட்டானங்கே
தானவர்கோ னானவனும் படைசெந்தீ
சைலமிசை யோங்கியழல் எழுந்தாற்போலே
மானமிகத் தலைக்கொள்ளத் தானைசூழ
வளைத்திட்டார் இருவரும்போர் விளைத்திட்டாரே.

கல்யாணி, சாபு.

பல்லவி

வாசவனுக்கும் ஆசுரனுக்கும் வளர்ந்த தேசண்டை

அநுபல்லவி

ஈசனைப்போற்றும்ததீசிமுனிதந்த என்பைக்குலிசம்செய்தும்பருடன்வந்த வா

சரணங்கள்

௧ மூடவசுரத்தலைவரிடிபோல முழங்கிச்சவுரியம் பேசினார் பேசிக்
கோடியவிலவளைத்தேறிடநாணொலி கொண்டுவசையுரைத் தேசினார்
சாடியவேல்மழுசக்கரம்தோமரம் தண்டாயுதம்முதல வீசினார் ஒளி
நீடியவெங்கணைராக்கெனப்பொங்கி நெருப்பெழுவானவர் கூசினார்
தேடியவும்பர்படைத்தலைவர் கிட்டிச் செங்கையினால்புயங்களிலேதட்டிக்
கேடகங்களுடனேகடகங்களுமுட்டிக் கொச்சித்துமந்திரவாளினாலேவெட்டி
கேளும்சிலர்தலை அறுந்துபுரளப்படக் கிழிந்துசிலர்விரி மார்புந்துளைபடத்
தாளும்தோளுமுதரத்திலமறைபடத் தகர்ந்தவுணர்காலனூரிலநிலைபட்ட
வாசவன [ம்

௨ அங்கமதுகுறைந்தாலுங் குறையாமெய்யணர்கள்சேனையிற்சிலபேர் மாத
தங்கியவீரகண்டாமணிதன்னுடனே தாள்களறுபட்டார் சிலபேர்
தங்கமணிமுடியோடேவிளங்கும் தலைகளறுபட்டார் சிலபேர் உத்
துங்கமிருந்தகேயூரத்துடனேதிண் தோள்களறுபட்டார்சிலபேர் [ழிந்திட
செங்கைகள்வாளோடறுபட்டிழிந்திடச் சிலர்கள்தும்பையும்போருமொ
அங்கியுடனகலமார்புங்கிழிந்திட ஆனையுமானமுமோடிக்கழிந்திட
அண்டுகழுகுடன்பருந்துகூடவும் அறுத்துக்குடல்களையிழுத்தங் கோடவும்
மண்டலகைசோரியுண்டாடவும் மாண்டபிணத்தின்மேல்கவந்தமாடவும்
வாசவ

௩ இந்த்ரனனல்படைபோடவருணாஸ்த்ரம்எய்தவுணனதை ஆற்றினான் பின்னும்
கந்தவாகாஸ்த்ரம்விடஅவுணனதைக் கட்செவியாஸ்த்ரத்தால் மாற்றினான்
பிந்திநாகாஸ்த்ரம்விடக்கருடாஸ்த்ரம்பிடித்தசுரன்வெகுண்டேற்றினா னதந்
கந்தமோகாஸ்த்ரத்தைப்போடஅசுரன்ஞா னாஸ்திரத்தாலதைத்தூற்றினான்
விந்தையுட்னிருள் நீங்கிடவும்மேக மின்னலேவிடடதுபோலேவிரைவாக
சந்தமிகும்குலிசாயுதத்தைப்பாக சாதனன்வீசிடக் கண்டு பயமாக
சகலதெய்வதப்படைகளையும்விண்டு சலதியிலவுணன்மறைந்திடவுங்கண்டு
மகபதியுந்தொடர்ந்தறியாமலேபண்டு மைநாகமொளித்தவகைபோலாகக்
வாச (கண்டு

## அகத்தியர் கடலைக்குடித்தல்.

விருத்தம்.

இகலவிளைத்தா சுரன்மறைந்தா னிபபால விண்ணோர்க்
கிறைவனயன பாற்சென்று நடந்த தெல்லாம்
புகலவவன் தனைரூளா லகத்தி யன்பால
போநதுரைகக நம்பரமன் அருளபெற் றோர்க்குச்
சகமதிலெத் தொழி லரிதாம் நாரி பாகன்
தனதாழித் தீவடிவை யவன்தியா னித்தே
அகல்கடலை யுழுந்தளவா கத்தி ரட்டி
அங்கையிற்கொண டரைநொடிக்குள் அருந்தி னானே

சுருட்டிராகம், சாப்புதாளம்.

பல்லவி

கடலை ஆகருஷித்தாரே முடிவில்வரும் வடவைபோலக்குடித்தரே.

அநுபல்லவி

படிவம்மிகும்கும்பசம் பவமாமுனிவளைந்த கடலை

சரணங்கள்.

௧ திடமாம்அறத்தைமறநது சம்பாதிக்கின்றோர் செலவம்போலவேவறந்து
வடவாக்கினியோவென்ன மாணிக்கங்களும் மின்னப்
படரும்அதின்சிகைபோல பவளம்எழுந்து துன்னக் கடலை

௨ பிசகில்ரத்திநங்களாலே செய்தணிவைதத பெட்டிவாய்திறந்தாற்போலே
உசிதமணிகள் மிக்க ஒளிசெய்திருள் விலக்கப்
பசுயோவந்திடும்வலன். பட்டசெஙகளம் ஒக்கக் கடலை

௩ பிறைவாள்எடுத்து நிரம்ப வீசுவதுபோல் பிறங்கும்மீனினம் எழும்ப
தரையிற்சர்ப்பம் விளங்கச் சங்குமுத்தும் இலங்கச்
சிறுமீனெலாம் பருந்தின் சிவந்தமூக்கினில தொங்க கடலை

## இந்திரனைப் பிர்மஹத்தி பிடித்துக்கொள்ளல்.

விருத்தம்.

வாரிதியில் வகைசுவற அவுண னங்கோர்
மலைமேற்கொண் டினிமேரும் வகைதோன் றமல்

சாருமம்பர் தீவினையோர் வடிவெடுத்துத்
தவம்செய்த லெனத்தவம்செய் திடப்பார்த் திந்த்ரன்
கூரியவஜ்ராயுதத்தைச் சீர்ப்ப டுத்திக்
கொள்ளுதல்போலவன்தலையை யறுத்தானங்கே
சோரிகடல் நிரம்பியது பிரம ஹத்தி
தோஷமவனைச்சேர்ந்து தொடக்கண் டானே.

பெலகரிராகம் சாப்புதாளம்.

பலலவி

பிரமஹத்திஇந்திரனைப் பிடித்துக்கொண்டதேவந்து பிரம

அநுபலலவி

உரமிகுத் தவவுணன் உயிரைக்கொன் றதால்வந்த பிரம

சரணங்கள்

க மார்பைத்தட்டு மும்மென்னும் வாயைமடிக்கும் பினனும்
கோபித்தெழுமெழுந்து கூக்குரல்செய்து துன்னும் பிரம

உ ஓடும்திரும்பும்விழும் உக்ரமுடனே யெழும்
நீடுஞ்சிரிக்குமழும் நெருங்குமகலும் தொழும் பிரம

ங சமர்புரியத்துடிக்கும் தந்தஙகளைக் கடிக்கும்
அமருமிமைப்பொழுதும் அகலாதுடன் நடிக்கும் பிரம

## நகுஷன் இந்திரபதவியடைதல்.

இந்திரனிவ் விதமடைந்து விரைவி லேசென்
றீசான திசையிலொரு தடத்தில் வீழ்ந்து
கந்தமலர்த் தாமரைநா ளுக்குட் சென்று
கரந்திருந்தா னிப்பாற்பொன் னுலகம் முன்போல
அந்தமிலா திருக்கையிற்கு ரியகு லத்தின்
அரசனெனும் நகுஷனச்வ மேத யாகம்
சிந்தைமகிழ்ந் தொருநூறும் செய்தா னின்பம்
தேடினன் துறக்கம்வந்து கூடினனே.

பூரிகல்யாணிராகம் ஆதிதாளம்.

பலலவி

இனனம்சொலலுவோம் முனிவோரே
நீசனுககன்புசெய் வீரே

அநுபலலவி

மன்னனில்லாவறுமை நோக்கிநகுஷனுக்கு
மகுடம்புனைந்தமரர் தருமராசாகக்கொண்டார் இன்னம்

சரணங்கள்

அந்தநகுஷன்சொர்க்கங்கூடி சசியைத்தன்கண் அழைத்துவருவீரெனஓடி
வந்ததூதுவர்சொல்ல வாடி இதென்ன மாறுபாடென்றுசானை நாடி

என்றன்டதியுலகத் திருக்கையிலே பின்னும்
வந்துவேறொருவன்றோன்றுவலாகுமோ வென்னும் இன்னம்

௨ சிவிகைஎழுமுனிவர்பரிக்க வந்த தீரனேஇந்திரனுமென் றுரைக்க
அவனேபதியெனவும்ரமிக்கச் சசி ஆசானைப்பணிந்துசம் மதிக்க
உவகையுடன்இங்குவந் துறவேகடவதென்றே
அவசரக்காரரைத்து தனுப்பியிருந்தாளன்றே இன்னம்

௩ போகமதிலழுந்து மதியான் சிவிகை பொறுக்கும்மாதவர்களை மதியான்
வேகமதிலழியும் நிதியான் இந்திராணி விளங்குமிடம்குறித்தாழ் விதியான்
ஏகுமின்சர்ப்பசர்ப்ப வெனநகுஷன் மொழிந்தான்
ஆகையினாலென்சாபத் தாலரவாய் விழுந்தான இன்னம்

## இந்திரன் பிரமகத்திநீங்கும்பொருட்டு சிவதரிசனத்துக்கேகல்.

விருத்தம்.

அற்பருக்குச் செல்வமே பகையா மென்றார்
அதுநிசமே நகுஷனும்ப ருலகத் தெய்தும்
சொற்பநே ரத்திலகம் கொண்டு பாம்பாய்த்
தொல்லுலகி லென்சாபத் தாலே வீழ்ந்தான்
அப்பொழுதே விணணவர்தங் குரவ னைசசார்ந்
தரசிலாக் குறைசொலத்தேர்ந் தவரோ டிந்திரன்
தப்பியொளித் திருககுமலர்த் தடஞ்சேர்ந்துள்ளம்
தழைத்திட்டா ரன்புடனே யழைத்திட் டாரே.

ஆசிரிய னழைக்க வந்தீ சனுக்குச் செய்யும்
அரும்பிழைகள் தேசிகனு லாற்ற லாகும்
தேசிகர்க்குச் செய்தபிழை தன்னை யந்தத்
தேசிகனே யன்றியெவர் தீர்ப்பரென்றே
வாசவனறன கொடும்பழியைத் துடைக்க வேண்டி
மலரடியிற் பணிந்தெழுந்து கேட்க விந்தக்
காசினிவாழ சிவதரிச னத்தாற் றீரும்
காணெனறா மற்றதெலலாம் வீணென்றாரே.

தரு. பூரிராகம் சாப்புதாளம்.

௧ ஆதிகுருபதம் போற்றினன் கொடி தாகும்பெரும்பழி மாற்றினன்
ஓதரும்பத்தியோடேத்தினன் உள் உவந்தான்விழிபத்து நூற்றினன்

௨ ஆசானுடனசொர்க்கம்மேவினன உசசம் ஆகும்புரவியில் தாவினன்
கூசாமல்தேவரைக்கூவினன் வேட்டை கொள்ளும்வியாசமு லாவினன்

௩ பொன்னுலகம்விட்டிறங்கினன் பாணம் பூட்டுதனுவோடி லங்கினன்
தன்னுவல்கொண்டுதுலங்கினன் ஆசான் தன்னுடன்கூடிஇ ணங்கினன்

௪ வெள்ளிமலைமுதல் தேடினன ஈசன் மேவும்தலம்பின்னும் நாடினன்
தெள்ளுநதிதோறும் ஆடினன் சிவ தெரிசனத்துக்கன்பு கூடினன்

௫ அத்தலம்தோறும் பின்னாலே விருத்திர ஹத்திதொடர்ந்திட மேலே
பற்றியஈகத்தி னாலே ஒளி பங்கமுறும்சந்திரன் போலே

௬ உம்பருடன்நடந் தோதும் கடம் போங்கும்வனம்தெரி யாது
சம்பபேதிவழி மீது அதின் சாமீபத்தில்வரும் போது

## இந்திரன் பிரமகத்திநீங்கி கடம்பவனத்தைக்கண்டதிசயித்தல்.

விருத்தம்.

சதமகனிப் படிகடப்ப வனத்தே குங்கால்
தன்பழிவே றாகிநிற்கக் கண்டா னந்த
அதிசயந்தே சிகனறிந்தா னிவிடத் தின்மேல்
ஆனசிவ ஸ்தலமுந்தீர்த் தமும் நமக்கிங்
குதவியதா யுறல்வேண்டும் சோதி யென்றான்
உடனறிந்து வரச்சிலரை யனுப்பி னானு
விதமிருகம் பக்ஷிகள்சஞ் சரிக்கும் பாதை
மேற்கொண்டான் கண்களதின் பாற்கண் டானே.

முகாரிராகம், சாப்புதாளம்.

பல்லவி.

கண்டா னிநத்ரன் — அதிசயம் — கொண்டா னிந்த்ரன்.

அநுபல்லவி.

வண்டுலவியநீப வனத்தினி டையின் மேலே
அண்டரு டன்தன தாயிரம் கண் ணாலே கண்டான்

சரணங்கள்.

அருவிகொழிக்கும்மணி தனைக்குரங்குகள்பாறை
அதின்மேல்வைத்தருவிநீர் அபிஷேகம்தொடுப்பதும்
மருமலர்கொய்தர்ச்சனை செய்துகனிகளூட்டி வணங்கிநின்றடுப்பதும்
கரியும்யாளியுமொரு துறையிலிணங்கித்தும்பிக்
கரத்தில்நீரெடுத்தானைக் கன்றின்வாய் விடுப்பதும்
பரவிளமான்குட்டிக் கிரங்கிமெய்புளகித்துப்
பரிந்துவன்புலிமுலைப் பாலூட்டக் கொடுப்பதும் கண்டான்

அண்டவரியகொடும் வெய்யிலிடையில்கிடந்
தரவின்குட்டிகள்பல அழன்று மெய் பொரிவதும்
கண்டிரங்கிச்சிறகால் நிழல்செய்துவணப்பக்ஷி கணம்சுற்றித்திரிவதும்
வண்டினங்களுவணம் வருத்தப்படுதல்நோக்கி
வாய்விட்டரற்றியாவச் சோவென்று பரிவதும்
கொண்டமடமந்திகள் அருவிநீர்தனைச்சங்கின்
குடங்கொண்டெடுத்ததன்மேல் கருங்கையாலசொரிவதும் கண்டா

வன்னமயில்கள்தங்கள் பெட்டைகளைமருவ
வாளரவிரத்தின மணிவிளக் கெரிப்பதும்
மன்னியகருங்குயில் கூட்டினிலோமென்று வாய்கொண்டுச்சரிப்பதும்
பின்னுமினத்துடனே துன்னும்கிளிகளெல்லாம்
பெருமைதருரும்பஞ்சா க்ஷரத்தைவிஸ் தரிப்பதும்
அன்னதைக்குருவுப தேசம்போல்பூவைகள்
அறிந்துசந் தோஷத்தோ டகம்தனில் தரிப்பதும் கண்டா

## இந்திரன் சுந்தரலிங்கத்தைக்கண்டு தெரிசித்தல்.

விருத்தம்.

அண்டர்கோ னித்தவண்ணம் கண்டு வந்தே
  அங்கிருக்கும் பொழுதுமுன்போ னவர்கள் வந்து
சண்டியபா லருந்துபவர்க் கினிய தேனைச்
  சொரிந்ததுபோ லதிமகிழ்ச்சி பெருக வெந்த
மண்டலத்து மெக்காலும் காணொ ணாத
  மாநிதிகண் டதுபோலோர் தீர்த்த மும்கண்
டண்டையிலே கடம்பிடையோ ரிலிங்க மும்கண்
  டறிந்துவந்தோ மெனவணங்கி யறைந்திட் டாரே.

இருசெவிக்கின் பூட்டியது துவரோ டிந்திரன்
  இருகைகுவித் தம்பொற்ற மரைகண் டாடி
அருகிலரு வாகியுரு வாகிப் பினனும்
  , அருவுருவா யுயிர்க்கொளியா யனுதி யாகிச்
சரமசர மாய்விளங்கு முலகம் யாவும்
  தன்னிடத்தில் தோன்றியவா றொடுக்கி நின்று
கருவுருவாய் முளைத்தசிவக் கொழுந்தி னைத்தன்
  கண்கள்பல வும்களிப்பக் கண்டிட் டானே.

தரு காம்போதிராகம் சாப்புதாளம்.

க இந்திரன் சுந்தரலிங்கத்தைத்தரிசித் திறைஞ்சியெழுந்துமுன்னாலே மிகச்
சிந்தையிலொன்றிய ஆனந்தக்கண்ணீர்ச் செழுங்கடலாடியின்பாலே (பூசைக்
உ தோத்திரம்செய்தன் புருவாகிநின்று துறக்கத்திற்சென்றிமைப் போதில
கேற்றவெல்லாம்கொண்டுவாருமென்றொற்றரை யேவிடுத்தான்வெளி மீதில்
ங தேவர்குலத்தச்சனை ஓர்விமானத்தைச்செய்துவரும்படிக்கேவினன் விரைந்
தாவலுடன்சுவாமி பூசைக்குப்புஷ்பம் அகப்படாமலகுறைமேவினன்
ச புண்ணியதீர்த்தக் கரையருகேவரும் போதிலையனருள் கொண்டு எழுந்
தெண்ணரும்பானு ஒருகடல்மீதில் இசைந்துதித்ததென விண்டு
ரு செம்பொன்மரைமலர்கண்டானுவகை சிறந்திட ஆயிரம்கண்ணினன் அதில்
அன்புடன்தோய்ந்தேமபத்மாகரமென்றதற்கோர்நாமதேயம்பண்ணினன் [ன்
தூயபொற்றமரைப்பூக்களைச்செங்கையால்தொட்டெடுத்துக்கரைஏறினான் த
நோயைவிலக்கமுளைத்தமருந்தினை நோக்கித்தனதுள்ளம் தேறினன்
சா சுற்றியகாட்டைஅழித்துநிலத்தினைச் சுத்திசெய்துவரும் காலே ஞான
வித்துருக்கொண்டசிவக்கொழுந்தாகும் விமலன்திருமுடி மேலே
எ பானுவின்கிரணம்ஆனதுமெல்லப் பரிசிக்கக்கண்டுளம் துடித்தான் தேவர்
கோனுமபபோதுதன்சந்திரவட்டக் குடையால்நிழல்செய்யப்பிடித்தான்
அ அப்பொழுதேயொருரத்நவிமானம தம்பரம்தன்னில் இருந்து எழுந
திப்புவியில்சூர்யமண்டலமான திறங்குதல்போலே இழிந்து
கூ அஷ்டகஜங்களோரெட்டுத்திசையிலும் முட்டிச்சுமந்துநின் றோங்கநால்
எட்டுச்சிங்கங்களுங்கிடடியவற்றோடெட் டெட்டுக்கணங்களும் தாங்க
௰ கோடியிரவிஉதித்ததுபோற்சொர்ன கும்பங்களுச்சியில் இலங்க வாகை
சூடுமிடவக்கொடிகளெட்டெங்கும் சோபிதமாகவே துலங்க

தூக்கிப்பொன்மேற்கட்டிமுத்துச்சரங்கள் தொடுத்த[illegible]லை ஒளி
தாக்கிய அவ்விமானத்தைமயன்தரச் சாத்தினன் செழும்மூன் [illegible] ஞலே [ரிந்
கங உம்பருலகுக்குச்சென்றவர்பூசைக் குபகாரணங்கள்கொண்டுவந்தார் தெ
தம்பொற்கமலத்தில் ஆடிப்பிறப்பை அறுக்கும்விபூதியை யணிந்தான் (ய்யில்
கச செய்யருத்ராக்ஷமணித்தாவடம்பூண்டு தேவர்கோன் ஆதரவுடுத்தான் மெ
யையரவாடும்பராபரனைப்பூசை பண்ணமுறைப்படி தொடுத்தான்
கரு சித்தமகிழ்ந்துகுருவுடனேமறை செப்புமுறைமையா ராட்டினன் ஆக
மத்தின்படிதன்மனம்வாக்குக்காயமொன் ருகஉறுதியை நாட்டினன்
கசு தேவிதன்விம்பத்துடனேபரிவார தேவதைகள்யாவும் பதித்தான் பதித்
தாவலுடன்ருத்ரமாதிமொழிந்தே அபிஷேகத்தைச்செய்ய மதித்தான் (சிவ
கஎ தேனுவின்பாலும்பஞ்சாமுதமும்கங்கா தீர்த்தமுதல்யாவும் சேர்த்தினன்
ஞானமிகுத்தபிஷேகாதியைச்செய்து நல்லபீதாம்பரம் சாத்தினன்
கஅ வாசம்மிகுந்தநற்கந்தமணிந்து மணிமாலைகள்பல பூட்டினன் துய்ய
ீதசுள்ளபொற்ருமரைமுதலாயுள்ள திவ்வியமலர்களைச் சூட்டினன்
ககூ தூபதீபநிவேதனமுதல்செய்து சோடசோபசாரம்புரிந்தான் பின்னு
மாபதியையடிக்கடிபிரதக்ஷணம் வந்துபணிந்தெழுந் துவந்தான்

## இந்திரன் சுந்தரலிங்கத்தைப்பூசைசெய்துதுதித்தல்.

விருத்தம்.

விதிமுறையால் பூசைசெய் தஷ்டாங் கத் தோடும்
மேலுயரும் பஞ்சாங்கத் துடனே தாழ்ந்து
குதிகொளுமானந்தவெள்ளம் கண்ணீ ராகக்
கொண்டுபிர தக்ஷணம்வந் துடல்கம் பிக்கக்
கதிதரும்நற் கரணமொரு மூன்றுமொன்ருக்
கலந்திருகை யஞ்சலித்து நிருத்தம் செய்தே
மதியணியும் கடவுளையன்புடனுள்ளத்தில்
மதிக்கின்ருன் வானவர்கோன் துதிக்கின் ருனே.

**ஆனந்தபைரவிராகம் ஆதிதாளம்.**

பல்லவி

உமாபதியேசரணம் சோமசுந்தர தயாநிதியேசரணம் என்னைரக்ஷிக்கும் உம

அநுபல்லவி

உமாபதியேசின்மயமா முனக்கொருவர் சமான மோஹரிபி ரமாதி தேடரிய
உமாப

சரணங்கள்

ஆரணங்கள் தேடும்மூல காரணவனைத்தையுமுண்
டாக்கியுமளித்துமழித் தவனே
தாரணியிலேசகல ரூபமுமாய் நின்றவற்றில்
தாமொன்றுமில் லாமல் கழித் தவனே
தீரமாயெல் லாமறிந்தும் யாவையும் மறந்தெப்போதும்
செழுஞ்சுட ராகவே செழித் தவனே

க்ஷீரமும்நெய்யும்போலுல கெங்குங்கலந்துங்கலவாத்
தேவனே என்பழி ஒழித் தவனே
சீலா பரிபாலா அற்புத லீலா யாரும் செப்பரிய சாமகான
லோலா ஆதிமூலா காக பாலா விசாலானுகூலா காலகாலா உமாப

மங்கலம்மி கும்கடம்ப மாவனத்தனே கயற்கண்
மணாளனே ஈறில்லா முத லவனே
துங்கமா யெங்கும்பரவும்சுடரொளி விமானத்திடை
சுந்தர லிங்கமாய் எழுந் தவனே
அங்கணுட னேஅறிந்தோர்க்கரும்பந்தத் தைநிவிர்த்தி
ஆக்கமருந் தாய்முளைக்கும் பவனே
[illegible]கள்நாயகனே லோகம் எங்கும்வியாபித்த உன்னை
யாவராலும் அறியப்படா தவனே
யோகா பேரனேகா என்னைநீகா மனத்தெண்ணிரியபுண்ணிய ஞான
யோகா இடபவாகாதிவ்வியதேகா பெண்பாகாவைபோகாசகன்மோகா
உமாபதியே

ஆகமப்ப டிதொழும்மார் க்கண்டனுக்கெந் நாளும்பதி
னாறுவய தளிக்கும் வாம தேவா
ஆகுமணு வுக்குளணு வாயும்மேரு வுக்குமேரு
வாயும்விளங் கிடும் மகா தேவா
ஏகமா யிருக்கும்பிர்ம ரூபனே யுனையல்லாமல்
இதரதெய்வ மில்லை ஆதி தேவா
பாகம்மிகுந் திடும்பல யாகம்செய்மா தவருக்கப்
பலனுவந்த ளிக்கும் தேவ தேவா
பாரா தருள்தாரா தூறல்சீரா சூலபாணிமதிபூணிகொன்றைத்
தாரா பொருட்சாரா அலங்காரா உதாரா கெம்பீரா என்னோரான உமா

பூசுரரோதும் மறையின் முடியிலே நடிக்கும்பரி
பூர்ணமா நிறைந்த பரா பரனே
பேசும்பொரு ளாயும்அறி வாயும்அறி பவராயும்
பிறங்கியே நீடும் சூல தரனே
பூசையும் பொருளுமாகிப் புரியுமவ னுகியந்தப்
பூசைகொண்ட தற்கருளும் வரனே
ஈசனுமா கியென்போத வாசனை யுமாயென்பூசைக்
கிசைந்தெனை ரக்ஷிக்கின்ற சங் கரனே
ஈசா பஞ்சகோசா சர்வேசா பணிந்தேத்தும்அடியார்க்கருளும்
நேசா பாபநாசா கூடல்வாசா உல்லாசா பூதேசா மந்தகாசா உமா

## இந்திரனுக்கு ஈசன் தரிசனம்கொடுத்து அருள்புரிதல்.

விருத்தம்

கங்கைமதி இலங்கும்மணி முடியும்காதில்
கதிர்விடுகுண் டலமும்அங் கதமும்நாக
கங்கணமும் செங்கைமழு மானும்நீல

கண்டமும் அம்பிகைபடர்மே னியும்முக்
சங்கும்இள கையும்அருள்முகமும் கொன்றைத்
தாமமும்பூண் டிளங்கதிர்போல் ஐயன்மூல
லிங்கமதில் இருந்திந்த்ரன துதிகேட்டன்பு
நீட்டினர் எழுந்துருவம்காட்டி னரே.

இன்னவகை தோன்றிமகிழ்ந் தருடகண னோக்கி
யாதுனத பேக்ஷையுரையென்று ரப்போ
துன்னதுபெ ரும்பதிக்குள் வருமுன் நீங்கா
துறுபழியும் தொல்வினையும் துடைத்தா யுனறன்
தன்னடியா ருக்குளொரு தொண்டனாகத்
தக்கதுவே வேண்டுமென ப்பணிந்தா னந்தப
பொன்னகர்வா சனுக்கிரங்கி யீச னன்பு
பொழிகின்று னதற்குவகை மொழிகின் றனே

அடாணா, சாபபு.

க வாசவனேருது ஆறுக்குளவசந்த  காலம  வளர்
மாதங்களுக்குள் சிறப்பாகும் மேஷம்வி  லாசம்
பேசரியதிதிக் குள்நயரும்பூர்ணை  யாமே  நலம்
பெற்றநக்ஷத்திரத்தில் சித்திரையாமுயர்  பூமேல்

உ ஓதியஇந்நாலும் எந்தத்தினத்திலே  சேரும்  அஃ
துத்தமமாகிய சித்திராபூர்ணையில  நேரும்
தீதையகற்றும் எமதுதலம் தனை  நாடி  முத்தித்
தீர்த்தத்திலேமகிழந் தாடிமகிமையைக்  கூடி

ங நேரொளிபொற்ற மரைமலர்கொயதன்பி  னாலே  மூல
லிங்கவடிவாம் எமைபபூசைபணணத  னாலே
ஆரும்முந்நூற்றறு பத்தைந்து நாளும்  தப்பாயல  பூசை
ஆற்றும்பயனை அடைவாயதுவு  மல்லாமல்

ச அந்நாளில் செய்யும் ஜபஹோம தர்ப்பண  தானம்  தர்ச
னதிமுதற்செய்வ தாலேயகலுமஞ்  ஞானம்
பன்னாளில் செய்திடும் பாவஙகளிலலாமல  போகும்  பூசை
பண்ணிடில்தேசு புகழமுதலாவிர்த்தி  யாகும்

ரு இபபோதமராரு டன்விண்ணு லகத்தில்  பரிவாய்  புகுந்
தெப்போதும் போலே சுவர்க்காதிபத்தியம்  புரிவாய
அப்பாலயன்மால் முதற்பலதேவராச  சிறப்போர்  பதத்
தாசையுமற்றே யுயர்ந்த நல்வீடுனக்  களிப்போம்

சு எந்தமக்காகநீ சாத்தும்விமானததுக  கிலங்கும்  பெயர்
இந்த்ரவிமானமெனா றுன்தன்பேரொறைக்கும் விளங்கும்
இந்தப்பதிக்கழி வில்லைபிராளயத்  தாலே  புரத்
தெந்தொண்டர்மூவர்எரிக்குட்பிழைந்தது  போலே

## இந்திரன் விடைபெற்றுக்கொண்டு தேவலோகத்துக்குப்போதல்.

விருத்தம்

விடையருளீ சனைப்பணிந்து புளகப்போர்வை
மெய்க்கணிந்தஞ் சலிக்கமலம் தலைமேல்வைத்துக்
கடைதிறந்தா னந்தக்கண் ணீர்துளும்பக்
சாக்ஷிதரும் ஐயன்மொழி கருத்துட் கொண்டே
உடையவனை க்கினைநாடிப்பிரிவாற்றாமை
உன்னிவிமா னத்தைவளைந துளம்பூரித்து
நடைபெயர்வா னவருடனே சென்றுசொர்க்கம்
நண்ணினன் நாறுபத்துக் க

தாலாட்டு, ரூபகம்.

க அமராவதி நகர்வீதியில் அனைவோர்களும் மகிழ
இமையோருடன் முனிவோர்களும் இசைந்தேமறை புகழ
உ மந்தாரமும் சந்தானமும் மலர்மாரிகள் தூற்றச்
சந்தோஷமா வினைறுடர்கள் தாளில்முடி சாத்த
ந வேலார்வரி விழிமங்கையர் வெண்சாமரை வீசக்
கோலாகல மொடுகின்னரர் கூறுமிசை பேச
ச கயலூர்விழி உமைநாயகன் கருணைக்கடல் ஆழ்ந்தான்
நயமாம்பழை முறைசெய்துவிண் ணுடோருடன் வாழ்ந்தான்

பலசுருதி விருத்தம்.

இந்திரன் பழியைநீக்கும் இந்தலீ லையைமொழிந் தோர்
சிந்தையில் உவந்துகேட்போர் சிறந்தறம் செல்வ மோங்க
நிந்தையாம் பாவம்நீங்கி நிரோகரா யிருப்பதல் லால்
சந்ததம் சுபமுண்டாகத் தழைத்துவீற் றிருப்பர் தாமே

### க வது இந்திரன்பழிதீர்த்த திருவிளையாடல்முற்றும்.

ஆக விருத்தம் — (உய) சந்தம் — (க) கீர்த்தனை — (அ) தரு — (சு) ஆக ௫௫.

௨

## வெள்ளானைச்சாபந்தீர்த்த படலம்.

அவதாரிகை விருத்தம்.

விழியொரு றூன்றுனிந்திரன் விருத்திரா சுரனைக்கொன்ற
பழிதொலைத் தாடல்செய்த பாங்குமுன் னுரைத்தேனிப்பால்
மொழியும்வெள் ளானைக்கந்நாள் முனிவரன் கொடுத்தசாபம்
கழியுமா றருளிச்செய்த கதையினை விளம்புவேனே.

## இந்திரன் பவனிவர துருவாசமுனிகாணுதல்.

காசியிலே துர்வாசமுனிவர்தம்பேர்
கண்டிலிங்கம் தனையமைத்தர்ச் சிக்குங்காலவ்
வீசுரனதன் திருமுடியின மேல்நின் றுபபோ
தெழுந்தொருதா மரைப்பூவீழ திடக்கையேந்தி
நேசமுடன் தமதுவிழிமுடியுரததில்
நிகரிலா உவகையுடன் அணைத்தெழுந்து
மாசகலும் பொனனுலகில புகுங்காலிந்த்ரன்
வானவர்சூழ்ந் திடப்பவனி வருகின்றானே

பைரவி, ஆதி.

பல்லவி

அந்தஇந்திரன் பவனிவரும்சிறப்பின் அதிசயம்கேளும் முனிவோரே

ஐந்தருவும்தேனுவும் சிந்தாமணியும் நாளும்
சிந்தையிலுணர்ந்துதெ ரிநதளிக்கம கிழும் அந்த

சரணங்கள்

க சுற்றிவிசயசங்கத் தொனி மீறச் சண்டை
தொடுத்தசுரரைக்கொன்ற இசை மீற
வெற்றிமாலைபூண்டதோள் வலி மீறச் சூழும்
விண்ணோராம்சேனைக்கடல் ஒலி மீற
பத்தியுடனேயஷ்ட மங்கலங்க ளுதிக்கப்
பல்லாண்டும்வேதமும் பக்கங்களில கதிக்க
மத்தியிலேதனது நகரத்தினர் மதிக்க
வருகுமதிசயங்கண் டனைவர்களுந் துதிக்க அந்த

உ இருநாலுதிக்கிலும் படை யிடங்கக் கலலென
திசைந்தஓசையுடன்பல லியம் முழங்கப
பெருகுமமுதாசமென விளங்கத் தெய்வப்
பெண்கள்பாடுமிசை செவிக் கிணங்கப்
பரவும்சேனை ஆகிய கடலிலநிலைமை கொணடு
பத்திபத்தியாகவே தத்தித்தத்திப்பு ரணடு
வருமலைகள்போல்வெண்சா மரைக்கூட்டங்கள சுழன்று
வரிசைவரிசையாக அசைப்பவதனைக் கண்டு அநத

ந சங்குலவியகடல்நடு வாலே நாவாய்
தனனைசசெலுத்தும்மீகா மனைப் போலே
திங்களையொத்தநடை யொருக காலே நிழல்
செய்யவுயர்ந்தவெள்ளா னையின் மேலே
தங்கும்விண்ணுடர்தனித் தனியாய ருகில் வந்து
தங்கள்தங்கள்மனதுக் கிசைந்தகாணிக்கை தந்து
செங்கைகளைஎடுத்துக் குவித்துக்கொண்டிரு ரந்து
சேவடியில்தொழுது காணமிகப்ப ரிந்து அந்த

## துர்வாசமுனி இந்திரனைக் கோபித்தல்.

விருத்தம்

அமரர்கோ னிந்தவிதம் பவனிவந்தான்
அரியதுரு வாசரும்கண் டாசிகூறித்
தமதுகையி லிருந்தார்க்கும் கொடுக்கொணாத
தாமரைப்பூ வினைக்கொடுத்தா ரந்தப்பூவை
மமதையடைந் தொருகையை நீட்டிவாங்கி
மதமிகுமை ராவதயா னையின்மேல்வைத்தான்
தமருடைக்கை யாலதனைக் கீழேதள்ளித்
தாளினால சிதைககமுனி தாம்கண்டாரே

இதுவுமது.

மண்ணிலிந்த வாறுமலர் சிதையக்கண்டு
மன்மதனை யெரித்தசிவ னுடையநெற்றிக்
கண்ணிலிருந் துண்டானதீப்போலேதம்
கண்ணிலிருந்துதிர்ந்திடவே கோக்கிக்கோபம்
பண்ணியரு கினிலுள்ளவிண்ணோரெல்லாம்
பயநதோட வார்ப்பரித்து வலனைவென்ற
திணமிகும் இந்திரன்முன் அடர்ந்துசீறிச்
செப்புவார் உருத்திரனை யொப்புவாரே

சங்கராபரணம், சாபு.

என்செய்தாய் இந்திரனேநீ என்செய்தாய்

அநுபல்லவி

சஞ்சமலராயனும் கண்ணனும் பணிந்தேத்த
நஞ்சையுண் டருள்செய்த நாதன்மலரையிகழ்ந் தென்

௧ புள்ளியம்புலித்தோலுடுத்து வெண்மைபூண்டெழில்மிகுந்த எருத்துமிசை
நள்ளியசிவனைச்சிந் தித்து அளவை நாடுமடியார்கள் வெறுத்துத்
தள்ளிநிந்தித்தசெல்வத் தருக்கால்கண் தெரியாமல்
உள்ளருந்தவத்தோரென் றோர்ந்தெண்ணிப் புரியாமல் என்செய்

௨ இமையோர்தரும்காணிக்கைமதித்து எமதீசன்மணிமுடிமேல்பதித்துவந்த
கமலமலரையகங் கரித்து ஒரு கையால்வாங்கியவ மதித்து
மும்மதம்பொழியும்யானை முதுகின்மீதினில் வைக்க
மமதையினாலது மண்ணில்தள்ளி மிதிக்க என்செய்

௩ திசைமுகன்படைக்கின்றமூப்பு மனைவெசெந்திருமால்காக்கும்காப்பும் துட்ட
அசுரரைவென்றகி தாப்பும் கொண்டு அமரர் சூழுமுன்னிறுமாப்பும்
பசுபதி யைப்பூசித்த பலனென்று குறியாமல்
இசையும் பாகதிக்கும் லேதுவென் றறியாமல் என்செ

## இந்திரனுக்கும் ஐராவதத்துக்கும் துர்வாசமுனி சாபங் கொடுத்தல்.

மன்னுமுனி வரன்வெகுண்டிந் திரனைச் சீறி
வழுதியர்க்குள் ஒருவன்வளை தடியா லிந்திரன்
சென்னிசிதைந் திடவும்வெள்ளை யானை காட்டில்
செறிந்தகளி றாகவுமே கடவ தென்று
துன்னியசா பங்கொடுக்கத் தெரிந்து தேவர்
சூழ்ந்தரசும் யானையுந்தீங் குற்ற காலே
அன்னவர்தம் பொன்னடியில் பணிந்தீ திப்போ
தகற்றுமென அவர்க்கிரங்கி யருள்செய் வாரே.

பரமசிவன் சேஷகிந் தனையெஞ் ஞான்றும்
பரிகாரத் தாலகலா தானு லிந்திரன்
சிரமளவா னதுமுடிமட் டாகிச் சாபம்
தீர்ந்திடவே கடவதுவெள் ளானை காட்டில்
கரியதுவாய் நூறாண்டு சென்ற பின்பு
கழிந்தைரா வதமாகக் கடவ தென்று
வரமுனிவர் விண்ணவரை நோக்கி யாங்கே
மறுசாபம் அளித்திருக்கை மகிழ்ந்துற் றாரே.

திபதை—மோகனம், சாப்பு.

௧ மாவலரேதவம் நீளும் துரு வாசரகன்றபின் கேளும்
தேவர்கள்பொன்முடி பங்கப் பட்ட செய்கைபின்சொல்வோம் துலங்க
௨ அஞ்சிவெள்ளானை விண்ணாடு விட் டறிவழிந்து துக்கத் தோடு
அஞ்சனக்குன்றெனச்சோர்ந்து காட் டானையின்கூட்டத்தில் சேர்ந்து
௩ துய்யவெண்கொம்பிரண் டாக வலி தோற்றுத்தெய்வத்தன்மை போக
செய்யபூமுல்லை நிலத்தும் வனம் சேர்ந்தமலைபல் தலத்தும்
௪ ஓடியலைந்துடலிளைத்து நலம் உற்றிடாதுள்ளம் களைத்து
வாடித்தவிக்குமக்காலே அந்த மாமுனிதன்னரு ளாலே
௫ ஆண்டொருநூறுமகன்று கடம் பாரணியர்தனில் சென்று
வேண்டும்பொற்றாமரைகண்டு கரை மீதிலேநின்றன்பு கொண்டு

## ஐராவதம் சாபந்நீங்கிச் சுந்தரேசரைத் துதித்தல்.

விருத்தம்

மண்டலத்தி லலைந்துபொற்றா மரையைக் கண்ட
மாத்திரத்தி லறிவுவந்தத் தீர்த்தந் தோயப்
பண்டுருவா கவுமீசன் கருணை யால்முன்
பரானந்த லிங்கமுறக் கையா லந்நீர்
மொண்டபிஷே கம்புரிந்து பூசை செய்ய
முன்னவனவ் வானையைப்பார்த் துனத பேக்ஷை

விண்ணேரையென் றருளமுன்னே நடந்த வெல்லாம்
விளம்பியதோர்ந் திடும்தவத்தில் மேவு வீரே.

தரு—மத்தியமாவதி, சாப்பு.

க சாமிசரணம் சரணமபயம் தரும்சோம சுந்தரனே அரி
பூமன்வருந்தியும் காணருஞ்சீருறும் பூலோக சுந்தரனே
உ என்னவரம்வேண்டு மென்றெனைக்கேட்கவிசைந்தாயேசுந்தரனே ஐயா
உன்னையடைந்து தொழுதவர்க்குக்குறை உண்டாமோ சுந்தரனே
ங தீராவினைக்குத்தெய் வமேதுணையென்ற செய்திநற் சுந்தரனே
தாரணிசொல்லும்படிக்கென்றன்சாபம் தவிர்த்தாயேசுந்தரனே
ச இன்பமெனக்குற வாகுமிருநால் இபத்துடன் சுந்தரனே
தொன்பதுபோரா யடியேனும்கூடி ஒருமையாய்ச் சுந்தரனே
ரு சந்ததமுன்பொன் னடிபிரியாமலுன் தன்முன்னே சுந்தரனே நாளுட்
இந்தவிமானம் முதுகில்சுமக்க எனக்கருள் சுந்தரனே

ஐராவதம் விடைபெற்றுத் தேவலோகம் செல்லுதல்.

கட

போற்றும்வெள்ளானைக் கிரங்கியென் பத்தன் புரந்தரன் தனைச்சுமப் பதுவே
புகமெனச் சோம சுந்தர மூர்த்தி புங்கமா வரங்கொடுத் தனுப்ப
மேற்றிசை போய்த்தன் பெயர்க்கொரு தடமும் விநாயக னையும்பர மனையும்
விளங்கவங் கமைத்தர்ச் சிக்கையில் மகவான் விடுத்தது துவரைமுன்னனுபபி
கீழ்த்திசையினில்தன் பெயர்க்கொருதலமும் கேளுமிந்த்ரேச்வர மென்னும்
இரிச்சிறகரிந்தோன்பெயர்க்கொருதலமும்கிளர்நதிடவமைத்திறைஞ்சுங்கால்
மாற்றியும் தூதரழைக்கவா னடைந்திம் மாநிலத் துலேந்ததும் கடப்ப
வனத்தனால் தனது சாபநீங் கியதும் வகையுடன் வணங்கிவிண் டதுவே.

விருத்தம்.

கருதியயி ராவததீர்த் தம்ப டிந்து
கணேசனர னையும்பணிந்தி யானை செல்லும்
இருவழிபோய் வையைபடிந் ததன்தென பக்கத்
திந்திரே சனைப்பணிந்தோர் இகத்தில வாழ்ந்து
சுரபதியீ ரெழுவர்பட்டம் வரைக்கும்விண்ணில்
சுகித்ததிகழ்ந் தானுலகில் செல்வா ரீதை
உரைசெய்வர்கேட் பவர்பவநோய் நீங்கியென்றும்
உறுதிபெறும் செல்வமடைந் துறைகுவாரே.

ஆக விருத்தம்— கூ, தரு— உ. திபதை— உ.

இரண்டாவது வெள்ளானைச்சாபம்தீர்த்த திருவிளையாடல்
முற்றும்.

ஸ்ரீமீனாக்ஷிசுந்தரேசர்திருவடிகளேசரணம்.

———(...)———

உ

திருச்சிற்றம்பலம்.

மூன்றாவது

## திருநகரம் கண்ட படலம்.

————(*)(*)————

அவதாரிகை—விருத்தம்.

விடங்திகழ் கண்டத் தெந்தை வெள்ளிவா ரணத்தைச் சூழ்ந்து
தொடர்ந்திடும் முனிசா பத்தைத் துடைத்தவா றுரைத்தே னிப்பால்
கடம்பமா வனத்தை மாற்றிக் கடிகொள்மா நகர மாகத்
திடம்பெறக் கண்ட வாடற் சிலதெடுத் துரைசெய் வேனே.

### தனஞ்சயன் கடம்பவனத்தில் மூலலிங்கத்தைக்கண்டுபூசித்தல்.

மன்னிவரும் சுரும்பினங்கள் பயில் கடம்ப
 மாவனத்தின் கிழக்காக மகிமை யோங்கும்
தென்னர்குல சேகரனென் றொருவன் செங்கோல்
 செலுத்திமுறை செய்திருக்கும் மணவூர் தன்னில்
முன்னவன்சே வடிக்கடிமை பூண்ட மெய்யன்
 முக்கியமாச் சிவபூசை செய்யும் துய்யன்
நன்னிதிசேர் வசியகுலோத் துங்க னும்சொல்
 நயனென்பான் சிறந்ததனஞ் சயனென் பானே.

திபதை—புன்னாகவராளி, சாப்பு.

க கல்லியாணவூரிலிருந்துநெடுநாளாக் கப்பல்வியாபாரம்பண்ணுவான் மிக
 உல்லாசமாகச்சிவனடியாருக் குதவியேதக்கதென் றெண்ணுவான் [வன்
உ சீலத்துடன்வாணிகம்செய்யவேண்டுந்திரவியத்தைக்கொண்டுநடந்தான்அ
 மேலைத்திசையைக்குறித்துத்தனதூரை விட்டுநெடுந்தூரம் கடந்தான்
௩ தூரத்தொலையிலிருக்கும்வளம்பதி தோறும்புகுந்துசஞ்சரித்தான் பல
 சீனர்த்தரும்வாணிபத்தைச்செய்துதேவ தேவன்நாமத்தையுச்சரித்தான்
ச நேமமுடனேதனதுபதியை நினைந்துவரும்வழிக் கொண்டான் அன்று
 ஸோமவாரவிர்தமானதனல்நடை சோர்ந்திளைப்பாகவேசென்றான் [மறைந்
ரு செல்லத்தடத்தில் கடம்பவனத்திடைச் சேர்கையில்சூரியன் மறைந்தான்
 தல்லுக்குள்ளேதனித் தஞ்சிவழிதெரி யாமலக்கானகத் துறைந்தான்
சா பக்ஷிமிருகம் முதலாத்தமது பதியிலடங்கியங் குறையத் தனக்
 கக்ஷிதெரியாதிருட்டுக்குள்நீர்ச்சடை அண்ணலிடத்தன்பு நிறைய
எ தாங்குமிருநாலு யானைப்பிடரியில் தன்னுயிரங்கதி ராலே மிக
 வீங்குமிருளைத்துரத்தும்ரவிபோல் விமானம்கண்டானெதி ராலே
அ கண்டவிமானத்தமரும்திருநீல கண்டனைக்கண்டிரு தயத்தில் அன்பு
 மண்டுமுவகையுடனேபணிந்தெழு வானவரந்தச்ச மயத்தில்

௯ சோமவாரத்தினமென்றுயரும்சோம சுந்தரலிங்கத்தைப்பரிவால் அவர்
யாமமொருநாலும்பூசித்தருச்சனை ஆகமத்தின்முறை புரிவார்
௰ அண்டர்கள்வந்துதொண்டனறிய அமலனும்ஞானக்கண் ணிந்தான் திரி
புண்டரநெற்றித்தனஞ்சயனுமையன் போதங்கொண்டண்டரைச்சார்ந்தான்
௧௧ தானும்செழித்தபொற்றாமரையாடித் தனதீசன்கோயிலையடுத்தான் உயர்
வானவர்கையிலஅபிஷேகத்துக்குள்ள வாசவருக்கங்கள் கொடுத்தான்
௧௨ மாமண்டபத்திலிருந்துதவள மதிச்சடையோன்பூசையாற்றினன் திகழ்
சோமசுந்தரக்கடவுளைக்கும்பிட்டுச் சுற்றிவலங்கொண்டெதிர் ஏத்தினன்

## தனஞ்சயன் தான்கண்டதைக் குலசேகரனுக்குத் தெரிவித்தல்.

தனஞ்சயனிவ் வாறுபூ சித்தெழுந்தான்
தன்வினையு மிருளுமங்கே நீங்கக் கண்டான்
இனம்செறிந்த விண்ணவரைக் காணுன் முன்னே
இலங்கியதோர் விமானம்கண் டதிச யித்தான்
தனம்தனியே மணவூர்க்கு வந்தான் செங்கோல
தரித்தகுல சேகரபாண் டியன்பால் நீப
வனம்தனில்தான் கண்டவண்ண மெல்லாம் சொல்லி
மகிழுவான் விவரமுடன் புகழு வானே.

சௌராஷ்டிரம் சாப்புதாளம்.

பல்லவி

கண்டதைக்கே ளாய்குலசே கரபாண்டி யராஜனே

அநுபல்லவி

வண்டினம்ப யில்கடம்ப மாவனத்தி ரவில்கணுல் கண்ட

சரணங்கள்

௧ நான்வரும்போ தந்தக்கானம் நண்ணிமிகக் கொண்டேன்தீனம்
பார்வநாச ரைத்தி யானம் பண்ணுமுன்னே ரேவி மானம் கண்ட

௨ அமரர்வந் தொருக் காலே அர்ச்சனைசெய் தார்மேன் மேலே
நிமைக்கும்கண் ணின்முன்னாலே லிங்கக்குறி யையனை பாலே கண்ட.

௩ சுவணத்தா மரை யாடி சுந்தரனைத் தாழ்ந்து தேடி
சிவபூசை செய்தேன் நீடி செங்கதிரு திக்க நாடி கண்ட

## சுந்தரேசர் கடம்பவனத்தில் பட்டணங்கட்டும்படி ஆஞ்ஞாபிக்க அரசனைகணடு துதித்தல.

விருத்தம்

சிவபத்தி மானிவகை சொல்ல மேற்குத்
திசைநோக்கிப் பணிந்தரசன் இருக்கவந்நாள்
தவமுனிவர் தேடரியோன் சித்த ராகத்
தனியிரவில் அவ்வரசன் கனவில் தோன்றி

உவமையிலாச் சசிகுலசே கரனே இம்மேற்
குயர்கடம்ப வனத்திடையெம் விமானம் சூழ
நவமதாய் உனக்கொருபட் டணம்செய் யென்று
நடந்திட்டார் தமதிருக்கை யடைந்திட்டாரே.

கனவுகண்டாங் கெழுந்தரசன் அமைச்சர் மற்றோர்
களுக்குமுரைத் துச்சேனை யுடன்க டம்ப
வனமடைந்து செய்யபொற்றா மரைநீ ராடி
மனமகிழ்ச்சி பூண்டுவிமா னத்துள் மேவித்
தனிவளரும் மங்கைபா கனைப்ப ணிந்து
தனதுடலம் கம்பிக்க வந்து காயம்
மனமொழியொன் றாகநின்று னந்தக் கண்ணீர்
வடிக்கின்றான் துதித்தெதிரே நடிக்கின் றானே

செஞ்சுருட்டி ஏகதாளம்.

பல்லவி

சாமியுன் — றன்திருவடி — சரணம்

அநுபல்லவி

தாமோதரனும் அயனும் தேடிய மாமலரடி முடியும் நீடிய சாமி

சரணங்கள்

க ஏகனே சரணம் விடை வாகனே சரணம்
நாகபூஷண னேகயற்கண்ணி பாகனேநித்திய தேகனே என்றன் சாமி

உ அரகர சரணம் திரி புரகர சரணம்
வரனேபரசு தரனேசோமசே கரனேமெஞ்ஞான பரனே என்றன் சாமி

ங ஈசனே சரணம் கூடல் வாசனே சரணம்
பூசனையன்பர் நேசனேபவ நாசனேபஞ்ச கோசனே என்றன் சாமி

ஆகாசஞ்சுணைபக்கட்ட வெட்டியறிந்தல்.

விருத்தம்

துதித்துமறை பரவரியா தனதுபாதம்
துறவிகடகல் லாமலிநத மண்ணையாண்டு
கதித்தநா கெய்தியுழல் ஏழையேற்குக்
காணவெளி தோகருணைக் கடலேயன்பு
பதித்தெனது குலமுழுதும் அடிமைகொண்டு
பாலிக்க முளைத்தபரஞ் சுடரேயென்று
மதித்தகுல சேகரபாண் டியனங்கோர்பால்
மன்னினன் அமைச்சரொடும் துன்னினனே.

திபதை— புன்னாகவராளி, ஆதிதாளம்.

௧ இருந்தபின்மகராசன் ஆக்ஞையால் இசைக்திடுமந்திரிகளியம்பும்வண்ணம்
விரைந்தெழுந்தேவலர்கள் துறைதொறும் மேவியனுப்பநெடுங்காட்டைவெட்டி
௨ அதிசயநகரமைக்கச் செயுந்தொழி லாட்களளவில்லாம லேயெழுந்து
உததிபோலார்ப்பரித்துக்கொண்டுசென் றென்கொடுவாளும் கோடாலிகளும்.
௩ வகிக்கின்றதோளினரும் அரையினில் வைச்சுவரித்துக்கட்டும் கச்சினரும்
மிகக்கறுத்திரும்பினைப்போ லேயொளி விளங்கியதேகத்தை யுடையவரும்
௪ பூட்டியவாரிறுக்கும் செருப்பினைப் பூண்டிடும்கால்களை யுடையவரும்
காட்டினைவெட்டியழிகைப் போவதும் கடுத்துவருவதுமா- கியவொலியும்
௫ மட்டிலாவண்டொலிக்கவும் மரங்களை வளைந்துதலைநடுங்கவெட்டுமொலியும்
வெட்டுகிறவர்களொலியு மம்மரங்கள் மேலும்சத் தித்துமுறிகின்றவொலியும்
௬ முறிந்துவீழும்மொலியும் நீருண்ட முகிலொலியினுமதி கமாயொலிக்க
செறிந்தமலரும்தேனும் சிந்தவொலி செய்துவயிரமுள்ளவன்மரங்கள் [தென
௭ கவைகளொடியும்படிக்கு விழுந்தது களத்திலகொம்பொடிந்தானை விழுந்த
அவிடத்திலுறுமளிகள் பாங்குள்ள ஆரணியம்சோலைகள்சென்றடைந்திடவே
௮ பறவைகள்விண்ணிலிருக்கும் கற்பகப் பசுந்தருக்களைநாடிப் பறந்தோட
இறைவன்வரக்கண்டோடும் குறும்பர்போ லேபலமிருகங்கள் ஓட்டம்பிடிக்க
௯ மெய்யுணர்ந்தவர்மனம்போல் தெளிவுற வெட்டியக்காட்டினை வெளியாக்கி
ஐயனடியார்பிறப்பை வேருடன் அகற்றல்போல்வேருடனகழ்ந்தனரே தான

குலசேகரபாண்டியன்ஈசன்சொற்படிநகர்அமைத்தல்.

ஏவலர்கள்வனத்தையிவ்வா றழித்திடப்பார்த்
   தினிநகருண்டாக்குவதெவ் வாறென்றெண்ணிக்
காவலனமந்திருடன்யோ சிக்குங்கால்முன்
   கனவில்வந்த படிசித்த வேஷம் பூண்டு
பூவடியிந் நிலம்படிய மெய்யில பூதி
   புனைந்தப்பை யும்கரத்தில் விளங்க வந்த
தேவனைக்கண் டடிபணிந்தா சனமீந் தன்பால்
   தேற்றினான் மெய்யுணர்ந்து போற்றினானே.

தென்னவனன் புக்கிணங்கும் சித்தர் தாமுன்
   செப்பியமுன் னூல்சார்ந்த நூல்சொல் வண்ணம்
வன்னமிகும் ஆலயமும் நகரும் திவ்ய
   மண்டபங்கோ புரங்கள்சுற்று மதில்க ளாதி
இன்னபடி செய்யெனவே மொழிந்திம் மென்றுங்
   கேகிமறைந் திடக்குலசே கரனும் பாண்டி
மன்னவனம் முறைசிற்ப நூல்கொண் டெல்லை
   வகுத்திட்ட [illegible] நகரமைக்கத் தொகுத்திட் டானே.

கல்லியாணி ரூபகம்.

பல்லவி

கதம்பவனம் தனை விளங்கும் நகரமாகவே சந்திரகுலசே
கரபாண்டிய ராசன்செய்தனன் கேளும் நாளும் நீளும் எழில் கதம்ப

அநுபல்லவி

நிதம்பெருகும் இளம்பிறை சூடிய நித்தன் நிருமலன் சித்தரூபத்தைக்கொண்
டிதம்பெறச்சொன்னவாறேவனை நதுலகெங்கும்விளங்கும்சனங்கள்புகழ்ந்திட
கதம்ப

சரணங்கள்

க மண்டலமெய்க்கும் மறைநவிலும்பத்ம மண்டபமுமர்த்தமண்டபமும்மஹா
மண்டபமும்ஷட் பதப்பீடமும்நிர்த்த மண்டபமும்திருநாள்கள
கொண்டமணடபமும்
பண்டைமகம்பயில்சாலைதிருமடைபபள்ளியும்சூழும்பரிவாரதேவர்கள்[யிலும்
அண்டிடுங்கோயிலுந்தொணடரினத்துக்கருட்கொண்டளிக்கும்கயற்கணிகோ
கதம்பவன

உ ஒத்தபொன்மாளிகைபெற்றதிருமதிலும்கொடிகள்திகழும்மண்டபங்களும்
சுத்தவெண்மாளிகை களும்நக்ஷத்ரங்கள். சூழும்சிகரங்கள்மேவும்
பொற்கோபுரமும்
சித்திரங்கள்தீட்டும்கடைத்தெருக்களும் சித்ரகூடமும் திருவிழாவீதியும்
மெத்தநாற்சந்தி யகழ்அரணங்களும் மேடையும்நாடகம் ஆடரங்காதியும்
கதம்பவன

௩ ஆதிமுனிவர்க்கிருப்பிடமும்பிர மாலயமும்ராசவீதியும்வைசியர்
வீதிகளும்நன்மை தங்கும்வேளாளர்கள் வீதிகளும்பலவாகும்
குடித்தெருவும்
மோதும்கரிபரிதேர்கட்கிருக்கையும் முழங்கிடும்கல்விசசாலைகளும்துய்ய
சாதுஜனங்கட்கறுசுவையோடன்ன சத்ரமுப்பத்ரணடறத்துடனேமுற்றும்
கதம்பவன

௪ மங்கலபேரிகள்தங்கும்கொத்தளமும் மாமலரோடையும்வாவியும்கூபமும்
தெங்குறுநந்தவனங்குளிர்சோலையும் திருநகருக்கழகு பெறும்வளமும்
தங்கும்நகரின்வடகிழக்குத்திசை தன்னிலதனக்கரணமனை முதலாக[ய்க்க
புங்கமுடன்சிற்பநூலின்முறைப்படிபூமிக்குளளேமிக்கவாய்முக்கியமாமெ
கதம்பவன

## மதுராபுரியென்று நகர்கரு நாமம்சூட்டுதல்.

விருத்தம்

தென்னனிந்த வாறுநகர் அமைத்துச்சாந்தி
செய்யவென்று லோசிக்கு மளவிலீசன்
தன்னுடைய வேணியின்மீ தமைந்ததிங்கள்
தண்கலையின் அமிர்தமதைச் சொரிந்தார்சென்றம்

முன்னவன்தன் திருவடிசேர் அன்பர்தாமும்
முதல்வனெனவிளக்குதல்போல் நகரமுற்றும்
தன்மயமாக் கியதறிந்தவ் வாறேநாமம்
சாத்தினன் பலகுடிகொண் டேற்றினனே.

சாரங்கம் சாப்பு.

பல்லவி

மதுராபுரமெனப்பேர் சூட்டினன் நாலு வருணத்தாரையும்நிலை நாட்டினன்

அநுபல்லவி

சதுராநனன்மாயன் தேடும்கடவுளணி
மதியாரமுதால்சாந்தி விதியாலபுரிந்ததாலே மதுரா

க ஏலும்கீழ்வாயில்சாஸ்தாவும் தெற்கில் இடும்வாயில்சத்தமாதாவும் [ம்
மேலைவாயிலபின்னைபர்த்தாவும் எண்தோள் விளங்கும்காளிவடவாய்த்தாவு
கோலநகரைக்காத்துக் கொள்ளும்படிக்குசசேர்த்துச
சீலமுடனேநாலு திசையிலும்சென்றுபார்த்து மதுரா

உ சோமசுந்தரேசரைநாளும் அடி தொழுதருச்சனைசெய்யக்கேளும்
நேமமுடன்காசியில்வாழும் புண்ணிய நெறிமுனிவோர்களையும் நீளும்
தாழுவந்தேயாதி சைவராகியமித்துப
பூமிபுகழுமந்தப் புரந்தனிலேதாபித்து மதுரா

ங உத்தமக்குலக்குடி நாலும் அதில உற்பவக்குலக்குடி நாலும்
மற்றக்கோளகர்முதலேலும் மூன்று வகுக்கும்குலக்குடியெககாலும்
தத்தம்மார்க்கத்தினில் தவறுதொழுகி யார்கரும்
சித்தமுவந்திடவே திகழநின்றோங்கத்தெய்வ மதுரா

மாமதுரா புரம்செழிக்கச் செய்து கூடல்
வள்ளலுக்குச் சிறப்பொடுபூ சனை நடத்தி
பூமியையா றுயிரமாண் டிந்தி ரன்போல்
புரந்துமல யத்துவசன் தனனைப் பெற்றுத்
தாமமுடி சூட்டிவைத்து மூல லிங்கம்
தனில்குலசே கரனைக்கிய மடைந்தா னீதை
யேமொழிவோர் கேட்பவர்பா வம்போய்ச் செல்வம்
இணங்குவார் சிவனடியின் வணங்கு வாரே.

————(0)(0)————

விருத்தம் (ய) தரு (ச) திபதை (உ)

திருநகர்கண்டதிருவிளையாடல்முற்றும்.

ஸ்ரீமீனாக்ஷிசுந்தரேசர்திருவடிகளேசரணம்.

————(*)————

உ

சிவமயம்.

நான்காவது

## தடாதகைப்பிராட்டியார் திருஅவதாரப்படலம்.

அவதாரிகை — விருத்தம்.

தேவர்கள் எல்லாம் போற்றும் தேவனே பெரும் கடம்ப
மாவனம் நகரம் செய்த வளம்சில வுரைத்தே னிப்பால்
பூவுல கின்ருள் தென்னன் புதல்வியாய் அவதரித்துக்
காவலன் செலுத்தும் செங்கோல் கைக்கொண்ட தினிச்சொல் வேனே.

### மலயத்துவசன்ராஜ்யம்ஆளுதல்.

விருத்தம்.

பார்விளங்க வரும்குலசே கரபாண்டிய ராசனருள் பால னென்னும்
பேர்விளங்க வருமலயத் துவசபாண் டியராசன் பெருநா டெங்கும்
கார்விளங்க முறைசெய்து வடமொழிதென் மொழிக்கெல்லை கண்டு தர்மச்
சீர்விளங்க உலகமெலாம் தன்குடைநீ ழலில்வளரச் செய்தாண் டானே.

சாவேரி, சாப்பு.

பல்லவி.

பாரைராசர்க்கு ராசன்மலயத்வச பாண்டியன் புரந்தானே

அநுபல்லவி.

சீருயரும்திரு ஆலவாய்க்கடவுள்
திருவடிமலர்தேடித் தினம்தோறும்பணிந்திந்தப் பாரை

சரணங்கள்.

க அரனாலயத்துக்கு நித்தியநைமித்தியங்கள் அநுதினமும்வளர்ந் தேறவே
அசுவமேதயா காதிமகங்கள்செய் தந்தணர்ஆசிகள் கூறவே
பெருகும்மாதங்கள் தோறும்மும்மாரிகள் பெய்யக்கண்டம்புவி தேறவே
பிறக்கும்வச்சரம் தோறும்முப்போகத்தின் பெருமையால்வளம் மீறவே
இந்தப்—பாரை

உ தருமம்நாலுபாதத் தோடேநடந்துவரத் தனதுகோல்முறைகோ ணாமலே
சாதுர்வருணமும் தங்கள்தங்கள்நெறி தவறுதலென்றும்பூ ணாமலே
திருநாலிருவரும் தனதரண்மனைவிட்டுச் செல்லமனசிற்றே ணாமலே [மலே
திடங்கொண்டாறிலோர் கடமைகொண்டுயர் செம்பொன்னுக்கெல்லைகா ணா
இந்தப்—பாரை

ங ஆகண்டலன்பரி கரிபோலழகுள்ள ஆனைபரிகளுமல் லாமலே
அளவிறந்தர தங்களும்காலாளும் ஆகும்படைகுறைவில் லாமலே
வாகுபலம்கொண்டு துஷ்டர்கள்மேற்சென்று மற்றவர்மேலேசெல் லாமலே
மனுமுறைப்படி நீதிசெய்துமனம் வாக்காலசத்தியம்சொல் லாமலே
இந்தப்—பாரை

## மலயத்வசன்புத்திரகாமேஷ்டியாகம்செய்தல்.

விருத்தம்.

இருந்தமல யத்வசபாண் டியனீ ரைந்தா
யிரமினிய கன்னியரை மணந்து நீதி
தெரிந்தொழுகும் பானுவங்கி சத்தில் சூர
சேனன்மகள் காஞ்சனமா லையைப்பின் வேட்டுப்
பரிந்தவளோ டசனமுக் காலும் போற்றிப்
பதினாயி ரம்வருடம் புவியை ஆண்டும்
வருந்தனையர் இல்லாத குறையால் உள்ளம்
வாடினான் அதற்குவகை தேடி னானே.

திபதை—ஆனந்தபைரவி, சாப்பு.

௧ மதிமரபினி லவதரித்துயர் மனுவையொக்குமுல் லாசன்
வளமேவிய மதுராபுர மலயத்வச ராசன்
விதிமுறைப்படி நடக்கையில்சிவ விரதமாதிசொல் நூலை
விசுவாசமொ டாராய்ந்தெழில் மிகுகாஞ்சன மாலை

௨ அவளுடன்பல சிவவிரதங்கள் அடுக்கடுக்காக எடுத்தான்
அரனார்மகிழ் மதிவாரத்தில் அதிநேமத்தைத் தொடுத்தான்
சிவனையர்ச்சனை செயுமவர்க்கனனம் திரவியத்துடன் கொடுத்தான்
தினசாரியும் தவறாமலே சிவசந்நிதிக் கடுத்தான்

௩ மற்றமொழிப்படி பரிமேதயாகம் மகிமைகண்டு தொண் ணூறு
மகமோடொன்ப ததனைச்செய்து வருநாளதின் பேறு
நிறையமற்றொரு மகமுழுமுற்றிடும் நிலைமைபெற்றிடக் குறித்தான்
நெடுவானுறு மகரோசனந் நிலைவந்ததை மறித்தான்

௪ பதியுனக்கொரு குழந்தையைத்தரும் படிக்கோரிஷ்டிசெய் என்றான்
பலதேவர்களுடனே வந்த படிதன்னகர் சென்றான்
அகவிருப்பொடம் மகம்நடத்திட அணிந்திடும்நிம்பத தாரன்
அதற்கானவை யாவும்விரைந் தமைத்தானேகம் பீரன

௫ தருஞ்நியமத்துடன் சூரியபதந் தன்னுடன் சாலை புகுந்தான்
தருமாகம நெறிதேர்ந்தவர் தம்மோடன்பு மிகுந்தான்
சுருதியாயந்ததம் குருமொழிப்படித் தொடங்கிமந்திரமு தாத்தம்
சொரிதம்அனு தாத்தம்ஓசை சோராமல்வே தார்த்தம்

௬ பரிவுடன்சொலித் திசைவிசும்பிடைப் பசும்புகையெழுந் துறையப்
பலவாம்சமித் தொடுநெய்பொரி பரிந்தோமத்தில் நிறைய
கருணைகொண்டுவிண் ணவர்க்கமுதுடன் கதிக்கவாகுதி பெய்தான்
கனவேதிய ருடனேபுத்ரகாமேஷ்டியைச் செய்தான்

## தடாதகைப்பிராட்டியார் திருஅவதாரம்செய்தல்.

விருத்தம்

இவ்வகையாய் புத்திரகா மேஷ்டி யைச்செய்
தெழுந்துதவும் பூரணா குதிபெய் யுங்கால்

மெய்வடிவாம் பரனருளால் அதனில் நின்று
மீனவர்கோன் வலதுமணித் தோள்து டிக்கக்
கொவ்வையிதழ்க் காஞ்சனைதன் இடைதள் ளாடக்
கொங்கையில்தீம் பாலொழுக மேனை நாணச்
செவ்விதரும் அங்கயற்கண் தாயே வந்து
சிறந்திட்டாள் மகளாகப் பிறந்திட் டாளே.

வியாகடைராகம், ஆதிதாளம்.

தாள
அண்டம்பிண்டம் ரண்டும்படைத் தாதாரம் ஆகும் அன்னை

அநுபல்லவி.

மன்னும்காஞ்சனையுடன் மலயத்துவசபாண்டிய மன்னன்குறையைத் தீர்க்க
உல — கன்னை

சரணங்கள்

௧ பூமியுடனேயுல கேழுமகிழத்தொண்டர் பொருந்தும்சைவாகமநெறிபடிக்க
ஆமனசிலஞ்ஞானம் நீங்கியறம்செழிக்க அமரர்புகழ்ந்துந்துந் துமியடிக்கத்
தாமரைமலர்நிகர் கண்ணியர்கச்சணியும் தனங்கள்குலுங்கபர தங்கள்நடிக்க
மாமதுரைநகரு ளாரும்சுதினமென்று மாலைசென் னியில் முடிக்க
உல — ‹

௨ தாரணியில்மூவாறு பாஷைக்குளேயிசைக்குந் தமிழ்விளங்குந்திருநாடது
சீரமுடனரசுசெலுத்துமன்னவர்களில் மீனவர்குலமேமகிமைபிறக்க [பறக்க
பாருமக்கினிதேவன்பண்ணுந்தவத்தாலெய்து பலன்தளிரொளக்கொழுந்துகள்
நேரும்ஒமகுண்டத்தில் கமலம்முளைத்துமலர் நீடும்கொடிபோல் சிறக்க
உல — கன்னை

௩ வண்டுலவியசிறு கொண்டையுநிறைமதி வதனமுமுத்துமூக்குத்தியிலங்க
வெண்டாளச்சுட்டியணிந்தநெற்றியுமதில் மின்னும்திலதமும்கிரணம்துலங்க
கண்டொழுகும்குதலை அமுதம்வழிமார்பில் கதிர்வடம்கண்டிருள் நிலைகலங்க
மண்டும்நித்திலமணி மாலையுடனபவள மாலைகழுத்தில் இலங்க

௩ சிற்றிடையில்சிறிய பொற்றுகிலும்வளைந்த செழுமணிமேகலை புறம்சூழச்
சுற்றுமணியழுத்தும்தாடங்கமும்குதம்பைத் தொங்கலுமிருபுய மிசைதாழ
சற்றுமுளைத்திடும்பல் வரியும்மழலைமொழி தன்னுடன்அமுதம்த தும்பிவீழ
முத்தனமும்வயது மூன்றுள்ளகன்னியாக மூதுலகங்கள் வாழ
உல — கன்னை

பிராட்டியார்காஞ்சனமாலைமடியில்வந்திருத்தல்·

விருத்தம்.

கன்னிகையாய்ப் பிறந்துசிற் றடியிற் பூணும்
கதிர்மணிநூ புரம்சதங்கை ஒலிக்கச் சின்ன
அன்னநடை தளரவிள நகையும் தோன்ற

அரசுடன்வீற் றிருக்கும்பொன் மாலை தன்பால்
மன்னியவள் மடியினில்வந் தொருபெண் பிள்ளை
வடிவாக இருந்தனளெவ் வுலகு மீன்ற
அன்னையிவர் தமக்குமக ளாக என்றோன்
பாற்றிறு ரெனப்பலரும் போற்றி னரே.

சௌராஷ்டிரம் சாப்பு.

பல்லவி.

காஞ்சனமாலை மடியிலுமையொரு கன்னிகையாயிருந் தாளே

அநுபல்லவி

மிக — வாஞ்சையுடனே யணைத்துச்சி மோந்துசெவ்
வாய்முத்தம்கொண்டின்பம் பூரித்திடப்பெற்ற காஞ்சன

சரணங்கள்

க சித்திதரும்யாக சாலையில்வந்து தெருண்டவருள்ளன்பு திகழ சிவ
சத்திதிருமக ளானதுமன்னன் தவமேதவமெனப் புகழ
முற்றியுண்டாகும் கருப்பக்குறிகள் முழுதுமில்லாமலே மகிழ தெய்வ
புத்திரியைப்பெற்ற பாக்கியசாலிதன் புண்யமேமுன்செய்த புண்யமாகிகழ
காஞ்சன

உ மாமகசாலையில் பெண்ணுருவாக வரக்கண்டோர்மங்கலம் நீட வெகு
க்ஷேமமுடையபொன் மாலைதவப்பயன் நேராகவந்துகை கூட
பூமன்கும்பம் செழிக்கவுயர்ந்த புவிக்கும்பெருமையைத் தேட வரும்
சோமகுலமே பெரிதென்றுலகம் துதித்துச்சந்தோஷமிருந்துக்கொண் டாட
காஞ்சன

ங மைந்தரில்லாமல்பலநாள்வருந்தி மகம்செய்தேனிப்புவி மீது அது
விந்தைமுலையொருமூன் றுடன்ஓர்பெண் விளங்கவேதந்ததிப் போது
இந்தவிகாரத்தைக் கண்டுபகைவர்கள் ஏசுவாரீதுபொல் லாது என்று
சிந்தைகலங்கியமன்னவன்சுந்தரர் திருவடிநினைந்துருகிடும் போது
காஞ்சன

ச மன்னவனேயுன்மகட்குச்சகலமும் மைந்தனைப்போலவே நல்ல வேதம்
பன்னியவாறுநடத்தித்தடாதகைப் பாவையெனும்பெயர் செல்ல
வன்னமுடிசூட்டி வாயன்பனைக்காணில் மாறுமொருமுலை மெல்ல என்று(ல
மன்னியசனருளாலசரீரிவாக்கொன்றெழுந்தியாரும்கேட்கவிண்ணில்சொல்
காஞ்சன

## பிராட்டியாரைமலயத்துவசன்அரண்மனைக்குக்கொண்டுவருதல்.

விருத்தம்.

அன்னைமடி மீதுகன்னி யிவ்வா றுய்வந்
தமைந்திடும்போ தாகாச வாக்குக் கேட்டுத்
தன்னிருகா தும்குளிர்ந்து மனம்பூ ரித்துச்
சங்கையற்றே ஆனந்தக் கண்ணீர் பொங்கத்
துன்னுமகம் முடித்தெழுந்து சாலை நீங்கித்
துணைவியுடன் அம்மகவை ஏந்திக் கொண்டு

பின்னவளர் அரண்மனைக்குட் புகுந்தான் வேந்தன்
பெருமைதான் பெற்றதுவும் அருமை தானே.

பூரிகல்யாணி ஆதி.

பல்லவி.

செகத்திலேசி றந்ததென்னன் அகத்திலேகன் னிகையாகத்
தேவியுமை யைக்கொண்டுவந் தானே.

செகத்தில் இகபரத்தின் சுகத்தைக் கொடுக்குமீசன
மகத்துவத் தைத்தெரிந்து மிருத்தவிரு தம்புரிவீர் செகத்

சரணங்கள்.

க முரசதிரமங்கலம் ஏநதியெதிர்வருவார்
முகமலர்ந்துமுறுவல் செய்ய
அரசன்பலருடனே ஆஸ்தானமண்டபத்தில
அமர்ந்துமனமகிழ்ந்து துய்ய
வரமருளுமந்தணர் முதலாளவர்க்கும்சொர்ணம்
மழைபோலேவாரிவாரிப் பெய்ய
பரவும்சோமசுந்தரர் கோயில்சிறப்பும்பரி
பாகங்கள நேகம்மபி ஷேகங்களவை போகம்செய்ய செகத்

உ சிறையில் இருக்கின்றவர் தமையும்விட்டுவிட்டவர்
சிறைச்சாலை யுமுடனே மாற்றி
இறையெந்தநிலத்துக்கும் ஏழுவருஷம்மட்டும்
இலலையெனக்குடியைத் தேற்றி
திறைஅளந்தமன்னவர்க்கும் நீக்கிப்பினஆயநதுறைத
தீர்வையும்இலலையென்று சாற்றி
நிறையும்பேரிஒலிக்கக்கடியத்தின்பெருமை
நீடப்புகழ் சூடப்பலர் நாடக்கொண டாடவிந்த செகத்

ரு முடிமன்னவரைச்சிறை விடுத்துவரிசையுடன
முன்போலவேஅரசும் கொடுத்து
படியில்உள்ளபேர்எல்லாம் கொளகனைசிறந்த
பண்டாரத்தைத்திறநது விடுத்து
வடிவுயரும்பசும்பொன் னுடைபலமணிகள்
வாரிக்கொண்டேகவிடை கொடுத்து
அடியவர்தமக்கன்னம் அறுசுவையோடளித்து
ஆசைமறை ஓசைசிவ பூசைசெய்து நேசம்பெற செகத்

ச புலவர்சொலும்மஙகல கவிகட்கிருநிதியும்
பூணும்துகில்ஆரமும் அளித்து
நிலமும்கரிபரிதேர் முதலாப்பலபொருளும்
நேர்ந்தவர்அவருள்ளம் களித்து

குலமுறைப்படிசெய்து சுண்ணமோடெண்ணெய்விழாக்
கூடிக்கொண்டனைவரும் குளித்து
பலரும்புகழ்மதுரை அன்றிமற்றநகரும்
பாங்காச் சிறப்போங்கக் கலிநீங்கச் சுபந்தாங்க இந்த செகத்

பிராட்டியின் திருவிளையாட்டைக்கண்டு பெற்றோர் மகிழ்தல்.

இந்தவகை யாமலயத் துவச பாண்டியன்
இசைந்தபல தானமும்செய் தீசன் வாக்குத்
தந்தபடி சாதகர ணுதி செய்து
சதுமறையும் தேடரிய தைய லாக
வந்தவொரு கன்னியையம் மேனை போலே
வாஞ்சையுடன் காஞ்சனைசெந் தளிர்க்கை யேந்தி
சந்ததமும் வளர்ப்பஇம வான்போல் உள்ளம்
தழைத்திட்டார் தடாதகையென் றழைத்திட் டாரே.

திபதை—மத்தியமாவதி, சாபபு.

க கன்னிவரவறிந் தன்னைஎனச்சொல்லும்
காஞ்சனமாலையும் வாஞ்சையுடன்பெற்ற
மன்னனும்பிள்ளைச்சீர் கொள்ளக்கிடைக்குமா
வையகம்தன்னிலென்பார் சோமசுந்தர ஐயன்செயலிதென்பார்

உ அங்கம்மிகுந்தம கங்கள்பலசெய்
தருமையாப்பெற்ற பெருமைகண்டாகாச
கங்கைகுதித்தது போலேநமக்கிந்தக்
காட்சிகிடைத்ததென்பார் மகிழ்ந்தர சாட்சிகிடைத்ததென்பார்

ங செம்மைவிளையும்பயிர் முளையிலே
தெரியும்என் றிந்தச்சகத்துவழக்கம்போல்
நம்மதடாதகைப் பெண்ணால்அறம்முதல்
நாளும்தழைக்கும்என்பார் உலகமென் மேலும்பிழைக்குமென்பார்

ச மோதிவரும்கோடி துக்கம்குழந்தை
முகம்கண்டபலாறிடும் என்னும்மொழிபோலே
கேதம்எல்லாம்தீர்க்கக் கண்டோமென் றுள்ளம்
கிளர்ச்சியுடன்புரிவார் நாள்தோறும் வளர்ச்சிகண்டுபுரிவார்

ரு சாலவுமிப்படித் தக்கோருமொக்கலும்
சார்ந்திதேகார்யமாய் வேடிக்கைபார்த்திட
காலில்சிலம்புகள் கல்லீர்கலீரெனக்
காட்டிநடக்கக்கண்டார் சகிமாரைக் கூட்டிநடக்கக்கண்டார்

சு மின்னியசித்திரம் தன்னுடன்வாது
விளம்பிவிளக்கைக் கிளம்பிப்பிடிக்கையில்
அன்னைகண்டோடி எடுத்துச்சிமோந்துதன்
ஆகம்பூரித்துவந்தாள் அரசனும் தேகம்பூரித்துவர்தான்

௭ சின்னமுருங்கிளியில் அன்னையுமீந்திய
சிற்றுடையைக்கையில் வைத்திடும்பொற்பாவை
தன்னில்அணிந்தெழில் கண்ணாடியில்பிம்பம்
தன்னைப்பிடிக்கக்கண்டாரீ வாராமல் தன்னிலிடிக்கக்கண்டார்

௮ திருந்தாமழலை மொழிந்துசகியுடன்
சேர்ந்துவெளிவந்து சிற்றில்விளையாடி
விருந்தாகதுண்மணற் சோறுசமைத்து
விளம்பிமதிக்கக்கண்டார் பிறகு இளம்பிக்குதிக்கக்கண்டார்

௯ அம்புயத்தோன்தரும் அண்டமெல்லாம்சிற்றில்
ஆக்இழைப்பவளேகன்னியாவந்து
அம்புவிமீதில் பலவிளையாடல்செய்
தம்மனைநாடக்கண்டார் கழங்குபந் தம்மனை ஆடக்கண்டார்

௰ மீட்டியபாச வினைக்கயிற்றுலிந்த
மேதினியைக்கீழும் மேலும்தள்ளிஊசல்
ஆட்டுதல்போலவே பொன்னூசல்தாம்பசைத்
தாடிமகிழக்கண்டார் சகிமாரைக் கூடிமகிழக்கண்டார்.

## பிராட்டியாருக்குமலயத்துவசன்முடிசூட்டல்.

விருத்தம்.

சகியருக்கும் அன்னைபிதா வுக்கும் இன்பம்
தருபவளாய்க் கலையனைத்தும் தனதி டைக்கண்
மகிமையுடன் மேகலையாய் அணியும் தேவி
மறைகள்முதல் பலகலையும் ஆராய்ந் தியானை
வகைபரிதேர் முதல்நடத்தும் திறனும் வில்வாள்
வஜ்ரமுதல் படைத்தொழிலும் கண்டு தென்னன்
அகமகிழ்ந்தம் மகட்குமகு டாபி ஷேகம்
அடுத்தசுப தினமதிற்செய் தருளி னானே.

மோகனம் திரிபுடை

பல்லவி

திருமகளுக்குமுடி சூட்டினான் வளர் தென்னர்குலத்தைநிலை நாட்டினான்

அநுபல்லவி.

தருமம்பெருகும்மதுராபுரவாசன் சகலகுணசம்பன்ன கீர்த்திபிர காசன்
தருமுயிர்க்குத்தாயிலு மதிகவிச்வாசன் தழைக்குமலயத்வசபாண்டியராசன்

சரணங்கள்

௧ மங்கலபேரியொலிக்கஎழுந்த மத்தகசத்திலே வைத்துக்கொணர்ந்த
கங்கைமுதலொன்பது தீர்த்தம்நிறைந்த காஞ்சனகும்பத்தைப் பூசித்துயர்ந்த
புங்கமுன்னூலை ஓதுவர் தங்களினாலே வேள்வியி
லங்கமென்மேலே செய்துவி ளங்கஅன்பாலே கதிர்விடு
தங்கத்தகட் டாலொளிஆடிய துங்கப்பெரு மாமணி சூடிய
அங்கத்தொடு பூசனைகூடிய சிங்கத்தவி சின்மேல்நீடிய திருமகள்

௨ திருமுடியைமத யானைமேல்வைத்துச் சிறந்தநகரைவலம் செய்துபூசித்து
குருமணியாலும்பொன்னாலுமிழைத்துக் கோதீறும்ஐந்தலைநாகம்கவிழ்த்து
அருமணிமின்னப் பலகதிர் பொருதியதென்னத் தலைமிசை
விரிபடம்துன்னத் திருவளர் அரிபீடமன்னக் கண்டுயர்
பெருவானவர் ஆனவரேதுய்ய மருமாமலர் மாரிகளைப் பெய்ய
தருமாகமநூல்முறையாய்ச்செய்ய வருநீராபிஷேகமிசைத் துய்ய திருமக
௩ பாலைநிகரும்வெள்ளைக் கவிகைநிழற்றப் பரவியிலகும்மணிக் கவரிசுழற்ற
ஏலும்மகரக்கொடி மேலேயுயர்த்த இரசதகிரிமிசை யிளம்சூரியனுதித்த
கோலம்படைத்துக்கமழ் நிம்ப மாலைதொடுத்தயிராவத
மேலேயெடுத்து நகர்வலம் சூழவிடுத்து உரியசெங்
கோலாரணி யங்கைபிடித்திட நாலாவித பேரியடித்திட
சேலார்விழி மாதர்நடித்திட ஏலாரிட வாகுதுடித்திட திருமக
௪ ஆதரவுடன்தெய்வ மறையவர்கூட அருந்தவமுனிவர்கள் ஆசிகள்நீட
கோதைரம்பையர்முத லோர்நடமாடக்கூர்முனிமங்கையர் சோபனம்பாட
வேதம்துலங்கத் துந்துபி நாதம்துலங்கப் பலபல
கீதம்துலங்க அறம்நாலு பாதம் துலங்கமுறையுடன்
ஓதருமமைச் சென்றவரும்வல்ல பூதலம்புரக் கின்றவரும்நல்ல
பாதமிறைஞ்சிநின்றவரும்செல்ல மாதரசென்றுவந்துவரிசைசொல்ல திரும

## தடாதகைப்பிராட்டியார்அரசியல்.

### விருத்தம்.

திருமகளுக் கிந்தவண்ணம் மகுடம் சூட்டிச்
சிலநாட்சென் றமரர்பதம் சேர்ந்தான் மன்னன்
ஒருமையுடன விரதநெறி அடைந்து தனைதைக்
குரியகடன் அனைத்துலகும்ஈனருள் செய்தே
அருமைதரும் சோமசுந்தர லிங்கத்தை
அநுதினமும் தொழுதுசிங்காதனமேல் கொண்டு
பொருதரங்கபுவனம்எலாம் செலுத்திச செங்கோல்
பூண்டிட்டாள் ஒருகுடைக்கீழ ஆண்டிட்டாளே.

இராகம் நாதாமக்கிரியை, தாளம்.

பல்லவி

பூபரிபாலனம் செய்தாளேதேவி மதுராபுரத்திருந்து பூபரி

அநுபல்லவி

பூபதிமார்அனைவோர்களும்போற்றிப்புகழமனுவிக்ஞானேச்வரமொழியாற்றி
தாபமில்லாமலெவர்க்கும்துயர்மாற்றிதனதுயிர்போலேமன்னுயிர்காப்பாற்றி
பூபரிபாலனம்

சரணங்கள்.

காலைஎழுந் துநீ ராடிக் காவலன்குலத்துவாடிக்
கைப்படிதா னங்கள்நீடிக் கருதிஈந்தா லயம் நாடி
ஆலமுண்ட வனைவணைந்து ஆகமமுறை
யால்அடிக் கமலம்பணிந்து தனதுசெம்பொன்
மாலரண்ம னையில்புகுந்து மணிஇழைத்த
வாள்அரியா சனத்திருந்து சாமரைஇரு
பாலினுமாமகள் நாமகளிருவரும்வீசக் காளாஞ்சியடைப்
பைகளனிந்திதைக மலினியும்ஏந்தப்பலதேசப் பதிகளும்பின்
ஞாலம்மதிக்கவரும் சேரன்சோழனிரு ராசர் அவர்முடியில
ணிணியமாலைகளைத் தன்னடியிற்சாத்திவிசு வாசம் ஆகவணங்க
கோலமுடையகூர் வாள்கொண்டுநிற்கச்சில ராசர் மார்பில்கைகளைக்
கூட்டியணைத்துக்கட்டிக் கொண்டுமேநிற்கச்சில ராசர் எப்போகடைக்கண்
ணாலேயருள்வாரோவென் றிமைக்காமல்நிற்கச்சிலராசர் நின்றருள்செய்தால்
அங்கைவாய்பொத்திக்கொண்டுபிழைத்தோமென்றேறுதச்சிலராச ரிதுவலாம
லேலுமஞ்சாமையீகை அறிவூக்கம் நாலும்
இன்சொலமொழிந்தளிக்கும் திறனுமெக் காலும்
சாலும்மன்னவர்க்குள்ள ஷடங்கமும் கோலும்
சகலமும்பூர்ணமாய்த் தழைக்கமென் மேலும்
பூபரிபாலனம்

ஆங்கவன்ம ராடமன்னன் அடுத்தவன்வி ராடமன்னன்
அவன்கரு ணடமன்னன் ஆகுமிவன் குருமன்னன்
ஈங்கிவரே சோழன்கோஷ்டி உடனேசேரன்
என்பவனி வனென்றீட்டிக் கஞ்சுகர்கையில்
தாங்குபொற்பி ரம்புநீட்டி சன்னிதானத்தில்
சமயமறிந் தாங்குகாட்டிப் பக்கத்தில்நிற்க
தேங்கமழும்தமிழ் ஆரியம்கரைகண்ட பேரும் ஆரணம்முதல்
சிறந்தறுபத்துநாலு கலைகள்முழுதும்படித் தோரும் இரண்டெற்றும்
நீங்கிடத்துறந்தவர் ஆகியசைவமாத வோரும் அறுவிதமா
நிகழும்சமயசாஸ் திரங்களைப்படித்துணர்ந் தோரும் தற்போதமற்றே
ஓங்கிவருமாயையின் தீங்ககல்மெஞ்ஞானி மாரும் முன்னிருந்துமேல்
உறுவரும்கருமங்கள் தெளியவுணர்த்தும்பெரி யோரும் கணிதத்திறல்
பாங்குறும்வினைகளைப் பகுத்துசசொல்லும்சோதிடத் தாரும்அமைச்சியலின்
பண்பறிசுமதிமந் திரியுடன்பலமந்திரி மாரும் நிறைந்திருக்கத்
தாங்கியேசூழ்பல பேர்கட்கும் ஈயத்
தரணியில்ஒப்புர வறிதலைச் செய்யத்
தேங்கியசலதிசூழ் உலகெங்கும் உய்யத்
திங்கள்தோறும்மாரி சிறக்கவே பெய்ய
பூபரிபாலனம்

வேதவிருத் திகளையும் மெய்அரன்பூ சைகளையும்
மேலறச்சா லைகளையும் மேதினிக்கு டி

ஈதலாலின் னம்மென்னேனும் உள்ளகாரியங்கள்
யாவையும்மக் த்ரிகளாலும் அறிந்தும்தனி
யேதனியே ஒற்றராலும் தெரிந்ததனில்
ஏதமது நேரிட்டாலும் தன்புத்தும்தீர்த்தும்

ஆதியுத் தேசத்தாலும் இலக்கணங்களினாலும்மற்றும் சாக்ஷிகொண்டுபாரித்ததனைச்சோ தனையாலும் சொன்னபொருளாலுவா தித்தும் நீதியுடனிப்போதப்ர காரம்கண்டித் தந்தவழியிலேதா பிக்கும் வாதிகள்வாதம்புரிந்துசெய் யும்கூட்டத்தி னிடத்தில்மனமகிழ்ச்சி பெற்றும் கற்றபுலவர்ஓதும்செய் யுளிலமு தொழுகவேநாவில்வி ளைத்தும் ஊடடச்செவிகட்குணவுகொண் டுதெவிட்டும் படிக்குண்டுளத்தில்சந்தோஷித்தும் மறைகளோவேதியர் சைவர்து றந்தவர்க்கறுசுவை யொத்தும் முல்லைமுகைபோல்விளங்குமுணவருத்தி யவர்சொல்லமுதினைப்பு சித்தும் அபரான்னத்தில்

சூதமகாமுனிவர் மொழிந்தமு வாறு
தொகையாகவிலங்கும்பு ராணவர லாறு
பேதமறவேயா ராய்ந்தவர் கூறும்
பெருமையால்பெரும்பகல் கழித்திந்த வாறு
பூபரிபாலனம்

மின்னிடைமா தர்களாட விஞ்சையரி ராகம்பாட
வேடிக்கைபார்த் துச்சந்தோஷம் மேவியேமல் லருள்நீட
முன்னிருந்த வரு ணடாக்கி வைத்ததருமம்
முழுவதும் பழுது நீக்கி அறங்கள்மிகப்
பின்னையும மைத்து நோக்கி மகங்கள்செய்யப்
பெருநிதியளித்து ஊக்கி கல்விசெல்வத்தைத்

தன்னிருகண்ணெனத் தழைக்கும்படிக்குச்செய்து பரிந்து மணம்கமழும்
தண்மலர்மாலையை அணிந்தமணிமுடிபு னைந்து கொண்டுகுளிர்ந்த
வன்னம்மிகுந்தசந்திர வட்டக்குடையின்கீழி ருந்து மனுவினாலே
வரையறையேற்படுத்தி வைத்தசாஸ்திரத்தில் மொழிந்து வருமுறையை
இந்நிலமுறைசெய்து மனுவெனக்காத்துலக ளந்து நட்புநோதுமல்
ஏதிலார்வழக்குகள் ஆய்ந்துமயிர்முனைவ கிர்ந்து தீர்த்துலகுக்
கன்னியேஒருசிறு கன்னியாயரசுப ரிந்து செங்கோலையேந்தி
ஆற்றலொருகடமை கொண்டரசாட்சியில மைந்து புகழ்பெருக

தென்னர்வங்கிசமேயிவ் வுலகினில மிக்க
சிரேஷ்டம்என்றேயிசைந்துயாரும்து திக்க
கன்னல்வளரும்பாண்டி நாட்டை யுவக்க
கன்னிநாடென்றுலகில் எவருமு ரைக்க
பூபரிபாலனம்

## அகத்தியர் முனிவர்களுக்கு வித்யாவதியின்வரலாறுகூறல்.

விருத்தம்.

பூமிபரி பாலனமிவ் வாறு செய்யும்
புதுமையைக்கேட் டகங்களித்தம் முனிவோ ரெல்லாம்
மாமறைதே டரியவெம் பிராட்டி தக்கன்

மலையரச னிவர்பலநாள் வருந்தி நோற்கத்
தாமதலை யாகவந்தாள் மனித னாகத்
தழைத்தமல யத்வசபாண் டியன்பெண்ணாக
நேமமுடன் வந்தகா ரணம்யா தென்ன
நிகழ்த்தினா ரருந்தமிழைப் புகழ்த்தி னாரே.

திபதை.—கல்யாணி, சாப்பு.

௧ விச்வாவசுவென்றோர் வித்யாதரன்பெற்ற வித்யாவதியென்னுமாது அவள்
விச்வாசம்கொண்டுமையாளிடத்துள்ளன்பு மேவியிருக்கின்றபோது [தேவி

௨ தந்தையைத்தாழ்ந்தையனேயுமைபூசனை தன்னைச்செய்யவேணும் என்றாள்
மந்திரம்தன்னைத் தனதுமகட்கு மகிழ்ந்துபதேசித்து நின்றான்

௩ சொன்னதிருமந்திரத்தாலுமையைத் துதித்துவருகையிலாக்கம் கொண்டு
பின்னுமுமையையாராதிக்கத்தக்க பெரும்தலம்யாதெனக் கேட்க

௪ எப்பதிக்கும்த்வாத சாந்தம்பெரிதென் றெமக்குச்சதானந்த ராலே கண்டு
செப்பும்வளம்பதி மண்டலமீதில் சிவபுரமாகுமென்ன மேலே

௫ சேடன்சுமக்கின்ற பூவுலகுக்குள சிறந்தயரும்சத்தி பீடம் அதில்
நாடிமகிமை பெருகுமறுபத்து நாலதற்குள்முதல் பீடம்

௬ நீண்டிசைபூண்ட திருவாலவாயின் நிலத்திலேபோகமும் வீடும் தரும்
வேண்டியவாறெந்தச் சித்தியும்புத்தியும் வேணுமென்றாலும்கை கூடும்

௭ விந்தையாயக்ஷர் வசுபூரணார்ச்வச்ச வித்யர்வித்யாதரர் நிகரில்லாத
எந்தையோடைவர்கள் வேண்டும்வரம்பல எய்திவந்தார்களந் நகரில்

௮ மேவும்சராசரம் யாவையும்பெற்று விளங்கிவளரும்மீ னாக்ஷி அம்மை
சேவடிக்கன்புபூண் டாராதனம்யாவர் செய்யினுமீவளே காட்சி (றை

௯ என்றபிதாவைப் பணிந்துவிடைபெற் றெழுந்துவழிக்கொண்டு நடந்தாள்ந
மண்டும்மலர்க்கொடி போலேயசைந்து வனம்மலையாறெல்லாம் கடந்தாள்

௰ நீடியபாதை குறுகிமகிமை நிறைந்தமதுரையை நாடினாள் எழில்
கூடும்இளம்பிடி போலவேயா டகக் கோகனதநீரில ஆடினாள்

௧௧ மாமறைதேடும் சிவனையும்சேல்விழிவல்லியடியும் வணங்கினாள் வெகு
நேமமுடன்தேவி பூசனைக்கன்பு நிறைந்துதைமாசம் துடங்கினாள்

௧௨ மகரமாசத்தில் மத்யானத்திலுண்டு மாசியில்ராத்திரி உண்டும் இந்த
வகைநியதியில் லாமலுதவி வருமுண்டிமீனத்தில் உண்டும்

௧௩ சித்திரையில்இலைகாய்முதல்உண்டும்திலத்துள் இடபத்தில்உண்டும் மிது
னத்தில்சாந்திராயணநோன்பிழைத்தைங்கவ்யம்நண்ணிக்கடகத்திலுண்டும்

௧௪ ஆவணிமாசத்தில்பாலைஉண்டும்புரட்டாசியில்நன்னீரை உண்டும் நலம்
கூவுதுலாத்திற்குசாககிரநீரைஉட் கொண்டும்தேளில்காற்றை உண்டும்

௧௫ பத்தியுடன்மார்கழித்திங்களில்சுத்தபட்டினியாய்த்தவம்சிறக்கச்செய்து
முற்றிவருகும் சுறுமதியில்பதி மூன்றுகும்திங்களும் பிறக்க

## வித்யாவதி தோத்திரம்

விருத்தம்.

வித்தியா வதியாறி ரண்டு திங்கள்
விரதமிருந் திப்பால்சன் னிதியில் சென்று
பத்தியுடன் பணிந்தெழுந்து நின்றுமாவின்
பைந்தளிர்ச்சே வடியுமின் னிடையும் கார்தள்
ஒத்தகரங் களும்நெருங்கும் தனமும் திங்கள்
ஒத்தமுக மும்திருமங் கலக்க மூத்தும்
சுற்றிவண்டார் குழலுமுடை யங்கயற்கண்
ணொளியைத் தியானித்துத் துலங்கினளே.

பதமுதல்கே சத்தளவிப் போது சொன்ன
படிநினைந்தி யாழ்க்குளதெய் வத்தை வேண்டி
இதயமுவந் திருகைகுவித் திறைஞ்சி வீணை
எடுத்துப்பொன் னுறைநீக்கிப் புயத்தில் சார்த்தி
மதிவிளங்கு மந்தவித்யா வதியா ளோர்ந்து
மாடகத்தை முறுக்கித்தந் தியைத் தெறித்து
மதுரமிகும் பண்ணினைமுன் னெழுப்பிப் பாடி
...ள் பராபரையைத் துதிக்கின்றாளே.

ஆனந்தபைரவி, ஆதி.

பல்லவி.

தேவிஸ்ரீ கதம்பவனநிலையே தெரிசனம்தாராய் அம்மா

அநுபல்லவி.

பூவிலறுபத்துநாலு பொருந்தும்சத் திபீடத்துள்
மூவுலகும்புகழும் முதற்பீடத்தில்வளரும் தேவிஸ்ரீ

சரணங்கள்

மாநிலத்துயிர்களை ஈன்றவ்வுயிரையெல்லாம்
மச்சம்போலேநோக்கி ரக்ஷிக்கின்றவென்றேயே
மானேமலையரசன் மகளாயவதரித்து
மயின்பைங்கிளிவளர்த்து விளையாடும்மாயமென்ன தேவிஸ்ரீ

அமையும்பலவண்டங்கள் ஆகியவெண்மணற்சோ
றாக்கித்தனியேவிளை யாடுகின்றவென்றேயே
இமயமலையருவி முத்தால்சிறுசோறாக்கி
இணங்கும்தோழிகளுடன் விளையாடும்மாயமென்ன தேவிஸ்ரீ

நிலைகொள்மறைமுடிவில் ஆனந்தவடிவாக
நிறைந்திடும்மெய்ப்பொருளே பரம்பரையேயென்தாயே
மலையரசன்மார்பிலும் திருத்தோளிலும்மிதித்து
மலரடிகள்சிவக்க விளையாடும்மாயமென்ன தேவிஸ்ரீ

௪ சகலலோகத்துக்கும் மூல — காரணியே
சநகரர்க்குச்சுகத்தைத் தருகும் — பூரணியே
செகத்தில்ஒருதரம்பூ சிக்கக்கொண் — டாரணியே
செல்வங்கள்வேண்டும்படிக் கொடுக்கின்ற — சீரணியே — தேவிஸ்ரீ

௫ பரமசிவனுனவர் தமதிடம்வளர் — தாயே
பஞ்சகிருத்தியங்களை நடத்தச்செய்வதும் — நீயே
பெருகும்முத்தியைவேண்டு வோர்க்கருள்செய்யு — மாயே
பிரமவித்தையை யுப தேசம்நீபண்ணு — வாயே — தேவிஸ்ரீ

௬ புகலுமு னதுகிருபா லேசத்தினாலே — மாட்சி
பொருந்தும்போ கமோக்ஷங்கள் கொடுக்கும்சர்வ — சாக்ஷி
மகிழும்வா ணியும்மலர் மகளும்துதிக்கும் — சூடசி
மங்களமூர்த்திகர மாகவளர்மீ — னாக்ஷி — தேவிஸ்ரீ

## வித்யாவதிக்கு மீனாக்ஷிஅம்மைவரம்கொடுத்தல்.

அருமையுட னிவைதுதிக்கக் கேட்டு மந்த
ஹாசம்செய் தொருகையிற் செங்கழுநீர்ப் பூவும்
ஒருகையிலே பைங்கிளியும் தூய செம்பொன்
உடுக்கையும்செம் மலர்பணிபூண் டங்க யற்கண்
திருநிறைந்து மூவயதுக் கன்னி யாகச்
சிறந்துவெளி வந்திலங்கு மண்ட பத்தில்
அருளினள்கண் டிறைஞ்சும்வித்யா வதியைப்பார்த்தென்
அம்மாநீ வேண்டுவதே தறைகென் றாளே.

சேல்விழிவிளம்பவித்தி யாவதிபணிந்தெனக்குன் சேவடியிலன்புநிற்க வெடுநாளும், — சீரருள்சிறந்தளிக்க வேணுமெனவின்னுமுற்ற தேவையையொழிந்துகைக்கொள் எனஓத, — ஆவலுடனிங்குதித்த கோலமுடனென்தனக்குன் ஆடலதுகண்டுவக்க மனமீதில், — ஆசையெனவுநதிருத்த மாயடிபணிந்திரக்க ஆகவெனவுள்ளுவந்து புவிமீது — பூவலர்புகழ்ந்துயர்த்த மீனவனெனும்செழித்த பூபதிமணந்திருக்க வருவாயப் — போதிவுருவம்சிறக்க வேவருவமென்றுபெற்ற பூரணிமகிழ்ந்துரைக்க மகிழ்வாளுள் — மாவலரே சிந்தையுற்ற கோதைவிடுமன்றியித்தை மாலுடனிசைந்துரைப்பர் அறிவோரும் — மாதனம்வளர்ந்துபுத்ரர் ஆயுளும்நிறைந்திகத்தில வாழ்சிவபுரம்கிடைத்து மகிழ்வாரே.

———⟨ * ⟩———

ஆக விருத்தம் ௧௩ சந்தம் கீர்த்தனை ௭ திபதை ௩

நான்காவது தடாதகைப்பிராட்டியார் திருஅவதாரப்படலம்.

முற்றும்.

ஸ்ரீமீனாக்ஷிசோமசுந்தரேச்வரர்திருவடிகளேதுணை.

திருச்சிற்றம்பலம்.

ஐந்தாவது,

## திருமணப்படலம்.

***

அவதாரிகை—விருத்தம்.

தரும்புகழ் வழுதி செல்வத் தடாதகைப் பிராட்டி யிந்தப்
பெரும்புவி முழுதும் காத்த பெருமையை யுரைத்தே னிப்பால்
திரும்பவம் மாதை யீசன் திருக்கலியாணம் செய்து
விரும்பியிவ் வுலகை யாண்ட விதத்தினிற் சிலசொல வேனே.

சாவேரிராகம் ஆதிதாளம்.

பல்லவி.

கேளும் முனிவர்களே சிவகதையைக் கேளும் முனிவர்களே

கேளும் அரசுசெய்த தடாதகை செம்பொற் றனில்
சூழும் மன்னர்தொழச்செங் கோல்முறை செய்யும்நாளில் கேளும்

சரணங்கள்.

௧ படியிலாக் ஞாசக்கிரமாகிய ரவி ஒளிபெய்ய
பாவமாகியகலி யிருள்பறந் திடத்துய்ய
குடையாகியதவள மதிதண்ணி ழலைச்செய்யக்
கூறும் மனுநெறியால புரக்கும்நா ளுலகுய்யக் கேளும்

௨ நாடும் கன்னிப்பருவம் முதிர்ந்து குறியுண்டாக
நாளொரு வண்ணமும் பொழுதோர்மே னியுமாக
கூடுமி ரவிருளை வெள்ளை நிறமதாகக்
கொண்ட கருங்குழலும் வண்டினத் துக்கொப்பாகக் கேளும்

௩ வாலைப் பருவம்நீங்கிச் சிற்றிடை யுமிளைக்க
மார்பில் தனங்களிறு மாப்புக்கொண் டுகிளைக்கச்
சேலைப் பொருவும்விழி செவியில்பூ சல்விளைக்கத்
திருக்கலி யாணம்செய்யும் பருவம்வந் துமுளைக்கக் கேளும்

தடாதகைப்பிராட்டியார் திக்குவிஜயம்செய்தல்.

விருத்தம்.

கன்னியிந்தப் படியிருக்கும் பருவம் கண்டு
காலம்செய் வதுகோலம் செய்யு மாவென்
றின்னிலம்சொல் லியபடியே திருக்கல் யாணம்
இன்னமும்செய் திடவிலையே யென்றுந் தெண்ணி
தன்னிதயத் திரக்கமுற்றுத் தாயு ரைக்கத்
தடாதகைப்பி ராட்டியதை யுணர்ந்து பெற்ற
அன்னையரே வருந்திடலீர் ஆங்கா லமென்
றுரைத்திட்டாள் உலகமெங்கும் நிறைந்திட் டாளே

இதுவுமது.

அன்னைகாஞ் சனமாலை மனத்தைத் தேற்றி
அங்கிருந்தி அஷ்டதிக்கும் உலகம் யாவும்
தன்னுடைய கொடிநாட்டி மீளவென்றே
தடாதகைநா யகிசென்று ளவற்றை நாடி
மன்னவரும் அமைச்சர்களும் பிறரும் சூழ
வளைந்தடுத்தார் புரவிகளை வலவன் தூண்டத்
தென்னர்குலம் விளங்கவெற்றிச் சங்கம் ஆர்ப்பத்
தேறினள் கொடிஞ்சித்தேர் ஏறினளே

நாதநாமக்கிரியை சாப்பு

பல்லவி.

விசயத்தைக்குறித்தாள் இந்திராதியர் விருதெல்லாம்பறித்தாள்

அநுபல்லவி.

விசயத்து டனேயெட்டுத் திசையுந்த னதாநட்டு
மீனக்கொ டிவிளங்கத் தானைப்ப டையிலங்க
விசைகொண்ட பரிநாலு பூண்டர தத்திலேறி
மேருவைச் சுற்றிமெய்க்கும் சூரியன் போலேதிக்கு — விசய

சரணங்கள்

க பேரித டாரிமல் — லாரிஉடுக்குமொந்தை
பெருகும்சின் னம்எக்காளம் — வருநர கெசமேளம்
வீரசங் கம்முதலாப் — பதினெட்டு வாத்தியமும்
மேகத்தி லும்அதிகம் — ஆகத்தொ னிஎழும்ப
விரைந்தெங்கும் அடிக்க மகரக்கொடி — பரிந்தங்கு பிடிக்க வரிபரந்த
காரிகை யார்தங்கள் — விழிபோலே தைக்கின்ற
கணைபூட்டி பதனுவும் — பரிசைவா ளும்சூலமும்
சூரிமுத லாகிய — பதினெட்டா யுதங்களும்
தொடுத்துப்பெண்தெய்வம்போலடுத்திரதத்திலேறிச்
சுற்றிலும்துலங்கத் தானுமவர்கள் மத்தியில்விளங்க வண்டில்களிந்தப்
பாரைவ கிர்ந்துபிலந் — துவாரத்தெ டையடைக்கப்
பரந்தகொ டுங்கையாலே — விரிந்ததி சையுடைக்க
நேருமம் பரபகங்கை — நீர்முழு தும்துடைக்க
நெடியசா ரிசுற்றும் — கொடிகளால் சிகரங்கள்
நீடும்பொற் றேரும் அதனைச்சுற்றி — ஓடும்பொற் றேரும் நெருங்கிச்சூழ
போரிலி ருப்புலக்கை — ஏந்தி யமனைப்போலே
புரிந்துமும் மதநீரைச் — சொரிந்துகொம் புகளாலே
காரைவ யிற்றைக்கீறி — நீரைக்கு டிக்கவாயைக்
காட்டிவ ருதலபோலே — நீட்டும்த டக்கையானை
கருமலை போலும் அளவிறந்த — பெருமலை போலும் வரயோகியர்
தீரமு டன்வாயுபைத் — தம்பித்து ளத்தைவசம்

செய்துரி னைத்தவிடம் செல்லும்ம னத்துக்கொப்ப
ஆருமைங் கதியுடன கடையுக முடவில்பார்
ஆளவ ரும்புரவி போலனே கம்பரிகள்
அணிகொண்டு சொலிக்க காலில் மணிகல்லென் றொலிக்க எழும்பிரசண்ட
மாருதத் திலும்வேக மாகந டப்போர்காலன்
வந்தாலும் முதுகிட்டு டைந்தோடச் செய்துமீள்வர்
வீரமி கும்அரவின் பல்லின்வி ஷத்தினிலும்
மீளாவி ஷத்தைச்சிந்தும் வேலாளர் களும்சூழ

விஜயத்தை

எண்ணவ ரியசது ரங்கப்ப டைகளாலே
இருநிலத் தைமறைக்கக் கொடிவெண்கு டைகளாலே
விண்ணைம றைக்கவெழும் தூளிக திரவன்றன்
விழியைம றைக்கமிக்க ஒலியாலே கடலோசை
யீறையும் மறைக்க நிரைநிரையா ஆறெங்கும் நிறைக்கத் தேரொலி
நண்ணும் கதிகளுடன் செலலும் பரியொலியும்
நாடும் களிறொலியும் வீரர் பிளிறொலியும்
கண்ணகன் றொலிசெய்யும் வீர மணிகள்காலில்
கட்டும் சேவகர்தோளில் தட்டும் கனவொலியும்
கண்டண்டம் பிளக்க மிகுத்தவோசை சென்றெங்கும் அளக்க பரந்தெழுந்த
நுண்ணிய துகளாலே தினகரன் மறைபட
நோக்க அரியவிருள் ஆக்கமும் நிறைபடத்
தண்ணில வொளிர்முத்துக் குடையின்சோ தியும்முடி
தரித்தமன னரணியில் பரித்தவஜ் ரவொளியும்
தனிநில வெறிக்க அதனுலெங்கும் பகலெனக்குறிக்க தேர் அணிகள்
பண்ணும்கப் பல்களாகப் பரிகள் அலைகளாக
பலமுரசொலியாகப் படைகள்மீன் களாக
வெண்ணுரை கவரியாத் ததும்பவரும் யானைகள்
மேகநி ரைகளாக ஏகும்க டலைப்போலே
விசைகொண்டு நடக்க நடநதெட்டுத் திசையெங்கும் மடக்கஎழில்மிகுத்த
பெண்ணினங் கள்திரண்டு வெண்கவ ரிகள்வீசப்
பெருகும்வே தியர்புகழந் தாசியொ ருபால்பேச
பண்ணுட னேயமுத கீதமொ ருபுறத்தில்
பாடச்செ விக்கினிமை கூடவொ ருபுறத்தில்
பாவலர் துதிக்க முடிபுனைந்த காவலர் மதிக்க என்னசொல்லுவேன்
திண்ணமு டையமீனக் கொடியும் புலிக்கொடியும்
செம்பொன் தனுக்கொடியும் கும்பலா கவேசுற்ற
வண்ணமு டனேபசுங் கழைநிகர் தோளில்நிம்ப
மாலைய ணிந்துதேரின் மேலேயி ருந்துதிக்கு

விஜயத்தை

வேதம்ப லமுகம்கொண் டேத்தியும்அறியாத
மின்னே எனதுகுல மன்னன் மகளாய்வையம்

நீதிமுறைசெலுத்தி மாசகற்றுதல்போலே
நீயெனதுமுகத்து மாசகற்றெனத்திங்கள்
நிழற்றுதல் போலும் கவிகைசுற்றும் தழைக்கமென் மேலும் அமைச்சியலை
ஓதியுணர்ந்துதெளிந் துரைகரும்சுமதிமந்திரி
ஒண்டொடி ரதத்துடன் தன்தேர்நடத்தும்தந்திரி
சேதியுரைத்துச்சதுரங்கப்படைகள்செல்லச்
செங்கைப்பிரம்புகொண்டு நங்கைகுறிப்பறிந்து
சேவகம் செலுத்த ஆயுதத்துடன் நால்விதம் வகுத்த பலசேனைக்கும்
பூதலம் எங்கும்தளைப போலேசெலவதுன்றிப்
புரந்தரன் இருக்கும்பொன னுலகம்முதலாகிய
மாதிரம் களிலும்பின் மற்றிடங்களும்செல்ல
வலிமையளித்தப்பல பலமன்னர் திறைவைத்தன்
வசம்செய்யநடந்தாள் நடந்துவட திசையின்மேல் தொடர்ந்தாளவ்விடத்துள
மாதங்கபதிமுத லான அரசர்களின
வலிமை அடக்கிவென்று மதயானைகள்பரிகள்
கோதில்லாஇரதங்கள் மாதர் முதலவர்கள்
கொடுத்துத்திறைப்பொருளும் கொடுத்து வணங்கவாங்கிக்
கொண்டகமகிழ்ந்தாள் எண்டிசைதோறும் வெற்றிடவினைந்தாள் தேரைவலவ
ஞேதிரிலகப்பலைத் தூண்டும்கால எனத்தூண்ட
உம்பர் உலகில்சென்று வெம்போர் விளைக்கப்புரு
கூதனை அமரக்கஞ்சித் தும்பைமாலையுடனே
கொணட புயவலியும் விண்டொருவருடனும்
கூடாமல முடுக்கி அமரரைபபின நாடாமல் அடக்கி விண்ணுலகுள்ள
மாதர்களையும்வெள்ளை வாரணத்தையும்பரி
மாவையும் நலநதரும் கோவையும் ஓரைந்து
பாதபங்களையும்சிந் தாமணியையும்கையில்
பற்றிக்கொண்டதுபோலே மற்றத்திசையும்வெலல
விஜயத்தை

## பிராட்டியார் கைலைமலையை முற்றுகைசெய்தல்.

விருத்தம்.

இந்தவிதம் பொன்னுலகம் ஜயித்த பினமற்
றெங்குமுள திசையுளகாவலர்தாளாணமை
சிந்தஅமர் செய்துவெற்றி மாலை சூழத்
திறைகொண்ட தடாதகைப்பி ராட்டி பின்னும்
முநதியுயர் கனகமலை தனைவளைத்து
முப்புரம்சுட்டவுணர்வலி அடக்கும் நீல
கந்தரன்வாழ் கயிலையில்சென் றமர்பொருந்தக்
கருதினுள் சேனையுடன பொருதினுளே.

திபதை— காம்போதி, சாப்பு.

க வெள்ளிமலையைக்குறித்துத்தடாதகை வெற்றிப்பரித்தேரில்ஏறினுள் வெகு
முள்ளர்திரண்டு கடலினுமிக்க வயங்கொலிகொண்டெதிர் கூறினூர்

உ. பேரிபடக முதலான தூரியம் பேரொலிசெயமனம் கடுத்தார் இந்தப்
பாரினிலூழிகள் தோறும்விளங்கும் பருப்பதம்தன்னைவந் தடுத்தார் (சென்று

ந. சேர்ந்தங்கொருமலை யோடெதிர்தாக்கும்செழுமலைக்கூட்டங்கள் போலே
பாய்ந்துபொருது மதவாரணங்களும் பாரித்துக்கர்ச்சிக்க மேலே

ச. வீமம்தருங்கணைபூட்டும்வில்லாளிகள் மேகத்திடிபோலார்ப்பரித்தார் தூய
மாமலைக்காவலர் கண்டோடியிந்த வகையெல்லாம்நந்திக்குச் சரித்தார்

ரு நந்தியறிந்தேனந்தேடக்கிடையாத நாதனுக்கம்மொழி தொடுத்தார் சாமி
தந்தமொழிப்படித் தானேபூதகணம் தங்களைச்சண்டைக்கு விடுத்தார்

சு குன்றிமணியெனக் கண்களில்தீப்பொறி கொப்புளிக்கச்சினந்திடுவார் கற்
கண்டுமொழியாள் பெருஞ்சேனைமீது கடலும்கடலும்போல் அடுவார்

எ ஆலத்துடனே வடவானலும்போல் அடுத்திருசேனையும் சீறினார் ஊழிக்
காலத்தெழுந்து வரும்கடலென்னக் களம்தனில்கர்ச்சித்து மீறினார்

அ சூலம்மழுப்படை வாள்கள்கழுக்கடை தோமரம்நேமிகள் தண்டம் பிண்டி
பாலமுதற்படை வீசிக்கொண்டேசண்டை பண்ணத்தொடுத்தாருத் தண்டம்

கூ ஏந்தும்படையுமெறியும்படையும்பின் எய்யும்படைமுதலெடுத்து கொண்டு
சேர்ந்தொருவர்க்கொருவர்விடுக்கும்படை செந்நிறப்புண்ணீரில் அடுத்து

ய பட்டுப்பிழைக்கின்றனவும்நுழைந்து பறிகின்றனவுமெய் நோகமிக
முட்டிமுறிகின்றனவும்ஒப்பாகும் முயன்றார்வினைப்போக மாக

கக ஈசனைக்கண்டு தரிசிக்கவந்தாங் கிமையோர்கள்வாகனம் நிறையச்சிறை
வீசியஅன்னம் கருடப்புள்ளாதி வெருவிப்பறந்தோடி மறைய

கஉ மீளும்விமானம்மிருகங்கள்வீழ்ந்தனமேலும்படைகள்சென்றடிக்கப் பத்ர
காளிமுன்னுண்டது போலிரத்தம்கக்கிக் காலன்தன்வாகனம் துடிக்க

கங. போகமும்வீடும் தருகின்றதேவனைப் போற்றிவித்யாதரர் நாட வந்து
பாகுமொழியா ளமர்க்கஞ்சிவேறொரு பாதையைக்கூடிக்கொண் டோட [னும்

கச. திங்கட்படையைவிடுக்கவதற்கெதிர் செங்கதிரோன்படைஏற்றினார் பின்
அங்கிப்படையைத் தொடுகசுப்பெரும்வருணாஸ்திரத்தாலதை மாற்றினார்

கரு. நாரசிங்கப்படை போடச்சரப நறும்படையாலதைத் தாக்கினார் சண்ட
மாருதவெம்படை வீசிடநாக வடிக்கணைவிட்டதை நீக்கினார்

கசு. இப்படிச்சண்டை புரிபவர்தங்களி லேநந்திக்கன்பர்கள்தோற்றினா ரவர்
கைப்படைதூள்படச் செய்துதடாதகைக் கன்னிகணைமாரி தூற்றினாள்

கஎ. செங்கைப்படையற்ற பூதகணத்தர் சிலைஎடுத்தேஎறிந் தார்த்தார் வீர
மங்கைபொய்யுள்ளத்தோர்செய்யுந்தவம்போலமாயவஜ்ரவேலைத் தூர்த்தாள்

துண்டங்களாகத் துணிபட்டுடலங்கள் சோர்ந்துவிழுந்தங்கே வாடினா ரம்மை
தண்டத்திலங்கே நின்றவர்தங்களைத் தாக்கவும்சாம்பிப்பின் ஓடினார்

கஅ. ஆயுதமற்றபி மானமுமற்றணி மாலையுமற்றோடு வாரும் சென்று
பாயும்புலியைக்கண் டஞ்சுமான்கள்போல் பயம்பிடித்துச்சாடு வாரும்

உ௰. இந்தவிதம்நாலு வாசலிலும்போ ரினைத்துக்கணநாதர் முறிந்தார் அதை
நந்தியறிந்தோடிச் சொல்லக்கயிலாச நாதனுமவ்வகை அறிந்தான்

## பிராட்டியார் சதாசிவரூபத்தைத் தரிசித்தல்.

விருத்தம்.

தேவதே வனும்அறிந்து மந்த ஹாசம்
செய்திடபம் தனிலேறிப் படைகைக் கொண்டு
மேவரிய அமர்க்களம்வந் தடுத்துப் பூத
வீரர்களைச் செயித்துவெற்றி மாலை சூடி
சேவகம்கொண் டவர்வரினும் செயிப்போம் என்றோர்
சிங்கத்தின் பேடெனவே நிற்கும் ஆதி
தேவிதிரு உருவமும்வீ ரமும்பார்த் தன்பு
தேக்கிடுமுன் தாயும்எதிர் நோக்கி னாளே.

பரசுராகம் ஆதிதாளம்.

பல்லவி.

ஸதா சிவ ஸ்வரூ பத்தைக் கண்ணால் கண்டாள் கன்னி
தடா தகைப் பிராட் டிவி ஜயம் கொண்டாள்

அநுபல்லவி.

பிதாமகனும் கேசவனும்வி புதானும்இந்தி ரனும்முனிவரும்
ஸதாகாலமும் தேடரியசச் சிதாநந்த பூர்ணசாம்ப ஸதாசிவ

சரணங்கள்.

க சோதிவார்கழல் பாதமும்புலித் தோலு டையும் தூயவி
பூதியணிந்த மெய்யும்கங்கைவ ளர்ச டையும்
காதில்குழையும் பரசுதரித்த கரமும்நீலகந் தரமும்தன்மிசை
யேதிரும்பிய விழியும்தன்வலப் பாதியாகிய ஆதிசாம்ப ஸதாசிவ

உ கண்டொருமுலை மறையுமெல்லையி லொருக் காலே நாணம்
கொண்டுதுவண்டு வளைந்திடும்பூங் கொம்பு போலே
பண்டன்பனுக வேமலர்க்குழற் பாரமும்பிடர் தாழச்சேல்விழி [ஸதா
ரண்டுமடியின்புறத்தைப்பார்க்கவிந் நிலத்தைக்கிளைத்துமின்னைப்போனின்று

ந முந்தவேள்வியில் வந்தருள்செய்தா காச வாணி சொன்னது
மந்திரிஆகும் சுமதிஎன்பவன் நெஞ்சில் தோணி
சுந்தரிஉன்னை மணம்செய்யத்தகும் சுவாமிஎன்றடி பணிந்துமொழிய
அந்தமொழியே செவிக்கமுதாக அருந்திஆனந்தம் பொருந்திச்சாம்ப ஸதா

சேலைநிகர் விழியன்னை நிற்க என்று
திக்குகளை வெலக்கருதி யெழுந்தாய் அன்றே
ஆலவா யினைவிட்டுன் பின்னே நாமும்
அடுத்துவந்தோம் எனவையன் அருளிப் பின்னும்
ஓலமறை புகல்நாளை யிந்து வாரத்
தோரைநலம் தொட்டுவரு கின்ற நாளில்
மாலைமுடி மணம்செய்ய வருவோம் உள்ள
வாறென்றார் மின்னகர்க்குச் சேரொன் றுரே.

## மதுரைநகர் அலங்கரித்தல்.

விருத்தம்.

கங்கைவே ணியன்விடைபெற் றவனமேல் அன்பும்
  கருத்தையும்வைத் தணிதேர்மேல் கொண்டெ டூர்ந்து
புங்கமதி குலம்விளக்கும் கன்னி கூடல்
  புரத்திலன்னை மகிழ்ந்திடமா ளிகைபுகுந் தாள்
மங்கலவோ லைகளெழுதி யரசர்க் கெல்லாம்
  மந்திரிமா ரனுப்பிநகர் அலங்க ரிக்க
அங்கமிகும் மணமுரசம் யானை மின்மேல
  அமைத்தடிக்கச் செய்தெவர்க்கும் அறிவித் தாரே.

திபதை—மத்தியமாவதி, சாப்பு.

க மங்கலபேரிகை அறைந்தார் புலமாந்தரும்சந்தோஷம் நிறைந்தார்
  திங்கட்சடிலனைப் பணிந்தார் நகர்சிங்காரம்செய்திடத் துணிந்தார்
உ ஆடவர்மாதர்மென மேலே உலகன்னைமணத்துக்கான பாலே
  தோடணிகைவளை மாலை சிந்தத்தோணுமல்செய்குவார் வேலை
ங என்றைக்குக்கலயாணம் என்பார் நாளை இந்துவாரத்தினம் என்பார்
  அன்றைக்கின்றுறுநாள் என்பார் யுகம்ஆறுகழிநூமே என்பார்
ச மங்கைதிருமணம் காணவே தம்வலத்தோள்துடித்ததென் றுணவே
  செங்கைதழுவித் திகழுவார் கும்பல் சேர்ந்துமகிழ்ந்து புகழுவார்
ரு மாளிகைவெண்சுதை பூசுவார் அதின் வாலொளிகண்டுகண் கூசுவார்
  கோளிலாச்சித்திரம் எழுதுவார் திண்ணை குங்குமம்கொண்டு மெழுகுவார்
சா சுற்றிலும்பாலிகை விம்பமும் தளிர் தோயும்நீர்பூரண கும்பமும்
  வைத்துயர்வேதிகை அமைத்தார் பல மகரதோரணங்கள் சமைத்தார்
எ நீளும்பொற்றூண்களை நாட்டினர் வீதி நெடும்நடைபந்த லீட்டினர்
  பாளைகமுகு திரட்டினர் வாழைப் பைங்கரும்புங்கூடக் கட்டினர்
அ சூரியன்போலொளி நீடி எங்கும் சோபிக்கும்கண்ணாடி கோடி
  நேருக்குநேராக மாட்டினர் எங்கும் நீண்டகொடிகளை நாட்டினர்
கூ பாவைத்தீபங்களுண் டாக்கினர் நெடும்பந்தலெங்கும்மா லை தூக்கினர்
  பூவும்பனிநீரும் இறைத்தார் பொன் பொரியும்சுண்ணமும் நிறைத்தார்
ய ஆவணவீதியி தென்னவே மணி ஆரம்பொன்மாலைகள் மின்னவே
  காவணமீதலங் கரித்தார் ரத்தினக் கம்பளமெங்கெங்கும் விரித்தார்
கக தேரில்புரவிகள் பூட்டினர் கதி சேரும்பரிக்கணி சூட்டினர்
  வாரணங்கட்கழ காற்றினர் மணி மங்கலத்தீபங்கள் ஏற்றினர் [வார்
கஉ முன்புள்ள நங்கையைத் தள்ளுவார் பெண்கள் முற்றும்புதிதாகக் கொள்ளு
  பண்புள்ள குங்குமம் குழைத்தார் தன பாரம்மறைபட இழைத்தார்
கங சந்தனம்பூசி உலாத்துவார் வாசனை தங்கும்கலவைகள் சேர்த்துவார்
  சுந்தரக்கண்ணாடி நோக்குவார் மைந்தர் தோளும்பரவசம் ஆக்குவார்
கச வேல்விழிக்கஞ்சனம் தீட்டுவார் மைந்தர் மேலேஉரத்திடை நாட்டுவார்
  தாள்களில்செம்பஞ் சிருத்துவார் மணித் தண்டைசதங்கை திருத்துவார்

கறு தையலரெல்லாரும் கூடுவார் இடை தள்ளாடக் கள்ளுண்டு வாடுவார்
செய்யகுயில்போலே மொழிவார் பலர் சேர்ந்துகுரவைகள் பொழிவார்
கஅ அன்னங்கள்போலவேசெல்லுவார் வீணை ஆதியாம்கானத்திலவெல்லுவார்
கன்னிஅரசடிதொழுவார் திருக் கலியாணமெய்ப்புளகெழுவார்
கஎ.அந்தமுடன்வீணை மீட்டுவார் கேட்டதற்குத்தியாகம்பாராட்டுவார்
சிந்தைமகிழக்கொண்டேற்பார் நறும் தேனையருந்திடவாய்ப்பார் [ளும்
கஅ வாஞ்சையுடன்மன்னர் பெண்களும் துய்ய மாமறையோர்குலப் பெண்க
காஞ்சனையைக்கண்டு மதித்தார் உடன் கன்னிமணத்திறம் துதித்தார்
கக பொன்னின்குடங்களை எடுத்து நறும் பூமாலைசுற்றிலும் தொடுத்து
மன்னும்கவரிகள் சுழற்ற சந்திர வட்டமணிக்குடை நிழற்ற
உ0 புங்கமிகும்கங்கை ஆறும் துய்ய பொன்னிமுதற்றுறை தோறும்
மங்கலவாத்தியம் பெருக தீர்த்தம் வாரணமேலகொண்டு வருக
உக வீட்டுக்குவீடுகல் யாணம் போலே வேண்டும்பணிகளைப் பூண
ஈட்டும்மறையவர்-அருந்த ஆறென்னும்சுவைஅன்னம் பொருந்த
உஉ செய்யமனத்தில் இணங்குவார் அதி திக்கெதிர்நோக்கி வணங்குவார்
மெய்யடியார்களைப் பூசிப்பார் மறு விதிமுறைதூலை வாசிப்பார்

## கல்யாணமண்டபம் அலங்கரித்தல்.

கன்னிபுரம் தன்னையிவ்வா றலங்க ரிக்கக்
கடிமணமாப பிளைக்குமண மகட்கும் வேறு
பனனவினை யில்லையென்று லிவர்க்கு வேடகப்
பண்புறுமிந் நகர்க்கிணையெவ் வுலகத் துண்டாம்
இந்நகரிவ் வணம்செய்ய அதன்முன் அணைக்
கினியமண மண்டபமும் இசைக்க வெண்ணித்
துன்னும்நிலைத் தேர்கள்வா னளவும் நாட்டிச்
சுபம்செய்வார் மிருந்தொளிர்வை பவம்செய் வாரே.

கேதாரகவுளை ஆதி.

பல்லவி.

சிங்காரம் செய்தானே சுமதி கலயாணமண்டபம்
சிங்காரம் செய்தானே சுமதி

அநுபல்லவி.

கங்காதரனுக்கும் தடாதகைப் பிராட்டிக்கும்
காணவரியதிருக் கல்லியாணம் தனைச்செய்ய சிங்காரம்

சரணங்கள்.

க பாரும்பளிங்காலை களிருபாலும்பொருந்தப்பொற் படிகளும்சீலத்தி னூலே
ஏறும்கேசரிகளை கிறுத்திரவமணிவைத் திழைத்ததிண்ணையும்செய்திப் பாலே
சேரும்புறத்திலுள்ளோர் மெய்நிழல்சித்ரம்போலே திகழ்படிகமணி யாலே
ஆரும்சுவரைஎடுத் திடையில்சாளரம்பச்சை யாலேநிருமித்தொருக் காலே

நேரும்பவளத்தாலே ஆயிரம்கால் . நாட்டி
நீலப்போதிகைவைத்துச் செம்பொன்உத்திரம் பூட்டி
சாரும்பதுமராகத் தால்துலாங்களைச் சூட்டி
சந்திரகாந்தக்கல்லாலே மாடங்களைச்செய் தீட்டி சிங்காரம்

ஆணிநித்திலங்களைக் கோத்துப்பாளைகளாக அணிந்துநாலுபக்கமும் தொங்க
தோணும்மரகதரத் தினங்களாலேபசிய துளிரும்இலைகளும்வி ளங்க
பூணும்ப்ரவாளத்தினுல் செய்துகுலைகுலையாய்ப் பொருந்தும்பழங்களுந்துலங்க
காணும்வெள்ளியினுலே கோழரையுடன்செய்த கமுகமரங்களும்இ ணங்க
நீணிறத்துப்பினுலே செம்மலரும்தொ டுத்து
நெடியபச்சிலைகளை மரகதத்தால்அ மைத்து
மாணும்கனகத்தாலே பழக்குலைகளும் வைத்து
வாழைமரங்கள்ஒளி துலங்கிடநிறு வித்து சிங்காரம்

ந பைத்தசண்பகமும்பா திரியும்குருக்கத்தியும் பலபலதருவுடன் கூட
சுற்றும்வரிசையாக வளர்த்ததில்மதுகரம் சூழ்நதகீம்களித்திசை பாட
மற்றும்நறுமணத்தைக்கவர்ந்துகொண்டுசாளரவாயில்தோறும்தவழ்ந்துநாட
தித்திக்கின்றமதுவின்துளிகளையிளம்தென்றல் தெளிக்கின்றபூந்தோட்டம்நீட
ஒற்றுமையாகவே வேதிகையுமு யர்ந்த
ஓமகுண்டமும்யாக சாலையுடனி . சைந்த
முற்றுமேகலையும்சி வாகமத்தில் மொழிந்த
முறைமையினுலேசெய் தமைத்துமிகச் சிறந்த சிங்கார

மாசகன்றிடும்அஷ்டமங்கலங்களைச்சித்ர வகையாலேற்படுத்திப்பின்வாய்த்து
வாசமிகும்சந்தனம் கஸ்தூரியும்குங்கும மலரும்பனிநீருடன் சேர்த்து
நேசமுறவேகுழம் பாக்கியக்குழம்பாலே நிலத்தைமெழுகிவிண்ணில் ஆர்த்து
வீசியுலவுகின்ற சூர்யமண்டலம்நாண விளங்கும்நாகரத்நங்கள் ஏர்த்து
காசுலவும்தீபங்கள் இருபுறமும்ப கட்டி
கையிலேநதிப்பிரதிமை நிற்பவிருள்வி ரட்டி
தேசுலவும்உடுக்கள் போல்பன்மணிக ளொட்டி
செய்திலங்கியகம்ப லங்களைமேலே கட்டி சிங்கார

பேராசிரியம்.

திருமணிக் கோயிலை யமைத்துமுன் வான்றொடத் திசைகள்மறை யப்பந்தரை
சிறப்புடன் செய்துபொற் பாலிகையி லேமுளை தெளித்தயன் முதல்வா னவர்
சேர்ந்திருக் கக்கம்ப ளம்விரித் ததனுளே திருத்தவி சிருத்தி வளரும்
செழுமதிச் சடையனடி யாருக்கு மாசனம் செய்துவைத் ததன்மத் தியில்
தருவைந்து மீன்றவயி ரத்தா லியன்றகே சரிகளின் பிடரி யின்மேல்
சாதகும் பப்பலகை வைத்ததில் துகிரினுல் சதுரக் குடத்தூண் களும்
தண்கொள் பளிக்குத்தி ரங்களும் பவளம் தனுல்கொடுங் கைக ளுமேலே
தங்கும்நிலை மூன்றுக வேவிமா னம்சிற்ப சாஸ்த்ரமுறை செய்த தற்குள்
பெருமைதரு மாறங்க மும்கால்க ளாகியும் பிரணவமா சனமாகியும்
பேசரிய நான்மறைகள் முத்துவட மாகியும் பிறையணிப் பரம சிவனெம்
பிராட்டியொடு வீற்றிருந் திடுவதற் காகவிப் பிரகாரம் வடிவெடுத்துப்
பிறங்குவதுபோல்மணியிழைத்தபொற் றவிசினைப் பெட்புறச் செய்துமேலும்

கருதரிய அமுதமுட னுண்டியை வகைகளும் காமதே னுக்கொ டுக்கக்
கற்பக விருக்ஷங்கள் பீதாம்ப ரங்களும் கனகபூ ஷணமும் அருளக்
கதிர்கொள்சிந் தாமணி நினைத்தது கொடுத்திடக் கண்டிந்த வண்ணம் ஓங்கக்
கண்ணதா யிரவனகர் நாளும் படிக்கலங் காரம்செய் தான்சு மதியே.

### கல்யாணம்காணப்பலதேசமன்னர்வருதல்.

விருத்தம்.

திருநகரைப் பலபலசிங் காரம் செய்தார்
  தென்னன்மகள் திருக்கலியா ணத்தி னாலே
வருகமகிழ்ந் தரசரெதிர் வணங்கித் தங்கள
  மலர்க்கரத்தி லேந்திமணி முடிமேல் வைத்துப
பொருவருவா சகமறிநது கொணர்ந்த வர்க்குப்
  பூஷணமும் பொற்றுகிலும் கொடுத்து வெல்லற்
கருமைதரும் படைகளுடன் பாதை மேற்கொண்
  டாடினர் மதுரைவந்து கூடி னரே.

தோடிராகம், சாப்புதாளம்

பல்லவி.

மன்னர்மகிழ்ந்துவந் தாரே தடாதகை அன்னை திருமணம் காணவே

அநுபல்லவி

கன்னிதடாதகை தன்னைமணம்செய்யக் கைலாசநாதர் வருவதுகணடுய்ய [டி
சென்னியின்மீதும லர்க்கைகுவித்தெங்கும் சீராடிச்சீராடி நேராடிக்கொண்டா

சரணங்கள

க கல்லியாணர் கோசலர் வங்காளர் சோனகர்
  காந்தாரர் கொங்கணர் ஒட்டியர் சீனகர்
 கொல்லர் மகதர் குகுதர்வை தர்ப்பர்
  குளிங்கர் கலிங்கர் தெலுங்கர் எனத்திகழ மன்னர்

உ குச்சரர் மாளவர் சாளவர் ஆரியர்
  கொங்கர் குருநாடர் கேகயர் நேரியர்
 மச்சரர் சிங்களர் பாஞ்சாலர் வங்கர்
  மராடர் விராடர்கள் ளுடனொ டும்கூடி மன்னர்

ங கன்னேசி நாடர் பவுளகர் பலலவர்
  காம்போசர் சாவகர் பப்பரர் விலலவர்
 மன்னர் முதலெம்பத் தாறுதேசத் தோரும்
  மங்கலம்சொல்லிக்கொண் டெங்கும் நிறைந்திட மன்னர்

### எல்லாஉலகத்தாரும்கைலைக்குச் சேர்ந்துவருதல்.

விருத்தம்.

பலதேச மன்னர்களும் சேனை சூழப்
  பார்மீதில் சமுத்திரம்போல் பரவத் தங்கள்
தலவளங்கொண் டாலவாய்க் கெய்திச சிங்கா
  தனத்திருக்கும் தேவியடி தாழ்ந்தங் கூர்ற

நலமிகுந்த தமதிடம்சென் றிருந்தார் அவ்வூர்
நானிலத்தைந திடப்பொருளும் நிரம்பி மிக்க
பொலிவுபெற்று விளங்கினதால் இனியெம் மையன்
புதுமணம்செய் திடவருமற் புதம்சொல் வேனே.

இதுவுமது.

சங்கரனபோர்க் களமகன்று கைலை சேர்ந்து
தலைமைபெறும் நந்திசர்க் கருளும் வண்ணம்
செங்கண்மால் அயன்மகவான் முதலா யுள்ள
தேவர்களை வரக்கருதி அவர்நாட் டுக்கு
சங்குகன்னன் முதலாம்பா ரிடவீ ரரைத்
தான்விடுக்க வரும்சோம வார நாள்நம்
மங்கைபா கன்மணமென் றுரைப்ப அன்பு
மனம்கொண்டார் வரத்தேவர் இனம்கொண் டாரே.

மத்தியமாவதி ஆதி.

பல்லவி.

சேர்ந்து வந்தனரே கயிலா சகிரியைச் சார்ந்து வந்தனரே

அநுபல்லவி

சேர்ந்து மலயத்துவச வேந்தன் மகளை த்ரிபு
ராந்தகன் மணம்செய்ய வாய்ந்த மகிழ்ச்சிகொண்டு

சரணங்கள்.

க ஓதும்கா லாக்கினிருத்திர ரும்தச ருத்திரரும்று
றுருத்திரரும் அஷ்டவித்தி யேசுவரரும்
பூதவீ ரரும்கண நாதரும் சூக்ஷமாண்டரும்
புண்ணியன ருளியறு றுருத்திரரும்
நீதம் உறும்அஷ்டமூர்த் தியும்ஆட கேசுவரரும்
நீலலோகி தரும்க்ஷேத்திர பாலகரும்
பாதுகாக் கும்சாஸ்தாவும் ஏகாத சருத்திரரும்
பகாமலே மகாருத் திரர்முதல் சேர்ந்து

உ மால்அயனா இநதிரன்முதல் ஆன திக்கதிபரெண்
வசுக்கள் மருத்துவர்கள் இருவோரும்
மேலும்மருத்தெழுவர் சூரியர்பன்னிருவர்
வெண்சுடர் மதிஏழ் அனைமாரும்
ஏழும்கின்னரர்சித்தர்வித்தியாதரர் இயக்கர்
இமையவர் உரகர்கந் தருவோரும்
சாலும்கிருதரும்பேதாளப்படைகள்முதல்
சமேதரா கமான மேற்கொண்டு சேர்ந்து

ந செய்ய பதஞ்சலிவி யாக்கிரபா தமுனிவர்
திகழும் பிருகுவெனறுபேர் உறுமுனியும்
மெய்யை உணரும்சன காதியோ கியர்சுகர்
வேதவி யாசமுனி குறுமுனியும்

வையம் புகழும்வாம தேவர்நா ரதர்முதல்
மாதவம் தனில்நிலை பெறுமுனியும்
பையர வையணியும் துய்யனைத் தேடியின்னம்
பலபல நலமுனிவரும் சேர்ந்து

ச வருஷம் அயனம்பருவம் திங்கள் பக்ஷம் திதி
வாரம்நக்ஷத்திரம்கரணம் யோகம்
இரவு பகல்பொழுது நாழிஎண் திசையானை
எழுகடல நதிமலை மின்னல் மேகம்
மருவும்பூதம்புவனம் மந்திரம் நூல்கள்தத்து
வம்கலை சுருதிபதமாம்அனேகம்
சரியைகிரியையோக ஞானசித்திகள்முதல்
சதாசிவா ஹராஹரா என்று சேர்ந்து

ரு ஆயிரம் வாரிதியொன்றாக வருவதுபோல்
ஆயிரமாம்சேனைக் கடல் மேலே
ஆயிரம் செங்கதிரை வீசி எழும்பிவரும்
ஆயிரம் சூர்யனுதித்தது போலே
ஆயிரம் ருத்திரர்கள் துந்துபி அடித்தண்டம்
ஆயிரம் கலங்கிட ஒருக் காலே
ஆயிரம் சதகோடி யோசனை வழிநடந்
தவாளவாள் பவாசிவா என்று சேர்ந்து

சு ஆனை முதல்வாகனம் ஏறி மனைவியுடன்
அரன்உருக் கொண்டுவந்து குதிப்பாரும்
மானமீதில்அம்பர வழிவந்துடல்புளகம்
மருவ முடியிலசெங்கை பதிப்பாரும்
மாநிலத்தில்மெய்யுற வணங்கி எழுந்துதங்கள்
மனமகிழ்ந்தனபொழுகத் துதிப்பாரும்
ஆனந்தத் தேன்மலையை அளிகள்மொய்த்ததுபோலே
அமோகமா நமோநமோ என்று சேர்ந்து

விருத்தம்

வந்தயன்மால் முதலான பேரிவ் வண்ணம்
வரும்போது நந்திபிரம் படிக்குட் பட்டுச்
சிந்துமணி முடிபபொடிகள் பறக்கத் தோன்றும்
தினகரமண் டலத்துக்குள் அடங்கும் பூர்ண
சந்திரமண் டலமிலங்கும் வகையே போலத்
தனிவிளங்கும் கயிலைபரன் திருமுன் னாகப்
பந்திபந்தி யாகநின்றுத் தரவின் பேரில்
பணிஇன்றார் கண்காட்சி அணிஇனா ரே.

## பரமசிவனுக்குக் குபேரன்மணக்கோலஞ்செய்தல்·

விருத்தம்.

கூடிவந்து பணிபவரில் சிலர்க்கு வார்த்தை

கூடியும்பின் சிலர்க்குமந்த ஹாசம் செய்தும்
தேடரிய கடாக்ஷமதால் சிலர்க்குப் பார்த்தும்
சிலர்க்குமுனி முடிஅசைத்தும் இவ்வா றையன்
நாடரிய கருணையென்னும் வரிசை நல்கி
நயந்தெழுந்தோர் மண்டபத்தில் சென்றே ஆங்கோர்
பீடமிசை இருந்தருளக் குபேரன் அன்பைப்
பெய்கின்றான் மணக்கோலம் செய்கின் றானே.

அசாவேரி, சாப்பு.

பல்லவி.

மணவாளக் கோலம்செய் தானே முக்கண் வரதன் மனசுக்கிசைந் தானே

அநுபல்லவி.

கணம்கொண்ட மறைகளும் மாலயன் முனிவரும்
காண அரியகை லாச வாசனுக்கு — மணவாள

க பூந்துகில் எடுத்துக்கொய் திடையில் உடுத்திரட்டைப்
பொன்னரை ஞாண்முதல் — பூட்டி
வாய்ந்தக ளபம்பூதி திகழ்மெய்க் கணிந்துமுடி
மன்னக்கற் பகமாலை — சூட்டி
தோய்ந்த மதிஇரவி போலே — செவியில்வன்னத்
தோடும்குண் டலங்களும் சேர்ந்து — பளபளென்னக்
காந்தி நிறைந்தமதிக் கணம்கொண் — டிசைத்ததென்னக்
கண்டிகை ஒளிநீல கண்டம்தன் — னிலேமின்ன — மணவாள

உ மலைஅரு வியைப்போலே மார்பிடையி லேமுந்நூல்
வலம்கொண்டு கிடந்தெழில் — ஆட
தலையில் அணிந்தமதி ஒழுகும் அமுதமென்னத்
தாளமா லிகைஒளி — நீட
அலைதரும் பாற்கடல் மீதிளம் — கதிர்போலே
ஆரப தக்கம்இருள் அகற்றிட — அப்பாலே
வலயம் கேயூரங்கள் நாலு — புயத்தின்பாலே
வாய்க்கப் புனைந்துபல பூஷணங் — கள்மென்மேலே — மணவாள

௩ அடுத்தபவித்திரங்கைக் கிசைத்தானைத் தோல்நீக்கி
அணிந்துத்தரியமும் — இலங்க
உடுத்தகோவண திமீல்ஐந்துதலைநாகம்போல்
ஒளிர்பீதாம்பரம்முன் — துலங்க
தொடுத்துமாலைகள்தோளில்சாத்திநூபுரம் — தொட்டு
சொற்பதம்கடந்தன்பர்க்கடுத்ததாளினில் — இட்டு
எடுத்ததன்பதிசெய்தவப்பயன்வெளிப் — பட்ட
தென்றனைவரும்சொல்லஇசைந்தடியில்கும் — பிட்டு மணவா

## ஈசன் மணக்கோலத்துடன் மதுரை நகர்க்கு வருதல்.

விருத்தம்.

மால்அயன்இந் திரன்முதல்தே வர்கள் பலர்க்கும்
மற்றுமுள்ள யாவருக்கும் சுமங்க லத்தைச்
சீலமுடன் வரக்கடைக்கண் அருளும் தேவ
தேவனுமங் கலம்புனைந்தான் போல் மணாளக்
கோலம்இசைந் தமரர்கள்பூ மாரி பெய்யக
குண்டோத ரன்முதுகின் மேல்தாள் ஊன்றி
மால்இடப மீதேறி வழிமேல் செல்ல
மதியுற்றான் தென்மதுரைப் பதியுற் றானே.

தோடிராகம், ஆதிதாளம்.

பல்லவி.

ஈசன் வெள்ளியங்கிரி வாசன் மலயத்துவச ராசன் பதிக்குவந்தானே

அநுபல்லவி.

வாசம் மருவும்கம லாச னனும்வைகுந்த
வாசனும் தேவருடன் வாசவ னும்துதிக்க ஈசன்

சரணங்கள்

அந்தரத் தவர்ஐந்து துந்துபி களடிக்க
வந்தபூ தர்இயக்கர் பந்தமி கும்அரக்கர்
தந்தம்விருது நீட விந்தமுலையார் கூட
திந்திமிஎனநடிக்க தாளமி சைந்துவிஞ்சையர் பிடிக்க
உந்தி ஆயிரம் குகைக்குள்மென் மேலே ஒலிக்கும்ஆயிரம்கேசரிபோலே
அந்தமேவுசங்கு கன்னஞாயிரம்சி
றந்தசங்கம்ஊத மிருதங்கம்மோத பாணன்பூத சமேத ஈசன்

சூடும் முடியில்செங்கை கூடிவருமவரும்
பாடி இருகைகொட்டி ஆடிவருமவரும்
தேடிப் புளகம்மெய்யில் மூடிவருமவரும்
நாடியசிவகணரும் மழைபோல ஓடிநீர்வருகணரும்
ஆடும்கங்கைமுதல் நவநதிக் கன்னி அவர்கள் சாமரைகள் சுழற்றவேதுன்னி
நீடும் வெண்குடைகுண் டோதரன் மிகக்கொண்
டாடிக்கொண்டு தாங்க அன்புதேங்க தொண்டர்ஓங்க ராசாங்க ஈசன்

வாசவன் பொன்மணிக்கா ளாசி ஏந்தஅடைப்பை
ஈசானன் ஏந்தவன்னி வாசப் புகை எழுப்பப்
பேசும் வருணன்கும்பம் ஏந்தி வரமாருதன்
வீசிடஆலவட்டம் நிருதியின் மாசகல்ஆடிவட்டம் பிடித்திட
ராசராசன்பொன் மாரிகள் பெய்ய நயந்துகாலன்கஞ் சுகிவினை செய்ய
மாசகன்றமுடி ஆயிரத்தரகர்
தேசவிளக்கினங்கள் தரித்திலங்க மறைபதங்கள் இணங்க ஈசன்

மின்னும் இடிக்கொடியும் அன்னக் கொடியும்பக்ஷி
மன்னுருவக்கொடியும் துன்னிச் சேவகம்செய்ய
மன்னும் கொடிமத்தியில் பொன்னிடபக்கொடிவேர்
தென்னவருகஒருபால் குடவுதரம் தன்னுடைப்பூதம்ஒருபால்
முன்னவன்அருகில் அரிஅயனடுத்து மூளைத்தநென்னமுத் தலைப்படைபிடித்து
வன்னமேவுபதி னெண்படைக்கலமும்
பின்னிவளைந்துகூட வருகநீட பெருமைநாடக் கொண்டாட ஈசன்
ஏறும் மறைப்பொருளைப் போலே பாடல்செய்தெதி
ராலே புஷ்பதந்தனன் பாலே துதிசெய்யப்பின்
நீலமெய் யுடைத்திரு மாலும் அயனும்இரு
பாலினும்துதிபெருகக் கரம்குவித்துச சீலமுடனேவருக [இருந்து
மேலும்வெள்ளிமலை தன்னுடன்எழுந்து விரைந்துசெல்வதென விடைமிசை
கோலமேவுதிரு வாலவாய்அரசி
மேலே ஆசைஅண்ட மனதில்கொண்ட ஒளிதிரண்ட ஸ்ரீகண்ட ஈசன்

மூவருக்கும் முதல்வனிவ்வா றெழுந்த மாற்றம்
முழங்கியபொற் சின்னமொலித் திடவெக் காலும்
சேவகத்தைக் கன்னியர சியின்பால் நின்று
செலுத்திவரும் மந்திரிகள் பலரும் பூமி
காவலரும் சேனைகளும் எதிரே சென்று
கரம்குவித்து வணங்கியுப சரிக்கப் பூவில்
தேவருல கிற்கிணையாம் மதுரை வீதி
. சேர்ந்திட்டார் தொண்டருள்ளம் சார்ந்திட் டாரே.

## வீதியில்வரும்சுவாமியைப்பார்த்துப்பெண்கள்கூறல்.

மதுரைவீ தியில்வருமை யனைச்சார்ந் தவ்வூர்
மாதர்தமிழ் முதற்பதினெண் மாதர் விண்ணோர்
பதியுளமா தரும்மாநந் தனவ னத்தில்
பன்மலர்பூத் திருப்பதுபோல அவர்மெய் யெங்கும்
பதியவே தங்கள்கண்க ளான நீலோற்
பலமலரைச் சாத்தியிரு கையாம் கஞ்சப்
புதுமலர்களைக்குழல்மேல் அணிந்து கொண்டு
போற்றுவார் போலிவற்றைச் சாற்று வாரே.

திபதை—எதுகுலகாம்போதி, ஆதி.

க தேவர்கள்தேடரும்கூடல் ஆவணத்தில் வரும்ஐயன்
திருமுகம் காணவந்தார் பலமாதர்
காவலர்மூ வர்நாட்டிக்குள் என்னபுண்யம் செய்ததோயிக்
.கன்னிநா டென்றுரைததார் பலமாதர்
உ மங்கைத னக்கிசைந்த புருஷனைச் சேரச்செய்த
மா தவம் யாதோவென்றார் சிலமாதர்

இங்கிவள் தன்னைச்செங்கை பிடித்திட ஸ்வாமிதவம்
என்னமுன் செய்தானென்றார் சிலமாதர்
௩ இந்தம துரைசெய்த பாக்கியம் என்னேஐயன்
ஈங்குறப் பெற்றதென்றார் சிலமாதர்
சுந்தரம் ஆமிவர்கள் திருமணம் காணநாமுன்
தொகுத்தபுண் யம்என்னென்பார் சிலமாதர்
௪ மன்னன்வ ருந்தியிந்தப் பெண்ணைப்பெற் றேங்கச்செய்த
மகமேம கமென்பார்கள் சிலமாதர்
அன்னம கங்கள்செய் தும் இவர்மணம் காணத்தவம்
ஆற்றிலன மன்னனென்றார் சிலமாதர்
௫ அதிரூப மாமிவளைக் கல்யாணம் செய்யத்தக்க
அழகனிவனேஎன்றார் சிலமாதர்
மதுராபு ரத்துக்கினி அரசிவன் அலலால்வேறு
மன்னவன் இல்லைஎன்றார் சிலமாதர்
௬ தோகைஅ ழகுக்கேற்ற சுமுகனைத் தந்ததிர்த
சுமதிவல் லபம்என்பார் சிலமாதர்
பாகுமொ ழியாள்தன்னைப் பெற்றகாஞ் சனைசெயத
பாக்யமே பாக்யம்என்றார் சிலமாதர்
௭ சாரிசா ரிகளாக உடுக்கைநெ கிழநாணம்
தலைக்கொண்டு சாய்ந்துநின்றார் சிலமாதர்
வாரிகு ழல்முடித்து மேனிஎங கும்மன்மதன்
வாளிபு தையச்சோர்வார் சிலமாதர்
௮ வாசம லர்கள்மிக்கத் தேசளி பெற்றிருந்தும்
வாளியாய்ப் பாய்ந்ததென்பார் சிலமாதர்
கேசமிலங்குமுல்லை நீலத்தா ரும்வெறுத்துக்
கீண்டெறிந் தோடிவந்தார் சிலமாதர்
௯ மாமைவி ழியும்மலர் வதனமும் பல்வரியும்
மன்மதன் வாளிஎன்றார் சிலமாதர்
ஆமென் றவரவர்கள் முகத்தைபபா ராமல்தங்கள்
அடிகளைப் பார்த்துச்சென்றார் சிலமாதர்
௰ விடைமேல் இருந்தநம துள்ளத்தில் மேவும்மாயம்
விமலன்என் செய்தான்என்றார் சிலமாதர்
நெடுமதி என்றெழுந்து நம்மைச் சுடுவதென்னோ
நெருப்பெனச் சோர்ந்துசெல்வார் சிலமாதர்
௧௧ புங்கவன் முடிமேலே இருப்பது போலேநம்மைப்
புதுமதி சுடுமென்றார் சிலமாதர்
அங்கவர்க் கிந்தவெப்பம் கொள்ளுமென் றல்லோகங்கை
அணிந்தது காணும்என்றார் சிலமாதர்
௧௨ கலையும்நா ணமும்சோரக் கருத்தும் நிறமும்மாறக்
கண்ணீர் ஆறாகநின்றார் சிலமாதர்

உலையின்மெ ழுகுபோலே ஐயன்ப வனிகண்டே
உருகிமெய்த் தொண்டர்ஒத்தார் சிலமாதர்
௧௩ கலந்தார்க்கி டுக்கண்வரக் கண்டுகை விடுவார்போல்
கைவளை சோரநின்றார் சிலமாதர்
உலந்தாலும் செய்தநன்றி மறவார்போல் காலில்சிலம்
பொட்டிக்கி டக்கநின்றார் சிலமாதர்
௧௪ வன்னம யிலேஎன்றன் சாமிமுன் தூதுபோன
மனம்வரக் காணேம்என்றார் சிலமாதர்
என்மனம் போயிருக்க உன்மனத் தைஏன்விட்டாய்
என்றுசன் டைப்பிடித்தார் சிலமாதர்
௧௫ ஆலத்தை உண்டநீல கண்டன்மேல் ஆசைகொண்டு
ஆவலு டனேவந்தார் சிலமாதர்
கோலமங் கையர்க்கிரங் காதநெஞ் சிரும்பென்றே
குறியிட்ட கறுப்பென்றார் சிலமாதர்
௧௬ இவனை எழுதித்தந்தால் வேண்டுவ தீவேனென்றே
எழுதவல் லார்முன்சென்றார் சிலவமார்
அவனை எழுதவல்லார் எவரென்று சொல்லத்தம
தாவிசோர்ந் தார்கள்அதில் சிலமாதர்
௧௭ ஆசைமுன் பற்றிக்கொள்ளப் பாசம்பின் பற்றித்தள்ள
அகப்பட்டுக் கொண்டுவந்தார் சிலமாதர்
மாசுணங் கார்முலையார் காஞ்சிந ழுவிக்காலில்
மாட்டும்த ளையோபோலுற்றார் சிலமாதர்
௧௮ மேலாடை சோரக்கலை புரிவளை சோரக்காம
வெள்ளத்தில் மூழ்கிவந்தார் சிலமாதர்
மூலமு தல்ஆனந்த மதுக்கட லைக்கண்வாயால்
முகந்துகொண் டோடிவந்தார் சிலமாதர்
௧௯ கைத்தலம் கூப்பிஇரு கண்களும் பார்த்துமனம்
கரைந்துமா டத்தில்நின்றார் சிலமாதர்
வைத்தமண் பாவைபோலும் சித்திரம் போலும்தங்கள்
வடிவுவே றற்றுநின்றார் சிலமாதர்

விருத்தம்.

இந்தவகை பூத்துதிர்ந்த பொற்கொடிபோல் ஒளிர்மடவார்
இட்ட சங்கும்
விந்தைதருங் கலைவளையும் சுண்ணமும்விண் ணோர்இறைக்கும்
விரைமென் பூவும்
நந்திபக வான்கரத்தின் பிரம்படிவான் அமரர்முடி
நண்ணித் தாக்க
சிந்தினமா மணிக்குவையும் வீதிஎங்கும் குப்பையதாச்
செறிந்த வன்றே.

## சுவாமி கல்யாணமண்டபத்துள் எழுந்தருளுதல்.

விருத்தம்.

அரசிலைத ருப்பையும்தோய் கும்ப நீரை
அந்தணர்கள் இறைக்கஅலா மாதர் தட்டின்
விரசுமணி ஆலத்தி சுழற்று எட்டு
விதமாகும் மங்கலங்கள எதிர்வந் தோங்க
முரசதிரக் கருப்பூரத் தீபம் ஏந்தி
மொய்குழலார் மூனறுதரம் வலம்செய் திடப்
பரசுதரன் விடையிகந்தாங் கயனமால் ஈகைப
பற்றினன் உலகம்நிறை சித்தி னனே.

சாவேரிராகம்

பல்லவி.

நாதன் வந்தானே கைலாச நாதன வந்தானே

அநுபல்லவி.

வேதங்களும்தேடிக்கா ணாமல்உடலிளைத்துப
பாதுகையாகமலர்ப் பாதத்திணங்கப்பெற்று நாதன்

சரணங்கள்.

க துய்யநடைப்பாவாடை பரப்பிநிலம் மறைக்கச்
சுகந்தமதுவினால்சே வடிநனைந்து மணக்கத்
தெய்வமந்தாரமாரி யாலேமுடி நனைக்கத்
திருமண்டபத்துள்எழுந் தருளித்தென்னை பிழைக்க நாதன்

உ மங்கையர்சூழ்ந்திடக்காஞ் சனமாலை வந்தனை பாலே
மருமகன்வரக்கண்டு மனமகிழ்ந்தெதி ராலே
கங்கையில்முகந்தபொற் கலசநீரத னாலே
காலைவிளக்கிஅந்நீர் தலைமேற்கொள்ளமென் மேலே நாதன்

ந பாதகமலஈரம் படடால்துடைத்து மாற்றப்
பனிநீர்கஸ்தூரிசேர்த்து குங்குமச்சேறு சாத்த
ஓதுமந்தாரமலர் கொண்டருச்சித்து வாய்த்த
உச்சியில்கைகுவித்தங்குபசாரம்சொல்லிய போற்ற நாதன்

விருத்தம்.

முன்னவனை இவ்வாறு பூசித்தெ னரன்
மொய்குழலை மணஞ்செய்திக் கன்னி நாடு
தன்னையும்கைக் கொண்டரசாண் டிருத்தி என்றாள்
சாமியுமுட் கொண்டணிமண் டபத்தைச் சேர்ந்து
பொன்னரிஆ சனத்திருந்து சூழ நின்ற
பூவயன்மால் உருத்திராதியர்வின னோரை
அந்நிலைபொற் றவிசில்இருந் திடக் கடைக்கண்
ஆற்றினர் தேவர்மலர் தூற்றி னரே.

## தடாதகைப்பிராட்டியாருக்கு அலங்காரஞ்செய்தல்.

விருத்தம்.

சாமியுடன் எவ்வுலகத் தவரும் ஈண்டத்
  தரணிசெளி யாதிருத்தல் முன்போல் கும்ப
மாமுனியை வடதிசையில் இருத்தி ஞானே
  மகாதேவன் ஆக்கினையோ அறியோம் ஐயன்
பூமருவும் திருமணத்துக் கிசைந்த ஓரை
  பொருந்துமட்டும் நிருத்தம்பாத் திருந்தா னிப்பால்
கோமளமாம் தேவியைச்சிங் காரம் செய்யக்
  கூடினார் சிலதியர்கொண் டாடி னாரே.

சுருட்டிராகம் சாப்புதாளம்.

பல்லவி.

அலங்காரம் செய்தாரே தடாதகைக் கலங்காரம் செய்தாரே

அநுபல்லவி.

அலங்காரத் துடன்வரும் அந்திவண் ணனுக்கேர்க்க
நலம்காண எல்லோரும் நாடி மகிழ்ந்து பார்க்க (அலங்கா)

சரணங்கள்.

க மங்கைமார் திரண்டுபொன் ஆசனத் தின்மீது
  வைத துக்கஸ் தூரியை அணிந்து
குங்குமக் குழம்பினைப் பூசிவா சனீராட்டிக்
  குளிர்நதவஸ் திரம்உடுத்தி மகிழ்ந்து
அங்கமு டன்அரசர் குலத்துக்குத் தகுதியா
  அநதணர் களுக்கன்பு புரிந்து
செங்கைநி றையப்பொருள் வாரி அளித்தவர்கள்
  சிந்தை மகிழச்செய்யச் செய்தடி யிற்பணிந்து (அலங்கா)

உ செந்திரு வம்வாணியும் செம்பஞ்சிக் குழம்பினைச்
  சேவடி யிலேபூசி மின்ன
கந்தரம் தனை ஒத்த குழலுக்கு வாசனை
  கலந்தசாந் தைநீவி மன்ன
சந்தனம் தனைப்பனி நீரில்கு ழைத்துப்பூசித்
  தனத்தின்மி சைபளப ளென்ன
சதகம் மிகுந்தநூ புரத்துட னேபாத
  சரங்களும் கிண்கிணியும் திருவடி யிலே துன்ன (அலங்கா)

ந விரிசிகை பருமம்க லாபம்மே கலைகாஞ்சி
  சீதம்ஐந்தும் இடைமீதில் விளங்க
வரிவண் டுறையும்காந்தள் போலே மணிஆழிகள்
  வரியால் விரல்கள இலங்க
இருகரத் தினும்வைரக் கடகங்க ளும்புயத்துக்
  கேற்பத் தொடிகளும் பிறங்க
இரவியு டையகிர ணங்களா கும்கைகளை
  எடுத்துக்கும் பிடும்படிக் கணிந்துமி கத்துலங்க (அலங்கா)

௪ பவளமாலைபொன்மாலை மரகத மாலையும்
பரிந்தணிந் திந்த்ரவிற் போலே
தவளமுத் துமாலையும் மலைஅருவிபோல்கொங்கை
தன்பால் தழுவப்பூட்டி மேலே
குவியுமே ருவைவத்ருவ சக்கிரமெனப்பதக்கம்
கொங்கையைச் சூழவொருக் காலே
செவியுடன் மகரமும் மதியும்பே சவந்தாற்போல்
சேரும் குழைகுண்டலங் களையும் அணிந்தன்பாலே அலங்கார

ரு மழைக்கும் மதிக்கும்இடை வானவில்கிடந்தாற்போல்
மணிப்பட்டம் நெற்றியில் மாட்டி
விழைக்கும் முகிலைஇனிப் பிறக்கும்உக்ரனிவ்வண்ணம்
விலங்கிடுவான்என்று காட்டி
இழைக்கும் முறைமைபோலே வாசக்கருங்குழல்மேல்
எழில்பெரு கிடமாலை சூட்டி
தழைக்கும் கற்பகம்தந்த ஆபரணங்கள்எல்லாம்
தங்கத் திருமேனியில் எங்கும் ஒளிரப் பூட்டி அலங்காரம்

கடாதகைப்பிராட்டியார் கல்யாணமண்டபம்வருதல்·

பாதமுதல் அலங்காரம் இந்த வண்ணம்
பரிந்துசெய்து சமயம்வரப் பார்த்துக் கஞ்சச்
சோதிமலர் வாணியும்பொன் மகளும் முன்னே
சோபனம்பா டிப்பணிந்து திருக்கை நீட்ட
ஏதமில்நா லெட்டறமும் வளர்த்த கையால்
எம்பிராட் டியும்பிடித்தா ரணங்கள் ஓங்கச்
சீதளவான் மலர்பொழிய இயங்கள் ஆர்ப்பத்
தெருளினுள பந்தரில்வந் தருளி னாளே.

சௌராஷ்டிரம், ஆதி.

பல்லவி.

அம்மை தடாதகைவந்தாளே தேவாதிதேவர் அனைவர்க்கும் காட்சிதந்தாளே

அநுபல்லவி.

வெண்மதிப்பிறை சூடி விமலனிடத்தை நாடி
எம்மண்டலத்தில்உள்ள யாவர்களும்கதிக்கத்
தெனமதுராபுரியில் சேர்ந்துவந்து துதிக்க அம்மை

சரணங்கள்

அடைப்பை இந்த்ராணி தாங்கத் திலோத்தமைகண்
ணாடி கையில்கொண் டோங்கக் காளாஞ்சிரம்பை
மடக்கொடி கையில் இசைக்க உருவசிபொன்
மணிஆலவட்டம் அசைக்கத்
துடிக்கிசைந்த இடை மேனகை மின்னு

சொர்ணமலரின்தட்டம் ஏந்தியே துன்ன
தொடுத்த பூமகளும் துய்யசெங் கோல்பிடிக்கத்
தொகுத்த பலசனத்தின் நெருக்கம் ஒதுக்கநடந் தம்மை

உ போதுடன் பனி நீரும் பொன்னிறக்கந்தப்
பொடிகொண்டு வருவோரும் நறும்புகைதந்
தாதரவுசெய் வாரும் சுடர்த்தீபம்கொண்
டருகே உவந்து சாரும்
மாதர் சூழப்பனி நீருமன் பாலே
மலரும் தெளித்தநடைப் பாவாடை மேலே
தாதுலவும்கமல மீதில அனத்தை ஒத்துத்
தண்டை முதலஒலிக்கக் கொண்டடி மெல்லவைத்து அம்மை

ந பூமகளும்நா மகளும் கைகளைத்தாங்க
பொருளுட னேசகல் விகளும் பெறும்சமயம்
ஆமென் றுரைத்தால் போலும் நூபுரம்காலில்
அலம்ப நடந்திடப் பாலும்
மாமணத் தவிசின் மேலுற நாணி
வணங்கி ஒதுங்கிமெல்ல இருந்தனபு பூணி
சாமியு டனேமண வறையில இருந்து மெத்த
தலையை வணக்கிநிமிர்ந் துலகனைத் தையும் பெற்ற அம்மை

ஈசன்தடாதகைப்பிராட்டியாரைமணம்புரிதல்.

விருத்தம்.

தங்குமல ரும்மணமும் பண்ணும் சொல்லும்
சலமும்தண் மையும்பாலும் சுவையும் செய்ய
துங்கமணி யும்ஒளியும் வேறு வேறு
சொருபம்கொண டிருந்தனபோல் உலகை ஈன்ற
மங்கைதடா தகைப்பிராட் டியுடன செம்பொன்
மணவறையின் மீதில்இருந் தாதி தேவன
புங்கவர்பூ மழைபொழிய மங்கல யத்தைப்
பூட்டினன் மணமாலை சூட்டி னனே.

சௌராஷ்டிரம், ஆதி.

பல்லவி.

திருமா மணம்புரிந்தாரே கைலாசநாதர் திருமாமணம்புரிந்தாரே

அநுபல்லவி.

வரும்நிலத் ததிபரும் தருநிலத் ததிபரும்
மாதிரத் ததிபரும் பாதலத் ததிபரும்
மாதவ யோகியரும் போதமெய்ஞ் ஞானியரும்
மறைபயில் வேதியரும் பிறவுள சாதியரும்
வானுட்டுத் தேவர்களும் மேனுட்டு மூவர்களும்
வந்தால வாய்கதிக்க எந்தாய் எனத்துதிக்கத் திருமா

சரணங்கள்.

க மாலிர ணியகும்ப நீர்சொரிந்து மலர்க்
காலை விளக்கிச்சந்த னம்பரிந்து
வன்ன மலர்கொண்டருச் சித்துவந்து தூபம்
தன்னுடன தீபமும் சுற்றிப்பணிந்து
மாதவரும் தானும்சதுர் வேதனும் சதமகனும்
வானவரும் நந்தியுட னேதிருந்த
ஓதரும் கணநாதரும் தொண்டரும்அப் பாதநீரை
உள்ளும் புறம்புமேகொண் டன்புபொருந்த
மங்குல்வண்ணன் அய்யன்திருச் செங்கையி லொருகமல
மலர்மிசைப் பூத்தகாந்த ளனவரிய
தங்கைகையை வைத்துமந்தி ரங்களை யுரைத்துப்புனல்
தனைவிடச் சுரர்கள்பூ மழைசொரிய
வரிவிழிஅரம்பையர் பரதவிதம்நடிக்க
அருமையுடன்விஞ்சையர் அமுதகீதம்படிக்கப்
பரவுமுனிவோர்ஹர ஹரவென்றேதித்துதிக்கச்
சுரர்கள்மெய்யிற்புளகம் தோனறிநின்றுமதிக்க
வந்தேகண்டங் கடாந்தபலகண ருந்தமங்கைத் தலங்கள்முடியில
ணிந்தானந்தப் பெருஞ்சலதியில மிழுந்தேகும்பிட் டெழுந்தஅரசர்கள்
மற்றுமனத்துற திந்தவமுற்றொரு புத்தனெடுத்தெறி வுற்றகலைக்கமழ்
பெற்றமலர்க்கிணை நத்திமுடித்துயர் பத்தர்தமக்கருள் வைத்தவிடைக்கொடி
வாகாபரமஞான யோகாஅழிவில்லாத
தேகாமூலம்கள்தன் பாகாஎழிலமிருத்த
மாமனுக்கும் காமனுக்கும் பூமனுக்கும் மேல்மிகுத்த
வாமாவென் றுசிபேச ஏமாக்ஷ தைகள்வீசக்
கோமான்மதுரைவாச ஸ்ரீமானெனை வுல்லாச திருமா

உ காமரு வும்சுரபி யருள்பாலும் சருக்
கரையும்தே னும்கிருத மும்காலும்
கற்பகக் கனியுடன் மென்மேலும் கலந்
தற்புத மாமைந்தமு தைச்சாலும்
காசுலவும் நவமணிப் பாசனத்தி லிட்டுமேலக்
கரம்வைத் தருளுவீரென் றுரைநாட
வாசமிகுந் தவமுதை நேசமுட னேயருந்தி
மந்தஹாசம் புரிந்தய்யன் அருள்நீட
கற்பினில் மிகுந்தெழில்ப ரப்பியதே வர்முனிவர்
கன்னியர னைவர்களும் சுபம்கூட
பொற்புறும் திருமகளும் அற்புதவா ணியும்சொன்ன
பூவையரு டனேசோ பனம்பாட
கந்தமலரயன்ப யந்தகா சிபர்முதல்
மைந்தருடனேமகுண் டந்தனைச்சூழ்ந்துவேத
மந்திரமொ ழிந்துநெய்சொ ரிந்திடக்கிளம்பிவ
லஞ்சுழித்தெழுந்தோமச் செந்தீமிகச்சொலிக்க

கஞ்சன்சொல்மந் திரத்துநாதமும்செஞ்சொல்லின்பண் ணிசைக்கும்வேதமும்
கல்லென்குஞ்சங் கொலிக்குமோதமும் புங்கங்கொண்டங் கொலிக்கவேபல
கற்றவர்மற்றவர் சுற்றிலுமொய்க்கவே பொற்றிருவுற்றகயிற்றையிசைத்துல
கத்தில்லெவற்றையும் பெற்றுவகுத்துவ ளர்த்தவள்நற்கம லக்கரம்பற்றிய

கையன்று னேஅக்கிதே வய்யன்று னேவளர்க்கும்
மெய்யன்று னேபுசிக்கும் துய்யன்றுனே ஆகிய
காரணத்தன் ஆரணத்தன வாரணத்தின் தோலுடுத்த
காமாரி என்றுதுய்ய பாமாரி வாணர்செய்ய
மாமாரி கொண்டுதொய்ய பூமாரி தேவர்பெய்யத் திருமா

௩ பூமனு வோதித்தந் திரம்தொடுத்துச் செய்யும்
நேமமு டனேமண வறைஅடுத்துப்
பூங்கொடி யுடன்பொரி தனைஎடுத்து ஜ்வாலை
ஓங்குமோ மாக்கினி வாய்மடுத்துப்
புங்கவ மறைமுனிவர் தங்களுக்குத் தக்கதானம்
பொருந்தச்செய் தக்கினியை வலமாற்றித்
தங்கமய மாகவேவி ளங்கியஅம் மியில்அம்மை
தனதுசே வடியைக்கொங் கலர்ஆத்தி
திங்களஞ்ச டைப்பரமன் அங்கையில்பி டித்துமந்திரம்
திருந்த மொழிந்துவிதிப் படிஏற்றி
துங்கவசி ஷ்டன்மனைவி எங்கேஎன்று ரைக்கஅவள்
தொழுதுமுன் வரக்கடைக் கண்சாத்தி
பூரிபொன் மழைபோலே வாரிவா ரிஇறைக்க
ஆருமந் நிதிஇல்லம் தோறும்கொண் டுநிறைக்க
பூசும்க தம்பப்பொடி வாசமெங்கு ம்உறைக்கப்
பேசுமங் கலநாதம் வாரிதி யைமறைக்க
புன்னாகம்சண் பகம்குருந்தையும் முன்னரும்வில் வமும் கரந்தையும்
பொன்பூணாரத் துடன் குமுகுமெனத் தண்பூவாசத் துடன் கமகமென
பொங்கொலிகொள்முர சந்துந்தும்மென சங்கமுழங்கொலி பம்பம்பம்மென
அங்கிசை தம்புரு கிண்கிண் கிண்ணென மங்கையர்தெய்வநடம்திம்திம்மென
பூலோக மானவர்கள் மேலோக வானவர்கள்
போலேயா ரும்சிரத்து மேலே கரம்குவித்துப்
போற்றிஇரு நாற்றிசையு மேத்திமணம் பூர்த்திசெயது
பொன்மாலை பெற்றெடுத்த நன்மாதினை உயர்த்த
சிம்மாச னத்தில்மெத்த இம்மாநி லம்புகழ்த்த திருமா

விருத்தம்.

திருமணத்தைச் சோமசுந் தரர்இவ் வாறு
செய்துமண வறைநீங்கி மண்ட பம்சேர்ந்
தரிஅணைமீ திருந்தயன்மால் முதல்வா னோர்க்கும்
அங்கணத்தோர்க் கும்பரிசும் விடையும்ம் ஈந்தே
பரவுயிரை ஆட்டிவைப்பான் ஆடிக் காட்டும்

பான்மையைப்போல் அரசருக்கிவ் வரசு செய்து
கருணையுடன் காட்டுவா ளாகி ஆங்கே
கருதினன் முப்புரத்தைப் பொருதி னனே.

## ஈசன்சுந்தரபாண்டியனாகி அரசுசெலுத்தல்.

விருத்தம்.

இடபகே தனம்மீனத் துவச மாக
இசைந்திநிம்பன் னகப்பணிபொற் பணிக ளாகக்
கடிஅவிழும் கொன்றைநிம்ப மாலை ஆகக்
காய்புலித்தோல் எழிற்கனகாம் பரம தாக
நெடியமதிச் சடைவயிர மகுட மாக
நேர்ந்தால வாயுறையும் நிமல மூலக்
கடவுள்சுந் தரபாண்டிய னாகி நின்று
காட்டினார் மகிழ்ந்துசெங்கோல் நாட்டி னாரே.

திபதை— நாதநாமக்கிரியை, சம்பை.

௧ துண்டமதிசூடிகொண்ட சொரூபம்தனக்கிசைந்தாற்போல
சூழும்சங்குகன்னன முதல் வாழும்கணுதிபரும்
பண்டவரவருக்கிசைந்த வடிவைமறைத்துத்தெய்வ
பாண்டியர்தம்பணிவிடையில் வேண்டிநின்றாரே.

௨ பூமன்னர்சிவபூசை புரிதல்முறைஎனமறைகள்
புகன்றபடிக்கவரவர்கள் மனம்துணிந்துசெய்யத்
தாமும்சிவபூசைசெய்யும் பொருட்டால்அந்நகர்நடுவில்
சாஸ்திரப்படியேகோயில் வாய்த்திடச்செய்தாரே.

௩ அருட்குறியைநிறுத்திஇஹா பீஷ்டேசுவரலிங்கம்
ஆமெனப்பேர்சொலிப்பூசை நேமமுடன்செய்து
மருக்குலவும்கதம்பவன நாதனைமுக்காலும்வலம்
வந்துபணிந்தேஅரசு புரிந்துமகிழ்ந்தாரே.

விருத்தம்.

அரிபிரமர் தேடும்அய்யனை தானே பூசை
ஆற்றும்லிங்கப் பெருமைகண்டா ருரைக்க வல்லோர்
தரியலர்க்கோர் சிங்கமதா நரர்க்கு வேந்தாத்
தையலர்க்கைங் கணைமதனாப் புவிக்கு மாலாப்
புரியலமற் றோர்க்கறிவா னந்த மாகப்
பொருந்திஉல காண்டிருந்தான இதைஅன் போடே
உரைசெய்வர்கேட் பவர்கள்மனம் சம்பத் தும்பெற்
றோங்குவார் இருவினையும் நீங்கு வாரே.

ஆக விருத்தம் (உரு) பேராசிரியம் (க) கீர்த்தனை (கஉ) திபதை (ச) ஆக சஉ

ஐந்தாவது திருமணப்படலம் முற்றும்.

ஸ்ரீமீனாக்ஷிசுந்தரேசர் திருவடிகளே துணை.

———(0··0)———

உ
ஆருவது
## வெள்ளிஅம்பலத் திருக்கூத்தரடியபடலம்.

அவதாரிகை— விருத்தம்.

மதிகுல விளக்கை வேட்டு மணிமுடி புனைந்திப் பாரை
விதிமுறை நடத்தும் ஈசன் விசித்திரம் உரைத்தே னிப்பால்
அதிதவ முனிவர்க் காக ஆனந்தக் கூத்தைக் கூடல்
பதிதனில் ஆடல செய்த பான்மையை இனிச்சொல் வேனே.

ஈசன்மதுரையின்விசேஷம்எடுத்துக்கூறுதல்.

விருத்தம்.

வல்லவன்சுந் தரபாண்டியன் அருளால் பொற்று
மரைபடிந்தந் தரர்வேத முனிவோர் வேந்தர்
பல்லவரும் போசனம்செய திடவ ருங்கால்
பதஞ்சலிவி யாக்கிரபா தருமுன் கூத்தைத்
தில்லையில்பார்த் துண்பதென அக்கூத் திங்கு
செய்குவோ மஃதுலக புருஷற் குள்ளம்
சொல்லரும்இத் தலம்துவாத சாந்த மென்னத்
தொழுதவர்மற் றதுகேட்கச் சொல்லு வாரே.

சௌராஷ்டிரம் சாப்பு.

பல்லவி.

பிரமரூ பத்துக் கங்கம் பிரபஞ்சரூ பமுத் துங்கம்

அநுபல்லவி.

அரைக்குமேல் உலகேழும் அதற்குக்கீழ் ஏழும்கேளும் பிரம

சரணங்கள்.

க ஆரூரே மூல ஸ்தானம் ஆனைக்காவே ஸ்வாதிஷ்டானம்
தேருமணி பூரம்ஞானம் தெருளண்ணுமலை நிதானம் பிரம
உ மதசுஞ்ளதில வேற்று தயம் திருக்காளத்தி கணடமையம்
காசியேபுருவ மத்தியம் கைலைபிரம ரந்த்ரம் சுயம் பிரம
ங இம்மதுரை த்வாதசாந்தம் இதுக்குண்டோசொல் லதிர்ஷ்டாந்தம்
அம்மறைகளின்சித்தாந்தம் ஆதியில்தோன் றும்விர்த்தாந்தம் பிரம

விருத்தம்.

நிதம்இறைஞ்சு முனிவருக்குச் சுந்த ரேசர்
கெடும்பிரம புருஷனுக்கங் கங்கள் இந்த
விதமெனவே உரைத்தவரோ டெழுந்து வந்து
விடைஉருமா றியதோ அங் கயிலை யோவெண்
கதிர்பெருகும் சந்திரமண் டலமோ வென்னக்
கண்டவர்கள் ஆச்சரியம் கொளவே ஆங்கே

சதமகன்தன் விமானத்தின் கீழ்பால் இவ்வி
தங்கண்டார் வெள்ளியம்ப லம்கண் டாரே.

### சுந்தரேசர் வெள்ளியம்பலத்தில் திருநடனஞ்செய்தல்.

கண்டுயர்ந்த வெள்ளியம்ப லத்துள ளேபால்
கடல்நடுவில் முளைத்தகதி ருதயம் தானோ
தொண்டர் இரு தயகமலம் தானோ அல்லால்
சுருதிமுடி தானோவென் றொளிமா ணிக்கம்
கொண்டமைந்த பீடிகைமேல் ஒருகா லத்தில்
கோடிசூ ரியனுதித்தாற் போலே ஏறி
அண்டர்முனி வோர்கள்ஜய ஜயவென ஏத்த
ஆடினார் இளம்பிறையைச் சூடி னாரே

கல்யாணி, ரூபகம்.

பல்லவி.

சுந்தரர் ஆடினரே — சொர்ணமாலை மகளைக்கூடி
சுபமங்கள கரம்நண்ணிய — சுந்தரர் ஆடினரே

அநுபல்லவி

சிந்தைமெய் மொழி ஒருமிக்கச் சேர்த்து ஞாபகமாக்கேளும்
திந்திமி தோமெனபரத விந்தையா ரஜத வம்பலத்தில்
த்தம்பரவும் பதஞ்சலித்தவ முனிகளும்அடியவர் இனமொடு துதிசெய
முதுதழலெரிவிழி சிதறிடவா யொலிகொணடும்
சீறியமுயலகல முதுகினில்அடியுற
விரிகடல்நடுவினிலெழுந்த ரவியொளிபரவிட
தச்சநதகசந் தசந்தசெர்தரி செகதரிகுகுதரிகிடதகதகணக
டதக தகணகதாந் தகதிநதிம்

தகதரிகிடதக தளங்கு தகததிஙகணமென — சுந்தர

சரணங்கள்.

நந்திமிரு தங்கமுழக்க நாலுமுண் டவன்தாளம் போட
மொந்தை கணங்களடிக்க முறைகந் தருவர்கள் பாடத்
துந்துபி ஐநதுமொலிக்கச் சுருதிமா மகள்இசை கூடக்
கந்தமலரயன்வீணையி சைந்துசாமகான கீதமொழிய
அநதரத்துடுக்கனெனச்செ ரிநதசுகந்தம்நிறைந்திட — சுந்தர

வாரிஜத் தாளும்திசை மருவியபத்துக்கையும் படையும்
தாருமுக் கண்ணும்மறைக்கந் தர்மும்பிறைவளர் சடையும்
வார்குழைச்செவியும்உரமும் வாளரலக்கச்சணி இடையும்
பாரிசமொ துங்கும்வல்லிமேல் சாரும்பார்வையும்சிறுநகையும்
சேரும்வதனமதியமும் சீருறும்பேரொளியாரிட — சுந்தர

௩ கங்கையலம்பமொலியும் கடுக்கையின்மலர்வண் டொலியும்
மங்களவாத்தியவொலியும் மறைமந்திரமொழி யொலியும்
செங்கைடவணடையொலியும் திருவடிமலர்ச்சிலம்பொலியும்
எங்கணும்நிரம்பவடியர் தங்கள்காதினில்அமுதெனவ
முங்கிடப்பாதவிதந யங்கள்கலின்கலினென்கவே சுந்தர

விருத்தம்.

சாமியிவ்வா றிரஜதவம் பலத்தில ஆடும்
தாண்டவத்தைக் கண்டுடர வசமேற் கொண்டு
பூமியின்கண் விழுந்திறைஞ்சிச சுருதி பாடிப்
போற்றினர் பதஞ்சலிவி யாகிர பாத
மாமுனிவர் பொருட்டாற்பல் லோரும் கண்டு
வணங்கினர் திருமணத்தைப் பார்க்க வந்த
பூமனித ரும்காணப் பெற்றோம் என்று
புகழ்ந்திட்டார் அவரவர்கள் மகிழ்ந்திட் டாரே

## நடனதர்சனம்பெற்ற முனிவர்கள் மகிழ்ந் துதுதித்தல்.

விருத்தம்.

தினம்பரவும் பதஞ்சலி வியாக்கிர பாதர்
ஜகதீசன் திருநிருத்தம் கண்டா னந்தம்
மனம்தனிலே பார்ததுமென் மேலும் பொங்கி
வரைகடநத வெள்ளம்வழிந் திடுதல் போலே
புனைந்திருவர் திருமார்பில் இலங்குந் துய்ய
புண்ணிய நீறும்கரையப் பொழிகண் ணீரால
நனைந்திடச்செங் கரம்குவித்துத் தலைமேற் கொண்டு
நாடுவார் கடவுளைக்கொண் டாடு வாரே.

திபதை — பரசு, ரூபகம.

க ஆதிதேவ னேதுரியா தீதனே சரணம் சன
காதியோகியர் தேடெளிய அனுதியே சரணம்
உ ஓதும்கூடலில் மேவியஜகஜோதியே சரணம் எப்
போதுமங்கயற் கண்உமைவலப் பாதியேசரணம்
௩ பண்டுமாலயன் தேடரும்நீல கண்டனே சரணம் ஒளி
மண்டும்பிறையும் நதியுமுடியிற் கொண்டவாசரணம்
௪ கண்ணனுக்காழி கொடுத்தருளுமுக் கண்ணனேசரணம் பத்தி
பண்ணும்உளத்தில விளங்கும்அந்தி வண்ணனேசரணம்
௫ அடியுமுடியும் நடுவுமாகும் கடவுளே சரணம் சாமி
படியில்நலமும் தீதுமாகிய விடையனே சரணம்
ஆரணங்கள் தேடுமூல காரணா சரணம் மத
வாரணத்துரி போர்த்திடும்பரி பூரணா சரணம்
மூர்த்தியொன்றும் ஐந்துமாய மைந்தவா சரணம் பின்
அந்தஇருபத் தைந்துமாகி வந்தவா சரணம்

அ சென்றநாளும் இன்றுமாயுறு கின்றவா சரணம் வரு
கின்றநாளும் ஆகியுலகில் நின்றவா சரணம்

௯ சிரித்துமுப்புரம் எரித்துவெற்றியைக் குறித்தவாசரணம் ஒளி
பரித்திடும்செங்க ணொருத்திடைவரும் ஒருத்தனேசரணம்

௰ நயமுறும்சரா சரமுமாம்நிரா மயனேயுன் சரணம் சின்
மயனேநித்தியா னந்தம்அருள பயனேயுன் சரணம்

௧௧ அண்டும்மதனை எரித்திடக்கோபம் கொண்டவா சரணம் மார்க்
கண்டனுக்காயெ மனையுதைத்தருள் கின்றவா சரணம்

௧௨ தூய்யவிபூதிப் பொடியணிந்தருள் மெய்யனே சரணம் கதிர
செய்யும்மழுவும் மானும்விளங்கும் கையனே சரணம்

௧௩ அம்பலத்தினி லாடும்நிரா லம்பனே சரணம் தொழும்
அன்பருக்கருள் பொழிகின்றசிவ சம்புவே சரணம்

விருத்தம்

ஏத்துமுனி யிருவரையும் நோக்கி ஈசனா
யாதுமத பேகைூயெனப் பணிந்திக் கூத்தி
க்ஷேத்திரத்தில் மார்கழிஆ திரைநாள் தோறும்
செய்தருள வேண்டும்கண் டோர்க்கு முத்தி
வாய்த்திடவும் வேண்டுமெனத் தொழஅவ் வாறே
வரம்அளித்தார் கணங்களொடு சுரர்கொண்டாடப்
பார்த்திருமா தவர்களையும் புல்லிஸ் தோத்ரம்
பண்ணினார் பலமுனிவர் நண்ணி னாரே

விருத்தம்.

மார்கழிமா சம்திருவா திரைதொட் டுப்பின்
மார்கழிமட் டும்பொற்று மறைநீ ராடி
ஏகநா யகன்நடம்பார்த் திருந்தீ ரைம்பத்
தெண்மடங்கைத் தெழுத்துரைத்திந் நிலையில் நிற்போர்
ஆகமதிற் பிணியனுகார் மகப்பே றுண்டாய்
அரியபயன் பெறுவரிதைப் படிப்போர் கேட்போர்
வாகுடனே மனோபீஷ்ட மெல்லாம் பெற்று
மன்னுவார் சிவனுலகில் துன்னு வாரே.

ஆக விருத்தம் (அ) கீர்த்தனை (உ) தரு (க)

ஆறுவது வெள்ளிஅம்பலத்திருக்கூத்தாடியபடலம் முற்றும்.

ஸ்ரீமீனாக்ஷிசுந்தரேசர் திருவடிகளே துணை.

———(0)(0)———

## ஏழாவது,
## குண்டோதரனுக்கு அன்னமிட்டபடலம்.

அவதாரிகை—விருத்தம்.

எம்பிரான் திருமணஞ்செய் திருமுனி வருக்கா வெள்ளி
அம்பலத் தாடல் செய்த அருமையை உரைத்தே னிப்பால்
பின்புகுண் டோத ரன்றன் பெரும்பசிக் கன்னக் குன்றை
வெம்பிவந் தருந்தச் செய்த விதமினிச் சிலசொல் வேனே.

### போசனம்செய்யத் தக்கபேர்களை வரச்சொல்லும்படி பிராட்டியார் ஸ்வாமியை வேண்டுதல்.

விருத்தம்.

மங்கையருக் கரசிதிரு மணபு குந்த
மாதவர்அந் தணர்முதலா னவர்க்கும் அன்னம்
தங்கமயக் கலத்திலறு சுவையோ டூந்து
சந்தனம்தாம் பூலமணிப பூணபட் டாடை
அங்கவர்க்குக் கொடுத்துறுங்கால் அட்ட அன்னத்
தாயிரத்தோர் பங்கும்அழி விலையென் றடேடோர்
புங்கமிகும் தேவியிடத் துரைக்க அன்பு
பொழிகின்றாள் சாமிமுன்போய் மொழிகின் றாளே.

எமுனுகல்யாணி திரிபுடை.

பல்லவி.

சாமி நீரின்னம் போச னம்செய்யத் தக்கபேரைவரச் சொல்லுமே சாமி

அநுபல்லவி.

நேமிதரிக்கின்ற மாமனும்துய்ய நீரஜத்தில்வளர் பூமனும்
காமனுடனெழுந் தருளிவருவது கண்டதேசமைக் கின்றதே சாமி

சரணங்கள்.

௧ கணங்கொண்டமரர்கள் பொருதியேசிவ கணங்களுடன்வரக் கருதியே
இணங்கும்சுவைமிகுமன்னம்சமைத்ததற் கெலலையேஅவைக்கிலலையே சாமி
௨ தூயமடைப்பள்ளித்தொழிலிலேவலர் சூழ்ந்துசமைத்திடும்தொகையிலே
ஆயிரத்திலொரு பங்கு கூடச்செல வாகவேயில்லை யாகவே சாமி
௩ இமயமலை போலே அன்னமும் அதற் கிசைந்தமலைபோலே இன்னமும்
அமையும்கறிமுதல் மிஞ்சியேகிடந் தாறுதேஉள்ள வாறிதே சாமி

விருத்தம்.

இந்தவிதம் தடாதகைவந் துரைத்தி டக்கேட்
டெம்பிரான் தேவியிடத் தன்பி னுலோ
சிந்தைதனி லொருவிளையா டலைச்சிந் தித்தோ
சிறந்தசிவ கணங்களிற்குண் டோத ரன்றன்
விந்தைமிகும் வலியினையன் றுலகில் யார்க்கும்
வெளிப்படையாக் காடடுவிக்க வேண்டு மென்றோ
மந்தநகை புரிந்தம்மை தனதெண் ணத்தை
மாற்றுவான் வதில்மொழிந்து தேற்று வானே.

எதுகுலகாம்போதி, ஆதி.

பல்லவி.

பெண்ணே யுன்னைப் போலே பெருஞ்செல்வத்தைப்
பெற்றதா ருண்டோடா தகையே

அநுபல்லவி.

மண்ணுளும் மும்முடி வேந்தருக் குட்சிறந்த
மலயத்து வசபாண்டியன் அருமைத் தவத்தில்வந்த பெண

சரணங்கள்

க பூமன்ன வர்சம்பத்தும் பொருந்தெண்டிக் கோர்சம் பத்தும்
நீமகிழ்ந் திடப்பெற்ற நெடியசெல் வமனைத்தும்
மாமுனி வோரந்தணர் மன்னவ ருடனே மற்றும்
நாமும் அறியவேண்டி நவின்றதல் லாமல் முற்றும் பெண்

உ உசிதமா கச்சமைத்த வூணருந் திடச் செல்ல
உயர்ந்த நமதுகணங் களுக்குள் எவரும் வல்ல
பசியாலே களைபோட்டு வாயைவா யை மெல்லப
பட்டினி யாயிருப்போ ரெவருமில் லையே நல்ல பெண்

ந பாலாற் குறையோவில்லை பாக்யத்தால் தாழ்வோ இல்லை
பங்கஜை எட்டுப்பேரும் பணிந்துகேட் பாருன சொல்லை
மேலாகும் உன்றன்பெரும் செல்வத்துக் கில்லை எல்லை
விரித்துவாய்க் குக்கையுப சாரம்தே வை இல்லை பெண்

விருத்தம்.

முடிபுனைந்த திருமணாச்சுந் தரரிவ் வாறு
மொழிந்தடுக்க நின்றகுண்டோ தரன் வயிற்றில்
வடவையனல் தனையடுக்க நினைக்கும் போது
வாதுறமக் கனல்மேற்கொண் டெலும் சேர்ந்து
நடைதளர்ந்து கண்களிருண் டால முண்ட
நலிவினைப்போல மயங்கிவெயர்த் தாவி தனை
நெடியபசி வருத்துதெனச் சாமி போய
தின்றிடடா வீதெனக்கே தெனறிட் டானே.

## குண்டோதரன் வாரிவாரிச்சாப்பிடுதல்.

விருத்தம்.

குண்டோத ரன்சொன்ன மொழிகேட் டிந்தக்
குடையெடுக்கும் பையனுக்கோர் மாங்காய் அன்னம்
உண்டுவரும் படிபுரிவா யென்றே சாமி
உரைத்தருளப் பணிந்தம்மை அவனைக் கூட்டிக்
கொண்டுவந்து சுயம்பாகர்க் குரைத்தாள் அன்னோர்
குறளைமடப் பள்ளியினி லிருத்து முன்னே
அண்டையிலே யிருந்தஅன்னம் முதலாக கைக்கொண்
டடுத்திட்டான் வாரிவாய் மடுத்திட் டானே.

உசானி சாப்பு.

பல்லவி.

வாரியுண்டானே குண்டோதரன் வாரியுண்டானே.

அநுபல்லவி.

காரியம்செய்கின்ற சேடியரிற்சிலர் கண்டுவெளைக்கை நெரிக்கப்பின்னும்சில
நாரியர்கண்கள் புதைக்கச்சிலரஞ்சி நாசியிற்கைவைத்துப் பேசப்பலபல
வாரி

சரணங்கள்.

க குண்டோதரமும்சிவந்த நேத்ரமும் பார்த்தவர்கள்வெ
ருண்டோடும் படிக்கிருண்ட காத்ரமும் தெற்றிபபல்லும்
மிண்டான குறளுருவமும் துண்டான நெடும்புருவமும் [டும்
கொண்டாவுடை நெய்யைக்கலம்கொண்டு மொண்டாகுதி செய்யச்சுடர்மண்
குண்டாக்கினி போலேபசித்தழல் உண்டாய் நவத்வாரத்திலும்எழு
ஊழிக் கனல்போலே நாழிக்குள் ளேவாரி வாரி

உ மேலான கைலையைப்போல் அன்னமும் சொர்ணமலைகள்
போலான பருப்புஞ்சித்தி ரான்னமும் கறிவருக்கமும்
மாலாம்பல பக்ஷணங்களும் கோலார்மது சர்க்கரைகளும்
பாலாடைத் ததியின்வளங்களும் நாலாவிதக் காயும்பழங்களும்
காலாக்கினி ருத்திரன்போல்வெகு கோலாகல முற்றவையும்பெரும்
குன்றை விழுங்கிக்கோர் சுண்டாங்கி போலவே வாரி

ங போராயிரம்பயறெள் மூட்டையும் அரிசிப்பொதிபத்
தோராயிரம்கோதுமைக் கோட்டையும் கடலையுளுந்தும்
நேரார்வெல் லக்குவையும் போரார்கன னற்சுமையும்
சீரார்பல சித்திஎண்ணெய்களும் ஏராளக் குடத்துளநெய்களும்
போராமற் கடையிலும்இவ்விதம் ஆராய்ந்து கலத்துடனேமத
யானைப் பசிக்கொரு சோளப் பொரிபோல வாரி

## குண்டோதரனுண்பதுகண்டு பிராட்டியார்சுவாமியோடுகூறல்.

விருத்தம்.

அருவனமீ கம்தனிலே கறடி வாய்வைத்
துருஞ்சுவது போற்குண்டோ தரனிவ் வாறு
பருகும்அதி சயம்கண்டெம் பிராட்டி ஐயன்
பக்கம்வந்து நிலம்கிளைத்து நிற்க ஒன்றும்
தெரிகிலன்போற் குண்டோத ரன்தான் உண்ட
சேஷம்உண்ண வெகுபூதம் வருவ உன்றன்
திருமனத்தின் படிநடப்பி யெனவெட் கித்துச்
சிந்தித்தாள் நயந்துரைத்து வந்தித் தாளே.

மோகனம் சாப்புதாளம்.

பல்லவி.

ஐயனே சந்திர சூடா அடியாளுன்றன் சோதனைக் கிடா.

அநுபல்லவி.

கையிற்புண் ணுக்குக்கண் ணுடியோ மெய்க்கும்
கள்ளனுமாகி விளக்கும் பிடிக்கும் ஐயனே

சரணங்கள்

குண்டோதரனென் ஞெருசிறு பூதம் குணமுதன்றுபக்ஷ ணம்கறி சாதம்
உண்டது மல்லாமல சம்பாரம் சேதம் ஓதரி தெலலா முனதுவிநோதம்
ஐயனே

மெய்யபூதப்படைக் குள்ளேயுரத்தில் வீரரையின்னம் விடுத்தால்கரத்தில்
வைய முழுதும் எடுத்துதரத்தில் வைத்து மறைபயர் விநாடிநேரத்தில்
ஐயனே மட்டும்

கேவல மாயிவ்வண ணம்கிண்டிவிடுக் கேளிக்கைபார்த்தது போதுமிம்
மாவல னேகுண் டோதர னைத்தொட்டு காலாக்னிருத்ரரூ பம்சரிக் கட்டும்
ஐயனே

விருத்தம்.

வெட்கமுடன தடாதகையீ துரைக்கும் போது
மிகப்பசித்தீச் சுடக்குண்டோ தரனும் சாமி
பக்கம்வந்தெம் பிராட்டிசமைத் ததெலா முண்டும்
பசியாலா விதுடிக்கின நதெனத் தாழ்ந்து
மைக்கமுடன் முப்புரத்தைச சுட்ட தீயென்
வயிற்றிடையிற் பசியுருக்கொண் டெழுந்த தாவென
றக்கணம்கை அண்டம்வெடி படவேகூவென்
றறைகின்றான் கைகால்சோர்ந் தறைகின றனே.

ஆக விருத்தம் (எ) கீர்த்தனை (ரு) ஆக (கக).

ஏழாவது குண்டோதரனுக்கு அன்னமிட்டபடலம் முற்றும்.

ஸ்ரீமீனாக்ஷிசுந்தரேசர் திருவடிகளேதுணை.

———(0)(0)———

உ

சிவமயம்.

எட்டாவது

அன்னக்குழியும்வையையும் அழைத்தபடலம்.

அவதாரிகை — விருத்தம்.

வழுதியாக் கோலம் கொண்ட மாதேவன் குறளை அன்னம்
முழுமையும் புசிக்கச் செய்த முறைமையை உரைத்தே னிப்பால்
பொழியும்வெண் தயிரோ டுற்ற போனகம்நிறைந்த நாலு
குழியும்வை யையும் அருந்தச் செய்தது கூறு வேனே.

ஈசன் குண்டோதரனுக்கு அன்னக்குழிதந்து பசிநீக்குதல்.

விருத்தம்.

உலகீசன் தனதுமா யகியைப் பார்த்துள்
உவந்தன்ன பூரணியை நினைக்கு முன்னே

நிலஅகடு நீண்டுதயிர் பாலோ டன்னம்
நிறைந்தகுழி நாலுவரக் குடை எடுக்கும்
தலைவனைப்பார்த் துன்பசிநீக் கென்றான் பண்டு
ஜலநிதனில் கலக்கியமத் தெனக்கை போட்டு
மலைமலையாய் உண்டைசெய்து வாய்அங் காந்து
மடுத்திட்டான் தன துபசி விடுத்திட் டானே.

தரு— புன்னாகவராளி, சாப்பு.

௧ பன்னகபூஷணன் முன்னேபெருகிய அன்னக்குழிநாலும் உண்டான் சாமி
தன்னடியார்வினை போலேகுண்டோதரன் துன்னும்பசிநீங்கக் கண்டான்
௨ இச்சைப்படிக்கேஎடுத்தெடுத்துண்டிடம் பெல்லாம்வயிறாகவீங்கினா னான்
மிச்சத்தினாலே நிலத்தில்மலைபோல் விழுந்துதன்ஞாபகம் நீங்கினான்
௩ தாரணிதன்னில் புரண்டுபுரண்டதி தாகம்தாகம்என்று கிடந்தான் தண்
நீரிருக்கும்நிலை தேடியெழுந்து நெடுமூச்செறிந்துடன் நடந்தான்
௪ ஆவிநிகர்வாரை நீங்கும்மடவார்போல் அம்புயங்கள்வாட விடுத்தான் நெடு
வாவிகுளம்கிணறாடைமுதல்வாயை வைத்துப்பசையற மடுத்தான்
௫ மட்டில்லாநீரைக் குடித்துமடங்காமல் வாய்வறண்டுநா உணங்கினான் தனக்
கிஷ்டமுடையகங் காதரன்சேவடி யேகெதிஎன்று வணங்கினான்
௬ தாழும்குண்டோதரன் தன்பொருட்டாலே தமதுதிருமுடி மீது நிதம்
வாழும்பவானியைஅய்யன்நினைக்குமுன் வந்துபணிந்தா ளப்போது
௭ சிந்தைமகிழ்ந்து வரும்திரைமாலிகைச் செல்வியேமாநதி யுருவாய் நீ
இந்தமதுரா புரத்துக்கருகின் றெழுந்ததிவேகத்தில் வருவாய்
௮ என்றுமொழிந்த ஜகதீசன்சேவடி ஏத்திமந்தாகினி தாழ்ந்து சாமி
நன்றுன்அருட்படி செய்கிறேனென்று நவில்வாள்மனத்தொன்று சூழ்ந்து
௯ அன்றுபகீரதன் தன்பொருட்டாலே அவதரிக்கச்சொன்னீர் எனையே இங்
கின்றுமொருநதி யாகவென்றாலவ் வியற்கையைப்போலேஎன்றனையே
௰ சித்தமகிழ்ந்து தரிசித்தவர்பரி சித்தவர்ஆடுவோர் காணும் பரி
சுத்தமதாகிப் பவத்தின்தொடர்ச்சி தொலைந்துகதிபெற வேணும்

## சுந்தரேசர் உத்திரவின்படி வையையாகக் கங்கைவருதல்.

விருத்தம்.

மங்கலச்சுந் தரக்கடவுள் தன்பால் இந்த
வகையுரைத்தாங் கருள்வரத்தை வாங்கித் தாழ்ந்து
பொங்குநுரை மண்டியகில்முதலாம் வாசம்
பொருந்தியதெண் டிரைமுழங்க அதிவே கத்தோ
டங்கனம் தன்னிலிருந் திழிந்திப் பூவில்
அவதரித்து வருபவள்போல் கங்கை என்னும்
மங்கைமா நதியுருவம் படைத் தெழுந்து
வருகின்றாள் வையைஎன்று பெருகின்றாளே.

பந்தவராளி ஆதி.

பல்லவி.

வையை யாகவந்தாளே கூடலருகில வையை யாகவந்தாளே

அநுபல்லவி

வையம் மதிக்குங்கூடல் ஐயன் முடியில்வாழும்
துய்ய கங்கையேஉல குய்யும் வகைஎழுந்து வையை

சரணங்கள

௧ பொங்கும் அலைவளைதொ டிம்கைக ளாகநித்தி
லங்கள் நகையாகஉத் துங்க நுரைகொடிநு
ருங்குடை இடையாக்க ருங்குழல அறலாக
ஒண்கயல் கண்ணாகவோர் மங்கை வருதல்போலும்
புரிமண மிகும்அகில சாந்த னத்தொடு மரவகைசினைஒலி ஆர்ந்திடப்பெரு
வரைகளிலரைபட வாய்ந்தெடுத்ததி லருகுளசிறுகுடிபேர்ந்திடபொழில்
புக்குபிணைக்கலை மைக்களிறுக்கலை மிக்கவிசைக்கொடு நொக்கிஇழுத்தயல்
குக்கிஇணைக்குப றழ்க்களுடைக்கரு மறகடம்மொய்க்குமரக்கணமொக்கவே
மறிபடஅடியொடு முறிபடவிடுகணை உறுசிலைஅதனொடும் எறிகவணைகொடு

வையை

௨ பார மலையைஉதைத் தார மடுச்செய்தவை
தூர மண்ணிணைவீசித் தாரு வினம்பிடுங்கி
வேரை மேலாகக்கரை ஓரம் அதிலேநட்டிப
பாரை முதுகுபிளந் தாரு மலைகளோடு
பாரவொலியொடுமணி தாங்கியுந்தரி முறிபடஅதிவிசை யோங்கியும்பட
தருநுரைமுகபடம் வேய்ந்துறும்கட கரிவருதலைநிகர் போந்துநன்கருள்
பத்தர் தமக்கருள் வித்தகசித்தன்ம திச்சடை உற்றொளிர் ரத்நமணித்தலை
வைத்துநெளித்தயர்வுற்ற பதத்தொகை முற்றிலுமொய்த்துபில நதிஎனநறுமலி
னரவமும்எனஅதி விரைவொடுவருநதி கரைபுரள்தர இரு வரையிறஉயரொரு

வையை

௩ மண்ணில் படர்தலாலும் விண்ணில அடர்தலாலும்
வெணணெய் தயிரும்பாலும் நண்ணி அணைதலாலும்
வண்ண வராகம்உம்பர் எண்ணும் த்ரிவிக்ரமமும்
கண்ண னுகவும்ஹரி பணணவ தாரம்போலும்
மதகரிபரிநதி சேர்ந்துமேவரு வதுகுடதிசையுள வேந்தர்பால்அட
வலிகொடுபறிசெய்து போந்துமாபல வழுதியுநிகர்பெறும் ஆர்ந்ததாதகி
வம்பவிழும்பனை நிம்பமொடும்பெரு வெம்புலி பணபுலில் அம்பிலுறும்கய
லும்குலவும்திறல் சம்பிர மிகும்தமிழ அம்பதி என்பவர் தம்படையின்புறம்
மருவி வருவதென பரவு திரவியம திருப துடனும்அமல் பெருகி மகிமைதர

வையை

## வைகைநீரைஉண்டு குண்டோதரன்தாகந்தணிந்துக்கொள்ளல்.

விருத்தம்.

வையைநதி இவ்வாறு பெருகிக் கல்லார்
வன்கவிபோற் கலங்கிப்பல் லான்ற கேள்வித்
தூய்யஅருங் கவிபோலத் தெளிந்தாங் குள்ள
துறைதோறும் போய்ப்பரந்து நிரம்பி யிந்த
வையகத்தெல் லோர்களும்வீழ்ந் தாடி மிக்க
மாபலனைப் பெறுகவந்த மகிமை யையபார்த்
தையன்அருள் கொண்டுகுண்டோ தரன்சந் தோஷம்
ஆற்றினன் பெருந்தாகம் மாற்றி னனே.

பன்னுகவராளி ஆனந்தக்களிப்பு.

பல்லவி.

வேகவதிநீரை உண்டான்

பெரும் தாகமதைக்குண்டோ தரன்தணிக்கின்றான் வேகவதி

சரணங்கள்.

க அகலும்பேராற்றிடை அடுத்து
தாற்றலுடனேகுறுங கையிரண்டும் எடுத்துப்
பகவான்செயலைநெஞ்சில் தொடுத்து
பக்கமும்கரையேற நீட்டியே தடுத்து வேகவதி

உ. அலைமோதிக்கொண்டோலி பிறந்து பல
ஆனைக்கொம்பகில்அரு நிதியுடன் நிறைந்து
மலைபோலேநிமிர்ந்தெதிர் சிறந்துவெள்ளம்
வரககண்டுதனது மதகுவாயைத் திறந்து வேகவதி

ங விடையவனதிருமணம் காண வந்த
வேதியர்முனிவர்க்கும் அதிசயம் தோணக்
கடலுண்ணும்கருமேகம் நாணத் தன்னை
காய்ந்தவிடாயும் மறைநதோட்டம் பூண வேகவதி

### குண்டோதரன் சுவாமியைத்துதித்தல்.

[illegible]தம்.

சந்ததமும் வையைஎன்று பெருகும் கங்கா
ஜலம்அருந்திப் பெருந்தாகம் தணிந்த போதே
சிந்தைமொழி தெளிந்தறிவு தோனறிஅன்பு
சிறந்துவந்தா னநதவா ரிதியில் தோய்ந்து
விந்தைதரும் உன்னதமாம் உதரத் தோடு
விளங்கியகுண் டோதரன்அன் புருவாய் நிற்கும்
சுந்தரநா யகனதிருத்தாள் முடிமேல் கொண்டு
சூடினன் துத்தியம்செய் தாடி னனே.

மாஞ்சி, சாப்பு.

பல்லவி.

உன்றன்பாதமேசரணம் சாமிசோம சுநதரேசனேசரணம்

அநுபல்லவி டர்கள்

உனறனடிமுடியைக் கந்தமலரயன்வை குந்தனிந்திரனோட மைந்திடும்விண்ணா
நண்ணாக் கூடல்அண்ணால் அந்திவண்ணா அநதிவண்ணாஅருள்நெற்றிக்கண்ணா

உன்றன்

சரணங்கள்

௧ பருவதராஜகுமாரிமகிழும் பராபரனேகயிலை வாசா
சருவவேதங்கட்கும்மூலபொருளாய்நின்ற சாம்பிராஜ்ய உல்லாசா
துர்விர்த்திஅந்தகா சுரனைமார்பைப்பிளக்கும் சூலதரம ஹேசா
கர்வமிகுமுப்புரத்தெவ்வர்தமைஅடக்கிஎவ்வுலகும்ரக்ஷிக்கும்திவ்யஹாசா
ஜகதீசா பாபநாசா பாண்டியராஜா பாணடியராஜகுமாரிதன்நேசா உன்றன்

௨ இகலும்மன்மதனுடல இலவம்பஞ்சுபோல்கண்ணால் எரித்திடும்அகங்காரா
மிகவும்பெருகும்நதி மதிகொன்றைவிளங்கிய வேணிவளர்கெம் பீரா
சகலபுவனத்திற்கும் தாரகப்பிரமமாய்த் தழைத்திலகிய தீரா [ல்நேரா
புகலும்எனதுதாப மகலும்படிக்குசெய்த புனிதாஉனக்கொருவர்சகமதி
சர்ப்பஹாரா அலங்காரா அருளதீரா அருள்தீராதளிக்கும்உதாரா உன்றன்

௩ அரியினுடையநயனாரவிந்தமதனால அர்ச்சிக்கப்படும் யோகா
சராசரப்பிரபஞ்சத்துக்கஷ்டமூர்த்தியாய்நின்று தாங்கிவரும்வை போகா
நரநாராயணருக்கு வரத்தைக்கொடுத்தவரை ரக்ஷித்தருளும் ஏகா
பிரகாசமுற்றமுழுமதிநிலவெனப்பூதி பிறங்கிவிளங்கிஎழில்பரவியதேகா
விடைவாகா பேரனேகா நாரிபாகா நாரிபாகாஆண்டெப்போதும்நீகா உன்ற

௪ வையைநதிக்கரையில்இந்த்ரவிமானத்தில் வசிக்கும்வேத வேதா
ஐயாகவனம்பண்ணும் அடியார்தமக்கிரங்கி ஐச்வரியம்தரும் நீதா
மெய்யாமகசாலையில்தீக்ஷாபத்தினிகட்குவிபவம்கொடுக்கும்போதா [பாதா
துய்யசரணங்களைஉயயப்பணிந்தவர்க்கு பொய்யிலினியமோக்ஷத்தையருள்
கூடல்நாதா வெகுவிநோதா லோகமாதா லோகமாதாமீனாக்ஷிசமேதா உன்ற

குண்டோதரன்துதிகேட்டகத்தில்இன்பம்
கொண்டுபலகணங்களுக்குந்தலைமைநல்கிக்
கண்டைவிழியுடன்சிங்காசனத்தில்பூமி
காத்திருந்தான்இவ்விரண்டாடலும்ஆராய்ந்து
விண்டுரைப்போர்கேட்பவர்கள்பசிதாகத்தால்
மெலியாமல்சகலபாக்கியமும்பெற்றிம்
மண்டலத்தில்வாழ்ந்துபின்னர்கதியைப்பெற்று
மன்னுவார்சிவனுலகில்துன்னுவாரே.

ஆக விருத்தம் ௬ கீர்த்தனை ௩ தரு ௧ ஆக ௰.

எட்டாவது அன்னக்குழியும்வையையும் அழைத்தபடலம் முற்றும்.

சிவமயம்.

ஒன்பதாவது,

## எழுகடலழைத்தப்படலம்.

அவதாரிகை—விருத்தம்.

செழியனுய்ப் புவியை ஆளும் செகதீசனை குறட்கா அன்னக
குழியும்வை யையும்அழைத்துக் கொடுத்தவா றுரைத்தே னிப்பால்
விழைவுறும் செம்பொன மாலை வேலைபுக் காட வேண்டி
எழுகட லையும்அழைத்த தினியது விளம்பு வேனே.

காஞ்சனமாலைக்கு கௌதமமுனிசமுத்திரஸ்நாநமகிமைகூறல்.

வேதம்அறி யாதசுயஞ் சோதி தானே
மீனவன்என் றுறுநாளில் ஒருநாட் போந்த
மாதவரில்கௌதமமா முனிவன் தன்பால்
வந்திடக்காஞ் சனமாலை மகிழ்ந்து தாழ்ந்து
மேதகும்ஆ சனத்திருத்திச் சனனம் போக்கும்
மெய்த்தவம்ஒன் றருள்கவென விளம்ப அன்போ
டோதரிய அம்முனிவர் முகம லர்ந்தே
உரைக்கின்றார் விபரமதா வரைக்கின் றாரே.

அசாவேரி சாப்பு.

பல்லவி.

செய்யபொன்மாலையே கேளாய் உனக்குத் தெரியாதில் லையானாலும் கேளாய்

அனுபல்லவி.

செய்யதடாதகைக் கன்னை ஆவாயே தேவேசனைமருகன் ஆகப்பெற்றாயே [யே
துய்யமலையத்து வசன்துணை நீயே சொல்லும்விரதம்மூன்று விதமாம்கேட்பா

சரணங்கள்.

௧ மானதம் தானம் தருமம் நினைத்தல் வாய்மைஇரக்கம் பொறிஐந் தவித்தல்
மோனமுறுக்கட வுளைத்தியானித்தல முதலனந்தம் விதமா யுணர்த்தல
செய்ய

௨ வாசிகம் பஞ்சாக்ஷரஜபமிட்டல் மாதருமங்க ளெடுத்தோதிக் காட்டல்
பேசும் சதருத்ர ஸ்தோத்ரம்பாராட்டல் பின்னுமிதுபோ லனந்தமாகாட்டல்
செய்ய

௩ காயிகம்ஈசன் அருச்சனை ஆற்றல் கங்கைமு தலாடல் பூவலம்வாய்த்தல்
ஆயவே கோயிற் பணிநிறை வேற்றல் அல்லாமலின்னம் அனந்தமாநோற்றல்
செய்ய [உத்துங்கம்

௪ செப்பிய மூன்றுக்குள் ளேகாயி கங்கள் சிரேஷ்டம் அதில்தீர்த்த யாத்ரை
அப்பெரும் தீர்த்தம் தனித்தனிச் சங்கம் ஆனதி னுங்கடல் ஆடலே அங்கம்
செய்ய

## ஈசன்காஞ்சனமாலைக்காகஏழுகடலையும்வரவழைத்தல்.

### விருத்தம்.

மாவிரத நெறிமுனிவர் சொலக்கேட் டிப்பொன்
மாலைகடல் ஆடலைத்தன் மகட்கோ தக்கேட்
டாவலுடன் சுந்தரநா யகன்பக் கம்சென்
றனக்குழிஆ றுடன்குறட்கா அழைத்தோய் என்தாய்
தாவுகட லாடவிரும் பினள்என் றோதச்
சலதிஒன்றோ ஏழையும்கீழ்த் திசையி ருந்தோர்
வாவியில்நின றழைப்போம்என் றெண்ணு முன்னே
வாரிதிஏ ழும்சேர்ந்து வரக்கண் டாரே.

நாதநாமக்கிரியை, ஆதி.

### பல்லவி.

வருகுதே ஜலதி வண்ணமேழாகப் பெருகுதே ஜலதி

### அநுபல்லவி.

வருகிறவிசைஒலி பரவிடமதுரைத் திருநகர்தனிலுள அனைவரும்காண வரு

### சரணங்கள்.

க துண்ட மதிபோல்வளை வுண்டசங் கினங்கள்வாய்
விண்டிடப் பலநுரை மண்டியே ததும்ப
தண்டரளமணியைக் கொண்டெறியும்அலைகள
அண்ட நெடுமுகடு கண்டுள வெழும்ப வருகு

உ மாணும் நகர்குளிர்சசி பூண யுகமுடிவில்
பேணும்வே தன்அமைப்புக் கோணுமா றெனவே
தோணும் பொறிஅரவம் பூணுநா யகன்திரு
ஆணையால் அவனடி காணவந் ததுபோல் வருகு

ங தேவர்கோ னுக்கும்வசு தேவன் தனக்கும்பிர்ம
தேவனுக் குமேஆதி தேவன தருளால்
ஆவலு டன்பெரும்சு ராவினங் களும்துள்ளித்
தாவியே குதித்திட வாவியில இருநது வருகு

### விருத்தம்.

எண்ணரிய கடலேழும் வண்ண மேழாய்
எழுந்துபொற்றா மரையோடே கலந்து பொங்கி
விண்ணவரும் முனிவர்களும் ஜயவென் றேத்த
வெள்ளிஅம்ப லம்தனிலே மாறி ஆடும்
அண்ணலைப்போ லெண்வண்ணம் பொருந்தி டக்கண்
டனைவர்களும் ஆச்சரியம் கொண்டா ரிதை
நண்ணிஉரைப பவர்கேட்போர் போக மோக்ஷம்
நாடுவார் சிவனுலகைக் கூடு வாரே.

ஒன்பதாவது ஏழுகடலழைத்தபடலம் முற்றிற்று.

உ
பத்தாவது,
## மலயத்துவசனையழைந்தபடலம்.
அவதாரிகை — விருத்தம்.

அங்கடலேழுமீசன்அழைத்தவா றுரைத்தேனிப்பால
திங்கள்வங்கிசத்துதித்ததென்னர்கோன்றுறக்கம்விட்டு
மங்கைகாஞ்சனையோடேற்றவாரிதிஆடிக்கூடல்
சங்கரன்உருவைப்பெற்ற சரித்திரம்இனிச்சொல்வேனே.

## காஞ்சனமாலை கணவனும்மைந்தனுமில்லாமையால் வருந்தல்
விருத்தம்

சுந்தரபாண் டியன்தடா தகைப்பி ராட்டித
துணைவியுடன் வரும்பெருநீர்க் கடல் மருங்கோர்
சந்தனம்பா டலம்வகுளம் முதல தருக்கள்
தழைத்திடுநந் தனத்திடைப்பற் பலவா யுள்ள
கந்தமலர் கொய்திளைஞர் சேடி மாதர்
காட்ட இரண் டறவொன்றாய் மருவி யங்கு
விந்தையுடன் முகர்ந்துபொற்சிங் காத னத்தின்
மீதில்இருந் திலங்கினர்அப் போது தானே.

திபதை—மோகனம், சாப்பு.

க சாமிதடாதகைதன்முகநோக்கியுன தாபொருட்டாலேயகும்பேராய் இந்த
மாமதுராபுரம் தன்னில்எழுகடல் வந்துதிக்கின்றதைப் பாராய்
உ ஆகையினாலுன்றன் அன்னையைவாரிதி ஆடும்படிக்கழை என்றார் அதைப
பாகுமொழியா ளுவந்துதனதன்னை பக்கத்தில்வந்துபு கன்றாள்
௩ வாரிதிவந்த வகையைத்தனது மகள்வந்துரைத்திடக் கண்டாள் மனம்
பூரித்துத்தேவாமுதத்தைப்புசித்தது போலேபொன்மாலையுட் கொண்டாள்
௪ கொண்டபின்தாயைத்த டாதகைவாரி குதிக்குங்குளக்கரை மீது வந்
தண்டையில்சூழும் மறையோருடனகடல் ஆடவிடுத்தாளப் போது
௫ வேதியர்தங்களைக் காஞ்சனைநோக்கி விரதகேறினைக் கேட்க ஈது
கோதப்பெருங்கடல் ஆடும்விதிதெளிந் தோதவேணும்எனக்கேட்க
௬ கற்பில்மிகுந்தபொன் மாலையேநாயகன் கையைப்பிடித்தாட வேணும் பின
பபடிக்கில்லாமல்போனால்சுதன்கைதொட் டாடவும்செய்யலாம் காணும்
தோன்றலுமில்லாதவராவின்கன்றின்வால்தொட்டாடவேண்டுதலாமே இந்த
மூன்றில்ஒன்றங்கை பிடித்துநீராடுதல் முக்கியம்என்றோதிடத் தாமே
கற்றோர்விதிமுறை ஆய்ந்துமொழிந்திடக் கண்டபின்காஞ்சனமாலை கொண்ட
பர்த்தாவுமைந்தனுமில்லாப்பெருங்கொடும் பாவினெனக்கினிமேலே [பெற்ற
௮ தேனுவின்கன்றின்வாலல்லாமல்வேறு செயலேதெனக்கண்ணீர் துளிக்கப்
மீனவிழியாளுடன்சொல்லித்துக்கித்து மிக்கமனதுதத் தளிக்க [தினமு
௯ புண்டரீகன்மால் பதம்வேண்டினோர்க்கருள் புண்ணியனுக்குயிர்த்துணையாய்

தெண்டைவிழிதன தன்னைமனக்குறை கேட்டெழுந்தன்னத்துக் கிளையாள்
கக வந்துகணவனைத் தாழ்ந்துதன்அம்மை மனக்குறையோதிட ஓர்ந்து தெரிந்
தந்தமொழிக்குள மகிழ்ந்துபெருந்தகை ஆணதகையோடன்பு கூர்ந்து
கஉ வாசவனோடே சரியாயிருக்கும் மலயத்துவசனென்னும் மன்னன் தனைக்
காசினிதன்னில் வருகஉளத்தில கருதினன்சுந்தரத் தென்னன்

மலய துவசன் வானுலகத்திலிருந்துவருதல்

விருத்தம்

அண்ணலெனும் சுந்தரபாண டியனிவ் வண்ணம்
அனபுநிறைந தவர்அகத்தில நினைக்கு முனனே
விண்ணகத்தில இந்திரனோ டொருங் கிருந்து
விளங்குசிங்கா தனம்நீங்கி விமான மேறி
மண்ணகத்தில் எழுகடலவந துதிக்கும் வாவி
மருஙகிலவரும் போதுகணம்ப றடைநது பெறற
பெணணரசி யாம்பெறும்பே றெனறதேர்ந தனபு
பேணினை பாணடியர்கோன் தோணி னுடனே

சாவேரி சாபபு

பலலவி.

மலயத்துவசன்வரக் கணடாள சொர்ண மாலைமனக்குறை விணடாள

அநுபலலவி.

மலையைசிறகரிநத வாசவனஉலகத்தில
நிலைபெறறெழுநதுவநது நீடும்விமான ததில மலயத

சரணஙகள

க சாமிதனதுசெங்கோல பூணக் கண்டு தானதொழுவதறகுத் தோண
மாமனெனுமுறையோர்ந தஙகைஅமைததுக்காண
மருகனுடனமகளும் எதிர்ந்தாதரவு பேண மலயத்

உ அதிர்ந்தைநதுபேரியு முழஙகச் சேனை ஆரவாரததுடன் விளங்க
எதிர்ந்திடும்மகளதன்னைத் தழுவித்தழுவித்துங்க
இமவானைபபோலெக்காலும் குறைநயாமகிழ்ச்சிபொஙக மலயத்

ந தான்செய்ததவக்குறை நீஙகப் பெற்றதனகுலக்கொடிவளர்ந்தோங்க
காஞ்சனைமனக்குறை கதிர் முனடனிபோலவாஙக
வாஞ்சையுடனபணிந்து வளருமானந்தம்தேஙக மலயத்

விருத்தம்

வநதமல யத்துவசபாண் டியனைப் பார்த்து
மனைவியுடன் எழுகடலா டுகவீ ரென்று
சுந்தரபாண் டியனசொலக்காஞ் சனைசெங கையில்
சோதிவிளங் கியபவித்தி ரம்பூண்டன்போ
டந்தணர்கள் சூழ்ந்திடசசங் கற்பம் சொல்லி
ஆதிசிவ நாமஎழுத் தைநதும் ஓதி

சிந்தைதனில் உவகைபொங்கப் புகழ்எக் காலும்
தேடினார் எழுகடல்சீ ராடி னாரே.

மலயத்துவசன் சிவசாரூபம்பெற்று சிவலோகஞ்செல்லுதல்.

விருத்தம்.

அம்புதிஇவ் வகையாடிக் கரையே றும்போ
தரனுருவத் தொடுநீலக் கழுத்தும் ஓர்நால
அம்புயமும் நுதற்கணும்முன் னாகக் கண்டோர்
அதிசயிக்கச் சிவபுரத்தில இருந்தப் போதே
அம்பரமீ தினிலிருந்து வழுக்கி வீழ்ந்த
ஆதவன்போல் விமானமொன்று வரக்கண டாங்கே
தெம்பதியோ டேமலயத் துவச பாண்டியன்
தேறினன் மகிழ்ந்ததனமேல் ஏறி னானே.

மத்தியமாவதி ஆதி.

பாண்டியன்ஏறினனே மலயத்துவச பாண்டியனேறினனே

அநுபல்லவி

ஆணடவன்அருளாலே அமைந்தவிமான மீதே
பூண்டகற்புவிளங்கும் பொன்மாலையோடபபோதே (பாண்)

சரணங்கள்

க தேனின்மழைதுளிக்கத் தேவர்மலர்பொ ழிகக
வானிலெழுந்துந்துபி மஞ்சினம்போலொ லிக்கப் (பாண்)
உ விண்ணோர் துந்துபிமண்ணில் விழுந்ததுவோஎன்றெண்ணிப்
பண்ணுவதுபோலோசை பரந்துவானத்தில் நண்ணப் (பாண்)
ந துங்கமுனிவரேத்தச் சுரர்களதுத்தியம் சொல்ல
திங்கள்வேணியில்சூடும் சிவனுலகத்தில் செல்லப் (பாண்)

கழிநெடில் விருத்தம்.

பாண்டியன் விமானத் திருந்துதன் னுருவம் பண்டுபெற் றரசுபூண் டவர்பின்
பரிந்துதன் வடிவம் தருமரு மகனும் பக்கமே வியதடா தகையும்
ஆண்டவன் கோயிற் புருந்திரு இடப்பாய்த் ததிசயித் துலகெலாம் பயந்த
அன்னையே மகளா யப்பனே மருகன் ஆகவென் றேற்றதோ வென்று
பூண்டகற் பகலான் போலவே ஐயன் பொன்னடி விடாதுளத் துணிந்து
பொன்முடி விமானம் தலைஅடிக் கடிகண் பொருந்திட அஞ்சலித் தெழுந்து
நீண்டமே லேழு லோகமும் கடந்து நெடியவன் உலகமும் கடந்து
நீகந் தானார் உமையுடன் விளங்கும் நெடும்சிவ லோகம்நண் ணினரே.

கடாதகைப்பிராட்டியார் ராயகனைத்துதித்தல்.

விருத்தம்.

சிவனுலகம் தனில்மலயத் துவச பாண்டியன்
சிறந்திடத்த டாதகைநா யகன்பாற் சென்று

தவமுணர்ந்து தனையீன்றோர்க் காதி வேதத்
தனிப்பொருளின் வடிவளித்த மகிமை யையபபார்த்
துவகைவாய்க் கடக்காமல் வெளிப்ப டும்வா
றெண்குமுத மலரிலிருந் தொழுகும் தீந்தேன்
செவிஇரண்டி னிலும்நிறைப்ப தெனவே சொல்லித்
திகழத்துவாள் துதித்துநின்று திகழத்து வாளே.

திபதை— சௌராஷ்டிரம், ஆதி.

க தீனதயாபரனே சரணம் சத்திய ஞானரூபாத்மகனே சரணம்
உ லோகசம்ரக்ஷகனே சரணம் மாம் பாகிமுத்திபுரேசா சரணம்
ங மறையின்முடியிலுன்றன்சரணம் சிவப் புறநடிக்கின்றவனே சரணம்
ச சீவன்தோறும்வசிப்போய் சரணம் தொழில்மூவகையும்புரிவோய் சர
ரு அரிதேடியபாதனே சரணம் விதிக்கரியமுடியுள்ளோனே சரணம்
சு திரிபுரம்எரித்தோனே சரணம் இந்திராதிசுரர்களதொழஅருள்வோய்
எ தக்கன்மகம்அழித்தோய்சரணம் என்தனசொற்குக்கருணைசெய்வோய்
அ பரமாத்மசுரூபனே சரணம் லோகம்ஒருமூன்றுக்கும்நாதனே சரணம்
கூ மன்மதனை எரித்தோய் சரணம் அடியாள் தன்வசமானவனே சரணம்
ய அர்த்தமதிஅணிவோய் சரணம் விபூதிருத்திராக்ஷம்தரிப்போய்சரண
கக பன்னகபூஷணனே சரணம் அரிதனலுஅர்சிக்கின்றவா சரணம்
கஉ சர்மாம்பரதரனே சரணம் பாதிஅம்மேனிகறுத்தவா சரணம்

விருத்தம்

அன்னை இவ்வா றெத்திஎழுதாய் வேண்டல் ஒன்றுக்
காழிஏழும் கணவனையும் அழைத்தா டச்செய
துன்னுருவும் மேல்நாடும் அளித்தாய் தென்னர்
ஒணகுலமி றந்ததுபார்த் துலகாளும் போல்
இன்னிலைமைக் கினிஇடையூ றேதெ னத்தாழ்ந
தியம்பஅஃ தறிந்தையன் மகிழ்ந்தா னித்தைச்
சொன்னவர்கேட பவர்களிக பரமும் பெற்றுத்
துலங்குவார் எக்காலும் விளங்கு வாரே.

ஆக விருத்தம் எ சுறிநெடில் க கீர்த்தனை உ தரு உ ஆக கஉ.

பத்தாவது மலயத்துவசனை அழைத்தபடலம் முற்றிற்று.

உ

சிவமயம்

பதினோராவது

## உக்கிரபாண்டியதேவர்திருஅவதாரப்படலம்.

அவதாரிகை— விருத்தம்.

கருங்கண்டன் அருளால் தென்னன் காஞ்சன மாலை யோடும்
பெருங்கட லாடிப் பெற்ற பேறுமுன் னுறைத்தே னிப்பால்
திரும்பஅம் மன்னன் பெற்ற திருமக ளிடத்தில் கந்தன்
அரும்புதல் வனுமா வந்த அருமையை விளம்பு வேனே.

## உக்கிரகுமாரர் அவதாரம்செய்யசுந்தரேசர் திருவுளம்கொள்ளல்.

விருத்தம்.

நன்னிலத்தைச் சுந்தரபாண் டியன் அனேகம்
நாள்மனு நூல் கொண்டுசெங்கோல் ஏந்தி யேதன்
பொன்னடிநீ ழலைப்போலே யாவ ருக்கும்
புதுமதிவெண் குடைநிழலைச் செய்தி யங்கும்
மன்னுயிரும் தானாகிக் கருணை கூர்ந்து
வளம்பெறவே இறைமாட்சி புரியும் நாளில்
பின்னுமொரு விளையாடல செய்ய எண்ணம்
பெற்றிட்டான் அவ்வகைந டத்திட் டானே

திபதை—சௌராஷ்டிரம். ஆதி.

க பன்னகபூஷணனே சுந்தர பாண்டியனாகஎந் நாளும் உயர்
தென்னவர்குலம் வளரச்செய்திடும்திருவிளையாடல் கேளும்

உ மாலயன்மக வான்மறைமுதல வருந்தியும்காண அரிய தன்னைக்
கோலும்அன்பருக் கெளிதிலேகாணக் கூடும்என்பது தெரிய

௩ பாண்டியனுக்கும்காஞ்சனைக்கும்தன பத்தினியைப்பெண் ஆகத் தந்து
மீண்டும்தானுமே மருமகனாகிமேதினிக்கர சாக

ச விதிமுறைப்படி நடத்திடும்முடி வேந்தருக்குள்மேன மேலும் துய்ய
மதிகுலம்பெரி தாகஉலகில மகிமைபெற்றது போலும்

ரு இனியும்பின்வரும் குறையைநீக்கிட எண்ணியேஅருள கொண்டு மாயை
தனைவென்றவனசெய் யும்விசித்திரம் தனைமொழிவதார் கண்டு

சா இந்திரஜாலம் காட்டுவானென வேதனக்குநே ராக வளர்
பைந்தமிழ்உரைக் கும்சரவண பவனையேபிள்ளை யாக

எ இவ்வுலகத்தைப் பயந்துளம்மகிழந் திடும்தடாதகை மாது அவள்
தன்வயிற்றில்வந் தவதரித்திடத் தான்நினைந்தான் அப் போது

## தடாதகைப்பிராட்டியார் ஷண்முகதேவனைக்கருப்பம்தரித்தல்.

திருஉளத்தில சுந்தரபாண் டியனை இவ் வாறு
சிந்திக்கச் சண்முகனஅவ் வண்ண மாகக்
கருவில்வரு முன்தடா தகையைச் சூழ்ந்து
காத்திருக்கும் சேடியர்உன் அழகுக் கேற்ப
வருகருப்பக் குறிஅழகும் திங்கள் தோறும்
மங்கலமும் காணஎங்கட் காசை என்று
அருமையுடன் பணிந்துரைக்க மகிழ்ந் ததைக்கேட்
டனபுற்றாள் கருப்பவடிவம்பெற் றாளே

கல்யாணிராகம் ஆதிதாளம்.

பல்லவி.

ஆனாள் தடாதகைதிவ்யம் ஆனாள் அற்புதம் ஆனாள்

அநுபல்லவி.

மேனுள்அசுரகுல காலன்என்றமைந்ததேவ
சேனுபதி யானஷண்முக தேவனை மாவலனைக் கெர்ப்பம் ஆறு

சரணங்கள்.

க கருமணித்தூபிவிளங்கும் செம்பொன்மலை என்னவே
திருஅமுதம் பெய்திலங்கும் செப்பினைப்போல்மின்னவே
வருமுலைசு மந்திடையும் வருதுவெளி துன்னவே
சிரம்நாலவனைச் சிறைசெய்துகல்வி தேறும்வாறு கூறுவோனைக் கெர்ப்பம் ஆறு

உ பூவில்இனி யதும்திங்கள் தோறும்உண்ணத் தேடவே
தேவர்அமூ தும்பன்னகர் திருஅமுதும் கூடவே
மேவியக ணங்கள்கொணர்ந் தீந்ததிர்கொண் டாடவே
நாவுக்கினிய சுவைமேல்மனம் நாடவேடா தேடுவோனைக் கெர்ப்பம்ஆறு

ந வேதபண்டி தமுனிவர் வந்தினிமை கூறவே
ஓதுமன்ன ரும்நகருள் ளோரும்களிப் பேறவே
மாதருமத் தாலேகன்னி நாடெவைக்கும் மீறவே
சோதிபெருகிய வடிவேலனைத் தோகைவாகன் ஆகுவோனைக் கெர்ப்பம் ஆறு

ஷண்முகதேவர் உக்கிரகுமாரனுக அவதரித்தல்.

விருத்தம்.

கூறும்ஆ லத்தைஅமு தாஅ ருந்தும்
குன்றவில்லி அருளால்இவ் வாறு பூமேல்
தேறுதவம் புரிமலயத் துவச பாண்டியன்
செல்வி தடாதகைதிருஉ தரத்தில் நின்றும்
பேறுபெறுங் கால்பெற்ற சேய்போல் கண்ணீர்
பிலிற்றஇளம் செங்கதிர்போல் காந்தி வீச
ஆறுமுக ஸ்வாமிஒரு முகரு பம்கொண்
டெடுத்திட்டான் அவதாரம் எடுத்திட் டானே.

தோடி, சாப்பு.

பல்லவி.

ஷண்முக னேஉக்கிர வர்மனுகஅவ தரித்துவந் ததைப்பாரும்

அநுபல்லவி.

கண்மூன்று டையகரு ணநிதி அருளாலே
தண்மதிக் குலமன்னன் பெண்வயிற் றிலேஆதி ஷண்

சரணங்கள்.

க மாசற்றயோகியர்உள்ளத்தைப்போல்நெடு வானம்பிரகாசத்தைஅடுக்கஜக
நேசனுக்குற்றதி ருவாதிரைநாளில் இந்துவாரம்சுபம் தொடுக்கப்
பூசுரர்மெய்க்கும் சுபதினத்தில்புகழ் பூணும்சாம்பிராச்சியத்தைக்கொடுக்க
தேசுலவும்லக்னகேந்திரத்திலேதேவ தேசிகன்தனதொளிவிடுக்க ஆதிஷண்

உ மாமறைகாலும் முழங்கஅமரர்பூ மாரிசொரிந்துகொண் டாட கறும்
தேமலர்க்கொம்புபோல் எட்டுத்திசையிலும் தெய்வப்பெண்கள்நடம் ஆடப்
பூமகளும்கா மகளும்மனமிகப் பூரித்துச்சோபனம் பாட அரி
தாமெழும்துந்துபி ஐந்தும்ஒலிப்ப தவனிஉள்ளோர்காதில் கூட ஆதிஷண்

௩ அந்தணர்சிந்தை மகிழ்ச்சிபெருகச்சி வாகமநூல்மொழிந்தொலிக்க திவ்ய
மந்திரயாகம் புரிந்தெழும்செந்தீ வலங்கொண்டெழுந்து ஜொலிக்கத்
தந்திகள்எட்டுடன் சேடனும்தம்பொறை தன்னை இழந்துகெக் கலிக்க வாழும்
இந்திரன்மேரு சமுத்திரராசன் இணர்கடகிடதுதோள் சலிக்க ஆதிஷண்

விருத்தம்

மைந்தன்இவ்வா றுதித்திடப்பார்த் தெம்பி ராட்டி
மலர்க்கரம்கொண் டணைத்துமுகந் தவள்தன் காந்தன்
செந்தளிர்க்கைக் கொடுத்துவந்து வாங்கிப் பாலால்
திமிர்ந்தொழுகும் கொங்கையைச்செவ் வாயில் வைத்துக்
கந்தமிகும் குமுதமிசை வெண்ணி லாத்தன்
கதிர்பரப்பு வதெனஅளித் திருந்தாள் இப்பால்
அந்தரத்தோ ரும்புவிமன் னவரும் மேற்கொண்
டாடினர் மதுரைவந்து கூடி னரே.

மத்தியமாவதி ஆதி
பல்லவி.

வந்தார்வந்தார் ஆலவாயில் வந்தார்வந்தார்

அநுபல்லவி.

வந்தார்மலயத்துவசன் மகள்வயிற்றிலேநாடிக்
கந்தன்அவதரித்த காக்ஷிதனைக்கொண் டாடி வந்தார்

சரணங்கள்.

க ஓதும்மால்அயன்இந்த்ரன் உம்பர்முனிவர் தங்கள்
மாதரசிகளுடன் வானகத்தில் விளங்க வந்தார்
உ சோழன்சோழன் முதல் சொல்லும்மன்னவர் திரண்டு
சூழும்இராசகம் பரசு ... கொண்டு வந்தார்
௩ திரைகடல்ஒருநாலு திசையும்பரந்து பொங்கி
வருவதுபோலவே மாநகரை நெருங்கி வந்தார்

விருத்தம்.

தேவர்முனி வோர்கள்மன் னவர்கள் எல்லாம்
திருமதுரா புரந்தனில்இவ் வாறு வந்தே
ஆவலுடன் சுந்தரபாண் டியனைச் சந்தித்
தனைவர்களும் முறைமையினால் பணிந்து வாழ்த்தி
நாவில்அமு தொழுகிடமங் கலச்சொல் ஆற்றி
நற்கருணை பூண்டதடா தகைப்பி ராட்டி
சேவடியில் தொழுதுதம திருக்கை நோக்கிச்
செல்லும்போ தவரவர்கள் சொல்லு வாரே.

திபதை— புன்னாகவராளி, ஆதி.

க வழுதியர்கோ னிடத்திற்குகன் வந்துதித்தான் என்பார்
பழுதறும்காஞ் சனைசெய்த பாக்யமிதே என்பார்
உ அனங்கனும்கண டாசைப்படும் அழகில்மிக்கோன் என்பார்
கனங்கொணடேழு வையகமும் காக்கவல்லோன் என்பார்
ங மானிடர்கள் செய்தபெரு மாதவமோ என்பார்
வானவர்கள் வருந்திச்செய்த வான்தவமோ என்பார்
ச வேள்விமறை யோர்கள்செய்த மெய்த்தவமோ என்பார்
கேள்விமுனி வோர்கள்தவம் கிடைத்ததோ என்பார்
ரு தருமம்செய்த மாதவத்தின் நல்பயனோ என்பார்
பொருள்புரிந்த தவத்தில்வரும் புண்ணியமோ என்பார்
சு கூடும்இன்பம் செய்ததவம் கொள்பயனோ என்பார்
வீடுநெறி புரிந்ததவ மெய்ப்பயனோ என்பார்

மதுரைநகரத்தார் நெய்விளையாட்டுவிளையாடுதல்.

விருத்தம்.

புங்கமுடன் அவரவர்கள் இந்த வண்ணம்
புகலுறுதங்கள் தங்கள் இருப் பிடத்தில் சென்று
மங்கலவாத் தியமுழங்க நகரம் எங்கும்
மகிழ்ச்சிகொளச் சுந்தரபாண் டியனஅப் போது
மங்கைதடா தகையுடனே மறையோர்க் கீந்த
மாதான நீர்பெருகிக் கடலோ டொளுறத்
துங்கமுடி வேந்தர்முத லாச்சி றப்புச்
சூடினர் நெய்விளையாட் டாடி னரே.

நாதநாமகிரியை, ஆதி.

பல்லவி.

நெய்விளையாட்டுவிளையாடினரே மதுராபுரவீதியில் நெய்விளையாட்டு விளையா

அநுபல்லவி.

நெய்விளையாட்டு விளையாடினரே சைவசமயமகி மையைக்கூடினரே
தெய்வலோகமும்புகழால்மூடினரே சைவடிவேற்குமரனைப்பாடினரே

சரணங்கள்.

க முன்னவன் திருமனையும் பொன்னடி யவர்மனையும்
மன்னவர் அரண்மனையும் பின்னுளவர் கள்மனையும்
மின்னவே பளிங்கு போலே இழைத்துவாசல்
திண்ணைமுதல் ஒருக் காலேகொண்டாடிக்கொண்டு
நன்னயம்செய் துமென்மேலே இலங்கும்பஞ்ச
வன்னவிசித் திரத் தாலே சிங்காரம்செய்து
கன்னல்கமுகுவாழை கட்டும்கொடிவிளங்க நாட்டித் தூகில்மாந்தழை
அன்னிடவேமகர தோரணங்களில்தொங்க மாட்டி இரத்தினன்

மன்னியகஜதுர காதிகளுக்குமணி பூட்டிக் கண்டவர்களீ
தென்னஅதிசயமென் றவரவர்உரைத்துப் பாராட்டிக் கொள்ளமன்னவர்
பன்னிழைஆயிரம்பொன் பட்டிடையில்வைச்சு வரித்து துராய்களுடன்
சென்னியிலேசரிகைப் பாகைமெய்க்கங்கியும் தரித்துக் கைமோதிரங்கள்
சொர்ணமுத்தாரங்கள் கடுக்கன்முதற்கொண்டலங் கரித்து இதுவல்லாமல்
இன்னமும்பலஅலங் காரங்கள்சொல்லொணாது விரித்து இந்தவிதம்கொண்
டிந்நிலம்புகழமது ராபுரி கொழிக்கப்
பொன்னுலகிதுக்கிணை அலவென்று பழிக்கப
பன்னகபூஷணன் தன்னருள் பொழிக்கத்
தென்னவர்கோன்திரு மகள்மகன் செழிக்க நெய்

௨ கங்கைமதி யைத்தரித்த சங்கரனி டத்திலுற்ற
நங்கைதடா தகைபெற்ற புங்கவம்கொண் டுமிகுத்த
மங்கையர சிக ளிணங்கப் பட்டாடையைம
ருங்கில்உடுத் திக்கொண்டிலங்க அஞ்சனம்கொண்டு
கண்களுக்கெ ழுதி முயங்கத் திலகமுடன
பங்கயவ தனம் விளங்க அவதரித்த
பைங்குழந்தையைக்காண வேணுமென்றுவல் படர்ந்து விலைமிகுத்த
குங்குமம்கஸ்தூரி சவ்வாதுபனுகுடன் அடர்நது புதைத்தெழுந்த
கொங்கைகுலுங்கமநத ஹாசம்செய்தவர்கள தொடர்ந்து கனிவர்க்கங்கள்
செங்கைதனில்எடுத்துக் கொண்டதிவேகமாய் நடந்து இருகாதிலும்
தங்கமணிஇழைத்த தோடுகுண்டலம்ஒளி வீசக் கண்டத்திலேஇ
லங்கியசந்திரஹார வஜ்ரப்பதக்கமுதல் வாசக் கொழுந்துமருத்
தங்கியஜாதிமுல்லை மல்லிகையும்அணிந்துல லாசத் துடன்இருபா
தங்களில்தண்டைசிலம் பணிந்தெங்கும்கல்லென்று பேச அவரவர்கள்
வங்கணமாகவே கும்பலாச் சேர்ந்து
அகமுடனேதிரு அரண்மனை சார்ந்து
திங்கட்குலதிலகன்புகழைஆ ராய்நது
மங்களவார்த்தையை மொழிந்துளம் தேர்ந்து நெய்

௩ செந்திருஒத் தமங்கையர் மந்தாரம்ஒத் தகொங்கையர்
செந்தளிர்ஒத் தசெங்கையர் கந்திருவா தமங்கையர்
வந்ததுக்கி ணையதாக வந்தவர்தங்கள்
சிநதையில் மகிழ்ச்சியாக ஆடவர்க்காசை
தந்துபர வசமாக இணங்கிமிகச்
சிந்துகள்பா டிஅனேக வாத்தியம்ஒலிக்கக்
கந்தமிகுந்ததயி லமும்பனிநீரும்விலை யேறும் சாந்துகளுடன்
சந்தனம்புனுகுகஸ் தூரிமுதல்களபச் சேறும் இன்னமும்பொரி
யும்துவெள்ளரிசியும்பொடிவர்க்கமும்கலந்து கூறும் தலங்களுக்குள்
முந்திமுனைத்தமது ராபுரவீதிகள் தோறும் சித்தசாரணர்
அந்தரர்கின்னரர் வந்ததுபோலஅக லாதே உச்சாகம்கொண்டு
தந்திஅனையவரோ டொருவர்க்கொருவர்தங்கள் மீதே பொன்துருத்தியல்

தந்திரம்செய்துவட்ட ரந்த்ரக்குழல்கொண்டுதப் பாதே விளையாடும்போ
தைத்துகளையவனும் மாறிமாறி ஆடஅப் போதே இப்படிப்பல
விந்தையுடனே விளை யாடியே நல்ல
பைந்தொடிமார்களும் புருடரும் வெல்லச்
சுந்தரபாண்டிய ராசற்குச சொலவ
மைந்தன்பிறந்தமகி மையைஎங்கும் சொலல மெய்

## உக்கிரகுமாரனுக்கு சாதகாணாதி செய்ததுகூறுதல்.

நெய்விளையாட டிநதவிதம் செய்தா ரிப்பால
நிறைநத இந்து வாரம்ஆ திரைநல நாளில
தெய்வகுரு லக்கினகேந் திரத்தில் மேவத்
தேவபாண் டியன்தனது சேய னுக்கு
மெய்வளரும் சாதகர ணாதி செயது
மேருமக வான்சலதிக கசசய் தோறறற்
கெய்வதுகொண டுக்கிரவர் மனெனப் பேரிட்
டேத்தினர் அப்படிக்கே வாழத்தி னரே.

இயனத— ரீதிகௌளை, சாப்பு.

க நிர்மலமான மதிகுலத்திலவநது வாழும் உக்ர
வர்மசெழியன் மகிமைஇனிச்சொலலக் கேளும்
உ கேளுடன்தாயும் தகப்பனும்பார்த்தன்பு சிறநதார் தேகம்
நாளொருவண்ணம் பொழுதொருமேனியாவளர்நதான
ங தங்கமணித்தொட்டில அங்கமுடன்மகிழந் தேற்றினர் நாலாம்
திங்களில்சந்தி மிதிக்கும்திருவிழா ஆறறினர்
ச வேதனும்மாலும் முனிவரும்வநதுசீ ராட்டினர் ஆறும்
மாதத்திலேசுப மங்கலம்செய்தன்னம் ஊட்டினர்
ரு வேண்டும்பணிகள் தினம்தோறும்வெவ்வேறு பூட்டினர் ஓர்
ஆண்டின்திருவிழாச் செய்தனைவோரும்பா ராட்டினர்
சு மூன்றுவயதில் குடுமிக்கல்யாணம் நடத்தினா ஐந்து
தோன்றுவயதில்நூ லாறுமுதற்கொண் டுணர்த்தினர்
எ தாரணமாகிய பூணூல்கலியாணம் முடித்தார் உடன
ஆரணம்சாகை பதம்கனம்யாவையும் படித்தார்
அ வெற்றிவில்வித்தையும் சத்திரவித்தையும் தெரித்தார் பரி
மத்தகஜத்தை நடத்தல்முதலிய விரித்தார்
கூ பேசஅரிய கலைகள்முழுதும் பொ ருத்தினன் தேவ
தேசிகனை வியாழபகவான் வ ருத்தினன்

## உக்கிரகுமாரர் திருவிளையாட்டு.

விருத்தம்.

அருமைகொண்டுக்கிர வருமன் இந்த வண்ணம்
அறுபத்து நாலுகலை களையும் நெஞ்சத்

தொருமையுடன் எண்வயதில் அறிந்தி சன்பால்
உரைக்கரிய பாசுபதாஸ் திரமும் பெற்றுத்
திருஉருவும்பேரறிவும் பலமும் மீறத்
தெரிவையர்கண் டகமகிழ்ச்சி கொள்ள வேதன்
குருஅடிதாழ்ந் தரசிளங்கு மார ரோடு
கூடிவிளை யாடல்செய்ய நாடி னானே.

சுருட்டி சம்பை.

பல்லவி.

திருவிளையாடினவிபரம்கேளும் உக்கிரவருமன் திருவிளையாடினவிபரம்கேளும்

அநுபல்லவி.

திருமதுராபுரத்தில்உள்ள ஜெனங்கட்கானந்தம்துளிக்கத் திரு

சரணங்கள்.

க கஜத்தினுடனேகஜத்தை முட்டவிட்டுச்சயம் தொடுத்து
அஜத்தினுடனேஅஜத்தைத் தாக்கத்தட்டிக் கொடுத்து
இசைத்தகுக்குடத்துடனே குக்குடம்பொருத விடுத்து
இசைத்தமணிப்பலகைநான் குறப்பாடல்செய அடுத்துத் திரு

உ காற்றினும்கடியகுதிரை ஏறிப்போய்த்திரும்பி வந்து
கூற்றினும்கொடியயானை நடத்திவையை அடர்ந்து
ஆற்றினும்உய்யானத்தினும் அகத்தினும்இன்பம் புரிந்து
வேற்றிளைஞரோடுமல்லமர் விளைத்துவெற்றிபெறமகிழ்ந்து திரு

ரு சந்தனமரங்கள்நிறை பொதியமலைதனை நாடி
அந்தணருடன்பிரசங்கித் தாசீர்வாதம் கூடி
கந்தமிகும் கனிஅருந்திக் களித்துநறுமலர் சூடி
இந்தவிதம்ஐந்துமூ வாண்டுசெல்லக் கொண்டாடி

திருவிளையாட் டிந்தவிதம் செய்தான் இப்பால்
தேவர்பதி அயன்நெடுமால் சூழ்ந்து போற்றக்
கருமுகச்கு ரனைத்தடிந்து மயிலும் வேலும்
கைவிடா மல்காக்குத வாறே போல
ஒருமுகவே லவனுகப் பருவம் மேற்கொண்
டொண்டொடிமா ரும்விழியும் மருங்கு மொய்ப்ப
வருநமரன் திறமையைத்தேர்ந் துவந்து தாதை
மனம்பெற்று லோசனைசெய் தினம்பெற் றானே.

உக்கிரகுமாரர்சாமுத்திரிகாலக்ஷணத்தைச் சொல்லுதல்.

கழிநெடில் விருத்தம்.

செங்கம லம்போல காலும்நீண் டிருண்ட செங்கையும் வட்டமாத் தோற்றும்
திருமுழந்தாளும்துதிக்கைபோல்துடையும் திரட்சியாயிலங்குசிற்றிடையும்
தங்கிய சிறிய தாகிய வயிறும் தாழ்ந்தநா பியும்அகல் மார்பும்
தனிஇசை வீணைத்தண்டுபோல் கரமும் தங்கவெற் பிரண்டுசேர் தோளும்

சங்கம்ஒத் தெழில்கொள் கண்டமும் செய்ய தாமரை மலர்நிகர் முகமும்
தண்ணளி பொழியும் நீர்க்கலோசனமும் சலந்தரம் போல்மயிர் அழகும்
அங்கமா விளங்கும் செல்வனைத் தாதை அடிக்கடி நோக்கிநன் னூல்பார்த்
தறிந்தவ ரிடத்துக் கேட்கஅப் பயனை ஆய்ந்தவர் எடுத்துரைத் தனரே.

க பூண்டுவரும்புகழ்ச் சுந்தரபாண்டிய பூபதியேவலி சூழும் உக்ர
பாண்டியன்சாமுத்ரிகாலக்ஷணத்தின் பயனைச்சொல்வோமதைக் கேளும்
உ மன்னியநாசி லலாடம்புயம்குக்ஷி மார்புகையடிஇவ் வாறும்
உன்னதமாக இருக்கையால்வானளவுற்ற செல்வம்வளர்ந் தேறும்
ங பார்க்கும்வரிக்கண் கபோலம்கைநாசி பரந்தநெடியோர்பிவ் வைந்தும்
தீர்க்கமதாக இருப்பதனாலே ஜயமாலைதோளில் பொருந்தும்
ச அறியவேசெங்கை நாககுமுதுகிது அல்லாமல்கோசம்இந் நான்கும்
குறுகிஇருப்ப தினாலேசெல்வம் குபேரனிலும்வளர்ந் தோங்கும்
ரு கைத்தலம்கால்கடைக்கண் இதழ்அண்ணம்நகத்துடன்நா இந்த ஏழும்
ரத்தநிறமா யிருப்பதினாலே நலம்செயசுகம்மிகச் சூழும்
சு அம்புவியோர்கள் புகழும்வலிஓசை அலையாமல்உந்திஇம் மூன்றும்
கெம்பீரமாக இருப்பதனால்அதற் கேஉத்தமனாகத் தோன்றும்
எ உத்தமமாகும் சிரசுலலாடம்என் றேஇதும்உறுப்பிவ் விரண்டும்
விஸ்தாரம்ஆனத னாலேமனுக்குள் விசேஷமாகப்புகழ் மண்டும்

விருத்தம்.

நல்லஇலக் கணமுப்பத் திரண்டும் நோக்கி
நறகுணமும் நோக்கிஇந்த ஞாலம் காக்க
வல்லவனென் றிலக்கணம்சோ தித்தோர் உக்கிர
வர்மனுக்கம் முடிசூட்ட லாமெனக்கேட்
டல்லணிகந் தரன்அவ்வா றினர் தம்மோ
டாலோசித் திருந்தனனீ துரைப்போர் கேட்போர்
செல்வமகப் பேறுசௌபாக் கியம்ஆ ரோக்கியம்
சேருவார் சிவனுலகைச் சாரு வாரே.

விருத்தம் கஉ, கீர்த்தனம்ரு, தருசு ஆகஉக.

கக வது உக்கிரகுமாரதேவர் திருஅவதாரப்படலம் முற்றும்.

உ

பனிரண்டாவது

## உக்கிரகுமாரனுக்குவேல்வளைசெண்டுகொடுத்தபடலம்.

அவதாரிகை— விருத்தம்.

உக்கிரச் செழியன்இவ்வா றுதித்ததை உரைத்தேன் இப்பால்
முக்கண்எம் பெருமான அந்த முதல்மையாம் புதல்வனுக்குத்
தக்கநல் மணம்புரிந்து தனதுவேல் வளைசெண் டீந்து
மிக்கசெங் கோலும் ஈந்த விசித்திரம் இனிச்சொல் வேனே.

திபதை—ஆனந்தபைரவி, ரூபகம்.

௧ சாமிசுந்தர பாண்டியன்செய்த சரித்திரம்இன்னம் கேளும் இந்த
பூமிதுதிக்கும் பாண்டியன்குலம் புகழ்பெருகஎந் நாளும்

௨ மலயத்துவசன் தவத்தில்உதித்து வரும்தடாதகை மாது பெற்ற
குலமகனுடன் மகிழ்ந்துநிதமும் குலவிஇருக்கும் போது

௩ தனதருமைமகனுக்குக்கல்யாணம் தன்னைவிரைந்து செய்ய நினைத்
தினமதாகிய அமைச்சர்அறிஞர் இவர்களுடனே துய்ய

௪ நிலமும்குடியும் குலமும்புகழும் நிறைந்தவேந்தரை எண்ணிப் பெற்ற
தலைமகனுக்குச் சரிஎவரென்று சார்ந்தாலோசனை பண்ணி

௫ உத்தரத்திசை தன்னிலேமணவூர்என்றுரைக்கும் புரத்தில் பிர
சித்தமாகவே சூர்யகுலத்தில் செனித்துவந்தவன் நிலத்தில்

௬ வேந்தனாகிய சோமசேகரன் மெய்த்தவத்தில்வந் துதித்து வளர்
காந்திமதியைத் தம்மகனுக்குக் கலியாணம்பண்ண மதித்து

௭ ஏகநாயகன் ஆலவாய்விடுத் திரவினில்வழி கூடிச் சோம
சேகரமன்னன் கனவில்வந்தொரு சேதிசொலவிட நாடி

௮ இந்நிலம்புகழ் மதுரைத்தலத்தில் இறைவனுக்கும்நா மென்று நினைந்
துன்மகள்காந்தி மதியைஅந்நகர்க் குறவுடன்தேடிச் சென்று

௯ மாற்றலர்மணி முடிகள்இடறும்முழங்கியகழற் காலன் உனக்
கேற்றசுந்தர பாண்டியமன்னன் ஈன்றஉக்கிர பாலன்

௰ அவனுக்குத்திருமணம்செய்துகொடென்றருள்பொழிந் துரைத்து உடன்
கவனமால்விடை வாகனகூடல்ந கரத்தெப்போதும்போல் வந்து

௧௧ இருக்குமுன்சோம சேகரன்விழித் திருகையும்குவித் தெழுந்து அருள்
சுரக்கும்கடவுள் கருணைஎளிதில் தோற்றியசெயல் நினைந்து

௧௨ உள்ளம்முகம்கண் ஆகும்தாமரை ஒருங்கேமலரப் பரிந்து அன்பின்
வெள்ளம்பெருகச் சூர்யனுதிக்கும் வேளைவந்திடத் தெரிந்து

௧௩ நித்யகன்மம்செய் தமைச்சரும்சில நிருபரும்கூடி இணங்கத் தன்னை
சுற்றியசது ரங்கமுடனே துலங்கும்பல்லியம் முழங்க

௧௪ மங்கலம்பெறும் தன்மகளுக்கு மணக்கோலம்புரிந் தோது பல
மங்கைமாருடன் தேரிலேவைத்து மதுரைக்குவரும் போது

௧௫ அந்தவேளைமுன் யோசித்தபடிக் கமைச்சர்சுற்றமும் சேர்ந்து கொண்
வந்துமணவூர் நோக்கிவரவும்மன்னனுக்கெதிர் நேர்ந்து

௧௬ தென்னர்கோன்மகனாகியவுக்ரச் செழியன்தனக்கு வேட்க முடி
மன்னர்துதிக்கும் மன்னனேஉன்றன் மகளைத்தாவெனக் கேட்க
௧௭ கொன்றைவேணியன் கனவிலேவந்து கூறினதெல்லா மொழிக்கு மிக
நன்றென்றுரைக்க ஒருவர்க்கொருவர் நயப்பஆநந்தம் மிகுக்கு
௧௮ .தேவபாண்டியர்க் கிந்தக்ஷேமத்தைத் தெரியத்தூதரை விடுத்தார் விடுத்
தாவலுடனே மதுரைமாநகர்க் கனைவர்களும்வர் தடுத்தார்

## திருநகர் அலங்கரித்தல்.

### விருத்தம்

சோமசே கரனிந்த வண்ணங் கூடற்
றென்னகரிற் சுந்தரபாண் டியன்பால் வந்தே
தாமமுடி வணங்கிடப்பார்த் தவனும் நேரே
தழுவியுப சரித்திருக்கை அளித் திருந்தான்
மாமதிமந் திரிமார்கள் திருமு கத்தை
வரைந்தரசர்க் கனுப்பிஅவர் வருகு முன்னிப்
பார்மகிழும் நகரைஅலங் காரம் செய்யப்
படித்திட்டார் மணமுரசம் அடித்திட் டாரே.

சிந்து— புன்னாகவராளி ஆதி.

௧ திருமணமுரசடித்தார் சுந்தரத் தென்னவனருளியமொழிபடித்தார் [டார்
தெருவெங்கும்பந்தலிட்டார் மாடங்கள பெருகியமனைதொறும்கொடிகளை
௨ கதலிக முகுகட்டினார் தூணகளில விதம்வித மாகப்பொன் தக டொட்டினார்
மதிஇரவியைநிகர்த்த ஆடிகள் புதிதுபுதிதாஎங்கும் பதியவைத்தார் [தார்
௩ மகரதோ ரணம்தொடுத்தார் தேவருலகமிதுக் கிணையோவென் றள வெடுத்
வகைமணிமாலைசோத்தார் பொற்குடம்தகதகென்றொளிரமகிழ்ந்துபார்த்தார்
௪ கோயிலெங் கும்விளக்கினார் கோபுர வாயிலும் மதிலுமி கத் துலக்கினார்
தூயமலர்கள்முடித்தார் பொன்னுல காயிழை மார்பா தங்கள் நடித்தார்
௫ வாசப்பொடிகளிறைத்தார் செம்பட்டுத்துசணியாலுடலெங்குமறைத்தார்
ஈசனருளைத்துதித்தார் திருமண வாசகம்தெரிந்தனைவரும்கதித்தார் [த்தார்
வேதிகைசமைத்துவைத்தார் விளங்குபொற்சோதிசெய்பாலிகையமைத்துவை
போதகம் அலங்கரித்தார் கதிகொளும் மாதுர காதிகட் கெழில் விரித்தார்
௭ விருதுக்கொடிகள்பறக்க நரகெச மேளம்உடுக்குமொந்தைதாளம் சிறக்கப்
பெருகும் சின்னங்கள்முழங்க துந்துபி பேரிமல்லாரிமுதலாக இலங்க
௮ சதுரங்க த்துடன்சேரன் செம்பியன் சாளவர்கொங்கணர் மாளவரும்
நிதிவளர் கேகையரும் சிங்களர் நேரியர் கோசலர் ஆரியரும்
௯ குச்சரர் ஒட்டியரும் சோனகர் கொங்கர்கலிங்கர் குலிங்கர்களும்
மச்சரர் பாஞ்சாலர் வில்லவர் வங்கர்மராடர் தெலுங்கர்களும்
௰ பின்னுள அரசர்களும் சுந்தரத் தென்னவன் திருவடி தன்னைக்கண்டு
நன்னயத்துடன பணிய வருகின்ற ராசர்கள் வரிசையை ஏது சொல்வேன்
௧௧ தொட்டமுப்புரிநூலில் தொடும்கலைத் தோலினரும்கிஞ்சுகக்கோலினரும்
வட்டவாய் நீர்க்கலசம் கைக்கொண்ட மாதவரும் குண்டலக் காதவரும்
௧௨ ஓமவன்னியயைடக்கும்கோல்கையிலுடையவரும்புலித்தோலுடையவரும்

நாமகம் செய்துநீற்ற நீற்றினை மதித்தவரும் நெற்றியில் பதித்தவரும்
கஉ குண்டிகைக் கையினரும் தண்டினில் கோவணம் வீக்கிய மாவலரும்
கண்டுமெய்யினையுணர்ந்து பொய்யினைக் காய்ந்தவரும்பலநூலாய்ந்தவரும்
கங ஆதிசை வரைமுதலாம் சைவர்கள ஐவரை முதற்பல சைவர்களும்
காதஞ்சைந் தெழுத்தோதும் புண்யமெய் ஞானியரும் விபூதி மேனியரும்
கரு அரிஅயன்முதல்எவரும் இந்த்ரனோ டண்டர்களும்திருத் தொண்டர்களும்
வரிவரி யாயப்பதினெண் கணத்தின மானவரும்சித்த ரானவரும் தார்
கசு சாமிகல் யாணத்திலே இந்நகர் தானே தனக்கொப்பாகத் தாம் அமைத்
ஆமதற்கதிகமென்றும் வந்தவ ரனைவரும்சொலஅலங்கரித்தனரே திரு

## காந்திமதியின் சாமுத்ரிகாலக்ஷணத்தை ச்சொல்லுதல்.

சகலரும்இப் படிமதுரை சேர்ந்து சிங்கா
சனம்தனிலே தடாதகைப்பி ராட்டி யோடே
அகமகிழும் சுந்தரபாண்டியனைத் தாழ்ந் தேத்த
அனைவருக்கும் வரிசைபுரிந் திருக்கும் போதே
சகமகிழும் சோமசே கரன் பயந்த
தையல்வனப் பனைத்தும்அறிந் துவகைபூண
மகிமைதரும் வியாழபக வான்சோ தித்து
வரைக்கின்றான் விபரமுடன் உரைக்கின் றானே.

திபதை—மத்தியமாவதி சாப்பு.

க மாதரசாகிய காந்திமதியைஉன் மைந்தனுக்குத்திருக் கல்யாணம்செய்திட
நாதனேசாமுத்ரி காலக்ஷணத்தின்
நலத்தின்வகைபாராய் அததன் பலத்தின்வகைபாராய் [ய
உ வாசம்பொருந்தி நெருங்கிமெலிந்து வணங்கிஅளிபோல்கறுப்பாய்விளங்கி
கேசஇலக்கணத் தாலேபெரும்பொருள்
கிட்டிவரும்பாராய் கணவனைச் சுட்டிவரும்பாராய் (சென்னி
௩ தக்கமதயானை மத்தகம்போலே தரங்கொண்டுயர்ந்து திரண்டெழிலும்
லக்கணத்தாலே கணவனுக்காயிசு
நீளத்தரும்பாராய் புவிஅர சாளத்தரும்பாராய்
ச அர்த்தசந்த்ரன்போல் மயிர்நரம்பின்றிமூ வங்குலவீதி தசைத்து விளங்கிய
நெற்றிஇலக்கணத் தால்அன்பனுக்கம்பொன்
நேரும்வகைபாராய் ஆரோக்கியமும் சேரும்வகைபாராய்
சிலைக்கிணை யாயிருபாலும் வளைந்தெழிலொத்துக் கறுப்பாய்விளங்கிய
புருவலக்ஷணத் தாலேபதிக்குப்
புகழைத்தரும்பாராய் விசயம் நிகழத்தரும்பாராய் [றுத்
சு க்ஷீரமதுபோல் வெளுத்துக்கடைக்கண் சிவந்துநடுக்கண் இமைமயிரும்க
தாரும்நயன இலக்கணத்தால்அன்பர்க்
காகும்வகைபாராய் நலமேஉண் டாகும்வகைபாராய்
வாசவழித்துளை ஒத்துருண்டந்தா மரையில்திலத்தின் மலர்போல் விளங்கிய
நாசிஇலக்கணத் தாலேகணவற்கு

நாடும்வகைபாராய் மங்களமே நீடும்வகைபாராய் (றும்பெற்ற
அ ...றும்வள்ளையைப் போலேவளைந்துமுன் தள்ளியுந்தாழ்ந்தும் அழிவில
காதின்இலக்கணத் தால்அன்பற்குச்சுகம்
உடடும்வகைபாராய் எக்காலமும்ஈட்டும்வகைபாரய் (ஸம்போலொத்த
வன்னம்படர்ந்தே உயர்ந்துமிருதுக்கொண்டு வட்டமாய்க்கண்ணுடிமண்ட
கன்ன இலக்கணம் பர்த்தாநினைக்தது
கைவருரும்பாராய் என்றும்உவ கைதருரும்பாராய் (லங்கிய
ய கோதறும்கொவ்வைக் கனிபோல்திரண்டு குவிந்திருபாலும் எழில்பெற்றி
ஓதும்அதர இலக்கணத்தின்பலன்
ஒத்துவரும்பாராய் ராஜஸ்த்ரீயாய் பெற்றுவரும்பாராய் (ல்போலும்
கக ஏதுமிடைவெளி இல்லாமல்கீழ்மேல் இரண்டுவரியும் ஒழுங்கொத்துப்பா
நாலிருநாலுபல் லக்ஷணத்தால்வரும்
நன்மைதனைப்பாராய் பட்டஸ்த்ரியாம் தன்மைதனைப்பாராய்
கஉ பூவில்மிருதுவாய் மெலிந்துசிவந்தெழில் பூண்டுமனோகர மாகவிளங்கிய
நாவின்இலக்கணத் தாலேகணவற்கு
நண்ணும்வகைபாராய் புகழ்சேரப் பண்ணும்வகைபாராய்
கங சுபகரம்கொண் டுயர்ந்திரண்டங்குலம் சோபிதமாக வளைந்துவிளங்கிய
சிபுகலக்ஷணத் தாலேபதிககிசை
செலலும்வகைபாராய் அதின்குணம் சொல்லும்வகைபாராய்
கச அகல்நிலவொழு கும்மதிபோலவும் அல்லியந்தாமரை போலும்விளங்கிய
முகஇலக்கணத் தாலேகணவற்கு
மோகம்தரும்பாராய் சாம்பிராஜ்யவை போகம்தரும்பாராய் (ரைந்திட்ட
கரு குண்டலமாகத் திரண்டுநாலங்குலம் கொண்டிடையில்மூன்று ரேகைவ
கண்டஇலக்கணத் தால்அன்பற்குச்செயம்
காணும்வகைபாராய் நெடுத்தினம் பூணும்வகைபாராய்
கசு கோளறஎன்பு மயிர்நரம்பில்லாமல் கோமளமாகத் திரண்டுபணையொத்த
தோளின்இலக்கணம் அன்பனுக்குத்தம்
சூடும்வகைபாராய் மனோகரமீ நீடும்வகைபாராய் (றுத்திடும்
கஎ பெய்யும்எழில்கொண் டுருண்டுகணுக்கள் பிறங்கிடநீண்டடை வாகச்சி
கையிவிலக்கணத் தால்அன்பனுக்குக்கண்
காடசிதரும்பாராய் உலகர சாக்ஷிதரும்பாராய்
கஅ பார்த்தவருள்ளம் கவர்ந்துசராசரப் பன்றிஉருண்டு மனோகரமாயெழில்
ஏற்றபுறங்கை நகத்தின்இலக்கணம்
யாதும்தரும்பாராய் சுபம்கொண்டெப் போதும்வரும்பாராய் (றகைத்
கக மலரின்மெலிந்தி டைவெளிஇல்லாமல் மத்தியம்உயர்ந்துவரைந...
தலஇலக்கணத் தாலேசுபம்மிகச்
சாரும்வகைபாராய் கணவற்குச் சேரும்வகைபாராய்
உய சீர்பெறும்அங்குலம் மூவாறகன்று செழிப்பாய்மிதந்து மயிர்நரம்பில்லா
மார்பின்இலக்கணத் தாலேபதிக்கு
மகிமைதரும்பாராய் மிகுந்த தகைமைதரும்பாராய் (கும்ப
உக மோதிப்பருத்துநே ரொத்திறுமாந்து முகிழ்த்துக்கடினமும் வட்டமுமா

யோதரலக்ஷணத் தாலேகணவனுக்
கொண்மைதரும்பாராய் அபீஷ்டத்தின் வண்மைதரும்பாராய்
௨௨ அண்பிம்எறும்புபோல் ரோமவரிபெற் றயலில்மயிர்நரம் பன்றிமெலிந்தி
பண்டிஇலக்கணத் தாலேபிருஷ்டான்னம்
பருகவரும்பாராய் மேன்மேலும் பெருகவரும்பாராய் (லாத
௨௩ சோபிதம்கொண்டு பிரதக்ஷணமாகச் சுழித்துக்குழிந்து மயிர்முடிச்சில்
நாபிஇலக்கணத் தால்அழியாப்பொருள்
நற்றிவரும்பாராய் கணவனைச் சுற்றிவரும்பாராய் (ம்சேர்
௨௪ அத்திதன்மத்தகம் போலேஎழில்மிகுந தாமைமுதுகுபோ லேயும்படிவ
ஒத்தநிதம்ப இலக்கணத்தால்சுபம்
உண்டென்பதும்பாராய் பதிக்கிது நன்றெனபதும்பாராய் (ஙகிய
௨௫ வாரணக்கைபோலும் வாழைமரம்போலும் மயிர்நரம்பற் றிணங் கிவிள
ஊருஇலக்கணத் தாலேபதிக்குத்
யோகம்தரும்பாராய் தேவேந்திரவை போகம்தரும்பாராய் (பெற்ற
௨௬ தங்குமயிர்நரம் பிணறிச்சிறுத்ததில் சற்றேஉருக்ஷிகொண் டொத்தழகு
செங்கைஇலக்கணம் படடஸதிரிஎன்பது
செப்பும்வகைபாராய் நூலோர்களும் ஒப்பும்வகைபாராய (ருமுழங
௨௭ கேளும்உள்ளென்பு மறைந்துசதைப்புற்றுக் கேசம்நரம்பற்று வட்டம்த
தாளின்இலக்கணத் தாலேபதிக்குத்
தழைக்கவரும் பாராய் நலங்கள்விழைக்கவரும்பாராய் (ம்புறங
௨௮ மேலும்நரம்பென் பகன் றுதிரண்டெழில் மேவியும்ஆமை முதுகொத்திடு
காலினஇலக்கணத் தாலேபதிக்குத்
கதிக்கவரும்பாராய் பெருமை மதிக்கவரும்பாராய் (ம்விரல்
௨௯ செங்கழுநீரிதழ போலும்நகம்பத்தும் திங்கட்பிளவொத்துயாநெழிலு
தங்கும்நுனிக்கால் இலக்கணத்தால்பொருள
தந்துலவும்வாராய்கணவற்கு வநதுலவும்பாராய் (ந்தகம்
௩௰ கோலம்புனைந்து சிவந்துமிருதுக்கொண்டு குற்றம்அகன்று சமமாத்தசை
காலின்இலக்கணத் தாலேவல்லாண்மை
கருதும்வகைபாராய் பதிக்குப் பொருதும்வகைபாராய் ( ணமாப்பெற்ற
௩௧ மாபசும்பொன்போலும் மாந்தளிர்போலும்சி வந்துநிதம்வெயர் வற்றுஷ்
ரூபஇலக்கணத் தாலுத்தமசுகம்
நோக்கிவரும்பாராய்கணவற்குண்டாக்கிவரும்பாராய
௩௨ வாசக்குவளை செம்பாதிரிதாமரை மலலிகைசம்பக மாமலர்போலவும்
வீசியகந்த இலககணத் தாலே
விளங்கவரும்பாராய் சௌபாக்கியம் துலங்கவரும்பாராய் (வும்பேசிய
௩௩ பொழிலில்மாங்குயில் போலவும்பைங்கிளி போலவும் வீணையைய போல
மொழிஇலக்கணத் தலேசௌபாக்கியம்
முழுதும்வரும்பாராய் சுபம்எப பொழுதும்வரும்பாராய்

## உக்ரகுமாரருக்கு காந்திமதியைக்கல்யாணம் செய்வித்தல்·

விருத்தம்.

தேர்ந்துகன்னி வடிவமெலாம் தெளிந்து தேவ

தேசிகன்சொற் கேட்டெவரும் மகிழ்ந்தார் ஐயன்
வாய்ந்திடும்உக் கிரகுரன் வையை ஆடி
மணக்கோலம் பூண்டுதிங்கட் செல்வன்போலப்
பூந்தவிசின் மீதிருக்கச் செய்து வந்து
புதுமணநீ ராடடிஅலங் காரம் செய்து
காந்திமதி யைக்கொணர்ந்து வலப்பால் வைத்துக்
கலியாணம் நடத்தியது காணு வீரே.

மோகனம் சாப்பு.

பல்லவி.

கல்யாணத்தைச் செய்வித்தாரே யாரும் கண்டுவகைமிகுத்தாரே

அநுபல்லவி.

உல்லாசமாச்சோம சேகரன்கன்னியை
வல்லாருடன்உக்ர வர்மனுக்குத்திருக கல்யாணம்

சரணங்கள்.

௧ பங்கயன்மாலுடனிந்த்ராதிதேவர் பரிந்துதவஞ்செய்முனிவோருடன்ஒத்து
அங்கமுடன்விர தாதிபுரிந்துபின் ஆகும்சமாவர்த்தனமும் நடப்பித்து
மங்கையுடன்சோம சேகரமன்னன் மனத்தில்சிவனும் உமையுமாப்பாவித்து
மங்கலநீரால் அடியைவிளக்கி மருமலர்மாலைநற் கந்தம்கொண்டர்ச்சித்து (து
பொங்குமதுபருக்கம்கொடுத்துபெற்ற மங்கைகையைமருகன்கையிலேவைத்
தங்குசுபமுகூர்த் தங்கொண்டுயர்ந்தக்கிர
கங்குலவும்லக்கி னங்கூடும்வேளையில்
திங்கள்குலத்தை விளக்கிடவேவரும்
சேயனுக்கென்றன் குமாரத்தியைஅரும்
புங்கவர்காணக் கொடுத்தேன்எனப்பெரும்
பூமிபுகழ்ந்திடத் தானம்செய்யத்திருக் கல்யாணம்

௨ வன்புறும்சிங்கத்தினகாலூசலைநது வயிரப்பலகை மணிவடமும்தொட்டு
தண்பஞ்சணைகளீ ரைந்தனைத்தூவி தளித்ததிலேபைக் துகிலும் விரித்திட்டு
செம்பவளவாய்ஒளிருமலர்க்கண்சிறந்திடச்செய்தபொற்பாவைவிளக்கெட்டு
அம்பொற்கலங்கள் சமயனுக்காகஈரைம்பதணியணி யாக அடுக்கிட்டுச்
செம்பொற்காளாஞ்சி ஏழும்பொற்கவரிஎட
டும்பொற்கிண்ணம்பல வும்பலபொட்டிநூ
றென்பததனுட னும்பொன்னிழைஆயி
ரம்பட்டுப்பேழை நிரம்பமுந்நூறுடன்
கொம்பனைச்சேடியர் தாமைந்தெழுநூறு
கோடியிரண்டுசெம் பொன்னும்விழைவேறும்
திண்புவிமூன்று கிராமத்துடன்பேரும்
சீதனமாகக் கொடுத்திடஇவ்வாறு கல்யாணம்

௩ வாத்தியகோஷம் கடல்போல்ஒலித்திட வானவர்மந்தாரமாரிஎங்கும்தூவ
(மூந்துதாவ
பூர்த்தியாம்மங்கல வேள்விச்செழுந்தீ பொலிந்துவலங்கொண் டெழுந்தெ

காற்றிசையுநின்று தெய்வமடந்தையர் நாவிலினிக்கின்ற சோபனத்தைக்கூவ
(ம்மேவ

பார்த்தவர்கண்களெல் லாம்பெற்றபாக்யம் பலித்ததென்றெங்கும் பகர்ந்துபுக
வாய்த்தஅருந்தவம் நோற்றவர்கைதொட்டு
வாழ்த்தியமங்கலம் சாற்றிக்கையோடுகை
கோத்தெரிசூழ்ந்தம்மி ஏற்றிப்பொரிசொரிந்
தாற்றிஅருந்ததி பார்த்திடச்செய்தெங்கும்
பூத்தபொன்மாரி வழங்கநலம்பெற்ற
பூசுரர்ஆனந்தம் கொள்ளமகிழ்ந்துற்ற
சாத்திரம்சொல்லும் கிரியைமுழுதுமுற்றச்
சந்திரவம்சம் தழைக்கும்படிக்கொத்த கல்யாணம்

## உக்ரகுமாரன் பவனிவருதல்.

விருத்தம்.

குலம்பெருகும் உக்கிரவர் மனுக்கிவ் வாறு
கூர்ந்திரவி குலமன்னன் தவத்தில் தோன்றும்
நலம்பெருகும் கார்திமதி யைக்கல் யாணம்
நன்மறைதன் ஒழுக்கமுறை நடத்திப் பின்னும்
சலம்பெருகும் உடுக்களும் வெண் மதியும் கோளும்
தவழ்ந்துசெல்ல ஓங்குமணி மாட வீதி
வலம்புரிந்து வரும்போ தனேக மின்னார்
வருகின்றார் பவனியைப்பார்த் தருகின் றாரே.

திபதை — நாதநாமக்கிரியை, சம்பை.

க தேவர்புகழும்மதுரை ஆவணத்தில்வருகும்உக்கிரச்
செழியன்தனைத்தேடிவந்தார்கள் சிலமாதர்
தாவும்கடம்கோடைதன்னில் பூஉலவும்ஓடைகண்ட
சாரங்கம்போலோடிவந்தார்கள் சிலமாதர்

உ நூலிடைவருந்திடக்கண் டோலமிடுவதுபோலே
நூபுரங்கள்புலம்பிடவந்தார்கள் சிலமாதர்
மேலும்அதின்பாரம்கழிப் பான்போலேஉடுக்கைகள்அ
விழ்ந்திடச்செய்தாரெனவந்தார்கள் சிலமாதர்

ங தாளொருங்கும்பாரம்கழிப் பான்போலேகவர்ந்தானென்று
தோள்வளைகள்நீங்கிடவந்தார்கள் சிலமாதர்
நீளும்மனப்பாரம்கழிப் பான்போலேநிறைகவர்ந்து
நீதிநெறிசெய்தனனென்றார்கள் சிலமாதர்

ச சேனைமன்னர்தழுவமத யானைமிசைபவனிவரச்
சிங்கஏறெனக்கண்டுரைத்தார்கள் சிலமாதர்
ஆனைமகள்தனைமணந்து வரும்குமரன்பவனிவரும்
அழகிதுக்கேசரியென்றுரைத்தார்கள் சிலமாதர்

————(*)————

# உக்கிரகுமாரனுக்குவேல்வளைசெண்டு கொடுத்தபடலம்.

## சுந்தரபாண்டியர் தன்குமாரருக்கு புத்திமதிசொல்லுதல்.

விருத்தம்.

பைந்தொடியார் உருகவலம் வந்தே இந்திரன்
பழிதவிர்த்த நிமலன்அடி பணிந்தே ஈன்ற
தந்தைதாய் அடிவணங்கி இருக்க அன்னம்
சாப்பிடத்தக் கோரைஎலலாம் புசிக்கச் செய்து
வந்தவர்க்கு வரிசைசெய்து விடையும் ஈந்து
வானவர்க்கும் விடைகொடுத்து விளங்கும் நாளில்
சுந்தரபாண் டியன்குமரன் முகத்தை நோக்கிச்
சொல்லவேண் டியதெடுத்துச் சொல்லு வானே.

* மத்தியமாவதி—ஆதி.

பல்லவி.

மைந்தாஎந்தன்சொற்படிசெய்வாய் புத்திமிகுந்த மைந்தா

இந்திரன்கடல்மேரு இனிஉன்பகையாமுன்பு
சுந்தரேசர்அடியே துணைஎன்றெப்போதும்நம்பு மைந்தா

சரணங்கள்.

௧ தத்திஅலைகள்அண்டம் முட்ட எழும்பியிந்த
முத்திபுரத்தைச்சூழ்ந்து கிட்ட கெர்ச்சனைகொண்டு
கத்திவருகும்பெரும் கடல்போலிந்தப்பெருத்த
சத்தியினாலெதிர்ந்த தனையடக்குவாய்பெற்ற மைந்தா

௨ அந்தரத்தவர்முடி தாழச் சேனையுடனே
இந்தநகரைவந்து சூழப் பொறாமைகொண்டு
சிந்தையிலேபகைமை செய்யவருதல்குறித்
திந்திரன்முடிசிதற இந்தவளைகொண்டெறி மைந்தா

௩ மண்டலத்தில்உத்தண்டம்பூணும் முடிவிளங்க
அண்டர்உலகம்மட்டும் நீணும் கருவம்மிகக்
கொண்டவடமலையைக் கோபம்கொண்டெழுந்திந்தச்
செண்டினாலேயடித்துச் செகத்தில்புகழ்பொருந்த மைந்தா

இந்தவிதம் மொழிந்தயில்வேல் வளைசெண் டீந்தே
இதயம்மகிழ்ந் துக்கிரபாண் டியன்என் றியாரும்
அந்தமுடன் புகழ்ந்திடப்பல் லிய முழங்க
அரசளித்து முடிகவித்துச் சுமதி என்னும்
மந்திரிகற் றோர்களைப்பார்த் திமைகண் போலெம்
வள்ளலைக்காத் துறுவதுங்கள் கடனென் றோதி
மைந்தனுக்கும் அவர்உரைகேட் டொழுகி என்றும்
வாழ்கெனச்சுந் தரபாண்டியன் வாழ்த்தி னானே.

இதுவுமது.

சுந்தரபாண் டியன்மகனுக் கரசை ஈந்து
சூழ்ந்தகணங் களுக்கும்பண் டுருவம் தோன்றத்
தந்ததடா தகையுடன்பொற் கோயி லுக்குள்
தான்புகுந்து மூர்த்திகரம் கொண்டான் இப்பால்
கந்தனைப்போல் உக்கிரபாண் டியன்வே தத்தில்
காட்டியவா றறத்துடனிவ் வுலகம் காத்தான்
இந்தவா டலைமொழிவோர் கேட்போர் மூன்றும்
எய்தியபின் அரன்உலகும் எய்து வாரே.

ஆக விருத்தம் அ, கீர்த்தனை உ, தரு ௬, ஆக ௰௬.

பனிரண்டாவது, உக்கிரகுமாரனுக்கு வேல்வளைசெண்டுகொடுத்தபடலம் முற்றும்.

————(*)————

உ
சிவமயம்.

பதின்மூன்றாவது,

## கடல்சுவறவேல்விட்டபடலம்.

அவதாரிகை—விருத்தம்

பூண்டவேல் வளையும் செண்டும் பொருந்துமைந் தனுக்குத் தேவ
பாண்டியன் அருளிச் செய்த பாங்குமுன் உரைத்தேன் இப்பால்
ஆண்டவர் திருக்கும்உக்ரன் ஆழிமேல் கந்தன் போலே
நீண்டவேல் எடுத் தெறிந்து நீக்கிய தினிச்சொல் வேனே.

உக்ரகுமாரன்பரிமேதம்செய்வதுகண்டுஇந்திரன்ஆலோசித்தல்.

விருத்தம்.

உக்கிரபாண் டியன்தாதை மொழிந்த வாறிவ்
வுலகநெறி செயதுவீற் றிருக்கும் நாளில்
தக்கவர்கள் புடைசூழ்ந்து போற்றச் செய்யும்
தருமவேள் விகள்பலசெய் ததும்அல் லாமல்
மிக்கவரும் பரிமேதம் தொண்ணூற் றாறு
விளங்கிடவே செய்துவரத் தெரிந்து நெஞ்சம்
திக்கெனவே இந்திரன்பொ றாமை பெற்றுச்
சிந்தித்தான் மனக்கவலை முந்தித் தானே.

துசாபந்தி ஆதி.

பல்லவி.

இந்திரன்செய்ததைக் கேளும் சூழ்ச்சிசெய்தொரு
தந்திரம்செய்ததைக் கேளும்

அநுபல்லவி.

சுந்தரபாண்டியனுத்துங்க மைந்தன்உக்கிரன்விளங்க
அந்தமுடன்செய்மகங்கள் சிந்தையில்பொறாதுபொங்க இந்திரன்

சரணங்கள்.

௧ மன்னியநாடுமென்மேலே செழிப்பம்கொண்டு பொன்உலகம் அதுபோலே
நன்னயம்பெற்றதால் மண்ணில் உன்னதவேள்விகள் நண்ணி
மன்னவன்செய்தானென்றெண்ணி தனனுளேயோ சனைபண்ணி இந்திரன்

௨ தனக்கிடர்வருகும்பினனே புத்திகெட்டொருவனுக்கிடர் நினைப்பார் முன்னே
எனக்கவலைகொண்டுகோபித் தினிக்காவுள்ளத்தில் மேவித்
தனித்தரங்கமுடனதாவித் தொனிக்கும்வருணனைக்கூவி இந்திரன்

௩ தாழும்உலகேழும்கூடி அலலாயனும்மேல் ஏழுலோகங்களும் மூடிச்
சூழும்உருவம் எடுத்துச் சேனும்மகிமை தொடுத்து
வாழும்மதுரை அடுத்து வீழஅமர்செய்ய விடுத்து இந்திரன்

## வருணன் மதுரையை வளைந்துகொள்ளல்.

இந்திரன்சிந் தித்துரைக்கக் கேட்டு வேலைக்
கிறைவனினி வருவதறி யாமல் தானே
அந்தவண்ண மேபுரிந்து வருகு வேனென்
றாலவாய் வளப்பதிமேல் எழுந்து பொங்கி
சிந்தையகம் கொணடிடர்செய் திட நினைந்து
திண்ணமுடன் பேயகளும்கண் ணுறஙகும் போ
வந்தடர்ந்து குருட்டிருட்டு வேலை பார்த்து
வந்திட்டான் சுற்றிலும்வ ளைந்திட் டானே.

பந்துவராளி ஆதி.

பல்லவி.

உததிமன்னவன்கடு கடுத்தானே திருமதுரைநகரைவளைத் தடுத்தானே

அநுபல்லவி.

சதமகன்அனுமதி தன்னைப்பூண்டு கதிக்க
தனக்குவரும்கெடுதி தனைஅறியாமல் மிக்க உததி

சரணங்கள்.

கொந்தளிக்கும்அலைகள் அண்டகோளத்தின் பாலே
கொதித்தெழுந்தூழிநாளில் உலக்கவந்தது போலே
இந்துமண்டலம்தொடும் கருமலைபோல்மென் மேலே
எழுந்துவின்னும்மண்ணும்பார்த் தருண்டிடஒருக் காலே உததி

வானையேகத்தியாக ஆனமகேட்டயம் ஆக
மகரங்கள் ஆனையாக அலைகள்பரிகள் ஆக
நீளும்தோணி இரத மாகத்தானே அ நேக
நீடும்வழுதியின்மேல அமர்க்கெழுந்த தி வேக உததி

௩. வெண்மதிதன்னைராகு விழுங்கவந்தது போலும்
மேகக்கூள்எழும்மன்னை மூடவந்தது போலும்
துன்மைகொண்டேவருதல் வேறேனதனைப் போலும்
ஓதுதற்கொக்குமென்ன ஏங்கிவந்து மென்மேலும் உததி

விருத்தம்.

வருணன்இந்த விதம்மதுரா புரத்தின் மேற்கோர்
மலைபோலே வரும்போது பாதி ராவில்
இரசதஅம் பலநாதன் சித்த ரூபம்
எடுத்தெழுந்துக் கிரச்செழியன் கனவில் வந்தான்
புரம்அழிக்க வரும்ஆழி வேந்தன் ஓடப்
பொருந்திவேல் எறிந்துவெற்றி பெறுகென் றன்பு
புரிதல்இள நகைதோன்றக் கருணை வெள்ளம்
பொழிகின்றார் முன்னிருந்து மொழிகின் றாரே.

உக்ரபாண்டியன் கடல்சுவறவேல்எறிதல்.

இதுவுமது.

கருணைவள்ளல் ஓதும்வண்ணம் உக்கிர பாண்டியன்
கனவுதெரிந் தஞ்சலிசெய் தேத்தும் மாவும்
திருமனமும் பூண்டுவெந் தெழுந் தமைச்சர்
சேரவெழுந் துலகிரந்த தென முழங்கி
வரும்உததிக் கெதிர்நிற்கும் போதி ராவில்
வந்துரைத்த சித்தர்அந்த க்ஷணமே நாடி
தருணமிது வேலைஎடுத் தெறிஎன் றோதத்
தாகனென் கணைக்கால்நீர் ஆக்கி னானே.

கல்யாணி சாபு.

பல்லவி.

வடிவேலைஎறிந்தானே வருணன்மன வலிகெட்டுமுறிந்தானே

அநுபல்லவி.

அடல்தக்கெழுந்துசீறும் ஆழிநடுங்க உள்ளத்
திடமுடனேஉக்கிரச் செழியன்விசயங் கொள்ள வடி

சரணங்கள்.

௧ கழுதுவித்திரைசெய்யும் இருட்டிடையிலே வல்ல
கடவுட்குப்பெற்றுவந்த சத்துருவினை வெல்ல
பொழுதுபோக்குவதேனென் றன்புபெருகி நல்ல
பூமிக்கழிவுதிர்ப்பாய் என்றுசித்தரும் சொல்ல வடி

௨ செஞ்சொல்மகம்தடுப்ப தன்றிஉலக ழிக்கச்
செய்தஇந்திரனுக்காக வந்தவிழி ழிக்க
வஞ்சகருக்குநன்றி செய்தபெயர்வி ழிக்க
வலிஇழப்பதென்றறைக்கும் உள்ளதெனறுப ழிக்க வடி

௩. சுற்றிவலையும்பெரும் நீரைமுனையால் மோகச்
சுறசுறென் றுறிஞ்சிடச் சுருங்கிவடிந்து போக
வெற்றிஇழந்தடியில் வணங்கிவருவ தாக
வேலைவறண்டுகனைக் காலின்மடடை வாக வடி.

## உக்ரகுமாரனுக்குச் சிவபிரான்தமதுதிருஉருவம்காட்டிமறைதல்.

இத்திறம்வே லாற்புணரி சுவற விட்ட
இறைவழுதி பக்கத்தில் மண்ணில் நின்ற
சித்தர்வா னிடைஎழுந்து புயங்கள் நான்கும்
திரிவிழியும் மதிஅணியும் சடையும் நீலம்
வைத்தகழுத் துடன்உமையோ டிடவ மீதில்
வாய்த்திடப்பார்த் தஞ்சலிசெய் தேத்திப் பின்னே
நத்திநில மிசைநடக்க விசும்பா றாக
நாடினர் அபலத்தில் கூடினரே.

பூரிகல்யாணி, சாப்பு

௧ வெற்றிவிடைமீதில் நாடினர் சேல் விழிமின்னுடன் கூடினர்
சுற்றிலும்வேதங்கள் பாடினர் மலர் தூவிஅமரர்கொண் டாடினர்
௨ துர்தபிஐந்தும்கொண் டடிக்க மேகம் சோர்ந்துபயந்தோட்டம் பிடிக்க
தந்திரகீதங்கள் படிக்க திசை தனனில்அரம்பையர் நடிக்க
௩ பேரும்சிகரங்கள் துலங்க ஒளி நீளும்பொற்கோயிற்குள் விளங்கப்
பாரிற்பணிந்தெழுந் திலங்க உக்கிர பாண்டியராசன்வந் திணங்க
௪ கோயிற்குள்ளேசென் றுபணிந்தான் விடை கொண்டன்புபூரிக்கநடந்தான்
தூயமங்கலம்கண் டுவந்தான் மாடம் துன்னியமாளிகை புகுந்தான்

திருமாட மாளிகையில் புகுந்த உக்கிரச்
செழியன்மது ராபுரிக்கும் கடற்கும் தப்பன்
வருநிலமும் விளைவயல்கள் முதற்கொண் டியாவும்
மாறிகடிக் கின்றவர்க்கே மான்யமாச் செய்
தொருமையுடன் உலகம்காத் திருந்தா னிஃதை
உரைப்பவர்கேட் பவர்ஆபத் திடுக்கண் நீங்கி
இருதயத்தில் நினைத்ததங்கைக் கனியைப் போலே
எய்திஇருக் தரனுலகில் இருப்பர் தாமே.

ஆக விருத்தம் (எ) கீர்த்தனை (௩) தரு (௧) ஆக (௧௧).

பதின்மூன்றாவது கடல்சுவற வேல்விட்டபடலம் முற்றும்.

ஸ்ரீமீனாக்ஷிசுந்தரேசர்திருவடிகளேதுணை.

[illegible]

உக்கிரச செழியன் வேலா[illegible] உவரியைச் செலித்துக் கூடல
முக்கண்ண அருளா[illegible] பால
மிக்கபொன் நகரை ஆளு[illegible]
சக்கர வளையால் வென்[illegible] இனிப் புகறுவேனே

## அகத்திய முனிவர் மழை இல்லாமைக்கு காரணம் சொல்லுதல்.

விருத்தம்

கலிமிகுந்த உக்கிரபாண்டியன் பாராளும்
நாளிலே கிரகபிழையால் மழை இல்லாமல்
நிலமிசை பைங்கூழும் அறுபசம்புல் தீய்ந்து
நெருக்கமுற்று முந்நாடும் வருந்தக் கண்டு
குலம்வளரும் மும்முடிமன்னவரும் கூடிக்
குறுமுனியைச் சார்ந்துரைக்கத் தேர்ந்து கோளின்
பலன் அறிந்து இப்போது மழை இல்லை அம் மூலம்
பாங்கறியீர் என அவர்க்குப் பகருவாரே

மத்தியமாவதி ஆதி

பல்லவி

கேளும்வேந்தர்களே மழைஇல்லாமை கேளும்வேந்தர்களே

அநுபல்லவி

| | | |
|---|---|---|
| [illegible]ளும்உலகம்எங்கும் | வாழும்அரசியலைக | |
| [illegible]ர்த்திபெருகச்செய்யும் | பார்த்திபர்களேசொல்லக் | கேளும் |

சரணங்கள்.

| | | |
|---|---|---|
| சூரியனுடனே அங் | காரகன் முன்நடக்கச் | |
| சுக்கிரன்பின் தொடர்ந்து | வக்கிரம்கொண்டதாலே | கேளும் |
| புங்கமிகும்பலத | ரங்கக்கடலைஉடை | |
| பூண்டஉலகில்பன்னீ | ராண்டுவரைக்கும்கண்டு | கேளும் |
| பின்னறம் பொருள் இன்பம் | இனைவளாக்கும்மழை | |
| பெய்யும்படிக்கருளிச | செய்யுமவனைநாடிக் | கேளும் |

## அகத்தியர் சோமவாரவிரதவிதிகூறுதல்.

விருத்தம்

கும்பமுனி இவைஉரைக்கக் கேட்[illegible]
[illegible]றவரும் யாங்களசெய்யும் வ[illegible]
[illegible]னபதற்குத் தக்க[illegible]
[illegible]ன் விரத[illegible]ளி[illegible]

ஓதும் சிவனடிக்கன் பணிந்து சிவார்ச்சனைக் குரிய வேதியர்
காதுகைக கணிஆடை முதல்அலங் காரம் பண்ணி
கந்தமலர் அர்ச்சனை செய்தருகை எண்ணி
பாதரக்ஷை விசிறி குடைதெக்ஷிணையும் நண்ணிப்
பாங்குடனேபலவும் தானம்செய் திந்த மண்ணில் சோம

ந. ஆசாரனைமனைவியுடன்ஆசனத்திருத்தி ஆடைஆபரணங்கள் பூட்டி
வாசமாமலர்கொண் டருச்சனை பண்ணிஉமா வல்லவராகவேபாராட்டி (த்
பூசை புரிந்தப்பிரதிமையுடன் செம்பொன்பதாதி பூமி முதலனைத்தும்சூட்டி
தேசுலவும் கொம்பணி மாலைவஸ்திரம் பூண்டதேனுமுதல்தானம்செய் திட்டி
பேசும் அடியார்சுற்ற முடனே அமு தருந்தப்
பெருகும் இவ்விரதமுன்மாலயனும் திருந்த
வாசவன்முதலக்கணத்தோரும்செய்தார்வருந்த
மனிதரும் செய்துபோக வீடடைந் தார்பொருந்த சோம

விருத்தம்.

இந்துவா ரத்திவுத்தி யாபனம் செய்
திந்தவிதம் சேர்ப்பவர் வெம் பகையும் பிணியும்
சிந்தை வருத்தமும் தீர்நதா யிரம் சென்மத்தில்
செய்வினையும் தீர்ந்தெடுத்த சென்மந்தன்னில்
முந்துசிவ கதிஅடைவார் இதனைக் கேட்போர்
மொழிந்தவர்தம் மனைவிமக்க ளுடனும்வாழ்ந்து
இந்திரனே மிரண்டுபட்டம் வரைதுறக்கத்
திருப்பரென் றேஅறவோ ருரைப்பர்தாமே.

## சேரசோழபாண்டியர்சுவர்க்கலோகம்செல்லுதல்·

இதுவுமது.

கும்பமுனி இந்தவண்ணம் உரைக்க மூன்று
கொற்றவரும் விடைவாங்கி ஆலவாய் வந்
தம்பொன்அம் புயவாவி நன்னீ ராடி
அங்கயற்கண் மணவாளன் அடியில்ப் போற்றித்
தென்புகிருந் திந்துவா ரத்தில் நோற்றுச்
செயும்பூசைத் தொழில்முடித்து வரம்பெற் றேகிச்
செம்பொன்உல கில்ச்செலஆ லோசித் துள்ளம்
தேறினர் விண்வழிக்கொண் டேகினரே.

திபதை— ரீதிகவுளை, ஆதி.

க இன்னம் முனிவர்களே கேளும் கடந்தவர லாறு மூனறு
மன்னவரும் இந்திரன் உலகைக் குறித்தந்தரத் தாறு
உ வருவத றிந்தமரர் கோன்அவர் களுக்குவெவ் வேறு
தவிசளிக் குத்தாழமுன் னுரைசெய் துவைத்தான் மாறு
ங அந்த வேளைமும்முடி மன்னவரும் அறக்க மீது புகுந்
இந்திரன் தரும்ஆசனத் திருமன்ன ரும் போது

௪ மைக்கடலைச் சுவறச்செய்து விசயமாலை சூடி நின்ற
உக்கிரபாண் டியன்இந்திர னுடனேசிங் காசனத்தில் கூடி

௫ இருந்திடக் கண்டுளம்பொ ருமைபூண் டொருபத்து நூற்றுக் கண்ணன்
அருகிலி ருக்கும்சோழன சேரனிருவரையும் பார்த்து

௬ இங்குவந் ததியம்பு மென்றுப சாரமுடன் கேட்க இப்போ
தெங்கள் நாட்டில்மழைஇல லாமல அடைந்திட்டோமென் றேர்க்க

௭ இந்திரன் மகிழ்ந்திருவர் நாடுமட்டும் மழைஉண் டாகத் தந்து
மூர்த்தி வரிசைசெயது விடைஅளித் தபின்னவ ரேக

௮ பின்னும் இந்திரன்பாண்டி மன்னனைபெற் றிருக்கும்பிர தாபமும் உயர்
தன்னரி யாசனததிற் சரியாயிருக்கும் இறு மாப்பும்

௯ மேலும் தனக்குமழை வேணடா திருக்கும் வீறும் தூக்கி சிங்கம்
போலிருக்க கக்கண்டொன்றும் புரியாமலே இந்திரன் நோக்கி

௰ அழகு பெறவரிசை செய்வது போலேஒரு ஆரம் அது
பழகி அளவிறந்தோர் தாங்கி வலிஇழக்கும் பாரம்

௧௧ நண்ணி அதைஅளிக்கப் புஷ்பஹாரம்போல் வாங்கிக் கொண்டு கயற்
கண்ணி மகன்தனது கழுத்தில அணிந்திருக்கக் கண்டு

௧௨ ஈங்கின்று முதல்நிம்ப மாலைஅணிந்திலகும் , தென்னு ஆரம்
தாங்கும் பாண்டியனென் றுன்னைத் தரணிபுகழுமெனச்சொன்னான்

சந்தவிருத்தம்.

வாசவ னிப்படி யோதவும் உக்ரகு மாரனு ளத்தது மருவாமல்
மாமது ரைத்தலம் மேவி யிருக்கமு மாரி செழித்திட இருநாடும்
மீசுர முற்றது போலே தனக்குள மேதினி முற்றுமெ ழிலிவாரா
மேல்மல யத்தினி லேவிளை வுற்றிடு வீர வரிப்புலி முதலாக
நாசமுறச் செயும் வேளையில் அத்தலை நாலு முகிற்கள தனில்மேய
நாடி அவற்றினை ஓடி வளைத்துறு நாணை விடுத்துயர் களிறேபோல்
வீசி மறித்துட னேசிறை யிட்டதை வேக மதிற்சில ருரையாலே
வேய் விறலிற்கனல் பாயுத லொபமென மேல்உலகுக்கிறை வெகுள்வானே.

உக்ரபாண்டியனுக்கும்இந்திரனுக்கும்உயுத்தம்.

விருத்தம்.

கடல்சுவறச் செய்ததுவும் ஆரந் தாங்கும்
களிப்பும்முகி லைத்தளைபூட் டிடும் செருக்கும்
படியிலொரு மனிதனுக்கித் திறம்யா தென்று
படையுடனிந் திரனெழுந்து கடலைச் சூழ்ந்
தடல்புரிய வந்ததுகேட் டுக்ரபாண் டியன்
ஆங்காரத் துடன்தனது சேனை சூழக்
கடுகிமத யானையின்மே லெழுந்து வந்து
தடுத்திட்டான சண்டைசெய்யத் தொடுத்திட்டானே.

அசாவேரி—சாப்பு.

பல்லவி.

தேவராஜனும் பாண்டியராஜனும் செய்தாரே சண்டை

அநுபல்லவி.

தேவ சேனையுடனே திரண்டெதிர்த் தொருக் காலே
காவலன் சேனையும் கைகலந்த துமென் மேலே

சரணங்கள்.

அடுத்துவின் னவர் கூடி ஆயுதம்பல
எடுத்தெறிந் தனர் கோடி வில்லிலேஅம்பை
தொடுத்தாழி மழைபோலே தென்னன்படைமேல்
விடுத்தாரே எதி ராலே அதனைக்கண்டு
தடுத்துப்பாண்டியன் சேனை ஈட்டினார் பல
சாபம்வளைத்துக்கணை பூட்டினார் பட்டுத்
துடித்துவானவர்சேனை களைக்க மார்பும்
தோளும்பலபாலவாத் துளைக்க மண்ணில
படுத்துக்கைகால்தலை தோளறுந்துயிர மாயப்
பரந்திரத்தவெள்ளம் புதிஅடைந்து பாயப்
கழுத்துக்கூழிபருந்து கழுகுகள் சொறிந்திடக்
கடுவன்முன்எலிபோல் இந்திரன்சேனை முறிந்திட்
களத்திலபலபல கவந்தம் ஆடவும்
காளிக்கூட்டங்கள் தாளம் போடவும்
வளைத்துப்பேயினம்சூழ்ந்து கவிக்கவும்
வாரிப்பிணமலை யாகக் குவிக்கவும்

பொங்குதன்படை யிறக்கக் கண்டுவாசவன்
கண்களில்பொறி பறக்க தய்யபஞ்சின்முன்
அங்கியதெனப் பறைக்க வெகுண்டுதெய்வத்
துங்கப்படையால் வதைக்க நினைத்துடனே
செங்கதிர்ப்படையைவிட் டேற்றினான் தென்னன்
திங்கட் படைவிட்டதை மாற்றினான் இந்திரன்
சிங்கப் படைஎடுத்துத் தாக்கினான் சரபத்
தேவன் படைவிட்டதை நீக்கினான் பினனும்
வகையுடனே இந்திரன் மோகனாஸ்திரம்போட
வழுதி வெகுண்டு ஞானாஸ்திரம்தொடுத் ததைச்ச
அங்கத ரிந்திக்திரன் போரில் மதிமயங்கி
அழரினைத் தினைப்புக்கொண் டிருந்து நிலைகலங்கி
ஆழும்துயரமோ டுள்ளம் வெதும்பவே
ஆயிரம்கண்ணும் நீர் ததும்பவே
கேளும்இந்திரனை தெறிபட் டோடவும்
கீர்த்திபாண்டியன் பங்கில் கூடவும்

பலமிகுந் திடம்வீரன் திருமதுரைத்
தலமதில் அதிகாரன் புகழ்பெருகு
நிலமிசை உயர்சூரன் விளங்கும்சந்திர
குலம்வளரும் கம்பீரன் தன்னுடன்பி னும்
வலனைவென் றவனுரம் பேசினன் நேரே
வச்சிரமெடுத்தவன்மேல் வீசினன் அதின்
வலிகொண்டெதிர்வர்க்கண் டிதான்தென்னன்
வளை ஆயுதம்சுழற்றி எறிந்தான் அது
தலையைவிடுத்துமணித் தலைப்பாகுடனேபோகச்
சாற்றும்முனிவர் முன்னே மொழிந்தது நிசமாக
சொலிகொண்டுவரும்வச்சிரம் தனைஅவித்திடக் குன்றித்
துயரத்துடனே நின்ற பாகசாசனன் சென்னி
துலங்கும்மணிமுடி தகர்த்துச்சிதைத்திடச்
சூழ்ந்தபேர்பர தவித்துப்பதைத்திடக்
கலங்கிஇந்திரன் ஓட்டம் எடுக்கவும்
கரைந்துவானவ ருலகில்அடுக்கவும் தேவ

விருத்தம்.

இந்திரன்சண் டைக்காற்று தோடி விண்சென்
றிருந்துதிரு த்திரனினுமா வலிய தென்னன்
சிந்தைவெகுண் டெறிந்தவளை தனது சென்னி
சிதையாமல் மணிமுடிமட் டோடும் போகச்
சுந்தரநா தன்கருணை தானென் றெண்ணித்
தொன்மதுரை நாட்டில்மழை பொழியச் செய்வோம்
எந்தன்மே கங்களைவிட் டிடவென் றெண்ணி
எழுதினன் வழுதிபெயர்க் கெழுதினனே.

இதுவுமது.

முடங்கல்வனை ந்தனுப்பிடத்தூ துவர்போய்த் தென்னன்
முன்புவைக்க அதின்வரலா றறிந் ததற்குத்
தடங்கல்சொல த்தெரிந்தொருவே ளாளனென் றும்
சதமகனுக் கிஷ்டம்அவன் பிணையினாலே
அடங்கியகார் களைவிடுத்தான் பகடு போர்லே
அவைமீண்டிந் திரன்விடையால் திங்கள் தோறும்
குடமதனால் சொரிவதுபோ லேமும்மாரி
கூர்ந்துபெய்ய யாவர்களும் தேர்கதிட்டாரே.

விருத்தம்.

மடுக்களும் குளமுமாறும் வாவியும் புனலாற் பூரித்
தெடுத்தசெந் நெலும்கரும்பும் ஈண்டப்பா ண்டியநா ட்டைப்
படிப்பவர்கேட் போர் துன்பம் பறக்கறம் முதல்நாலும் சேர்ந்
தடுத்து வாழ்ந திருப்பர் பின்னே அரனுவகதி ற்செல்வாரே.

ஆக விருத்தம்(யி) சந்தவிருத்தம்(க) தரு(க) கீர்த்தனை(ச) ஆக (கசு). முற்றும்

௨

பதினைந்தாவது.

## மேருவைச்செண்டாலடித்தபடலம்.

அவதாரிகை — விருத்தம்.

பாவலர் துதிக்கும் கூடற் பரமனார் அருளால் உக்ரன்
தேவர்கோன் மகுடம் சிந்தச் செய்தவா றுரைத்தே னிப்பால்
மாவலம் பெற்றமன்னன் வடமலை நாடிச் செம்பொன்
ஆவல்பூண் டதனைச் செண்டால் அடித்தவா றினிச்சொல்வேனே.

ஆநந்தபைரவி — திரிபுடை.

பல்லவி.

கேளும் முனிவரே கேளும் இவகதை கேளும் முனிவரே கேளும்

அநுபல்லவி.

வாழுமுக்ரபாண்டியனென்னுமன்னன்மலயமுனிவர்தமக்குமுன்னமேசொன்ன
சூழும்தூய சோமவாரவிரதம் துலங்குமன்புடனேபுரிந்து வருகக் கேளும்

சரணங்கள்.

௧ மாதரசா மியவள் காந்தி மதிவயிற்றினில் விஜயம்பெற் றேந்தி
ஓதியம்கண் பிறக்கமென்மேலே உம்பர்கோன் ஐயர் தனைப்பெற்றாற்போலே ஆ
ஜாதகாணம்செய்துபின்நாமதேயம் தழைக்கும்வீரபாண்டியனெனச்சூட்டினன்
வேதமுதலாப் பலகலையுணர்ந்துவில் வித்தைமுதற்கற்றதனைக்கண்டுவகையில்

௨ நாட்டினிலே வருமழைதேய்ந்து நதிமுதற்பல குளங்களும் காய்ந்து
வாட்டிடப்பல உயிர்களும்மெலிய மன்னன்பொருட்கு வகைஇன்றிநலிய ஆ
காட்டவும்பிரம கற்பமளவும்எல்லை கண்டிருந்தவர் முன்புமன்னவன்வெல்லக்
கேட்டிரவியைப் பார்த்துக்கோ ளிருப்பதால் இடையாதொருவருஷம்மழை
[என்றுசொல்லக் — கேளும்

௩ மக்கள்படும் துயரத்தைக் கண்டு வருந்திடும்தாய் போல்மன்னன் சென்று
முக்கண்ணன்முன்பிருகணீர்பொழிய முனைந்துலகமெலிவதனைமொழிய (முத்திட
அக்காலத்தைக் குறித்தன்புக் கெளியவன் அன்பிலாதவ ரெனமோனம் தொ
மிக்காம்துயராழிய கடலிலே வீழ்ந்திரவில்தன இருக்கைவந்தடுத்திடக் — கேளு

௪ மன்னுமுயிரைப் பசிப்பிணி வருத்த ராசனைத்தனைக் கொள்ளைகொண்டிருத்த
உள்ளமதிலா லோசனை பண்ணி உழந்துவிலக்கொ ணுக்குறை நண்ணி ஆ
பள்ளிஅறையைத் தள்ளியே தனித்தொரு பாரிடமாக நித்திரை செய்கையில்
வெள்ளியம்பலத்துடையவரேசித்தவேஷம்பூண்டவன்கனவில்வந்துரைத்திடக் —

விருத்தம்.

கனவில்வந்த சித்தரா சனைப்பார்த் திந்நாள்
காலமழை பெய்வதரி ததனை வேண்டி
மனம்வருந்த வேண்டாம்பொன் மலைக்குச் சென்றம்
மலைச்செருக்க டக்கிடவுன் செண்டால் தாக்கி
கனநிதிசேர் தொருகுகைஅம் மலையில் உண்டு
காய்ந்துனதாக் கினைசெய்துபொன் எடுத்தவ் வாயை
மூனமகற்றும் வாறடைத்துன் குறிவைத்துப் பின்
றூடென்றார் பெரும்புகழைத் தேடென்றாரே.

## உக்கிரபாண்டியன் மேருமலைக்குச் செல்லுதல்.

விருத்தம்.

சித்தரிக்க வாறுமொழித் தகன்றார் தூக்கந்
தெளிந்து விழித் தெழுந்திரவி உதிக்கு முன்னே
நித்தியகர் மங்களைசெய் தங்கயற் கண்
ணேசன்மல ரடிவணங்கி வ[illegible]ய் வந்து.
மெத்தவெற்றி தரும்சேனை [illegible]ல்போற் சூழ.
மேதமண்ட லம்தொமெங்கீழ் வாசல்த் தாண்டி.
அத்திசைநோ க்கிச்செழியன் தேரின்மேற் கொண
டடர்ந்திட்டான் வீரமுடன் நடந்திட்டானே.

சுருட்டி—ஆதி

பல்லவி.

நடந்தா னுக்கிரபாண்டியன் படர்ந்தபொன் மலையில்வைப்
படர்ந்தெடுத்துக் கொண்டு வந்தானே

அநுபல்லவி.

அடர்ந்தபேரிகை முதற்கொண்டடிக்க அண்டகடா கங்கள் வெடிபட
ஆன்சஅதிர ஓசைமூதிர அரசர்களும்முன் கண்டு வரிசைதரும்பொன்கொண்டு [நடந்தான்

சரணங்கள்.

சககரவாளக் குடைமுதற்பல சகலவிருதும் நீடத் துய்ய
சாமரைபல சுழற்றிடவுமெச் சரிக்கைபடுக்கள்நாட நேம
முக்கியஅந்தணர் ஆசீர்வசனம் மொழிந்தகூதைகள்போட செய்ய
முத்தமிழ்க்கவி வாணர்கள்கவி மொழிந்தவரவர் பாடக் கரு
மைக்கடலினும் மலையினும் நிலம்போற்கதி விளங்கச் செல்லும்
வயப்பரிக்கூட்டும் தேரணி அணியாகவே நெருங்கப் புலி
குக்கிகிழிய வாம்பரித்தேரை கூசெலுத்துமுன் னிணங்கத் தனுக்
கொடியும்வெம்புலிக்கொடியும்சூழ்கயல்கொடிமிகத் துலங்கப் பெருகும்
தெற்குக்கடலுத் தரத்தைநோக்கிச் சென்றெழுந்தது போலத்தாக்கி
மிக்கப்பறைகொண்டறையத் திக்குத்திசையும் மறைய
தக்கபடையும் நிறைய மொய்க்கப்புகழ்வந் துறைய நடந்தான
நத்திப்பாண்டிய நாடுகடந்து சோழநாடு கடந்து. தண்ட
நாம்தெலுங்க நாடென்கரு நாடுநாடு கடந்து . . பிர
சித்தமாளவ தேசம்விராட தேசம்சென்று கடந்து. மத்திய
தேசங்கடந்து கங்கைவளரும் காசிதேசம் கடந்து கடந்
தெத்திநெடிய மலையிடையல யோசனை கடந்து சிங்கம்
யாளிவிளங்கு மனிதரண்டோர் ஞவிடம் கடந்து யாக
நூற்றதாகவைந் நூற்றியிரண்டு யோசனை கடந்து பின்
ருக்குமலையும் பொழிலும்செறிகு மரிகண்டற் கடந்து இன்னம்
மற்றதுபோலெண் படைங்குகடந்து வரைந்தபாரத கண்டம்கடந்து
சுற்றிக்கரியும் திரள தத்திப்பரியுந்திரள
பத்திப்படையும் திரள வெற்றிக்கொடியும்திரள நடந்தான்

ந புரியும்பார்த கண்டம்விட்டு இமயமலையைக் கடந்து இம்
புருடகண்டத்தைக் கடந்தப்புறம்போ யேமகூடத்தைக்கடந்து அரி
வருடகண்டத்தைக் கடந்தப்புறம்போய் நிஷதகிரியைக் கடந்து சுற்றி
வளைந்திடுமிளா விரதத்திற்படையை நிறுத்தியவ்விடம் கடந்து நவத்
தருவிலிருந்து வீழ்ந்திடும்பல பலகனி யுடைந்து அதன்
சாறுவலமாயோடும்சாம்பூ நதக்கரை யடைந்து அதற
கருகேசுரா று மாற்றுயர்ந்தபொன் னரணியம் அடைந்து அடைந்
தவிடத்தில்உள்ள பூதமைநோக்கிச் சூழ்ந்துவர் தடைந்து அகை
வரையில்லாப்பெரு நிதிகணெடுக்க வந்ததற்குத்தென் பாலவந தடுக்க
கருமுகிலும் கண்டஞ்சத் திரைகடலும் கண்டஞ்சச்
சுரபதியும் கண்டஞ்சக் கிரிபலவும் கண்டஞ்ச கடந்தபன்

## உக்கிரபாண்டியன்மேருவைச்செண்டாலடித்தல்.

விருத்தம்.

அடாவந்திப் படிமேரு மலைக்குத் தென்பால்
அடுத்தெமைஎன் றவன்செங்கைச் சிலையே கோளும்
சுடரும்வானோர் திடுந்தேவா லயமே என்றே
துதித்திடவும் சேர்ந்துவரா திருக்கக் கண்டு
திடமிகுழ்தன் வெகுளியும்அம் மலைச் செருக்கும்
தீரும்வகை கருதிஅதன் சிகரம் தனனில்
புடைபரந்த வாசவன்மா மெள்லி சிந்தப்
பொடித்திட்டான செண்டதனால் அடித்திட்டானே

கல்யாணி சாப்பு.

பல்லவி.

செண்டுகொண் டடித்தானே பெருகும்உக்கிரச் செழியன் மேருவைத்தானே

அநுபல்லவி.

செண்டினாலே அடிக்கச் சிகரபந்தி துடிக்க
அண்டர்பதிலும் மாடம் அடுக்கடுக்காவெடிக்கச் (செண்)

சரணங்கள்:

கருதி அசைடாநின்ற கலங்கஅடித்தெழுந்த
கனகப்பாந துபோபோலே எழும்ப அதைவளைந்த
பருதிமண் டலம்விண்டு ாாயப்பொடிந்து விந்தப்
படியில் விழுந்தாற்போலே பலமணிகளும் சிந்தச் (செண்)
அடைகல்லா இருக்கின்ற மலைநாலும் ஒடுங்கிட
அல்லாமல் ஒருநாலு கிடங்கலை நடுங்கிட்த்
தடமலர்ப் பொழில்ஒரு நாலுமேசொங்கிடத்
தருக்கள் நாலும்அதனின் வேரோடே பிடுங்கிடச் (செண்)
சுற்றி இருக்கும் எட்டுக் கிரியுமே எழுந்து துள்ள
சூழும்சாம்பூநதம் தளம்பித்தன் நிலை தள்ள
சித்தசாரணர் முத லோர்கள் மனமும்தெள்ள
சேடன் முடிமணியும் சிதைந்து விளக்கம்கொள்ளச் (செண்)

## மேருவிர்வந்துஉக்கிரகுமாரனுக்குநிதிஅளித்தல்.

விருத்தம்.

செண்டுகொண்டிவ் வாறடிக்கக் ளம்பி மேரு,
தெய்வமணி முடிநாலும் கிரீடமும் போல்
கொண்டுயர்ந்த திண்புயமும் சோதி மேவும்
குடையும்பெற் றுருத்தெழுந்து காணி நிற்கக்
கண்டுசினம் தணிந்திது வரைக்கும் வாராக்
காரணமே தெனஉக்ர வர்மன் கேட்கப்
பண்டுதனக் குளபிழையை வித்தகா கேட்
பாயெனவே நியாயமுடன் பகரும்தானே.

திபதை— ஆகிரி, காம்போதி. (ஜாதத

க வாருமையா தேவ பாண்டியகுமாராஎன் வர்த்தமானம்சொல்லக் கேளும்
தாரணியோர்கள் துதிக்கும் கயற்கண்ணி தன்னுடன்கூடவில்வாழும்
உ சோமசுந்தரக் கடவுளைநித்தம் தொழுதிந்த ரூபத்தைக்கொண்டு வெகு
க்ஷேமமுடனே வருகையிலேஒரு நேரிழையாள் தனைக் கண்டு
ங காமம்தலைப்பட் டரனடியைத்தொழு காமலர்க்ஷேமத்தை விட்டேன விட்ட
திமையிமித் தத்தினாலேஉனதுகைச் செண்டினால் தண்டிக்கப் பட்டேன்
ச ஈசன் அடிக்கபராதம்புரிந்ததை எனதனுக்கில்லாமல் நீக்கச் செய்த
ரா்சனேஎன்னை ஒருபொருட்டாயிங்கு நாடியதென்னென்று கேட்க (ர்ண
ரு மாநிதியைக்குறித்திங்குவந்தேனென றுமன்னவன்சொல்லமுன்னாலே சொ
மாநிழலுக்கு ளிருக்கினறவைப்பைஅம் மாமலைகாட்டக்கை யாலே
சு காட்டியசெம்பொன் அறையைத்திறந்து கனகங்களைப்பல கோடி எடுத்
திட்டத்தனது பெயராலேமுத்திரை இடடுப்பின் அவ்வகை மூடி
எ மீண்டுபடையுடன் தென்திசைநோக்கி விரைந்துநடக்கும்தேரூர்ந்துஒளி
நீண்டவரையை விடுத்துமனிதர்கள் நீடியபூமியில் சார்ந்து
அ அந்தந்ததேசத்து மன்னவர்தங்கள் அனிகத்துடன்அன்பு கூர்ந்து எதிர்
வந்துபசாரம் புரியத்தமிழின் வளம்தரும் நாட்டைச் சேர்ந்து
பொன்எயில்சூழும் மதுராபுரக்கோபுரம்கண்டுதேரைவிட் டிழிந்து மணி
பன்னகபூஷணன் தன்னை அஷ்டாங்கம் பஞ்சாங்கமுடன்பணிந் தெழுந்து
௰ தூய்யமறையோர் துறந்தோர்அறத்துறைத் தொண்டர்முதல்எதிர்வந்தார்
வையைநதியைக் கடந்துதமது மதுராபுரம்வந்துலந்தர் (வர

விருத்தம்.

மேருமலை அளித்தபொருள் அனைத்தும் அந்த
வியன்மலைபோற் குவித்தந்நா ரூளோர்களும்
திரமுடன் உக்கிரனீந் துலகா ளுங்கால்
செகதீசன் அருளால்பாண் டியநா டெங்கும்
காருலவி மழைபொழியப் பயிர் தழைக்கக்
கண்டோர்ஈ துரையபவர்கேட் டவர்துன்பம் தீர்ந்
தாருமிக போக சம்பத்தடைந்தந் தத்தில்
அரனுலகைஅடைந்திருக்க லாகும் தானே.

ஆக விருத்தம் (சு) கீர்த்தனை (ரு) தரு (க) ஆக (௰). பதினோந்தாவது முற்றும்

௨

பதினாறாவது.

# வேதத்துக்குப்பொருள் அருளிச்செய்தபடலம்.

அவதாரிகை—விருத்தம்.

மேருவைத் தாக்கி உக்கிரன் வியன்முடி மகனுக் கீந்து
சீருறும் பரமனோடு சேர்ந்தவா றுரைத்தே னிப்பால்
வீரபாண் டியன்தன நாளில் வேதத்துட் பொருளை நைமி
சாரணி யருக்கீசன்வந் தறிவித்த தினிச்சொல் வேனே.

## நைமிசாரணியமுனிவர்வேதப்பொருளறியாமல்மயங்குதல்.

இதுவுமது.

நண்ணிய தருக்கள் சூழும் நைமிசா ரணியம் தனனில்
கண்ணுவ முனிசாண் டில்லியர் கருக்கரை முதலோர் வேதத்
துண்ணிறை பொருளை ஆராய்ந் துள்ளமும் முகமும் வாடிப்
புண்ணிய குருவைத்தேடிப் பூசிக்க யோசிப்பாரே.

மோகனம்—சாப்பு.

பல்லவி.

இந்தவிதம்என்ற றியாமலேமனமும் ஏங்கிஇருந தனரே

அநுபல்லவி.

சந்ததமும்சக நீசனுக் கன்பு
தழைக்கும்தவத்தை இழைக்க முனிவர்கள் இந்த

சரணங்கள்.

பூதங்கள் ஐந்தும் இடம்தமோதிப்
புவனங்களோடயன் மாலிந்திரபதமும்
வேதங்க ளும்முதல் உண்டானதுபோலவே
வீயும் படிககூழி காலம்அழிக்கின்ற இந்த

வாலிரவிமுன் கமலம்போல்சோதிமுன
வையகமுற்றும் மலருவதால்பண்டு
போலவே முத்தொழில் செய்திட மெய்ப்பொருள்
புநதியிலே அருள் பூண்டிருக்கின்றதும் இந்த

மடலுடை காயிக் கமலத்தில்மேவிய
வண்டுபோலேபிர மாவந்தமைக்கும்போ
தாலம் அயின்றவன் வாக்கில்பிரணவம்
அம்மந்தநில்வேதம் உருக்கொண்டெழுந்ததும் இந்த

## ஆரபத்தமுனிவர் மற்றைமுனிவர்களதுவருத்தத்தைமாற்றுதல்.

விருத்தம்.

புங்கவமா முனிவரிக்தப் படிமயங்கும்
போதில்ஆர பத்தன்என்றோர் முனிவரக்கண்

டங்கவலர வணங்கிடப் சரித்திடுங்கால்
அம்முனிவர் விருப்புவெறுப் பிகந்திருக்கும்
உங்கள்முகம் வாடியதே தென்னவேதத்
துட்பொருள்தோ ணுமலிருப் பதனாலியாங்கள்
சங்கையுற்றோம் என்றிடக்கேட் டவரைநோக்கிச்
சாற்றுவார் மனமயக்கம் தேற்றுவாரே.

உசானி ரூபகம்.

பல்லவி.

கேளும் கேளும் முனிவரே கேளும் கேளும்

அநுபல்லவி.

வாழும்நைமிசா ரணியம்தனில்நித்தம் மாதவம்செய்து மகிழுமுங்கள்சித்தம்
சூழும்மயக்கங்கள் நீங்கும்வழிதேடி சொல்லுகிறேன்ஒரு விபரம்அதைநாடிக்
கேளும்.

சரணங்கள்.

க மாதவம்புரிந் தறிவதல்லது மற்றொன் றாலறியக் கூடுமோ என்றும்
நிதையகற்று மத்தவமும்புண்ணிய க்ஷேத்திரத்திலே இருந்துசெய்தல்நன்று
ஓதும்புண்ணிய க்ஷேத்ரத்திலும்மிக உறுதியாம்சிவ ஸ்தலத்திலசெயச்சென்று
அத்தலாலசிவ ஸ்தலத்தின்வலிஅறிந தடுத்துச்செய்தற்கினிதொடுப்பதில்லைக்
கேளும். (கண்டு

உ அம்புவியிலரியதலமியாதெனில் அகிலமனைத்தும்த னங்கமாச் சொல்லும்
சம்புவின்தலைக்கா திரணடுவிரற்கடைதன்க்குமேலாக விளங்கியே மல்லும்
உம்பர்மாமுனி வோர்கள்முதற்றலுத் துறுதியாலதின் பயனடைந்து வெல்லும்
தென்புமிகுந்தறம்சாஸ்திர முரைக்கின்ற சீவன்முத்திபுரமேவிச்செய்யுச்செல்
கேளும் [லும்

ந அந்தத்தலத்தினிலொளிவிடும்விமானத் தருகுதென்றிசைவடநிழலிருந்து
சந்ததமும்வழி படுமுனிவருக்குச்சகலவித்தையும் போதித்தருள் தந்து
சுந்தரம்பெருகுமூர்த்திஉங்கட்குச சுருதிப்பொருள்கண்டு சொல்லுவனுவந்து
சிந்தைமகிழ்ந்தவன் முன்னேதவம்செய்வீர்சீக்கிரம்மனமெய் வாக்கதருகிந்து
கேளும்.

விருத்தம்.

அடைவுடனீ தரபத்த ரைக்கக் கண்ணு
வாதிமுனி வோர்களவ ருடனெழுந்து
படிபுகழும் கூடலிற்சென் றம்பொற் கஞ்சம்
படிந்துசிவ தரிசனம்செய் துருத்திராக்ஷ
வடமுமறைப் புஸ்தகமும் விழிமூன் றும்நான்
மலர்க்கரமும் போதமுத் திரையும்பூண்டு
வடநீருக்கீழ அமர்ந்திடுமூர்த் தியையும்போற்,
லைகையுடனே தவம்புரிந்து மகிழ்ந்திட்டாரே.

## தக்ஷிணாமூர்த்திவருதல்.

இதுவுமது.

தவமுனிவ ரிந்தவிதம் மறைமு தல்மே
தாமனுவெ ழுத்திருபத் திரண்டு மோர்க்கச்
சிவபத்த முனிவரானல் தெளிந் தறிந்து
தேள்முதல்மார் கழிவரைக்கும் நியமம் பூண்டு
கவனமுடன் தருப்பணமோ மாதி செய்தா
காரமுதல் தவிர்ந்துதவம் புரியும் போது
சிவமறையின் பொருளாதி மூர்த்தி ஆங்கு
நாடினார் குருவடிவைக் கூடி னாரே.

புன்னாகவராளி சாப்பு.

பல்லவி.

தக்ஷிண மூர்த்திவந தாரே

அநுபல்லவி.

விருக்ஷத்தடியில்மோனம் விளங்கிக்கொண்டிருந்த தக்ஷி

சரணங்கள்.

எதிர்கொண்டுமுனிவோர்கள் துதிக்க முப்பத்
திரண்டிலக் கணங்களும் குறைப்பாயல கதிக்கப்
பதினாறு வயதெல்லை ரேக்க . வேதப்
பண்பு பெருகுமறை யோன்வடி தக்ஷி
புண்டரம் ஐக்கிடம் துலங்க காதில்
பூண்டகுழையொளிகண் டிருள்வலி விலங்க
கண்டருத் ராக்ஷமுத் திலங்க தொண்டர்
கனமன்றக்கும்பாச பந்தங்கண் டொதுங்க தக்ஷி
உரத்திலே தவளநூல் மின்ன வெண்பட்
டுத்தரியம்வலமா யொளிஎங்கும் பன்ன
கரத்தணிதோளணி மின்னப் பட்டி
கையுந்தரித் திடையிற்கோ வணமது துன்ன தக்ஷி
வண்டுக ளொலிப்பது போலே செந்தா
மரையடிமேற்சிலம்பொலியும்தன் னாலே
தொண்டர்மனத்திருளப் பாலே ஓடத்
தூரத்தும் கண்டாமணியு முழங்கமென் மேலே தக்ஷி
வலக்கையில் பவித்திரம் நீடப் போதம்
வரைந்தபுஸ்தகம்இடககரத்தினில் கூடப்
பலத்தமுனிவரும்கொண் டாட வேதம்
பாதுகையாயிரு மலரடி சூடத் தக்ஷி
கறைமதுகரங்கள்விஸ் தரிக்கச். செழும்
கமலத்தேனுண்டொலிப் பதுபோலே சிறக்க
மறையோனைச்செவிவழி சிறக்க பத்தர்
மனவயல் ஆனந்தப் பெரும்பயிர் வளர்க்க தக்ஷி

விருத்தம்.

தக்ஷிண மூர்த்தியிந்த வகையாத் தோன்றச்
செழுமதியைக் கண்டொலிக்கும் கடலைப் போல
அக்ஷமதாற் கண்டுவகை வெள்ளமேற் கொண்
டடும்கூற்றை உதைத்ததிரு வடியி ற்றாழ்ந்து
ரைக்ஷதரும் பல்கலைக்கா தார மாகி
நிறைநதமறைப பொருளாகி நின்றே யெம்மேல்
பக்ஷமுறும் எனமுனிவர் சரண மென்றே
பாடினார் மெய்புளக மூழ்ந்தே.

தக்ஷிணாமூர்த்தி முனிவர்களுக்கு வேதப்பொருளருளிச்செய்தல்.

இதுவுமது.

சீலமுனி வர்கள்துதிக்க உங்களாசை
செப்புவீ ரெனயாங்கள் விழையும் வண்ணம்
ஞாலமுழு தும்பிழைக்கும் வண்ண மாதி
நான்மறையின பொருளையுரை செய்வீ ரென்ன
கோலமுடன் பந்தவினை தவிர்க்க வந்த
குரவன்மன மகிழ்ந்தவர்க ளுடனே கூடி
மூலலிங்கம் தனக்குமுனபோய் வேதார்த்தத்தை
மொழிகின்றார் கருணைமழை பொழிகின்றாரே.

புன்னாகவராளி ரூபகம்.

அந்தணரே கேளும்மறை அரும்பொருள்க ளெல்லாம்
அறிந்ததனாற் போகமுத்திக் கதுகருவிச் சொல்லாம்
இந்தவுல கிற்சுயமாய் எவைக்குமிதுத் துங்கம்
என்றிலங்கும் தத்துவமாம் இச்சுயம்பு லிங்கம்

நித்தியமாய்ச் சுருதிக்கெல்லாம் நீதியாய்மெய்ப் பொருளாய்
நிச்சயமா யத்துவிதமாய் நிருமலமாய்த் தெருளாய்
மற்றும்நிறை ப்ரம்பரமாய் மாசகன்ற மணியாய்
மன்னியவிஞ் ஞானநிரா மயமாய்நூல அணியாய்

அறையும்பரப் பிரமமிதே ஆமெனவே முழங்கும்
ஆதிமறைக் குட்பொருளே அதின்வடிவா யிலங்கும்
உறையுமிந்தப் படிவமொனறே உறுதியொன்றே நன்னூல
ஓதியுணர்ந் தறிவுடையார்க் கொக்குமிதே முன்னால

ஆகையினால் வேதமொன்றே அதன்பொருளும் ஒன்றே
அனந்தவிதம் சாகைதழைத் ததில்விளைந்த தன்றே
ஏகனிவ னுக்கிணையால இவ்வுலகெந் நாளும்
எடுத்தல்அளித் தல்முடித்தல எனும்விபரம் கேளும்

விதியுருவாய்ப் படைத்துலகை விண்டுருவாய்க் காத்து
மேலஅரனு யழித்திவைமுவ் விபுதருக்கும் மூத்து

அதிபரமா காசசரீ ராதுபடைத | தநதி
அந்தமிலலா விக்கமதில் அதிலுறையும் | சோதி

௬ அடியின்முத லான்மதத்துவம் ஆனஅயன் | யாகம்
அதில்நடுவித் தியாதத்துவம் ஆனஅரி | பாகம்
முடியில்சிவ தத்துவமாம் முக்கணரன் | பாகம்
மூன்றினுக்குள் தத்துவங்கள் முளைத்தெழும்அ | நேகம்

௭ ஆத்துமதத் துவம்தனிலே அகரஉருப | பிறக்கும்
அடுத்தவித்தியா தத்துவமாம் அதில்உகரம் | பிறக்கும்
வாய்த்தசிவ தத்துவத்தில் மகரஉருப் | பிறக்கும்
வந்திதுமூன றும்பிரணவ வடிவம்கொண்டு | சிறக்கும்

௮ பிரணவத்தில் காயத்திரி பிறக்கும்ஒரு | மூன்று
பின்னும்பத பேதத்தினால் பிறந்திரண்டாத் | தோன்றும்
ம்யா தெனச்சமஷ்டி யெனும்வியஷ்டி | யென்னும்
இரண்டும்உல கினிலெவைக்கும் ஏதுவாக | மன்னும்

௯ திரிபதையிரண் டிலும்இவன்றன் திருவருளவலி | யாலே
செப்பரிய மறைநாலும் செனித்திடும்தன் | னாலே
வருமறைநா லுக்குளிந்த வள்ளலஅரு | ளாலே
மட்டடங்காப் பிரணவமுதல் மந்த்ரமுண்டா | மேலே

௰ சொன்னமுதற் றூரகத்தில் தோன்றும்அக | ராதி
தொடங்கும்எழுத் துக்களெலலாம் தோற்றிவரும் | இயாதி
பின்னும்அந்த அட்சரத்தில பெருகும்சிவ | ஞானம்
பிறக்கும்இவன் நடுமுகத்தில் பேசுமேதி | தானம்

௧௧ கிழ்முகத்தில் இருபத்தொன்றுக் கிளைக்கும்முதல் | வேதம்
கேளும்தென்பாற் சதஉருவாய்க் கிளம்புமிரண்டாம் | வேதம்
மேல்முகத்தா யிரம்உருவாய் விளையும்மூன்றும் | வேதம்
மேல்வடக்கில் நவ்உருவாய் விளங்கும்நாலாம் | வேதம்

௧௨ அம்மறைநா லால்வருணம் ஆச்சிரமும் | நாலாம்
அறம்திரும்யா காதிகருமம் ஆமிரண்டு | நூலாம்
கன்மவழி நடக்கச்சொல்லிக் காட்டும்முதற் | காண்டம்
கைவல்யமெனு ஞானவழி காட்டும்இரண்டாம் | காண்டம்

௧௩ அந்தமுதற் காண்டம்சிவர்ர்ச் சனைமுதலா | கிறையும்
அவ்வினையைச் செய்யச்சொல்லி அறிவிக்கும்வா | றுறையும்
இந்தவகை யன்றியும்பின் இனியொரு | காண்டத்தும்
இவன்வடிவில் லாவடிவை யேதெளிந்து | ணர்த்தும்

௧௪ வேரிலேதண் ணீரெடுத்து விட்டுவர | லாலே
மேற்கவையும் தழைத்தோங்கி விளங்குவது | போலே
பாரும்இவ னைக்குறித்துப் பண்ணும்உப | சாரம்
பங்கயன்மால் முதலெவர்க்கும் பரவுமதின் | சாரம்

௧௫ ஓத்தமகிழ்ந் தனுதினமும் செய்தமுறை விளைக்கும்
செல்வமும்நற் கதியும்பெறச் செய்யும்இவர்ச் சனைக்கும்
இத்தரையி லுள்ளசிவ லிங்கமெல்லாந் தழைக்கும்
இச்சிவகோ சம்மேவைக்கும் ஏதுவாக இழைக்கும்

௧௬ புரியுமறை பலமுகத்தால் புகழ்ந்திளைக்கும் நெறியைப்
பொருதிவிறைந் தகண்டபரி பூர்ணமாமிக் குறியை
கருமநெறி யாலும்ஞானம் கதிக்குநெறி யாலும்
கருதரிய மறைப்பொருளைக் காட்டிச்சொன்னேன் மேலும்

௧௭ கருமத்தினல் ஞானமுண்டாம் கருமம்சித்த சுத்தி
கதிக்கும்சித்த சுத்தியினல் கருதும்தர்ம பத்தி
தருமத்திறைற் சாந்தியுண்டாம் சாந்தியினல் யாகம்
தழைக்கவரும் கிரியையினல் தான்வரும்வி வேகம்

௧௮ ஞானமதாற சிவதரிச னதிபத்தி பூசை
நற்சிவலிங்க ப்பிரதிஷ்டை நல்லடியார் பூசை
ஆனருத்ரா க்ஷம்தரித்தல் அரியகுரு பத்தி
அனைத்தினையும் தெரியல்ஆகும் ஆமேஎண் சித்தி

௧௯ வேதமொழி மதங்கட்கெல்லாம் வேதமேபி யாணம்
விளங்கும்அதன பின்தொடரும் ஸ்மிருதிகள்பு ராணம்
ஓதும்அ ததம்இனமாய் உரைக்கும்அந்த ஸமிருதியே
உண்மையினல் ஸமார்த்தமென்ப துயர்நதமு றுதியே
உறுதியெனு மார்த்தவழிக் கொற்றுமையாம் துறையே
உலகத்திலே வைதிகமென் றுரைத்திடும்இம் முறையே
முறைநெறியே மறைபுகலும் மொழிக்குள்ளிதே தீர்க்கம்
மோனமுனி வோரேயிது முற்றும்சுத்த மார்க்கம்

விருத்தம்.

தெருளிடும்போ கம்வீட்டுக் கேதுவாயும்
சிவஞான மயமாயும் நிறைந்தவேதப்
பொருளைமொழிந் திப்பொருளைச் சொல்வதெல்லாம்
பொருளிலையென் றுரைத்தந்த வழிதப்பாத
மாமுனிவர் முதுஇல்மலர்க் கரத்தால்நீவி
மதுரேச னிலிங்கத்துள் மறைந்தானித்தை
உரைசெய்வர்கேட் பவர்கள்பர சிவஞா னம்பெற்
றுறைகுவார் சிவனுலகைப் பெறுகுவாரே

ஆக விருத்தம் (அ) கீர்த்தனை (௯) தரு (௧) ஆக ௧௨
பதினைாவது வேதத்துக்குப்பொருளருளிச்செய்தபடலம்முற்றிற்று.

——(0)——

சிவமயம்.

பதினேழாவது

# மாணிக்கம்விற்றபடலம்.

அவதாரிகை—விருத்தம்.

மண்ணினி லுயரும் கூடல் வாழுமுக் கண்ணன் அன்பால்
நண்ணுவ முனிசாண் டில்லியர் கருக்கடர முதலோர்க் காகப்
பண்ணுறும் வேதார்த்தத்தைப் பகர்ந்தவா றுரைத்தே னிப்பால்
நண்ணிமா ணிக்கம்விற்ற நலமினிப் புகலு வேனே.

மோகனம் சாப்பு.

பல்லவி.

இன்னம் அறிந்திடுவீரே — ஜக தீசன் திருவடியாரே

அநுபல்லவி.

இந்நிலம்காத்து வரும்வீர பாண்டியன் தன்னைமருவும்வைப் பாட்டியர்குலதியி (ல்
மன்மதன்போலேகு மாரர்உதித்தவர் வல்லாயிர்க்குக் கலைபோற்கதிக்கையில்

சரணங்கள். (இன்னம்

பின்னும்தனக்குக் குலமகனவேண்டுமென் றெண்ணி . தன்
பிரியமுள்ள தேவியுடனங்கயற் கண்ணி .
அன்னையுடன் சுந்தரேசரை உத்தேசம் பண்ணிப் பணிந்
அஷ்டமியிந்துவா ரம்முதல் நோற்பது நண்ணி
முன்னவனின்னரு ளாலேசிலநாள்
முயன்றபின் கர்ப்பமிருந்தாள் வயிற்றினில
சின்னதொரால்மலிந் தெனமூனைத்தொரு
சேயன்தரணியை ஆளவநதுற்றபின் இன்னம்

அத்தனிச்செல்வ மகனுக்குநான்முறை . யாலே ஜாத
காதிகருமம் நடத்திவளர்கையில் மேலே
மற்றுமொருதினம் வேட்டைக்குச்சென்றாழி னூலே மன்னன்
வன்புலிவாய்ப்பட் டிறந்தானதுகண்டிப் பாலே
சிற்றிடைமங்கையர் மொய்த்தேயுரந்தனில்
செங்கையெறிந்தவர் தங்கள்வரிக்கணீர்
மூத்துமுத்தாகவ ழியப்புலம்பவே
மூன்றாரிலுள்ளவர் யாரும்வருந்தவே இன்னம்

முந்தியுதித்தவைப் பாட்டிகுமாரர்கள் . நோக்கி முழு
மோசத்தொழிலுக் கிதுவேசமயமென் றுக்கித்
தந்திகுதிரை நிதியாபரணமும் ஆக்கி ராசன்
நன்மகுடத்தையும் கொண்டொளித்தோரிடத்தாக்கி
சந்தோஷமாக இருக்க அமைச்சர்கள்
தக்ஷணமிராஜனுக் குக்கருமாதிகள்
மைந்தனைக்கொண்டு நடத்தியம் மைந்தற்கு
மாமுடிசூட்டி வணங்க நினைத்தபின் இன்னம்

தெரியமொழிக் கிடஅவரைப் பார்த்தே எம்பாற்
செம்பொன்னூ றிரம்பத்துக் கோடி பெற்று
ஒருமணிபோற் பலமணியுண் டென்று துன்பம்
ஓட்டுவோர் தரம்தரமாக் காட்டு வாரே.

வலாசுரன்மகிமைசொல்லுதல்.

விருத்தம்.

புங்கவமாக் கரும்படத்திற விழக்கு நோக்கிப
பொருந்தவிருக் கிந்திராதி திசைக ளெட்டும்
மங்கலமுத் தாதிசொரிந் திடைமா ணிக்கம்
வைத்துவலா சுரனுடற்பின் னமிதென் றோத
அங்கமணி யானதென்ன அவன்யா ரெங்கட்
கடிவரலா றுரையுமென அமைச்சர் கேட்கச்
செங்கைகமழ மாறொளித்த வணிக ராய்ந்து
செப்பியதன் விபரமவர்க் கொப்பிப் பாரே.

அடாணா ஆதி.

பல்லவி.

வலாசுரன் மகிமையைக்கேளும் மந்திரிமாரே வலாசுரன மகிமையைக்கேளும்

அநுபல்லவி.

சந்திர கலாதரன் அருளாலமரர்க் களத்தெவரா லும்நசித்தல்
இலாவரம்பெற் றூழ்வகதால்மெய் எங்குமணி களாயபெற்ற வலா

சரணங்கள்

வரமடைந்தெழுந்தபோதே அமர்குறித்து
வானவர்குலகின்மீதே சென்றுவிண்ணவர்க்
கரசனுடனேதப்பாதே புரிந்திட்டதோர
தமரர்கோனெதிர்நில்லாதே தோற்றுப்போனவன
சுரருடனதிரும்பிவந்து சூழ்ந்துபோர்செய் யாமற் கொலைத்
தருதியேவஞ்சித்துன்வலி காசினியெங்கெங்கும் சேலைத்
தருகுவேன்வேண்டியவரம் தனைக்கேளென்றிந்திரன சொல்லப
பொருதியேநகைகொட்டியிடி போலேவகைதிட்டான வகை வலா

உ இந்திரனைப்பார்த்துமுன்னாலே கண்டோர்சிரிக்க
எடுபட்டோடிப்போன தாலே உன்னுடைபுகழ
இந்தஉலகத்தின மேலே வீணாய்ப்போமநீ
ஈயும்வரமும்என் பாலே ஆகுமலவாமல
என்றனக்கிசனிடத்தில ஏற்றிடும்வரமிருக்க
உன்றனிடம்வாங்கத்தக்க தொன்றுமில்லைநீ இரக்கத்
தந்திடுவதேயெனக்குத் தருவ லவாமலே மிக்க
நிந்தையாம்புகழ்முடிக்க நினைப்பதேனவென்றுன கதிக்க வலா

தேவர்கோனதனைக்கேட்டுக் கைகூயிலயாகம்
செய்யநாம்துவசம்நாட்டும் போதிலாவாக
வாவெனத்தவத்தைநீட்டும் ததீசிமுனி

வரன்புகழுடம்பொன்றீட்டும் அவ்லாமிலென்போல்
மாவிசயத்தாலும்தேக மணிகளாலுமேயி ரண்டுண்
டாவதாலநட்டவன்நீயே அமரருடன்கூடிக் கொண்டு
யாவரும்புகழ்ப்பதாலே எனக்கறம்புகழைக் கண்டும்
ஈவதேபெருமையாமென் றிசைநதளித்துவகை மண்டும் வல

விருத்தம்.

வலனுவந்திவ் வரமளித்திட திரானைநோக்கி
மைந்தனுக்குத் தனதரசீந் துயர்ந்தவிந்த
மலையெனவே நிமிர்ந்துமகச சாலைவாயில்
வரீதெனையூ பந்தனிற்பட் டிப்பீரென்னக்
குலிசதரன் கண்டுநிதிக் கவும்வின்னோர்பைக்
குசைக்கயிற்றாற் கட்டவும்கண் டரவம்போல
நிலைகொளத்தேர்ந் தவன்வாயைப் புதைத்துயிர்ப்படை
நீக்கவும்சத் தியவுலகைத் தாக்கினனே.

ஆனந்தபைரவி ஏகதாளம்.

பல்லவி.

இன்னமும்கேளும் அமைச்சரே இன்னமும்கேளும்

அநுபல்லவி

இன்னமும்கேளும் பசுவாம்வலாசுரன்
சென்னியின்பக்கத் திருந்துயிர்கொன்றவன்
தன்னுடைவச்சிர வேலாலவனுடல்
பின்னம்படவே பிளந்தவன்செய்ததை . இன்ன

சரணங்கள்.

இத்தகையாகும் பசுவைச் சுருதியு
ரைத்தபடியே வபையை எடுத்துக்குண்
டத்தெரிதன்னிலோ மஞ்செய்து தேவர்கள்
சுற்றிலு மொய்த்து மகத்தைமுடித்தபின் இன்ன.
உம்பர்துதிக்கும் படிக்குப் பசுவாக
அன்புபெருகு வலனசோரி மாணிக்கம்
என்பதுவச்சிரம் பித்தம்மரகதம்
வெண்பலனுமுத்து மயிர்வயிரியம் இன்ன
தங்கும்நிணம்கோமே தகம்தசை பவ
ளங்கபமேபுரு டராகமா யிரு
கண்களும்நீலம் இப்படிநவ ரத்தி
னங்களுலகில் விளங்கும்விபரத்தை . இன்னம்

விருத்தம்.

மனிதனங் கத்திற்றோன்றும் மணிகளுக் கசுத்த முண்டாம்
எனிலறத் தாலேசீவன் இறந்தபுண் ணியவான் தேகம்
தனிலுதித் ததனாற்பூணத் தக்கதென் றமைச்ச ருக்கு
மனமகிழ்ந் தையனை வரியர்தேர்ந் துரைக்கின் றாரே.

## மாணிக்கவரலாறுகூறுதல்.

### விருத்தம்.

ஓதரிய நவமணியும் வலன்அங் கத்தில்
உதித்திருளை முகம்பிளக்கும் ஒளிசேர்ந் திந்த
மாதலத்தில் இருக்குமிடம் நிறங்கள் சாதி
வரும்தெய்வ மொளிகுற்றம் நீக்கி நன்றாய்ச்
சோதனைசெய் தணிவோர்க ளெய்து மேன்மை
தொடுத்துவரும் பயன்முதலாக் கேளுமே யென்
றுதியிலமா ணிக்கவர லாறமைச்சர்க்
கறைகின்றார் தொண்டருளத் துறைகின் றாரே.

காம்போதி, ஆதி.

பல்லவி.

மாணிக்கவர லாறுசொல்வேன் மந்திரி மாரேகேளும் மாணிக

அநுபல்லவி.

ஊணிக்கேளும் வலனுடலத்திலதோணிப்பெருகும் குருதியிடத்தில்
உதிக்கும் கதிக்கும் மதிக்கும் விதிக்கும் மாணிக்க

சரணங்கள்.

ஆதியில் கிருதயுகமுதல் நாலு யுகமும்வழியே மக்கம்
அங்கமிருந்தக ளம்புரம்தும்புரு சிங்களமிந்நாலு தேசத்திடைப் பட்டுச்
சோதியொன் பதுபிறந்தது கேளும். தீபங்கமலங் கோபம்
துங்கமிரும்மாது ளம்பூவிரையமுல் செங்குவளையின்மி னியுடுப்போலதிற்
சாதிநா லாப்பிரிந்தது கேளும் பிரமசாதி முதலா (க்
சாதரங்கம்குரு விந்தம்சௌகந்திகம்.மீதுகேவாங்கம்எனும் பெயர்பெற்றது
கேதமில் லாநிறங்களைக் கேளும்வேதியனுக்கோ ரைந்திரண்டுநிறம்
நீதிமன்னர்க்கு நாலிரண்டுநிறம் ஓதும்வசியன் மூவிரண்டுநிறம்
கோதில்சூத்திரன் ஈரிரண்டுநிறம் வாய்க்கும் ஆர்க்கும் ஏற்கும் நோக்கும் மா
உதிந்திய சாதரங்கம்கோபம் தழலிரவிகச் சோதம்
முளரிகீரர்விளக் குக்கருமெய்தலமா துளம்விரைமலர் போலப்பற்றும் குரு
விந்தமோ செம்பருத்திசிந் தூரம் காயும்பொனமுயல ரத்தம் (ம்சௌ
வௌளிவோத்தம்பூதி லதம்பலாசரர் ஒள்ளியகுன் றியெட் டிவிதம்கொள்ளு
கந்திகத் தின்நிறத்தினைக்கேளும் ஒளிரும்பொன்னில வம்பூ (ம்
கருங்குயிற்கண் அசோகமலர்செம்பஞ்சொருங்கதாகுமை வண்ணமெனவுறா
பிந்திய கோவாங்கநிறம் கேளும் சந்தமிருந்த குசும்மை மலரும்
ஐந்துவண்ண மலருமொளிரும். வெநதசெங்கல் பொடியு மவிரும்
அந்தமிகுங்கொவ் வைக்கனிநிகரும் ஈனும் தோனும் கானும் பூணும் மாணி
க அருமையா யுறுதிகொண்டு கீழ்மேல் சுற்றொளிவிடல கண்டு
ஆதின்மேலுத்தமம் கீழ்மத்திமம்பக்கம்அதமமென் றகுணம்கண் டறிந்துமுன
உரைசெய்சா தரங்கத்தைஅணி வோர்க்குஅன்னம்கன்னிகை முதலா
உளசகலதா னமும்பரிமேதவளமகமுதற் செய்பல னும்கொள்வர்

குருவிந்தம் தரிப்போர்உலக முழுதும்ஒருகுடையிலே ஆண்டு (துவர்
கொள்வர்விளங்குசௌகந்திகம்பூண்பவர் செல்வம்புகழ்முத லாம்பயனெய்
தரிகொள்கோ வாங்கத்தைஅணி வோர்க்குதிருமனையிலெ ந்நாளும்பாலும்
பெருகும்சாலியை முதலெக்காலும்பரவும்பலபண் டங்கள்நாலும்
திரவியமுத லாமென்மேலும் சீரும் சேரும் பாரும் நேரும் மாணி

விருத்தம்.

பொருவிலதிம் மணிமாசு நீக்கி நன்றுப்
பூண்பவர்பால மற்றிருநால் மணியும் சேரும்
திருமகளும் மகிழ்ந்தொருபாற் கட்லைப் போலே
சிறந்திடுவெ ளுலகமெலாம் குடைக்கீழ்த் தங்கும்
அரவுசிறு தெய்வம்விலங் கலகை பூதம்
அக்கினிநோய் தரித்திரம்கூற ழுணுக வொண்ணுப்
பெருமைதரு மெனமழுமான திருக்க ரத்தில
பிடிக்குமையன் வசியமொனட் படித்திட்டாரே.

முத்தின்வரலாறுசொல்லுதல்.

அங்குமல ராகவள முரைத்தே னிபபால்
அவனியில்நித் திலம்சலசம் தலச மென்றும்
சங்கமுகில் இப்பிவே யானை பாம்பு
சாலிமீன் கரும்புபன்றிக் கொம்பு கற்பின்
மங்கையர்கந் தரம்கொக்கின் கழுத்தை வாய்மான்
வகுத்திடுமிப் பதின்மூன்றில் கடையில் மூன்றும்
விங்களித்தை யிரண்டிடத்தும பிறந்த தய்யன்
விரிக்கின்றார் அமைச்சருக்குச் சரிக்கின்றாரே

மாஞ்சி, சாப்பு.

பல்லவி.

முத்தின்வரலாறதுகூறுவேன்கேளுமே உத்தமமந்திரி மாரே.

அநுபல்லவி.

இத்தரணி முற்றுமகிழ் வுற்றவலன் பெற்றிடுதக
தத்திலேசெ னித்துவுல கத்திலேமி குத்தவரும் முத்தி

சரணங்கள்.

சங்கமதில் மாடப்புறா முட்டையைப்போ லேதிரகூடி
தந்துவெண்மை யாகவரும் பாரும்
பைங்கிளைசெ ழிக்கவுயர் மூங்கிலிலுண் டாகியது
பாரில்ஆலங் கட்டிபோலே நேரும்
தண்கயலில் பாதிரியைப் போலேவரு குங்கரும்பு
தன்னிலேபொற் கொனறைநிறம் சேரும்
அங்கமிக வும்கருமை தங்குமெனச சிங்கமதில்
செங்குருதி யின்கதிரி னங்கொளிவி ளங்கச்சாரும் முத்தி

மைப்புயலி லேப்ரிதி போலேயொளி　　தந்துலகில்
　மன்னிவரும் இந்தமணி　　காணும்
சர்ப்பமதில் நீலநிற மாகவரு　　கும்வளரும்
　சாலியிலே பசுமைநிறம்　　தோணும்
செப்புமத வாரணத்தில் செம்பொனொளி　　தங்கிவரும்
　செய்கையிதல் லாமல்இன்னம்　　பூணும்
இப்புவியி லப்பிலுறும் இப்பியிலு　　திப்பொளிப
　ரப்பியசெ ழுப்பனிம திப்ரபைநி கர்ப்ப　　மாணும்　　முத்தி

பணபுதரும் வெள்ளைநிற மேவருண　　தேவனெனப்
　பாரும்நீலம் விஷ்ணுதேவன்　　கேளும்
இன்பமிகும் பச்சைநிறம் காலதேவ　　னாகுமின்னம்
　இரவிநிறம் சூர்யதேவன்　　நாளும்
செம்பிரபை-சேர்ந்துதிரம் போலேநிறம்　　வாயுவெனும்
　தேவனாக வேபுகழ்ச்சி　　நீளும்
அம்பொனிற மம்பரமெ னும்பதிய　　வன்பெயர்பூண்
　அம்புலிநி றம்பனியின் தென்பவுய　　ரும்பர்வாழும்　　முத்தி

கூறிய இம் மணியுடுக்கள் போலும் காட்சி
　கொண்டிருட்சி திருக்கரத்தி லெடுக்கிற் றிண்மை
ஊறியமா சின்மைகண்ணுக் கினிமை நேர்மை
　உரைத்தகுண மாறுமுள்ள தணிவோன் றன்பால்
சீறியநோய் வறுமைமுதற் றுயரம் நீங்கும்
　திருமருவும் செல்வமும்வாழ் நாளு மோங்கும்
மாறுபடா தென்றமைச்சர் தமக்கா ராய்ந்து
　வழுத்தினார் திருநீலக் கழுத்தினாரே.

## வச்சிரவரலாறு சொல்லுதல்.

இதுவுமது.

முத்தின்வர லாறிவகை சொலித் ததீசி
　முனிவனென்பும் வலாசுரன்றன் என்பும் வீழ்ந்த
இத்தரையிற் சிலசிலதே சத்திற் றோன்றி
　இயம்புமணி களுக்குமுதற் சாதி யாகப்
பொத்தலிடு வதலாமல் தனக்குத் தானே
　பொத்தல்செய்யும் ஊசியாத் தனிவி ளங்கும்
உத்தமவச் சிரமகிமை தமக்குத் தாமே
　ஒப்புவார் விபரமுடன் செப்புவாரே.

மத்தியமாவதி, சம்பை

பல்லவி.

வச்சிரவரலாறுமந்திரி மாரேசொல்கிறேன்கேளும்

அநுபல்லவி.

இச்சகத்திற் புகழ்சிறந்த ராசர்முத லணியப்பிறந்த • வச்சி

சரணங்கள்

க கருதுங்கோசல தேசத்தினிலேவா கையின்பூநிறமாய் அடுத்தது
மருவுமாதங்க தேசத்திலேவாச மல்லிகைப்பூநிறம் கொடுத்தது
புரியுங்கலிங்க தேசத்திலேசெம் பொற்கொன்றைநிறமா எடுத்தது
சொரியுமிமய கிரியினருகிற் றூயவெண்ணிறமாத் தொடுத்தது வச்சி

உ இன்னமுமகா ராஷ்டரதேசத்திலே இரத்தவருணமா யுதித்தது
கன்னல்செழிக்குஞ்சௌவீரதேசத்திலே கறுப்புநிறமாப்பதித்தது
பன்னரும்பவுண்டரதேசத்திலேநீலோற் பலமலர்போலேக்கதித்தது
நன்னிலந்தன்னிலே இந்தவிதமாகநண்ணியேபலவா விதித்தது வச்சி

ங மூத்தசாதிவெண்படிகம்போலுமன்னன் முயலிரத்தம்போற்பகுத்தது
வாய்த்திடும்வசிய சாதிகதளியின்மாமலர்நிறம்போல் தொகுத்தது
சூத்திரசாதிநற்சாணையில்பிடித்துச்சொலிக்குங்கத்திபோல்வகுத்தது
ஏற்றநாலும்வேதி யருக்காகுமற்றோர் இனம்போலேபூண் மிகுத்தது வச

ச பூருவந்தரு நிலத்துமன்னவன் பூணவெகுசெல்வங் குவித்தது
சாருமிகலதை அறுத்துலகெங்கும் தன்பெருங்குடைக்குட் கவித்தது
பாருமிருகம்பல் பூதகணநிகள் பருநோயண்டாமல். அவித்தது
ஆரும்நமெகிடும் காலமிருத்தியுவை அணுகொட்டாமற்சம் பவித்தது வச்

விருத்தம்.

புகலுமிந்த வச்சிரத்தின் காந்தி பேதம்
புள்ளடித்தா ரகம்புள்ளி ரேகை யென்னும்
வகையுடனெண் குற்றமது தேர்ந்து நீக்கி
மதிக்கவொண்ணு விலையுளதா யிலேச தாகி
மிகவொளியாத் தெளிவுளதா யணிவோர் போரில்
வெற்றிகொண்டு செருமகளுக் கன்ப னாகத்
தகைமைபெற்று வாழ்குவரென் றமைச்ச ருக்குச்
சாற்றினார் வாரணத்தோல போர்த்தினாரே.

மரகதத்தின்பெருமைகூறுதல்.

விருத்தம்.

வச்சிரத்தைச் சுமங்கலிக மூத்திற் பூணும்
மங்கலத்திற் பதித்தணியக் கூடா திப்பால
பச்சைவர லாறுரைப்போம் வலன்பித் தத்தைப்
பருந்தினங்கள் தமதிரைக்கா வாயிற் கவ்வித்
தற்செயலாய்ப் பறக்கையிலித் தரையில் வீழ்ந்து
தங்கியதோர் தோற்றமுண்டா மலாமல் வெவ்வே
றிசகத்தி லுதித்ததுவும் புகழ்ந்த காலை
ஏறுமையன் அமைச்சருக்குக் கூறுவாரே.

பைரவி, ஆதி.

பல்லவி.

மரகதத்தைப் பாரும் மந்திரிமாரெல் லோரும்

அநுபல்லவி.

தரணிபுக ழுமரசர் தமக்கணியத் தக்கதிந்த மரகத

சரணங்கள்.

௧ காணும்அரு ணனுதித்த முட்டையோடடை வினதைமாது
கருடனுக்கி டையில்அணிந்த மாற்றம்
பூணுமோட வனக்ரியி லிருந்துதப்பிவீழ்ந்த திநதப
புவியில்உதித் ததொரு தோற்றம் திவ்ய மரகத

௨ அரிஅணங்கா வரவும் அரன தோய்ந்தரிய ரகுமரன்
ஆதியுண்டாம் விந்துவைஇப பார்மேல்
கருடன்கௌவித் திருக்கநாட்டும் கடலினும்வி டுகுமிடத்தில
கதித்தெழும்கருடப்பச்சை இ தாமே திவ்ய மரகத

௩ அரியகாடம் சுப்பிரம்காள மெனும்குணமூன் றிற்காடத்தில்
ஆறுகுண மைந்துதோஷம் உதிக்கும்
தருகுணமோ ராறும்காடம் உல்லசிதம் பேசலம்பித்
தக்கமுத்தம்பி ருதுகமென்றே கதிக்கும் திவ்ய மரகத

௪ பின்னும்காடம் அறுகிதழாம் உல்லசிதம் மெலியதாகும்
பேசலம் சாலிநுனிபோல் விளங்கும்
மன்னும்பித்த கம்இளிச்சி றைமுத்தம் துளசியிலே
மற்றதுதா மரைஇலைபோல் துலங்கும் திவ்ய மரகத

௫ தோஷலே சானுவிதம்துஷ்டம் தோஷமூர்ச்சி தமிதனறித்
தோஷலேசம் மஹாதோஷம் சிறக்கும்
தேடுமெலு மிச்சைஅர ளிகுவளைமு ளரிஇலை
சிகியிறகைத் தாமதுபோல் இருக்கும் திவ்ய மரகத

## நீலத்தின்மகிமைசொல்லுதல்·

உச்சரிககின்ற தோஷம் ஓரைநதும்விலக்கி நனறும்
பச்சையைப் பூண்போர்நாலு பங்குடைச் சேனை யோடும்
இச்சகத் தினிற்சுகம்பூண் டண்டவாழ்ந் திருப்பா ரப்பால்
மெச்சும்நீ லத்தின்வண்மை விரித்தையன் உரைக்கின்றனே.

கல்யாணி ஏகதாளம்.

பல்லவி.

நீலமகிமை கேளுமமைச்சரே விலையில்லாத நீலமகிமைகேளும்

அநுபல்லவி.

ஏலுமசுர ஞனவலன்கண் இந்திரநீலம் மகாநீலமென்னும்
ஆலமுண்டவன் கழுத்தொளிபோலே அவனியிலேசம் பவிதமாகிய

சரணங்கள்.

௧ பாரும்இந்திரன் விசுவரூபனைக் கொன்று வரும்
பழிவிலக்கிடச் செய்யும்பரிமேத மென்று
சாருமகத்திலோமப்புகைமுன நின்று விழி
தமைஇமைக்கவொண் ணுமனுலகத்திற் சென்று
ஊருமப்பரி விழியிலேயிருந் தொழுகும்பீளைசிந் தியநிலத்திலே
சேரவுற்றதி னலேஇந்திர நீலமென்றொரு பெயர்விளங்கிய நீல

௨ கதிரவன்தனைத் தழுவமனைவி பயந்து தவம்
கருதித் தனதுநிழலை உருவா நினைந்து
பதிகொளத்தெரிந் திரவிவர்க்கண டறிந்து பெண்
பரியும்அவ்ரும் பரியுமரியோடித் தொடர்ந்து
இதயத்தில்மய லடக்கவொண் ணமல்இந்திரியமெ மூக்கூசிந்தவும்
சிதறும்புலத்தினிடையிலேவந்துசெனித்துமாநீலமெனப்பெயர்கொண்ட நீல

௩ வெண்மையைக்கலந் திருக்கில்அந்தணர்க் காகும் அருண
மேனியைக்கலந் திருக்கில்மன்னவர்க் காகும்
ஒண்மையெரிபோற் கலக்கில்வைசியர்க் காகும் செம்பொன்
ஒளிகலந்திருப் பிற்சதுர்த்தருக் காகும்
நன்மைபெருகத் தரவருமிந்தநால்வருணத்தின் பேதம்தெரிந்து
உண்மைபெருகும் அமரர்களுடன மனிதர்களுமெய்க் கணியச்சொல்லிய நீல

கோமேதகமகிமை கூறுதல்.

விருத்தம்.

ஓதுமிந் நீலம்பூண்போர் உற்றிடு வோர்கல் யாணம்
ஆதலா லிந்திரநீல மணிவோர்பாற் பாக்கியந் தொட்
டேதமில்லாமலோங்கும் என்றையன் மொழிந்திப் பாற்கோ
மேதக முண்டானத்தை விரித்தவர்க் குரைக்கின்றாரே.

செஞ்சுருட்டி, ரூபகம்.

பல்லவி

கோமேதக மகிமைகண்டு கொள்ளும் மந்திரிமாரே

அநுபல்லவி.

பூமேவலம் மாமேல்நிணம்·தாமேஇந்தப் பூமேல் கேள்

சரணங்கள்.

௧ ஒளிமேவுநெய்த் துளிபோலவே தெளிவாவடி வுளவாம் கோ
௨ மேனின்றிழி தேனின்றுளி போல்நின்றொளிர் காணும் கோ
௩ பாரும்பசு நீரின்துளி சேரும்ஒளி யாரும் கோ
௪ மெலிதாயொளி நலதாத்திணி யுளதாம்குணம் நலதாம் கோ
௫ மின்னும்பசும் பொன்னின்கதிர் மன்னும்பின்னும் இன்னம் கோ

புருடராகமகிமைசொல்லுதல்.

அரியகோ மேதகத்தை யாராய்ந்து பூண்கின்றோருக்
கிருளனைவ ரும்பாவம்தேய்ந் தெப்போதும் பரிசுத் தத்தை

தருகுமியா வருக்குமென்று சாற்றினா ரய்யனிப் பால்
புருடரா கத்தின்செய்கை புகழ்ந்தவர்க் குரைக்கின் றாரே

அடாணா, ஏகதாளம்.

பல்லவி

புருடராக மகிமைகேளுமே மந்திரிமாரே — புருட

அநுபல்லவி

இரணியாக்ஷ னுயிரைக்குடித்து நரசிங்கம்வாயைத் திறந்துசிரித்துத்
தரணியிற்பொன்போல் கக்குமிட்டத்த சரணகமம்விழுந் துதித்துக்கதித்த

சரணங்கள்.

க கிட்டிவருஞ்சூரியிருள்கண டோடவே ஒளிதந்துச்சி வட்டமாக மெலிந்துமாகவே
சுட்டகனகம் போலொளிவளைந் திட்டவிரெரி யெனவலைமந்தொள்
இடமெளம்கவர்ந் திலங்கும்பெருமை தொடமேலிலவந் துருவமெடுத்த — புரு

உ வந்துபரீரி யாத்திரிமலையிலே கொடுமுடிபோலவளர்ந்திலங்கும் வடக்குத்
மந்தரமலைச் சாரிபிலேமயன் இந்தமணியிலுடலமிருத்த (தொலையிலே
இந்திரனுக்கோர் நகருமரசும் தந்துவலவுமண டயமும்சமைத்த — புரு

ங பத்தியுடனிம் மணியைபபூண்பரே த்னதானியசம் பதுமுதலா வளரக்
யுத்தகளத்தி லேஎதிர்த்திடும் சத்துருக்களை வேரறுத்தவர் (காண்பரே
வெற்றிமாலையும் சூடுவீரென்று இத்தரையிலவல் லோர்களுரைக்கும் — புரு

வைடூரியமாற்றுக்கூறுதல்.

விருத்தம்.

புருடரா கத்தன்மை மொழிந்தோ மிப்பால
புரியும்வலன் கேசமிளா விருதகண டத்தில
உருவெடுத்துச் சிங்களம்கோ ரக்கம் சீயம்
ஓங்குமலை யம்மகதம் திரிகூ டாதி
பெருகியதே சம்தீபம் கடலி னுள்ளும்
பிறந்திறுதி முகில்டிக்க நிறம்வெவ் வேறாய
உருவுறுவை டூரியத்தின் மகிமை கூற்றை
ஒடுக்கின்றா ரமைச்சருக்குத் தொடுக்கின் றாரே

சாவேரி, சாபபு.

பல்லவி

வயிடூரியவர லாறும்மந்திரி மாரேசொலகிறேன்உளம் தேறும்

அநுபல்லவி

வியனுலகும்புகழும் வெற்றிபெருகுமா
சியலைநடத்தும்வேந்தர்க்கேர்க்கும்வி லைமிகுத்த — வயி

சரணங்கள்

க பூனைவி ழியைப்போலும் பொருவில்வே இலை போலும்
கானம யிற்பிடரிக் காந்திபோலும்நிறத்த — வயி

உ கண்ணுக்கி னிதாயுளம் கவரும்குணமுளதாத்
திண்ணிக்கை யுமுளதாத் தெளிவாவிலைமிகுத்த — வயி

மெய்யொளி வலமிட    மேலகீழ்விடக்கண்டது
செய்யஅந்தணர்முதல்    தெரிந்தணிந் திடவுற்ற

### பவளமகிமைசொல்லுதல்.

விருத்தம்.

வயிரேரி யத்தினவளம் புகன்றோ மிப்பால்
வலன்தசைதென் புலத்தவரை அயன்படைக்கச்
செயுமிடத்தும் மதுகைட வாளை மாலோன்
செகுத்தொழுகும் குருதிதங்கு மிடத்தும் இந்திரன்
சயிலமதின் குலத்தைஇற சரிந்த சோரி
தங்குமிடத் தும்வீழ்ந்து பவள மாகப்
புயவலிசேர் அமைச்சருக்குண் டான வாறு
போதித்தார் தக்கன்மகம் சேதித்தாரே

புன்னாகவராளி, ஆதி.

பல்லவி

செம்பவளவளமைபாரும்    இந்த

அநுபல்லவி.

அம்புவிபுரக்கும்மன்னர்க் கணியஅரிதாகும்    செம்பவ

சரணங்கள்

தண்மையுடன்மொழிந்து    பறக்கும்    கிளியினை
தனமூக்குப போலும்கொவ்வைக் கனிபோலும்சிறக்கும்
செம்முருக்க மலர்போலும்    நிறக்கும்    ஒளிரும்
செவ்வரத்த மலர்போலும் குணவிப்ரம்    பிறக்கும்    செம்பவ
இன்னமும் கேளும்நெளி    வுற்றல    திருகல
இடைசிறுத்தல் பூண்போலே இருதலைத    டித்தல்
பின்னும்கோணல்புழுஅ    ரித்தல்    தமர்க்கண
பிசுகல்முக மொடிதல்எனும்குற்றம்அறி    வித்தல    செம்பவ
மங்கும்தரித்திரநோய்    நீக்கும்    திருத்தா
மரைமகளும் மனமகிழ்ந்து பெருநிதியைச் சேர்க்கும்
மங்கைமார்கள்தமக்கே    ஏர்க்கும்    தரிக்கில
மைந்தன்முதற் பேறுகள்மென் மேலும்வந்துண் டாக்கும்    செம்பவ

### நவரத்தினங்கள்அணியும் முறைமைசொல்லுதல்.

விருத்தம்.

நீடியமா ணிக்கமுத்து வயிரம் பச்சை
நீலமே தக்கம்புருட ராகம் துபபு
கூடியவை டூரியமா மென்இவ் வண்ணம்.
கூறியஒன பதுமணியின் குலம்கு ணங்கள
நாடியவா ரம்கிரகம்தெயவம் பூசை
பண்ணுமல ராதிவெள்ளி அம்ப லத்தில்
ஆடியசுந் தரநாதர் வணிகரா வந்
தாற்றுவார் அமைச்சருக்குத் தேற்றுவாரே.

சுருட்டி, சாப்பு.

பல்லவி.

ஒன்பது மணிகளும் அணிகின்ற முறைமைதேர்ந்
துரைக்கக் கேளும் மந்திரி மாரே

அநுபல்லவி.

உம்பர்வேள் வியில் மூந்த உரைத்தவ லன்சிதைந்த
தம்புவி யில்வி மூந்த தநிலுல்வந் துபிறந்த ஒன்ப

சரணங்கள்.

மூந்துவா ரத்தில்மாணிக் கத்தைசூரியனாக
முளரிம லரைக்கொண் டு சூடி
இந்துவா ரத்தில்முத்தி லத்தைச்சந் திரனாக
இசைத் தாம்பல் மலரினால் நாடி
உந்தும் பௌமவாரத்தில் துப்பைஅங் காரகனென்
றோங்கும் வாழைமலரைக் கூடி
வந்து சௌமியவாரத்தில் பச்சையைப் புதனாக
மல்லிகை மலராலே பூசைசெய் துகொண் டாடி ஒன்ப

குருவாரத் தில்புருட ராகத்தைக் குருவாக
கோகன கவிதழ நாளும்
பிருகு வாரத்தில்வச்சி ரத்தைச்சுக் கிர னாகப்
பெருகும் செங்கழுநீர்ப்பூ வாலும்
திரவாரத் தில்நீலத்தைச் சனியாக மந்தாரச்
செழிக்கும் தூயமல ராலும்
இரவிவா ரமேதகம்இந்துவா ரம்வைடூரியம்
ஏர்க்கும்கமல மாம்பல் பூக்கொண்ட ணிந்து மேலும் ஒன்ப

வச்சிர முத்திரண்டும்வே தியனாக மாணிக்கம்
பவளமிரண் டுமன்னனாத் தேர்ந்து
இச்சைத ரும்புருட ராகம்மே தம்வைடூரியம்
இதுமூன்றும் வணிகனென் றோர்ந்து
பச்சை நீலமணியி ரண்டுஞ்சூத் திரனாகப்
பாரில றிந்தோர்சொல்வர் கூர்ந்து
இச்சகத் தினில்யாரும் மெச்சும்படிக்கொண்டுதென்
றிலங்கும் காலுசாதியாத் துலங்குமகிமை யோர்ந்து ஒன்ப

ஆணித் திலம்பச்சை இரண்டும்சத் துவகுணம்
ஆகுமென் பதறிந்து தேறும்
மாணிக்கம் பவளம்கோ மேதம்பு ருடராகம்
வயிடூரியம் வயிரம்இவ் வாறும்
ஊணிக்கே ளும்ராஜத குணமாகு நல்லால்நீலம்
ஒன்றும்தா மதகுண மீறும்
தோனும்நவமணியின் குணமிந்த வகையென்று
சொல்லும்பொ ருளுமாய்ந்த வல்லோரு ரைக்குமாறு ஒன்ப

விருத்தம்.

நவமணிபூண் விதியுரைத்தா சனத்தின் மேலே
நடுவேமா ணிக்கமணி வைத்தெண் டிக்கும்
தவளமுத்தா திகளைரவி மண்டிலம் போல
தகவமைத்தி ரவிமுதலொன் பதுகோ ளாகக்
கவனமுடன் முன்னுரைத்த மகுடமொன் றும்
கையிலெடுத் துத்தரம்பார்த் தீசன தானே
புவிபுகழும் வணிகரா யிருந்து பூசை
புரிந்திட்டார் குடதிசைபார்த் திருந்திட்டாரே.

வணிகராகவந்தகடவுள்மறையப் பாண்டியனுக்கு முடிசூட்டல்.

இதுவுமது.

இம்முறையாக கதிர்மணிமுன் பதையும் பூசித்
[illegible]
மனமகனுக் காயுசும்செல் வமுமென் மேலும்
வளர்ந்தேறக் கடவதென்றே புரிந்து வாழ்த்தி
அம்மணியைத் தனிவணிகர் கொடுத்தார் முன்னே
அண்டமுட்டும் இந்திரவிமா னத்தை நோக்கி
மைம்மலிகண் டனைப்பணிந்து இருகை யேந்தி
வாங்கினான் வழுதிமகன் ஓங்கினானே.

திபதை — சௌராஷ்டிரம், ஆதி.

க பாருபீசனுக் கன்புசெய்துயர் பண்புசேர் முனிவோரே கொன்றைத
தாரையமைத்த வணிகர்மணிதந் தபினகதை அறி வீரே
உ தென்னனமைந்தனை சகுழமைச்சர் திருமுகங்களை நோக்கி இந்த
வன்னமணியி னாலேஇழைத்து மாமவுலிஉண் டாக்கி (றும்
ங குழந்தைச்சிங்கம்போ லேவிளங்கும்இக் குமரன்சென்னியில் சூட்டி என
பழுதில்லாஇவன் பெயர்அபிஷேக பாண்டியனென் றுபா ராட்டி
ச அம்புவியாரு மென்றுவணிகர் அகமகிழ்ந்தேதும் பின்னே உயர்
செம்பொன்னளந்து கொணர்ந்தமைச்சர்கள் செலுத்தவந்த முறைமேல்
ரு அகமலர்ந்தருள் பொழிந்தங்கிருக்கும் அரசிளம்பாலன மீது அருள்
நகைபுரியும்வ ணிகரையங்குகா ணுமற்றிகைக்கும் போது
சா அமையும்சபையி லொருவராக அடுத்தவணிகர் தாமே பின்னும்
உமையவளுட னிரண்டுருவாக உயர்ந்தவிடையின் மேலே
எ தஞ்சமென்றவர்க் கருளுமுக்கண்ணும் தழைக்குநாலுசெங்கரமும் புயம்
தஞ்சம்தேவரைக் காக்குமாறு ஆலமெழுகந் தரமும்
அ தெரியவேமூ வாலயத்துக்குள் சென்றுநுழையப் பார்த்தார் இங்கு
பரியும்வணிக ரிவரேயென்றுபின் படர்ந்துசன்னிதிக் கேற்றார்
கூ திங்களணியும் வேணியன்மலர்த் திருவடியிலே தாழ்ந்து எழுந்
தங்கைகுவித்துத் துதித்துப்பெருகும் ஆனந்தக்கட லாழ்ந்து

௰ யானுமெனது டலுமென் பொருளும் யாதுமுனதென் னய்யா உயர்
வானுதவுதற் கிவ்வுலகங்கைம் மாறென்செய்யு மய்யா
கக என்றுபோற்றவும் தென்னனமகனுக் கெழில்மணிமுடி தரிக்க வெள்ளி
மன்றவனநவ மணிதந்தானென்று வலவர்களுச் சரிக்க
கஉ சிவனேமணிதந் ததினாலே இந்தச் செகத்திலமகிமை யேற தென்
புலிஅனேகநா ளாளுவானென்று புகழ்ந்துபெரியோர் வாழ்த்த
கங மதுரைநாதனுடைத் திரவுபெற்றுசீர் வசனமுனிவோர் கூறத் தென்னவன்
புதல்வனமைச்சருடனரண்மனை புகுந்துசந்தோஷம் மீற
கச வந்திருக்கையில் பரிக்ஷைதெரிந்த மந்திரிகளும் கண்டு அய்யன்
தந்தமணியை நோக்கியே அதி சயித்துச் சந்தோஷம் கொண்டு
கரு சம்புவானவர் உடுக்களையும் கோள் தமையுங்கொண்டொளி விரிக்க மிகப்
பண்புபெருகும் நவமணியாகப் பண்ணினாரேயென் றுரைக்க
கசா தலங்கும்தாளிலும் மார்பிலும்சாமி தோளிலும்காந்தி கதிக்க அணிந்
திலங்கும் பன்னக மணியோ தந்தது யாதோவென்றுள மதிக்க
கஎ தெய்வலோகத்தி லும்இம்மணிபோல தேடருமொளி அடுக்கத் தந்து
கைவருமணி யெனவே பரிக்ஷைக் காரர்கள்சொல்லிக் கொடுக்க
கஅ அம்மணிகளை வாங்கிமைந்தனுக் கதிகம்கலவியில் மிகுத்து வரும்
கம்மியராலே எழில்பெருகிய கதிர்மணிமுடி சமைத்து
கக செழியனமகனுக் கபிஷேகம்பண்ணித் திருமுடிமாலை யணிந்தார் சாமி
மொழியும்வண்ணமே நாமதேயந்தை முதுமறையவர் புரிந்தார்
உ௰ வீதிவலம்வந் தமைச்சர்களுடன விமலனடியைச் சார்ந்தார் மந்
நீதியரசர் புகழ்ந்ததமது நெடுமரண்மனை சேர்ந்தார்

விருத்தம்

இந்தவிதமணிமுடிபுனைந்துசெருமகளபுயத் திசையபிஷேக பாண்டியன
இரதகஜதுரகமன னவர்கள்மணிமுடிகள்தன திருசரண மலரணியவே
அநந்தமுடனமனுநீதி செய்துபுயலைபங்கூழ ஆதரிக்கின்ற முன்போல
அருள்தந்துவையகம் தன்னை இறைமாக்ஷிசெய் தாண்டுவருகின்ற நாளில
தந்தைமகிழவைப்பாடிமைந்தராகியகொடுந் தறுகண்ணரைப் பிடித்துத்
தனதுமுடிமுதலமீள வாங்கினுனெளிபரவு சந்திரகுலம் பெருகவே
புந்தியிலுவந்திதைச் சொலவர்கேட்பவர்களசம் புத்திரசம்பத் தின்பமும்
பூணுமணி ஆரோக்கிய மும்பூணடுவெர்பின் புராரியுலகம் புகுவரே.

ஆகவிருத்தம் உஉ கீர்த்தனை ௰ச தருக ஆக கூஎ

பதினேழாவது முற்றும்.

சிவமயம்.

பதினெட்டாவது

## வருணன்விட்டகடலை வற்றச்செய்தபடலம்.

அவதாரிகை — விருத்தம்.

நதிமதி அணியுமீசன் நவமணி வழுதிக்கீந்த
கதைசில வுரைத்தேனிப்பால் கருமையாத் தமதுசென்னி
வதிதரு முகிலையேவி மதுரைமேல் வருணனவிட்ட
உததியை வறப்பச்செய்த உண்மையை இனிச்சொலவேனே.

## அபிஷேகபாண்டியன்சோமசுந்தரர்க்கபிஷேகம்செய்தல்.

இப்புவியைப் புரக்கும்அபி ஷேகபாண டியன்
ஈசனுக்கு நிதமுமபி ஷேகம் செயது
கர்ப்பூரக் குழம்பணிநது பார்த்து நீயே
கர்ப்பூர சுந்தரனென் றேத்தி வாழ்த்தி
அற்புதமா வருநாளில் மேட மாதத்
தடுத்துவரும் சித்திரைநாள் மதியம் தன்னில
னட்புடனே அபிஷேக சாமான் கொணடு
தணணிஞன் அபிஷேகம் பண்ணி னுனே.

தோடி ரூபகம்.

பல்லவி

அபிஷேக பாண்டியமன்னவன் அபிஷேகம் சோமசுந்தரர்க
கதிசய மாகசசெய்திடும் அருளை அறிவீரே.

அநுபல்லவி.

அபிஷேகம்பரிநதுருத்திர ஜபஹோமாதிகளுடனேசை
வாகமத்தின் முறையாகவே ஆர்க்கும்தவ முனிவோர்களே

சரணங்கள்.

எண்ணெய நெய்தயிர் பால்மது எலுமிச்சங் கனிரதமும்
தண்ணும்கந்த ஜலமும்இட்சுரசமும்ஐந்த முதமும்
தண்ணரும் கர்ப்பூரோதகம் தகுமந்திர ஜலமினமும்
நிர்ணயமில் லாச்செவ்விள•நீரும்பன் னீரும்பொன் னீரும்மன் னீரும்.கொண்
டபிஷேக

நல்வஸ்திர மணிபூஷணம் நற்சந்தனம் கருப்பூரம்
சவ்வாதுகுங் குமப்பூமுதற் சாத்தி அலங்காரம்
வில்வமுதலாம் பத்திரம் வெவ்வேறர்ச் சித்தாயிரம்
சைவவட்டமும் நீர்ப்பூ தருப்பூசெடிப்பூ கொடிப்பூ முதலணிந்து அபி

சரணங்கள்.

கொதித்தெழுந் துபல்பல மரங்களைவேருடனே
கொண்டுதிக் கெங்கும் மறைக்கப் பருப்பதங்களை
அதிர்த்தெழுந் தடியோடே பறித்துமுன்சொன்னதற
கப்பாலெல்லாங்கெங்கும் நிறைக்கக் கோட்டையின்மேலே
எதிர்த்தெழுந் தேயுயரும் மாடங்களிலகவாக்ஷம்
எங்குந்திவலை இறைக்க யுகாந்தத்திலே
உதித்தெழுந் துவருதல் போலேவரக்கண்டூருள்
ளோர்களும்கண்டு விறைக்க இவ்வகையாக
கதிக்கும்பல நுரைகள் வளைமச் சங்கள சங்கம்
கட்செவி கள்மகர மச்சங்க ளாமை வங்கம்
படிக்கும்நவமணிக ளிவைகளுடன்த ரங்கம்
பருவதம்போலெழுந்து பயங்கரமாமு ழங்க அடு

உ பிரமப்பிரளயத்திலும் அழியாதிருக்குமிந்தப்
பெரும்பதிக் கிடையூறு வந்திடும்போதே
சுரருலகந்தனக்கும் வருமோவராதோவென்று
துணிந்திருப்ப தெவ்வாறு என்றுநினைந்து
பரபரப்புடனெழுந் திதோவந்துவிட்டதென்று
பயம்பிடித்து வெவ்வேறு ஆலயத்தைக்கண்டு
விரைவாயமரர்முன்னே ஓட்டம்பிடித்ததுபோல
வீதிக்கு வீதி தோறும் சந்திருவர்கிம்
புருடர்கின்னரர்சித்த சாரணருடன் கூடிப
பூமண்டலத்திற்சேரும சுந்தரேசரை நாடிச
சரணஞ்சரணமென்று துதித்து மிகக்கொண்டாடித்
தத்தளிக்கும்படிக்கும் இரணந்திலைசயு மோடி அடு

ங மூலமுனிவர்தொண்டர் புண்ணியவிருத்தர்முத்தர்
முதலனைவரும் பயந்து பயந்திதென்ன
காலமோ [illegible] நீக் காலமோஅல்லதென்ன
காரணமோவென்று [illegible] வாட்டுந்தி
சேலநிகரும்விழி மணவாளனேதனது
திருவிளையாடல் நினைந்து கற்பித்துவிட்ட
சிலமோகாமுன்செய்த தீவினைதானோ வென்று
திரண்டுவேதங்கள் பொழிந்து என்னென்றுசொல்வேன்
ஆலமுண்டவன் திருச் சந்நிதிமுன்னே சந்தித்
தபயமபயமென்று துதித்தனைவோரும் வந்தித்
தோலமிடக்கண்டானதனை அறிந்து சிந்தித்
துள்ளம்நடுங்கும்படிக் சுந்தரேசத்தி லுந்தி அடுத்த

விருத்தம்.

மாலையில் இவ் வாறுததி வரக்கண் டஞ்சி
மன்னன்முன்னு ளாலமெழும் பிவரும் போதே
ஓலமிடும் மால்போலும் காலனைப் பார்த்
தோடிவரும் மார்க்கண்டன் போலும் சார்ந்து
மூலலிங்கம் தனைப்பணிந்தோ லமிடத் தேர்ந்து
முறுவலித்த ருளித்தமது முடிவாழ் மேகம்
நாலினையும் விடுத்தாழி வறக்கும் வண்ணம்
நாட்டிஅப்பன் அவைக்கிரையா யூட்டினனே.

விருத்தம்

சென்றனு மெழுந்ததி நீரை வாயைத்
திறந்தருஞ்சும் போதீசன் அடியார் சென்ம
முந்நீர்போற் பசையறவற் றிடபபார்த் தும்பர்
முதலோரும் பாண்டியனுமி யாருமாங்கே
முன்னவனு டலேநோக்கி மகிழ்ந்து பாடி
முகமலர்ந்து சிர்ப்பயமா யிருந்தா ரித்தை
சொன்னவர்கேட் பவர்களிகம் பெற்றந் தத்தில்
தொல்வினைதீர்ந் தரனுலகிற் செல்வர் தாமே.

ஆகவிருத்தம் அ கீர்த்தனை ஆக—கக
பதினெட்டாவதுபடலம்முற்றும்

மதுரைக்காண்டம்
முற்றுப்பெற்றது.

ஸ்ரீமீனாக்ஷிசோமசுந்தரேசர்திருவடிகளே துணை.

௰௯

சிவமயம்.

கூடற்காண்டம்.

பத்தொன்பதாவது

# நான்மாடக்கூடலானபடலம்

விருத்தம்.

அரனவ ளால வாய்மேல் ஆழியை வருண னேவக்
கருமுகில் நாலால் வென்ற கதையுரைத் தேனவ் வாறே
பெருமழை யேழுமேவப் பிறகநான் முகிலாற் றானே
அரியநான் மாடக்கூடல் ஆக்கிய தினிச்சொல் வேனே.

## மதுரையையழிக்க வருணன் மழையைப்பெய்தல்.

விருத்தம்.

அலைகடலமன் னவன்முன்னுள அபஜ யத்தால்
ஆத்திரம்சேர் திருவிழியும் சிவக்கக் கோபம்
நிலைகொளவுள் ளம்கொதிக்கக் கடலும் யாறும்
நெருப்பெழவே யோங்கியுட னெழுந்தா னிப்பால்
சூலமுகிலே ழையுங்கூப்பிட் டேதி வற்றுக்
குடித்தெழுந்து மிகவிடித்துப் பாண்டி நாட்டில்
புலமுயரும் திருவால வாயிற் சென்று
பொழியென்று னிக்கணம்போ யழியென் றானே.

வண்ணத்தரு — சௌராஷ்டிரம், ஆதி.

க திருவால வாயின்மேலெழு முகிறகளும்கன முழக்கமாயகழ்
தரும்வாயைத் திறந்துவாரிதி வறந்திடப்புவி தெரிந்திடப்பெரும்
ஜலமுழு தும்பருகி உடலம துகருகி
திசையும்விண ணுமதிர விசையுடன மேவி

உ விரிபாரும் பிளத்துவாரமும் கிழிந்திடக்கடி தெழுந்து மாலவரை
இருநாலும் வெடித்திடததனி மேருவும்தலை சாயவூழியில்
வெடிக்குமண் டகடாகத் தொலிக்கிணை யாகமிகத்
தடித்தந்த ரத்திலிருந் திடித்திரள்வீழ

ங இடிகேட்டா யிரந்தலைப்பணி மணிக்கணங்களும் தெறிக்கவே திகழ்
படிதாங்கும் சேடனும்முடல் நெளித்திடத்திசை பொருத்தயானைகள்
இருக்குநிலைகலங்கித் துதிக்கையெடுத்துச்செவிக்
கிணைத்துத்து ணித்துப்பெரும் துணுக்கத்தைப் பூணப்

ச பரும்பூசனிக் காயைப்போலவே கதித்தஆலிகள் உதிர்த்திடக்கொளும்
அரும்பாரைத் துளைக்கவெள்ளியந் தூணகளபோல்விழும் தாரையிறசுர
பதிகொளு மீனினங்கள் குதிகொண டெழுந்ததெனப்
பரந்தமழையிலசல சரம்துள்ளி வீழ

௫ உடுப்போலே கதிக்கும்நித்திலம் நீலம்மரகதம் ஆடகத்துகள்
சுடர்போலும் சிவந்தமாமணி கொடிப்ரவாளமும் சலந்துசிந்திய
தும்பர் அரிவையர்கள் தம்பதி களோடே
அம்புவி யிலெறியும் பொன்பணி போலும்
௬ விதியாலுந் திடும்சராசரம் எவற்றையும்உரு மறைத்தடர்ந்துச
லதிசூழவை யகத்தையுண்ணத் தொடுத்தமாயனை நிகர்த்திருண்டுயர்
விண்ணுல கும்திசையும் மண்ணுல குமிதென்று
கண்ணுழை யாமலிருள் வண்ணம தாகக்
௭ கடுகால்சுற றிலும்விழுந்தரண போலெகும்மென மூடவேமணி
முடிசூடிய தென்னனுமந்நகர் உள்ளயாவரும் நடுங்கியேயிது
கடம்பவ னத்துக்கின்று அழிம்புவருமோஎனறு
கலங்கிம யங்கியுளம் தயங்கிஎல லோரும்
௮ தீராத வினைக்கு இனமும் தெய்வமேதுணை யென்றுகொன்றையம்
தாராடும் வேணியன்சந்நிதி புகுந்துஇந்த்ரவி மானமீதுறை
தேவதே வனைக்கண்டென செய்குவ மெனறுமுனம்
செய்திடும் விளையாடல் கைகண்டராஜன
௯ விடையோனைக் கறைக்கழுத்தனை நீண்டமேருவைவளைத்திடும்தனு
உடையோனைக் காலகாலனை தொண்டருக்கருள் அந்திவண்ணனை
வேண்டியெங் களுக்கனபு பூணடிர க்ஷித்தருளும்
ஆண்டவ னேயென்றேதும் பாண்டியற காக
௰ வெகுநாட்கொண் டடுத்திடும்துயர் தீர்க்குமுனைவ னேமுனபோலவே
முகில்நாலையும் அனுபபிஅநநகர் எலலைநாலினும் சூழந்துகொண்டிடை
வெளிதெரி யாமலெங்கும் பொழியு முகிலேழையும்
விலக்கி விடவேவிரைந் தனுப்பியபோது
௧௧ திருநாலு மாடமாகி உயர்ந்துசுற்றும் வளைந்துசந்துகள்
தெரியாமல் இணங்கிநட்டகூ டாரமென்னவே போர்த்திடசிவ
புரத்தி லுள்ளவரென அமைச்சர்கள் சேனைசரா
சரத்துட னேமுனனிலும் மிகுத்தினப மேவ
௧௨ மலைமேலுச் சியில்சொரிந்தது என்னவிணணவர் மாடமீதுதி
வலைவீசி யெறிந்திடத்துளி உடைந்துதுள்ளச் சொரிந்துவாரிதி
வறட்கும் முகிலுடலம் வெளுக்கப் பொழிந்துவெட்கம்
பிறக்கத் தலைகுனிந்து கரக்கசசெனறோட
வருணனும் கண்டுமனம் வெட்கினான்.

## வருணன் சுந்தரேசரைப் பூசித்தல்.

விருத்தம்

சத்தமே கங்களும்பெய் திளைக்கக் கண்டே
சலாதிபனச சம்பூண்டு நடுங்கிப பின்னும்
சித்தமதி லேயொருசந தோஷம் தோன்றச்
செழும்பொறா மலைக்கரையுந் திடுமுன் றன்னைக்

சுற்றிநின்றவயிற்றுநோ யெரியைக் கண்ட
துய்யபஞ்சு போல்மறையத் தெரிந்து தோய்ந்தே
நித்தனைச்சார்ந் துறறதுபெற் றிடலா மென்றே
நேசிப்பான் விதிமுறையால பூசிப் பானே.

சுருட்டி, ருபகம்.

பல்லவி

வருணன்பூசைபுரிந்தானே சுந்தரேசனை வருணன்பூசைபுரிந்தானே

அநுபல்லவி.

ஸ்ரீ வருண பதுமினி யாயு வாக்குமனமெய் கூடி
திருநீறிட டுக்கொண் டாடிச் சிறந்தருத் ராக்ஷம் சூடி வருண

சரணங்கள்.

கங்கைய முனைவாணி முதலாம்நதிப் பெண்கள்பலரும் தோணி
தங்கள்குடம்நெடுக்கத் தண்ணீர்வாசம்தொடுக்க
கங்கணம் பூண்டடுக்க கையைநீட் டிக்கொடுக்க வருண

இன்னம்சந்தனவிழுதும் மதுவொழுகும் வனமலர்கள் முழுதும்
பொன்னுடை யும்கனக பூஷணமும் அணிகப்
பின்னுள்ள தும்கற்பகம் பெருக்கமுடன்தருக வருண

ஐந்துகனியைநதமுதம் கவ்வியம்விநதை விநதையாயமுதுசிதம்
கந்தமிருந்த தூமம் கதிர்விளக்குகள் நேமம்
சிநதைபெருகக் காம தேனுவளிக்க நாம வருண

## வருணன்சுந்தரேசரைத் தோத்திரம்செய்தல்·

விருத்தம்.

வருணதே வனுமிந்தப் படிசை வாக
மந்தனிலே சொல்லியவா றியைந்து பூசைக்
கொருமையுடன் வேண்டியசா மக்கிரியம் சேர்த்
துணமையுடன் செய்துதிக்கும் வெள்ளி போலே
அருமைதந்து நிலவொழுகும் நித்தி லங்கள்
ஆயிரம்கொண் டகமகிழ்ந்தீ ரைந்து நூறு
திருநாமம் சொல்லிஅருச் சனை புரிந்து
திகழுவான் பணிந்தெழுந்து புகழுவானே.

சுருடடி, சாப்பு

பல்லவி.

சாமிசோம சுந்தரா தழைக்கும்நீல கந்தரா

ஸ்ரீமதுரை நாதனே சேல்விழிச மேதனே
மாமன்தேடும் பாதனே மன்னும்தத்வ போதனே சாமி

சரணங்கள்

அர்த்தநாரி பாகனே அழிவில்லாத தேகனே
சத்தியசைவ யோகனே தவளநந்திவாகனே சாமி

௨ காலனுக்குக் காலனே கண்ணிலங்கும் பாலனே
ஆலமுண்ட சீலனே ஆதிதேவ மூலனே சாமி
௩ தொண்டருக்கு நேசனே தோற்றமிம்பூ தேசனே
பிண்டமண்ட வாசனே பிறவித்துன்ப நாசனே சாமி
௪ வரமருள்பிர தாபனே மதனைவெல்லும் கோபனே
பரபிரமஸ்வ ரூபனே பாண்டியவம்ச தீபனே சாமி
௫ மானணிந்த கையனே மதிமுடிக்கும் ஐயனே
ஞானமீயும் துய்யனே நம்பினோர்க்கு மெய்யனே சாமி
௬ இந்திரவிமா னத்தனே இசையுமைந்தெ ழுத்தனே
ஐந்துமாமு கத்தனே அளக்கொணாபர சித்தனே சாமி
௭ மலைவளைத்த தீரனே மங்களஉ தாரனே
பொலியும்நாக ஹாரனே புரமெரித்த சூரனே சாமி

சந்தவிருத்தம்.

வருணனிசை கூறவீசன் உனதுமன தாசையாது
வகையுடனே யோதுவாயெ னவுமோத
மடியினும தீதிலாத உதரவலி சாதரூப
மரையிலுடல நோயலால்வி லகலானேன
அரிபிரமர் காணொணாத உனையளவு காணவோதும்
அடல்புரிய லானதீது நலமாக
அணிவதடி யார்கள்பாலுன் அருளசெயழ கோவிலுடக்
அதிபதிசொ லாலேகாண வரலானேன்
இருவிழியினாலேசாமி தரிசனம தாலேசூழும்
இருவினைகள் ஆகநீடி வருநோயும்
இவைகளுமலாமல்வாழும் உரியமணியாதியாலும்
இகழ்வதரி தானநோயும் இறலானேன்
தரணிதனில் ஈடிலாத அடையவரி தானவீடு
தனையுமுற லானதாலே கனிபோலே
தருமமுத லானகாலும் ஒருமையுட னேகைமேலே
தருகுமிது போலேகாணல் அரிதாமே.

இதுவுமது

சலபதியிவ் வாறுரைத்தென் குறைதவி ரனைடும்
கூறமித்தருள வேண்டுமெனத் தாழ்ந்தெ ழுந்து
பலவரமும் பெற்றேதன் பதிபுகுந் தான
பகவன்விடு முகில்நாலும் கூட லாலே
குலவுமிசை சேருமது ரையுநான் மாடக்
கூடலென விளங்கின்தி துவரபபோர் கேடபோர்
நிலமிசைபோ கமும்பெற்று முடிவில நெற்றி
நேத்திரன்பொன் னடிநிழலில் நிலைகொள் வாரே

ஆக விருத்தம் (௩) சந்தவிருத்தம் (க கீர்த்தனை க) தரு உ, ஆக ௮)
நான் மாடக்கூடலான படலம் முற்றும்.

உ

சிவமயம்.

இருபதாவது,

## எல்லாம்வல்லசித்தர் திருவிளையாடற்படலம்·

அவதாரிகை—விருத்தம்.

நாமுேக கண்ணன வேணி நான்முகி லால்நான மாடக்
கூடலாப் பெயரமைந்த கொள்கைமுன் னுரைத்தே னிப்பால
தேடிவந் தெல்லாம் வலல சித்தராய்த் திருவே டம்பூண
டாடிய விளையாட்டத்தின அருமையை யினிச்சொல வேனே

சுந்தரேசரிந் நகரிலிருந்தல்·

விருத்தம்.

முத்திபுரம் தனனில்விமா னத்துள் வாழும்
மூவருக்கும் முதலான மூர்த்தி நாளும்
பத்திமிகுந தபிஷேக பாணடிய னுக்கும்
பட்டணத்துள ளோர்களுக்கும் அடியாருக்கும்
நித்தியகல் யாணமும்சம் பத்துமென் மேல்
நிலைகொளவும் நற்கதியைப பெறவு மனபு
வைத்தவரெல லாம்வலல சித்த ராக
வருகின்றார் கருணைமிகப பொழிகின்றாரே.

பநதுவராளி, ஆதி

பல்லவி.

மதுராபுர நாதர்வந்தாரே சித்தவேஷரா மதுராபுர நாதர்வந்தாரே.

அநுபல்லவி.

மதுரா புரவீ தியிலே அரிநால வதனனுக்குமரிய பதம்நிலத்திற்படிய மது

சரணங்கள்.

க வட்டமான சடை யாருமாமுடி இலங்க இருகாதினி லுமதொங்க
விட்டவார்குழையின் சோதிகண்டிருள் பதுங்கத் திருநீறணி நெற்றியில்
சட்டமாத்திலதப் பொட்டெதிர்நதவர் மயங்க ஒளிகுழவு மேயணி
பட்டியாலையுத்த னத்திருவிடை விளஙகப் பெருகும் யோக
பட்டமேவியுரம்தொட்டபூணலசிவந திட்டகையிலணிகடடுவாங்கமுடன
மதுராபுர

உ பாதமீதணியும் வேதகிண்கிணி சிலம்பும் மைக்கையினிலேதொடும்
சாதகும்பமய மாமொளிவீசு பிரம்பும் வெண்ணிறமுடி படவர
மீதிலேபடிக மாலையாடிய தழும்பும் கருணாரசம் பெருகிய
போதமேவுதே னுண்டொழுகு முகத்திலணைபும் பொலிந்திலங்கத்
தாதுலவியசெழும்போனதநிகரடியிலஓதுமுபனிடதபாதுகையையணிந்து
மதுராபுர

புளளிமேவுகொம் வீரவேங்கையை யுரித்து உடைகேவண மாயிடை
நளளவேயிடது தோளிலபடிகை விரித்து யோகாதிசய யுந்தனைக்

கொள்ளவேவலது தோளில்பொக்கணம்பரித்து உலகின்றவ ராகி
வள்ளலேயிவரென் றெண்ணவேஒளி தரித்து வந்ததோ வென்ற
குள்ளபேர்பலருமுள்ளவேயுயரும்வெள்ளிமாலவினடையைத்தள்ளிவீதியி
மதுராபுர (ட

## மதுரைவீதியில் சித்தர்விளையாடுதல்.

மதுரைநா யகனிந்த வாறு சித்த
வடிவம்பூண் டிளநகைபூண்
மதிமுகத்தில் குறுவெயர்வு பூண்டு நீண்ட
மாளிகையுப் பரிகைமுந்நாற் சந்தி நாறு
விதமுலவும் சித்திரகூ டங்கள் வீதி
வீதியிலுள் ளோர்தமக்கா காச கங்கை
குடிகொண்ட தெனவுவகை கொள்ள வந்து
கூடினார் பலபலசித் தாடி னரே.

வண்ணத்தரு. — நவரோசு.

௧ பூங்கதம்ப வனத்துநாதரிவை பாகருகொண்டுயர் தெற்குவீதியிடை
நிலைபெற்றும்வட திசையுற்றும்பொலி
வொடுமற் றருணக் கதுபெற் றவர்பச்
சிமமடைந்துவெகு ஜனங்கள்கூடவும்
வீழ்ந்தபல்லும் நரைத்தகேசமொடு சூழ்ந்திசைந்த விருத்தர்தாருணிய
அடையச் சென்றெதிர் மொழியச் சிந்தையில்
அருள்வைத் தவர்கட கெழில்மத் தகமத்
தியில்பிரம்மையவரு டியன்புபூணுவர்
சேர்ந்தஅம்முது மக்கள்ரூபமதை ஊர்ந்தவங்குத லைக்குமாரர்மிசை
வருவித்தும் மல டிகளுக்கும் தனை
யர்கள்பெற் றிடவெட் பொடிநெற் றியின்மத்
தியிலணிந்து கருணைதந்து நாடுவர்
மாதாட்சி பெற்றுவளர் பாகனார்

௨ பூண்டிடும்கிழ வர்க்குமேபருவ மீண்டுவந்து சிறக்கவேயவர்கள்
மனைவிக்கும் இள மையினைத் தந்தெழில்
பெருகக் கருவுற் றுமகப் பெறவைத்
தொளிசிறந்த பொடிஎறிந்து மேமிக
வீங்குகொங்கை யுருக்கள்மாறி யழ கோங்கிடும் புரு டர்க்குநேரிசைய
வடிவொக் கும்படி செயவித் தும்புரு
டரையத் தெரிவைக் கிணையொப் பவுருக்
கொடுவமைத்து வர நினைந்துமே பொருள்
தாங்குசெல்வர் மனைக்குளானதனம் ஏங்குகின்ற தரித்திராள்பவனம்
அடையத்தந்துள மிகவிஷ்டங்கொளும்
இருவர்க் குமனப் பகைமுற் றிடமெத்
தவர்கைகொண்டு மிகவிலங்க வேசெய்வர்

மால்பூட்டும் வெள்ளைவிடை வாகனனார்
௯ ஆன்றுவந்தடர் குஷ்டமானதறு மூனறுகுன்ம வயிற்றுநோயொடுத
லைவலிக்கும் நய னவலிக்கும் கர
ணவலிக் குமதற் குளவச் சிதமைத்
துகளெறிந்து விலகவும் செய்தே ஒளி
தாழ்ந்துகண்குரு டுற்றபேர்செவிடு தீர்ந்திடும்படி சித்தமேயருளி
முடவர்க்கும்முடல வலிவர்க்கும்குறள
உருவர்க் குமவை தொலையக் கருப்பைவைத்
தவைபிரம்படியில அகனறுபோகவே
தாந்தெரிந்துபடித்திடாமலிருள் ஆர்ந்தசிந்தையர் சுத்தஞானயுளா
றுவர்திக் கிளறமொழியினர்க் கும்பல
கலையொட் டுமெய்த் துவுரைத் திட ற
கருணைதந்து பொடிவழங்கு நாயகர்
வாதாடடமுனனிட மாடினார்
௰ வாங்குமம்பர மத்திமீதுகடு வாங்கமூர்த்தி நிறுத்திப்பூசி திமன்
மிசைநடடும் பெ ருவிரலைவைத்தும் கா
கமெனசசுழலப் பணிமத் தகம்வைத்
திருபதங்கள சுழ லவும் செய்தேயுயர்
பாம்பதினைபகை வந்துநேரவெளி தாம்பயந்து தடிந்துமேகமிடி
யொடுகைக் கொண்டபி ழிபுனற கண்டதி
சயமுற் றிடமற் றவையைக கனத்
திசையமைந்தி டவி டவுஞ்செய்தே வெயில
காய்ந்திடும்பக லுக்குளே இரவில ஆந்திடும்பொருள் முற்றுமேதெரிய
வருவித்தும்பக லினிலமெய்க்கும் பொருள்
களைமிக் கவிருட டினடமெத தவெளிப்
படவமித அதிசயங்களேசெய்வர்
மாமோக்ஷ மெய்மைதரும் ஈசனார்
௰௧ வாஞ்சைமிஞ்சு மதிர்சியமாகருஷ ணஞ்சனங்கிரியை ஒத்துவாதவசி
அவயஸ்தம்பமி வைகளமெய்க் கும்படி
அறிவித் தவர்பற் பலசித் திரையக்
கணமிணங்க வெகு விதம்செய்தே கதி
வாய்ந்திடும் குதி ரைக்குநேர்கழுதை ஈண்டிவந்துரு வொக்கவே விரைய
நடையிடடும் நெறி தனிலொக்கும் படி
கருதிக் கழுதைக் கினையப் பரியைத்
திரியவிந்தைபல புரிந்துமே வலி
பாய்ந்தெழுந்த மதத்துயானைதலை சோர்ந்தஅங்க மிளைத்ததூனை வடி
வமதொக்கும் படி தெரிவித்தும் கடு
வனைமற் றவனைப் புலியொத் திடவைத்
துளமகிழ்ந்தி வைகள செயும் தயாபரர்
வானோர்க்கு முள்ளரிய தாளினார்

சித்தமதா னாம்போய்க்காண் போமென் றுள்ளம்
சிறந்திருக்கும் குறிப்பையறிந் ததற்கு முன்னைச்
சித்தர்விமா னந்தனக்கு வடமேற் றிக்கில்
திருந்தினார் சிவயோகம் பொருந்தி னாரே.

கல்யாணி, சாப்பு.

க ஆனந்தச்சித்தர் சரித்திரம்இன்னம் அறிந்துகேளும் முனிவரரே வி
மானந்தனக்கு வடமேற்கிருக்கின்ற தோரணம் பார்த்திருந் தாரே (ய
உ அப்போதபிஷேக பாண்டியனைத்திங்க ளாறுதிக்கின்றதைநாடி செய்
பொற்பங்கயத்தடம் ஆடிமதுராபுரேசன்திருவடி தேடி (ன்
ந பத்தியுடனேவணங்கிப்ரதக்ஷணம் பண்ணிவருங்கால்முன் னாலே மதோ
மத்தர்களாகிய சிங்காரர்கூடி வரும்போ தவர்க்கெதி ராலே (மை
ச வீற்றுற்றவெம்புலித்தோலின்மேலேயோகம் விளங்கக்கடவாங்கத்தின்மீது கை
ஏறிடடுக்கொண்டு சிவயோகம்சாதித் திருமாந்திருந்தாரப் போது
ரு புத்திதெரியாத சித்தாளழுந்துபோ போவென்றடிக்கடி கூறக் கண்டு
சற்றுமசையாமல் சிவயோகத் தரிக்கின்றார் ஆனந்தம் மீற (ன்
சா பின்னும்வெகுண்டுநெருங்கிக்கைகளைக்கப் பிரம்பாலேதண்டிக்கநினைந்தார் உட
பினேவருகின்றபாண்டியனன்பு பெருகவந்தண்டையி லணைந்தானே
எ நிச்சலமாக இருக்கின்றசித்தரை நேரிட்டுக்கண்ணாரக்கண்டான் கண்டு
மெச்சியமன்னவ னதிசயம்பூண்டபின மெய்மேலுமானந்தம் கொண்டான்
அ தேவரீராரெந்த நாட்டெந்தவூரும் திருநாமமேதிந்த ஊரில வந்து
மேவியதென்ன வரும்வித்தைதானென் னென்று மீனவன் கேட்டதன்பேரில்
கூ நாநாதேசத்திலும் நாடுபுரத்திலும் நாடிவரும் சித்தர் ஆமே இப்போ
தானாலும்காசிமீர தேசத்திலகாசி அதனிலவசிக்கின்ற தாமே (சை
ய மற்றுமநாதன்தனித்துப் பிச்சைப்பெரு வாழ்க்கைசேர்ந்திந்நிலம் பகழும்
வத்தலமெங்கும் திரிந்துவந்தோமிங்கும் வந்தடுத்தோம் ஞானம்திகழும்
கக முத்திபுரத்திலவசிக்கின்றமாணிடர் முற்றுஞ்சிறக்கவந்துதந்தோம்எந்தம்
சித்துவிளையாடல காட்டிஅவரவர் சோதித்தவாறெலலாம் கொடுத்தோம்
கஉ காணுமறைமுதல நாலிரண்டெட்டுக் கலையினும்எம்போலிப்பூமேல கல்வி
ஆணவம்பெற்றோரொருவருமிலலையெல் லாம்வல்லசித்தர்நா மாமே (கை
கந எண்டெமக்குன்றனாலேபெறத்தக்கது யாதுமிலலையென்றுமொழிந்தார்ந
பூண்டகத்தானந்தச்சித்தரிவ்வண்ணம்பொருந்தியிருந்தருளபொழிந்தார்

விருத்தம்.

பகவனாம் சித்தரிவ்வா றுரைக்கத் தென்னவ
பார்த்தெவ்வா றிவரையளப் போமென் றெண்ணி
மிகவுமியோ சிக்கையிலோர் உழவன் வேந்தன
மெல்லடிதாழ்ந் தொருகரும்பீர திடவே வாங்கி
அகமிகும்வல் லவர்களிலவல லவரே இக்கல்
ஆனையைக் கரும்பருந்தச் செய்வீ ராகில
சகலகலா வல்லவரும் பெருமானும் நீர்
தாமென்றான் கேட்டதீய னாமென் றானே

## கல்லானைக்குக் கரும்பருத்தியது.

விருத்தம்.

செல்லைவிலங் கிடவனில் வாறு கூறச்
சித்தரிள நகைபுரிந்து னுலை மக்கொன
ரொல்லும்வகை யாதுமில்லை கண்டாய் நாமே
உனதாசை திரஅருள வதலால் கற்ற
வல்லவற்கி தொருபெரிதோ மோவென் றெண்ணி
மனம்கொண்டு கடைக்கண்ணாலே நோக்க வேயக்
கல்லானை யக்கரும்பைக் கடித்தருந்தக்
கண்டிட்டான ஆச்சரியம் கொண்டிட் டானே.

தோடி, ஆதி

பல்லவி.

கல்லானைக்குக் கரும்பருத்திய வல்லாண்மையைக் கேளும்

அநுபல்லவி.

கல்லாக்கலை கற்றவரிவரென்று பல்லாரும் துதிக்க எல்லாம்வல்லசித்தர் கல்

சரணங்கள்

க அடியார்தமக் கருளும்திருக்கடைக்கண் ணாலேகொஞ்சம்பார்த்ததினாலே
மடைவாய்திறந்தாப்போலேமும்மதம் வழிந்துபெருகிடமென் மேலே
இடிபோலதிர்ந் தம்பரம்பிளக்க வுறுந்துகர்ச்சனைகொண்டிப பாலே
நெடிதாகிய துதிக்கையை நீட்டிப்பாண்டி
நிருபன்கை யிலிருந்து சுவைமிகுந் தெருக்காலே கல்லானை

உ பற்றிபறித் தகலும்கடைவா யிருபாலும். சாறுவழிந் தோட
சுற்றிப்பல வரிவண்டினங்க ளுண்டு சூழ்ந்து மயங்கிஇசை பாடத்
தித்திக்கக்கடித்திர சத்தையுண்டு நீண்ட துதிக்கையூச லாட
வெற்றித்தருக் கடைந்து வெறித்தங்குநன்
மெய்நிழற் கண்டுசீறி வெகுண்டுகர்ச் சனைபோட கல்லானை

ங மதியாமலே பரிசோதனை செய்த மன்னன்மனத்திலையம் மாற
விதிமாலுக்கும் காணவரிய திருவிளையாடலென்றுபலர் கூற
மதிசூடிய நமதுசோமசுந்தர வள்ளலோவென்றுள்ளம் தேற
மதுராபுரத்தனை வோரும்இவரேயெல்லாம்
வல்லசித்தரென்றேசொல்லியானந்தம்மீறக் கல்லானை

## சித்தர் பாண்டியனுக்கு புத்திரபாக்கியங்கொடுத்தல்.

விருத்தம்

கன்னலைக்கல் லானையுண்ணச் செய்த சித்தர்
கடைக்கண்ணாலே மறுபடிநோக்க விடஅவ் வானை
தென்னவனகண் டத்தணிமாலையைப்ப றிக்கத்
தெரிந்ததன்மேல் கஞ்சுகர்க ளெழுந்து சீற்றம்

௫. சித்தனிருந்திலங்கும் நீடிய விமானத்துக்
குத்தரபாகத்தில ஓராலயம் அமைத்துச்
சித்தசாமியாகிய திருவுருவைத் தாபித்துப்
பத்தியுடனிதமும் பணிந்தெழுந்து தரிசித்து விக்ரம

சந்தவிருத்தம்.

விக்கிரம நாளிலோது கசசிநகர் மீதுவீறு
மிக்கமணர் பாதைகூடி ஒருசோழனை
வெறறிவளர் மாறனோடெ திர்ககவெரு ளாலேகுது
வித்தைகளி னாலேதானே இகலகோலி
அக்கிரம மாகவேசெ ருத்திடவு நீலமாதி
அஷ்டகிரி மேலும்வாழ மணர்பேரால்
அக்கரையி னலவெவேறு வக்கணையொ டோலைகீறி
அச்சமற நாதராலே விடமேலே
சிக்கெனவே நாலிராயி ரத்தவரும் ஏகமாக
செக்குரல்கள போலேகூடி நிரையாக
திக்குலவு நீலமேக மொக்குமவர் மேனிபோலே
சித்தமிருள் மூடவேய வனிமீது
ஒக்குதலி லாததாத கித்தொடையன் வாயிலாளி
உத்தரவி னலேபிலி யதனோட
உட்புகவெ மேமகிழநது கொற்றவனி லாவுதானம்
உற்றுறைதல மேயினர்கள் முறையாலே

சமணர்கள் ஆபிசாரஹோமம்செய்தல்.

விருத்தம்

மண்டிவநத சமணர்களெல லாரும் சோழனை
மாமுடிமேற் பீலிகைமைத் தாசி கூறக்
கண்டவரை நோக்கிவசிய முனனூறும் கை
கண்டவரே நீங்களபாண டியன்தன் பேரைக்
கொண்டாபி சாரம்செய் தவன்பி ராணன்
கொணருலுங் களுக்கெமது நாட்டிற் பாதி
விண்டுதரு வோம்விரைநது செய்வீ ரெனறே
விதிக்கினான் அதற்கவர்சம் மதிக்கினாரே.

காபி, ஆதி.

பல்லவி

ஆபிசாரஹோமம் செயதாரே சமணரெலலாம் ஆபிசாரஹோமம்செய்தாரே

அநுபல்லவி.

பாபஹோ துவாம்வலல பாணடியன் தன்னைக்கொல்ல ஆபி

சரணங்கள்.

௧ பாலாற்ற தீரத்திலே மூன்றுகாதம் சாலைவிஸ்தாரத்திலே
கோவியோசனையிடை குழியைக்கலலியவற்றுள்
மேலும்அஷ்டகோணமா வேள்விக்குணடமமைத்து ஆபி

சரணங்கள் (து

க வாரிதிமத்தியில்முளைத்து வரும்ரவிபோல் மருங்கிற்செங்கச்சையைவரித்
சோரிவாளிடையிற் கட்டியேபுட்டில் துலங்கமுதுகில்விசித் தணிந்துபகட்டி
ஆரும்வீரகண் டாமணிகட்டி ஆரணம்தேடும்இரு காலும்நில முட்டி
வந்தானே (தொங்கமாட்டி

உ மேலும்த டங்தோளிலேகோட்டிச சிலைவார்பூட்டும் வில்லொன்றதிலே
பாலுறையுமையொருபாதியிலமன்ன பரந்துவளர்ந்திருப்பதோவென்றுதன்ன
மாலொருபாதிபெற் றிசைந்ததோ வென்ன வனமேனியெங்கும்பசந்தொளி
வந்தானே (மின்ன

௩ கண்டுகாமனும்ஆசைகொள்ள எழில்பெருகும் காளைப்பருவமொடு நள்ள
மண்டலமளந்திடு மாயன்போல்வந்து வழுதிதன்னிடுக்கத்தைத் தீர்க்கநினைந்து
மண்டபத்தேறியானை தனனை எதிர்ந்து வரவுபார்க்கும்சிங்கம் போலே எழுந்து
வந்தானே

## ஆனை இறந்துவிழுதல்.

விருத்தம்

மாதேவன் வேடுருவம் பூண்டுட் டாள
 மண்டபத்திற் சேர்ந்தியானை வரவுபார்த் தெண்
மாதிரவா ரணம்நடுங்கச் சிங்கம் போலே
 மாமுழக்கம் காட்டிவில்லில் நெடுநாண பூட்டி
நாதமதுண் டாக்கிஇடக் கரத்தி லேந்தி
 நாரசிங்கக் கணைதொடுத்திட டிடக்கால் முன்னால்
காதளவும் வாங்கிவிட அதனல் மஸ்த
 கம்பிளந்தக் கரிஇறக்கக் கண்டிட் டாரே.

காம்போதி, ஆதி.

ஆனை விழுந்ததைப் பாரும் சமணர்விட்ட ஆனைவிழுந்ததைப் பாரும்

அநுபல்லவி.

ஆனை தன்னுயிர் பதறி அவையவமெல்லாம் உதறி
வானில்மேகம்போற்கதறி மஸ்தகம்ரண்டும் சிதறி (ஆனை

சரணங்கள்.

க தெண்டிரைசூழ்பூமி வெடிக்க சேடனுயிரம் சென்னியும்சிதைந்து துடிக்க
 அண்டமும்விண்டதோவென்ன ஆனையெட்டும்திடுக்கென்ன
 பண்டருண்டதுபோய்முன்னம் படைத்தவீறுடனே மன்ன (ஆனை

உ கரியுரித்தவன்தா ளாலே உதைக்கவிழும் காலனைப்போலேமண் மேலே
 இருள்முகம்பிளந்தொதுங்க எழுமிரவிபோல இலங்க
 குருதிநெற்றியிற் பிதுங்கக் குறித்தசெம்படனெவிளங்க (ஆனை

௩ புன்னெறியமணராலே சொல்லும்நெறியைப்பூண்டசோழன்கொடுங்கோ
 தன்னிருகொம்பாகவெல்லத் தாங்கிவந்தமரில நல்ல (ஆ
 தென்னன்கோலைஐயன்வெல்ல சிங்கவாளியாகக் கொல்ல

## பாண்டியன் சமணரைத் துரத்தி அடித்தல்.

விருத்தம்.

மலையிலிடி வீழ்ந்ததெனக் கணைபாய்ந் திட்ட
வாயிலும்வா யிலும்குருதி சோரவே இந்
நிலமிசைவீழ்ந் திறந்தவா ரணத்தைச் சூழ்ந்து
நெருங்கிடும் சனம்பிசா சுகள்பூ தங்கள்
மொலுமொலென மொய்த்திடச்சே னையுடன் தென்னன்
முயன்றவ்வா னையின்பின்சா ரமணப் பேய்கள்
தலைதடுமாற் றத்துடனோ டத்துரத்தித்
தடுக்கின்றான் சிக்ஷைசெய்து முடுக்கினானே

நாதநாமக்கிரியை, ஆதி

க இந்தவி தம்தென்னனு வந்தடடா வமண்டபத்
திருக்கும் வீரனருள்தன் மேலே நாடவே
கந்தரம் போற்கறுத்து வந்தம ணர்படைகள்
கடுவனைக்கண்டவெலி களைப்போ லோடவே
உ தடிகொண் டெறிந்தவரை மறித்தவர்கைப்பீலியைத்
தட்டிப்ப றித்துப்பின்னும் கோப மூட்டினார்
இடையி லுடுத்தபாயு முடனேபிடுங்கிக்கிழித்
தெறிந்தாற்றில்விட்டவமா னம்செய் தோட்டினார்
ங செய்த மாயமிழந்து சேனையுடன்முறிந்து
திராப்பாவத்தில்மூழ்குண் டே யொதுங்கினார்
வைதெல் லாரும்பழிக்கத் தலையானபேரும்தங்கள்
மானம்கு லைந்தோரிடத்தே யொதுங்கினார்

## விக்கிரமபாண்டியன் நுதி.

விருத்தம்

வீரமுடன் சமணரையிக் கோல மாக
வெருண்டோடச் செய்தபின்விக் கிரமத் தென்னன்
வாரணத்தைச் சங்காரம் செய்தட் டாள
மண்டபத்தில் இருக்குமய்யன் தன்னை நாடிப்
பூரணமாக் கருணைசெய்தெக் காலு மிங்கே
பொருந்திவா யாரணத்துக் கருத்தம் சொன்ன
காரணனே என்றுசொல்லி மனத்தி லன்பு
ததிக்கின்றான் அஞ்சலித்துத் துதிக்கினானே

பலகரி, சாப்பு

க அட்டாளசுந்தரனே மனமொழிக் கெட்டாமைக்கந்தரனே
உ மேருவளைத்தவனே ஷட்ட தாரமா யுற்றவனே
ங சந்திரகலாதரனே கருணை சிந்துவா கும்பரனே
ச முத்தொழிலபூண்டவனே தொழும் பத்தரையாண்டவனே

புன்னாகவராளி, சாப்பு.

க வேதமுனிவர்களே கேளும் விக்கிரமபாண்டியன்பு விக்கரசாய்
நீதிசெலுத்தையிலே புகழ் நீளும்மதுரையில் வாழுகின்றான்
உ பாரும்ஒருமறையோன் விரூபாக்கனெனும்நாம மேற்குமவன
நாரிசுபவிரதை என்னும் நாமதேயம்பெற்ற மாமனையாள்
ங குழவியிலலாக்குறையால அவர் கூர்ந்துபல தர்மம் வாய்ந்துசெய்து
எழுமாதரைப்பணிந்து தவம்ஏற்கச்சிவனரு ளாக்கமதால
ச கேளும்ஒருகன்னியைப் பெறறுக் கெவுரியெனறேஅழைத் திவ்வகையா
வாழும்வயதைந்தினில் சென்ம வனபிணிதீர்ப்பதற கனபுடனே
ரு தநதைஅடிபணிந்து இச சனனமொழிகக மனனம்செயயும்
மநதிரம்யாதெனவே கேட்க மாமகள்மேலன்பி னல்மகிழ்நது
சு தேவிதனமநதிரத்தை உப தேசக்கிரமத்துட னேசொல்லவே
நாவில்வடுவுறவே இ ராவும்பகலும தேவிளம்பத்
எ தாதைமகளதவத்தைக் கண்டு சைவஸதலவாசம் செய்பவனுய
ஆதிவருணமதுக் குள்ள ஆரணமாத்யாத பூரணமாக்
அ கறறறிவுளளவனுக் குலம் கணடாலுயர்ச்சியைக் கொணடிதெல்லாம்
உற்றவற்கேமகளைத் தர உள்ளம்தனிலநேமம் கொளளவமே
கூ கதிக்கும்பிராயமெட்டில் திருக கலயாணத்தைசசெயய நலலதெனும்
ததிக்குள்ஒருபகலில் பிரம சாரிதிருநாம தாரிநிதம் பார்த்
ώ கடைதோறும்முடடிகொள்வோன தன்ன காதனிற்பிச்சைக்கு வந்திடப்
திடவேயுறமுறையார் தன இல்லாள்முதலாகச சொலலாமல்
கக ஒலிக்காமலமநதிரநீர் எடுத் துய்யஅவன்கையில பெய்யவுமே
சலிப்பாகபபந்துக்களும் பெற்ற தாயுமறிந்துளத் தாயாசமாய்ச்
கஉ குலமும்குடிநலமும் கல்வி கோததிரமும்செய்ய சூத்திரமும்
தலமும்அறியாமல் பல சாஸதிரம்ஆராய்நது பார்த்திருந்தும்
கங விதியினவழிமனத்தைச் செலல விட்டுவயிணவப பட்டனெனறம்
மதியாமலபிச்சைகொளள வந்த வற்குத்திருமக ளைக்கொடுத்தால்
கச குற்றம்எனறெண்ணுமல் ஏன கொடுத்தாயென்றேறி மதித்தாருடன்
பெற்றமகள்விதியும் வீடடில பிசசைக்குவந்தவன நலவினையும்
கரு பலலோாகளும்அறிய விரூபாக்கனமனத்தினி லுக்கமுடன
செல்வமிகுமகட்கு ஒளி சேரும்பொன்னலலங காரம்செய்து
கசு மங்களமாபபிரம மண மாட்சிசெய்தக்கினி சாக்ஷியாக
மென்கைமலர்பிடித்து யாரும் மெய்க்கமருமகன கைக்கொடுதது
கஎ சகலவரிசைகளும் செய்து தம்பதியோடவன தனபதியாய்.
நகரிற்செலவிடுத்தான பின னடநதவன்வீடடுக்கு வந்தடுத்தான் வேத

விருத்தம்.

வறுமையுளோான் நிதிகண்ட தென மணந்த
மகளுடன்தன இற்புகக்கண் டவனை ஈனறூர்
பிறகுவந்த கௌரிசைவக் குறிபபை நோக்கிப்
பிரித்துவெளி வைத்திகழ்ந்தோர் நாளிற்பூட்டி

நிறைமணத்துக் கவர்அஃதூர் உறப்பி கைக்ஷுக்கு
நெடுநாம தாரிகள்வந் திடுவ தல்லால்
கறைமலிகந் தரனடியார் வாராதால இன்றென்
கண்மாசு படுவதெனக் கவலுற்றாளே.

## சுந்தரேசர் திருத்தொண்டராக வருதல்.

இதுவுமது.

ஆண்டவன்தன் திருவடியார்க்கு தரிசனஞ் செய்
யாக்குறையால் தளர்ந்தனிய இருந்திவ் வண்ணம்
வேண்டிமன மயக்கமுறக் கவுரி மின்னுளை
மெலிந்திருப்ப தனைநோக்கி மௌலி வேய்ந்து
பாண்டியரா யிருந்துலகை யாண்ட கூடற்
பரமனவள் குறைதீர்க்கும் பொருட்டால் அணிபு
பூண்டடியார் வடிவேதம் வடிவ மாகப்
பூண்டிட்டான் விருத்தராத் தோன்றிட்டானே.

மோகனம், ஆதி

பல்லவி

திருத்தொண்டனாகவந்தானே சோமசுந்தரன் திருத்தொண்டனாகவந்தானே

அநுபல்லவி

திருக்கண்டத் தும்பரத்தும் சிரத்தும் புயத்தும்மலர்க்
கரத்தும் உருத்திராக்ஷக் கண்டிகை யைத்தரித்துத் (திரு)

சரணங்கள்

வெகுநாளாத் தமையொத்த வேதமா புஸ்தகத்தைத்
தகைமையுடன் கைமேலே தரித்துக்கொண் டனபினலே (திரு)
தரித்தகோ வணவுடை தளரத்தள ளாடிநடை
திரிந்துமேனி திரைத்துச் சென்னியெனு கும்நரைத்து (திரு)
புயமீதுத்தரியத்தைப் போட்டுக்கொண்டு தண்டத்தைக்
கையிலூன்றிக்கையாலமெல்லக் கவிகையும் தாங்கிநல்ல (திரு)
பூணலமுந நூல்வலத்தில பூண்டசைய வுரத்தில
காணும்விபூதிமின்னக் கனைத்துக் கவிழ்ந்து துன்ன (திரு)

விருத்தம்

விருத்தமறை யவராயிவ் வாறு வந்து
வெகுநாட்பட டினிபோலே மயங்கி வாடி
நிருத்தரே கௌரிமின்னுளை இருக்கை தேடி
நேர்வரப்பார்த் தெழுந்துபசரித்துப் பீடத்
திருத்திவணங் கிச்சிவனை யிருக்கு காண
என்னதவம் செய்தேனோ எனக்கேட டணடி
அருத்திவிடாப் பசிப்பிணியால் வருந்தி வந்த
தாமென்றார் நின்பாலவந் தோமென்றாரே.

தாக்கிடுமுன இருந்தயௌ வனத்தைமாற்றி
அநிலைகாப் பணிந்துகுழந் தையைபபோல மாறி
யாடினர் ஓர்வடிவம் சூடினரே

புன்னாகவராளி, ரூபகம்

பல்லவி

குழந்தை வடிவெடுக்கினரே

அநுபல்லவி.

நிதமும்—விழைந்தானுக் கன்பசெய்து விளயகும்முனிவோர குழந்

சரணங்கள்

க சுருதிமணிச்சிலம் பொலிந்திருக கலிக்கத்
தெண்டருளள மெனும்மலரோ டையிலிலவிக சிந்து
அரியசி வானந்தத்தேன உதித்துத ததும்பும்
அம்புயததி லுறும்சிறநடிட பெருவிரல சுவைத்துக குழந்தை

உ மையணிகண ணீர்பெருகக் கேளும் கதறி
வாயவிட்டழு தொருசிறிய பஞ்சணைமேல நீளும்
வையகத் தைப்படைத்து நாளும் காக்கும்
வள்ளலன்னை யைபபிரிந்து கலங்குதலபோல் வாழும் குழந்தை

ங மேலும்அடிக்கடி தாஙகிடுத தேம்பி
வீறிட்டழு துவிறைக்க நோக்கிபரம்மம் தொட்டு
மாலய னுதிகளவாய் விட்டு அழுமா
மறைகளழக் கௌரியனபினை வலையிலகப பட்டுக குழந்தை

விருத்தம்.

மகவுருப்பெற் றீசனவிளை யாடக் கௌரி
மாமியெனனும் முழுமாயக் கள்ளி மிக்க
வெகுளியுட னிம்மகவே தெனனக் கேட்க
விமலனுக்கன் புடையவளோர் தேவ தத்தன்
மகளிருட னிக்குழந்தை தன்னை யிங்கு
வைத்தெனைப்பார்த் துக்கொள்கென் றகன்றான என்றுந்
திகழுமவள் கண்கலங்க வேடடைநாய் போல
சீறினள் நேர்ந்தபடி கூறினளே.

விருத்தம்

காட்டுளசாம்பற் பூசியெனபணிமுக கனைனுந்தற கனபர்சே யினைநீ
காத்ததாலெமக்கா காயெனவெளியே கடததினு ரிரக்கமற் றோர்கள்
நாட்டுமாதரவில் லாக்குழந்தையைடபார்த் திரங்கினினறுலவாயப் பிரானை
எண்ணியேகௌரி மந்திரம்செபிக்கவேயழும் குழந்தையின ணிடையில்
காட்டிவெள்விடைமேல அரனுருவாகக கௌரியேஉமைவடிவாகக்
கண்டவர்அதிச யித்திடத்தேவர் சறபக மலர்மழை பொழியத்
தாடடிகமாக நடந்தனரிதனை சாற்றுவோர் கேட்பவர்தமக்குச்
சகலஆர்த்தியுநீங கிடுமெலாலமுடிவில சங்கரன உலகில்வாழ்குவரே
ஆக விருத்தம் எ) கழிநெடில் (க) கீர்த்தனை (உ) தரு (உ) முற்றும்.

உ

சிவமயம்.

இருபத்துநான்காவது,

# மாறியாடினபடலம்.

அவதாரிகை — விருத்தம்.

கூடலெம் பெருமான் மூப்பாய்க் காளையாய்க் குழவி யாயும்
வேடமெ தெடுத்துச் செய்த விசித்திர முரைத்தே னிப்பால்
தேடரும் வெள்ளிமன்றுள் தென்னனுக் காக மாறி
ஆடிய விளையாட்டத்தின் அருமையை இனிச்சொல் வேனே

## இராசசேகரபாண்டியன் அரசுபுரிதல்.

விருத்தம்.

நன்னிலத்தை விக்ரமபாண் டியனதா னீன்ற
ராசசே கரபாண்டியன திறமை நோக்கித்
தன்னுடைய முடியும்செங் கோலு மீந்து
சதுமுகன்மா யவனுலகம் தனிலு மிக்க
உன்னதமா கியசிவலோ கததைச் சேர்ந்தாங்
குமாபதிபொன் னடிநிழல்வீற் றிருந்தா னிப்பால்
இந்நிலத்தை மனுமுறைசெய் தாறிலோர் பங்
கேற்கின்றான் குறைவறவே காக்கின்றானே.

சாரங்கம், சாப்பு

பல்லவி.

ராஜசேகரன மௌலி பூண்டனனே திருவாலவாய்
ஈசனடிதொழு துளைகை யாண்டனனே

அநுபல்லவி.

ஈசனுடிய பாதநூலிலன பிசைந்ததனைக்கற்கொ ளுதெனவொழித்துப்
பேசுமறுபத்துமூன் றுகலைகளும் பிரியமுடனுவந்தொருமையாகக்கற்று ரா

சரணங்கள்

க பொன்னிநாடதனில் மன்னனும் ஆனைக்காவில் நாளும் வாழு
புண்ணியனைத்தொழுதெங் கலைகளும்கற்றுல காளும்
சென்னியெனும்கரி காலனிடத்தன்பு நீளும் கல்
தேர்ந்தொருபுலவன் தனதவையில்வந்து கேளும் எ
மன்னவனுக்கெணெனன் கலையும்பிர சங்கிக்க
வருகுமுனக்கொன்று வருகாதது மிக்க
என்னவெனிலாடும் டாதம்நீ படிக்க
இலையே என்றுதன்னை இகழ்ந்தவனு ரைக்க ரா

உ ஓதும்அறபுல நாவலனமொழியக் கண்டு மால
ஓங்கவியாகுலம் தனைமனதினிலே கொண்டு

வேதமுடியுறும் சோதிதனை நம்பி அண்டும் தொண்டர்
விரும்பியபடியே அருள்புரியும்புகழ் மண்டும்
நாதனுடலைத் தானுமே தெரிந்து நடிக்கவேண்டுமென் றகத்திலே நினைந்து
ஈதென்குலதெய்வமாகவே பொருந்தும் எம்பிரான்கருணையே என உணர்ந்து
ராச

௩ பரதசாஸ்திர நெறிகளமுழுதும் ஆராய்ந்து அதில்
பகர்ந்தபடியாடும் நாடகமுறைமை தேர்ந்து
அருமைசேர்ந்திடும் புலவர்களையன்பு கூர்ந்து தனபால
அழைப்பித்தவர்களுக்காதரவுபுரிந்து தேர்ந்து
வரிசையாகவே அவருடன் அடுத்து வஜிரமணிமுதலளவில்லா தெடுத்து
பரிவுடனேமகிழ்ந்து நடிக்கடி கொடுத்து படிக்கஆரம்பித்திப் படிமுறை தொ
ராச (டுத்து

ஈசன்ஒருகாற்கொண்டேநடிக்கக்கண்டுராசசேகரன்வருந்துதல்.

விருத்தம்

ராசசேகரனிவகை பாவம் தாளம்
ராகமிம்மூன் றினமுறையாற் பரத மெனனும்
பேசரிய நூலாராய்ந் ததனிற் கூறும்
பிரகாரம் நடித்திடுங்கால் தனதுடம்பா
யாசமிகப் பூண்டிருந்து வருந்தும் வெள்ளி
அம்பலத்தில் ஒருகாற்கொண் டேநடிக்கும்
ஈசனுக்கெவ் வருத்தமதுண் டாகுமோ வென
றெண்ணினனா மிகவருத்தம் நண்ணினனே.

காம்போதி, ஆதி

வருந்தியிருந்தானே தென்னனன் றயன்மேலன்பு பொருந்தியிருந்தானே மன்னன

அநுபல்லவி.

வருந்திநான்முகனும் மாயனும் தேடரிய
வள்ளலகாலொன்றே நோவு கொள்ளுமேயந்தோ என்று வருந்தி

சரணங்கள்

க உரியநடநூலாய்ந்தும்ஆடும்வருத்தம் தேர்ந்தும் உணராதுதருமம் ஆமா
அரியபோகமும்வீடும் கொடுக்கும்கடவுள் செய்யும் ஆடலதடுக்கலாமா
எப்படிநானசென — தடுப்பேன் அதைத் தடுப்பேன் துயர் விடுப்பேனஅன்பு
அருந்தவத்தோருள்ளத் தமருமகிமை விண்டு (தொடுப்பேனெனும்
வருந்துமேசரணமென்றுமனத்துட் கொண்டு வருந்தி

உ உள்ளநடுங்கியித்திகிலுவே துணிவென றெண்ணியுடனேசென் றன்பினாலே
வள்ளலுக்குற்றசிவ ராத்திரியிறகதம்ப வனத்தனுக்கு மென்மேலே
வரைவில்லாமல் — மனையாகமமுறையாலொன் றுங்குறையாமலேநிறைவாகவே
மதிமகிழ்ந்தபிஷேகம்செய்துமலர் கொய்து
விதியிசைந்துசாமம் நாலும்அர்ச்சனை செய்து வருந்தி

௩ அண்டர்பிரானடியிற் போற்றிப்புகழ்ந்துவெள்ளி அம்பலந்தனை நாடித்
தொண்டரகத்தில்மேவும் சோதியாடல்கண்டிளைபம் தோய்ந்துசந்தோஷம்கூடி
கண்புனல்சோர— சூழ்ந்து வந்துதாழ்ந்து மண்ணில வீழ்ந்து அன்பில்ஆழ்ந்து
தங்கமேவுதிரிகரணமொன்றாக் குவித்து
செங்கைரண்டுமிணைத்துச சென்னிமீதிலேவைத்து வருந்தி

விருத்தம்

பாண்டியர்கோன் சாமிதிரு நடம்பார்த்தனறும்
பதம்தூக்கித் தூக்கியகால நிலமீ தூனறி
ஈண்டினியான் காணவிடவேமாறி யாடி
எனதுகுறை மாற்றிடுவாய் மாற்றாயாகில
பூண்டவடி வாளமேற்குப புறவீழந தாவி
போக்கிடுவே னென்றுநடடான நடுமுன கூடல
ஆண்டவனப் படிவலக்கா லெடுத்து மாறி
ஆடினான கருணைமிகக் கூடினானே.

ராசசேகரபாண்டியன் துதி.

வலக்காலை வீசியிடக் காலை யூனறி
மதுரேசன மாறிநடித் திடவும் தென்னன்
விலக்கரிய கவலையுமுப் பாசமும் போய்
மெய்யறிவா னந்தவெள்ளத தாழந்தெ ழுந்து
நலக்குரிய கரணமொரு மூன்றும் கூடல
நாதனது வேயாகக் குவிய அனபு
பெலக்கவுமே யவ்வடிவத துடனே கண்ணீா
பெருகிவரத் தாழநதுதுதித் துருகி னானே.

காம்போதி, சாபபு

க இந்திரனமுதல அநதரர்தொழும்சுநதராசரணம் நீல கந்தரா சரணம்
எனறனுக்காகமாறிநடித்து வநதோய் சரணம் கிருபை தந்தோய் சரணம்
உ ஏகநாயக னேஅழிவில்லாத்தேகா சரணம் சிவ யோகா சரணம்
நாகபூஷண னேகயற்கண்ணி பாகா சரணம் விடை வாகா சரணம்
௩ மாயனுக்காழி கொடுத்தருளியதூயா சரணம் தொண்டர் நேயா சரணம்
ஆயுமறையின் பொருள்சொலுமலர் வாயாசரணம் சம்பிர தாயா சரணம்
௪ தண்ணுலவிய மதியணியுமுக் கண்ணா சரணம் அநதி வண்ணா சரணம்
புண்ணியம்புரி யாதவரிடம் நண்ணாய் சரணம் அருள பண்ணாய் சரணம்
௫ பாலமார்க்கண்டன மேலுறும்காலகாலா சரணம் அநு கூலா சரணம்
ஆலமுண்டுயர் வானவர்க்கருள சீலா சரணம் திரி சூலா சரணம்
௬ வெய்யமழுவும் மானும்தரிக்கும் கையா சரணம் என தையா சரணம்
செய்யவிபூதி தரித்திலங்கியமெய்யா சரணம் என்றும் துய்யா சரணம்
௭ விரித்தைநதுகணைதொடுக்குமாரனை எரித்தோய்சரணம் ஆனையுரித்தோய
புரத்தையோர்கணத் தெரிககவேமெள்ளச் சிரித்தோய்சரணம்கங்கை த
௮ அத்தமாதிபி கந்தபரமானந்தா சரணம் சிதா நந்தா சரணம் (ரித்தோ

சிந்தைதனில்நினைநதிடுமுன்வினைந்தோய்சரணம் வளர்ந்தோய் சரணம்
௬ ஓதருமறைமுடிவுறும்பரஞ் சோதியே சரணம் அருநிதியே சரணம்
வேதனும்மாலும் தேடரும்கூடல நாதா சரணம் மலர்ப்பாதா சரணம்

விருத்தம்.

இத்தலத்தி லிக்கூத்தெக் காலுமி யாரு
மேபார்க்க நடித்துவர வேண்டு மென்றே
கைத்தலமேந் திடஐய னவ்வா றின்றும்
காணநின்றுன் இராஜசே கரனு னீன்ற
புத்திரனும் குலதுங்க னுக்கு மௌலி
புனைந்தீச னடிநிழலிற் கலந்தா னித்தைச்
சித்தமுவந் துரைப்பவர்கேட் பவர்போ கத்தைச்
சேருவார் சிவனுலகைச் சாருவாரே.

ஆக விருத்தம் ௬ கீர்த்தனை உ தரு க ஆக ௬. முற்றும்.

உ

சிவமயம்.

இருபத்தைந்தாவது,

## பழியஞ்சினபடலம்.

அவதாரிகை —விருத்தம்.

ஆலவாய்ப் பெருமான் தென்னன் அன்பினுக் கிரங்கி மாறிக்
காலெடுத் தாடல்செய்த காதைமுன் னுரைத்தே னிப்பால்
பாலனஞ் செய்யும் தென்னன் பழியஞ்சும் நெறியா ராய்ந்தன்
பாலவன் உளத்தைத் தேற்றும் ஆடலை இனிச்சொல் வேனே.

### அந்தணன்மனைவி இறந்தவரலாறு கூறுதல்.

விருத்தம்.

பார்த்திபரேத் தும்குலோத் துங்கன் கூடற்
பரமனைத்தாழ்ந் தரிவையர்பத் தாயிரம்பேர்
வாய்த்தவளம் மாதரிலொவ் வொருத்திக் காறு
மைந்தர்பிறந் தவரில்அநந தகுண னெனனும்
மூத்தமகன் திறநோக்கி யுலகா ளுங்கால்
மொயகுழல்பைங் குழவியுடன திருப்புத் தூர்விட்
டாத்திரத்தோ டொருமறையோ னுலை வாய்வந்
தம்மானைப் பார்க்கவழி யடுக்கின றுனே.

சாபபு.

பகவான்திருப்புகழைப் பரிந்துபரிந்துகேட்பீர் மாதவோரே முல்லை
நகையாளுடன்மறையோன் நாடிவரும்வழியில் மாதவோரே
தாகமிகுமனையாள் தன்னையத்தடத்திலே மாதவோரே விரி
வாகும்வடதருக்கி ழுடுத்தவரையிருத்தி மாதவோரே

௩ விரும்பியுண்ணீர்தேடி வேகத்துடனேசென்று மாதவோரே அவன
திரும்பிமனையாளிடம் தெண்ணீர்கொண்டுவருமுன் மாதவோரே
௪ அப்பெருவடத்தின்மேல ஆரோமுதனுளெய்தோர் மாதவோரே அம்பு
தப்பியோர்கொம்பில்மாட்டித் தளர்ந்தாடியிருக்கையில் மாதவோரே (ன்
௫ மரத்தின்கீழிருக்கின்ற மடநதைகணனுறங்கையில மாதவோரே காற்றி
உரத்தாலலைந்தக்கணை யுடனதபபிவிழுநதது மாதவோரே
௬ நித்திரைசெயுமந்த நேரிழைவயிற்றினில மாதவோரே கணை
தைத்துவயிறுருவத் தனதுயிரிழந்தாளே மாதவோரே
௭ அந்தவேளையிலவில்லும் அம்பும்தொட்டொருவேடன் மாதவோரே ஓடி
வந்துவெயிலுக்கஞ்சி வருந்தியோர் நிழலதேடி மாதவோரே
௮ அவ்வாலநிழலைவந் தடைந்தவணிளைப்பாறி மாதவோரே செங்
கைவாளியுடனிறகும் காலந்தம்மறையவன மாதவோரே
௯ தெண்ணீருடனவநதிளஞ் சேயிருக்கமனைவி மாதவோரே ஆருப
புண்ணீரொழுகவுயிர் போய்க்கிடப்பதுகண்டு மாதவோரே
௰ கணையேறுண்டுயிர் விடும் காரணமியைப்போலே மாதவோரே ஆவித்
துணையேநானிருக்கநீ தொலைநதவிதியேதெனறு மாதவோரே
௧௧ கடையுந்தயிர்போல்மனம் கலங்கியதிவழிநது மாதவோரே இந்தக்
கொடியபழியாரேற்றுக் கொண்டாரென்றரற்றையில மாதவோரே
௧௨ தைக்குங்கணையேறிட்ட சாபததுடனவ்வேடன மாதவோரே தன்னைப
பக்கந்தனிற்கண்டுபெண் பழிசெய்தோனவனெனறே மாதவோரே
௧௩ வாயில்வந்தபடிக்குப் பேசிமடிபிடித்து மாதவோரே உள்ளம்
காயவெகுண்டவ்வேடன் கன்னத்திலடிக்கின்றான் மாதவோரே

## அந்தணன்அரசன்வாசலில்வந்துமுறையிடுதல்.

விருத்தம்

அந்தணனிவ் வாறுமுன்றவ் வேடன் தன்னை
அரசனுணையிற்றகைந்து கொணடு மாண்ட
பைந்தொடியைத் தன்முதுகின மேற்போட் டனனை
பயோதரப்பால் குறித்தழும்சே யினையும் கண்ணீர்
சிந்திடவே மார்பிலணைத் தால வாய்க்குச
சென்றுதென்னன் அரண்மனைவா சலிலே வந்து
முநதியவிந் தவளைச்சட் டகமேல் இட்டு
முறையிட்டான் அநதோவென் றறையிட் டானே.

எதுகுலகாம்போதி, ஆதி.

௧ பூண்டிடுங்கதிர்வேலனே முறையோ குலோத்துங்க
பாண்டியமகிபாலனே முறையோ
௨ மாமதிகுல தீபனே முறையோ செய்யதாமரைப
பூமகள்வளர்மார்பனே முறையோ
௩ நீதிமன்னவர்சிங்கமே முறையோ நீதுறைலை
ஓதியுணருத்துஙகனே முறையோ

ச சிஷ்டஜனத்தை ரக்ஷிப்பாய் முறையோ தீவினைசெய்யும்
துஷ்டஜனத்தை சிக்ஷிப்பாய் முறையோ
ரு ஏற்கும்தர்மத்தை யீட்டுவாய் முறையோ நித்திரையிலும்
ஆக்கினையாலுல காட்டுவாய் முறையோ
சா கீர்த்திமிகுந்தி ருந்தெனை முறையோ இவ்வேடனையுயிர்
மாய்த்திடாத வரையிலே முறையோ

## அரசன் வேடனை உற்று விசாரிக்கல்·

விருத்தம்

முறையிடுமவ் வுரைதனைத் தராபேல வேந்தன்
முழுவதும்கேட் டாவெனவா யிலின்முன் வந்தே
மறவனையும் அழும்குழந்தை தனையும் கண்டு
மாண்டமனை யுடனேதிரே யழுது நிற்கும்
மறையவனைப் பார்த்திரங்கி யுளக்கிச சோகம்
வந்ததே தெனநடந்த தவனும் சொல்லச்
சுறுசுறெனக் காய்ச்சியவ் வதனைக் காதில்
சொருகினற் போலவருந்தி யுருகி னானே

ரீதிகௌளை, ஆதி.

க வேதமுனிவரோயவ் வேதியன்சொலலறிந்தவ்
வேடனைப்பார்த்திறைவெ குண்டு உள்ள
தோதெனறுகேட்கப்பணிந் தையாவெம்பிரானேயென்
றொடுங்கியிருகைகூப்பி நின்று
உ என்றன்மட்டிலே வில்லம் பேந்திவருங்கால்வெயில்
ஏறிவருந்திஅத னாலே தேடி
வந்துபுகுந்தேனபெரு வழியில் இருக்கும்ஆல
மரத்தின்நிழலில்ஒரு பாலே
௩ ஐயனேயானும்கொன்ற தில்லைவேறொருவர்கொன்
றதுவும்கண்டதில்லைகோ மானே இந்தத்
தையல அம்பேறுண்டுயிர் போனதால்எதிர்நின்றோர்
தனமேற்சொலும்உலகம் தானே
௪ இந்தப்பழிவிளைந்த வாறொன்றும்யானஅறியேன்
எனறவ்வேடனுரைக்கக் கண்டே பின்னும்
மந்திரிமார்பிறரும் இந்தக்கொலைசெயதிடும்
வன்கணன்மெய்யுரைப்ப துண்டோ
ரு மயிலேமயிலேஒரு இறகுகொடென்றால்அந்த
மயிலிறகீந்துபெறல் ஆமோ உயர்
சயிலநிகர்புயனே கரும்பேகரும்பேயென்றால்
தந்திரசம்கையுறல் ஆமோ
சா வண்டனிவனையது போலேதண்டிக்காமல்மெய்
வருமோவெனமன்னனிப் பாலே கட்டித்

தெண்டனை செய்யச்சொல்லி நெஞ்சில்துணிவுடைய
சேவகர்க்குவிளம்ப மேலே
எ பின்னபபடத்தனடித்துக் கேட்கவுமுனசொன்னசொல்
பிசகாமலேசொல்லுவ தலலால் சாமி
இன்னம்திரத்தெளிவீ ரென்றவ்வேடனுரைக்க
இராஜன்யோசிக்கின்றானி தெல்லாம்
அ உள்ளபடிக்குச்சிக்ஷை செய்யஅஞ்சாமற் சொல்லின்
உறுதியும்ஒன்றதாகை யாலே கொன்ற
கள்ளனகில்வதைத்த குறிப்புமுகம்தனிலே
காணவில்லையேஇவன பாலே
கூ சத்துருவோமிருகமோ பக்ஷியோகொன்றடவி
சாலவழிதனிலே சார்ந்து இந்தப்
பொற்றொடியைக்கொன்றென்ன லாபந்தனை யிவ்வேடன்
பூணபானென்றுமனதி லோர்ந்து
ய சதிசெய்தவனிவனே தானோபிறத்தியரே
தானோபின்னொருவேடன் ஆனோன் நின்று
கதியிலொருவிலங்கை எய்தவம்புதப்பியிக்
காரிகைமாய்ந்ததோபின் ஏனோ
கக என்றுநினைத்தரச னிதற்குத்தருமநூலில்
என்சொல்வதுமிக்கோரே என்றான் அவர்
நன்றிபுரியும்நூலால் அமையாதுதெய்வத்தால்இந்
நாயம்தெளியத்தக்க தென்றார்
கஉ மன்னனநிந்தம்மறை யவனையுளக்கவலை
மாற்றிடுவேனென்றன்பு பெய்தான் இப்போ
துன்னரிவைகடனைக் கழித்துவாவென்றனுப்பி
உடன்அவ்வேடனைச்சிறை செய்தான்

விருத்தம்.

மன்னவனிவ் வாறுவிசா ரணைசெய் தொன்றும்
வகைபுரியா துழந்துறுமம் மறையோ னைப்பார்த்
துன்னுடைய மனைவிகடன முடித்து வாவென்
றுரைத்தனுப்ப அவ்வகைசெய் தவனும் வந்தான்
தன்னரண்மனையின்வாயி லவனை வைத்துத்
தன்குடிக்கோர் குலதெய்வ மாகு மீசன்
பொன்னடியிற் பணிந்தவனைந் தேத்தி யன்பு
பொழிகின்றான் மனத்துளதை மொழிகின்றானே

## அரசன் அசரீரிவாக்கால் உண்மையறிதல்.

விருத்தம்.

மறையவனில லாளையிவ்வே டன்கொன் றானோ
மற்றொருவர் வேறொன்றும் கொன்ற தோ

தறநூலா லும்புரியா துழன்றே னுன்றன்
அருளாலே தேற்றுகவென் றிரக்க விண்ணின
றிலைறவா அந்தணனுடனிந் நகர்ப்புறஞ்செ ன
றேவணிகத் தெருவினிலே மணமோர் வீட்டில
உறுவதறிந் தாங்குசெலலத் தெரியலா மென்
றொருவாக்குக் கேட்டரசன் உவந்திட டானே.

மோகனம், ஆதி

க திருவாக்கறிந்தரசன அந்தணனுடனசெட்டித
தெருவிலிருட்டுவரக கண்டு தனே
துருமாறித்திருமண வீட்டிலொருபக்கத்தில
உற்றுனங்கிசனருள கொண்டு

உ கருமலைபோலேபாசக கையினராயிரண்டு
காலதூதர்வநதங்கு நின்று நம்மை
தருமராசனிங்கிநத மாப்பிள்ளையாருயிரைத
தரச்சொலலிச்சொன்னானென்றே என்று

ங காயத்திலேபிணிகள ஒன்றுமிலலாமலவேறே
காரணமுமிலலாமற கொன்றால அது
நியாயத்துக்கேலாதெனறே அதிலொருவனிதற்கோர்
நியாயமிருக்கின்றதென்னென்றால

ச வடதருவிலேறுண்ட கணையையெதுங்கவநத
மறையோனிலலாளைஎநத வாறு வீசிப்
படரும்வாயுவினுலே தள்ளிகொனறதுபோலப
படியிதற்குஞ்சொலகிறேன் தேறு

ரு இக்கலியாணக்கொட்டு முழக்கத்தினலேவெருண
டிசைக்கும்தும்பையறுத்துச செலல அதோ
பக்கமுறும்பசுவை விடுத்திவனைக்கொலவது
பாயமென்றேகுறித்துச சொலல

சு அம்மொழிகேட்டரசன அந்தணனுக்குரைக்க
ஆனலிவ்வாறிங்கு நடநதால கேளும்
என்மனையாளுமிறந் ததுவுமப்படியேயென
றிறைவனுடனெருங் கிருந்தான

எ கொட்டுமுழக்கத்தாலே வெருண்டுதும்பையறுத்துக்
கொணடவ்வணணம்விரைநது தாவி வநது
முட்டியதாலேயநதத் திருக்கலயாணமாப்பிள்ளைக்கு
முடிந்துபோயிற்றங்ஙனமாவி

அ பாரும்மணக்கோலமே பிணக்கோலமாகமணப
பறையேபிணப்பறைய தாகக் கொட்டக்
கூறும்கருவிழியார் வாழ்ததொலிபோயழுகைக்
குரலாகவேமுடிநது போக

௯ ஓரின்கணத்திலிங்கு பிறந்திழிந்திடுமிந்த
உடலாலவருபயனைக் கண்டோர் உளளில்
பேரறிவுடையவ ரல்லாமலறிவில்லாப
பேதையர்பெறுவது முண்டோ
௰ பார்த்தவேதியனென்ன காரியம்செய்தோமென்றுதன்
பாரிபோனசந்தேகம் மாற்றி உண்மை
வாய்த்தவனுடன்அரண் மனைசென்றமைச்சர்முதல
வருக்கும்அரசனிது சாற்றி
௧௧ மறையவனை அழைத்தே இனம்உனக்கொருவி
வாகம்பண்ணிக்கொள்ளென்று முன்னே கையில்
நிறையஅரும்பொருளை வாரிவாரிக்கொடுத்து
நீநட வென்றனுப்பிப் பின்னே
௧௨ சிறையிலவைத்தவேடனைக் காலில்விலங்ககற்றச
செய்தவனமேலருள் புரிந்து மூலம்
அறியாமல்நாமுனறனைத் தண்டித்திடவும்பொறுத்
தாயல்லவோவென்று பரிந்து
௧௩ வேண்டும்பொருளைக்கொடுத் தவனிடத்துக்கவனை
விடுத்துநிம்பமலர்அ ணிந்தான தன
தாண்டவன்தனனருளை வேண்டித்திருவடியில
அன்புசெய்துமனாந்து ணிந்தான்

விருத்தம்.

அந்தணனைதன்னையும்வேட னையும னுப்பி
ஐயனைத்தாழ்ந் தென்றனுக்காப் பழிகண் டஞ்சும்
சுந்தரனு னவனேயென் றேத்திப் பூசை
தொல்சிறப்பு டனேநடத்தித் திங்கில் லாமல்
இந்தஉல குக்குயிரா யிருந்து வேந்தன்
இறைமாட்சி புரிந்திருந்தா னிதனைச் சொல்வோர்
சிந்தையிலன் புடன்கேட்போர் மரணோ பாதி
தீர்ந்துசிவ னுலகமதிற் செழிப்பா தாமே.

ஆக விருத்தம் ௭ தரு ௪ ஆக ௧௧. முற்றும்.

உ

சிவமயம்

இருபத்தாறுவது,

## மாபாதகந்தீர்த்தபடலம்.

அவதாரிகை — விருத்தம்

பந்தம்நீத் தருளுமீசன பழியஞ்சும் நாதனாகி
விந்தையா யாடலசெய்த விசித்திரம்உரைத்தே னிடையால்
தந்தையைக் கொலைசெய்திட்ட தனையனைத் தொடர்மாபாத
கந்தனை விலகச்செய்த கதையினி விளம்புவேனே.

மோகனம், ஆதி.

க தவமுனிவரே கேளும் குலோத்துங்கன் குவலயந்தனையாளும் காலினில்
புவியிலவந்தியென்னும் புரத்தில் இருக்கின்றவன்
கவனித்தறியும்தன்னைக் காயும்சினம் விட்டவன்

உ ஒருமறையோன்மருவும் நாயகி அருமைரதியும்திருவும் மண்ணுல்செய்த
உருவும்இச்சிக்கும்ரூபம் உள்ளவளாக இந்தத்
தரையிற்சித்திரப்பாவை தனக்கிணையாயிசைந்த

௩ பூவிழைவயிற்பிறந்து மகனென்றோர் பாவிபிறந்துதுணிந்துகொலைமுதல்
தீவினையெலலாம்கொள்ளச் செய்தகப்பனைப்போலே
தாய்வருந்திவளர்க்கச் சதைக்கொழுப்பேறிமேலே (னும்

ச கோடிகோடிவில்லெடுத்து அதிற்கணை கோடிகோடிதொடுத்து அதில்பின்
கோடிகோடிவிகாரம் கூட்டியாதனை செய்யக்
கோடிகோடிமன்மதன கூடிக்கெண்டுவந் தெய்ய

ரு பதினாறுவயதுதிக்க காமமும் விதியும்மதியைசசதிக்க உள்ளத்தில்
பதியும்நெறிமுறையப் பாலேபோக திரம்ப
அதிபாவிதன்னைப்பெற்ற அன்னை தன்னை விரும்ப

சு அன்னையென்பவள்பாலே பதிவிரதை என்னும்மொழிமுன்னாலே காப்பாக
மன்னும்மனத்தில்நாணம் மடமுதல் நாலுமாகத்
தன்னைவிட்டகன்றிடத் தானும்ஒத் தவளாக

எ இன்பமோசிறிதாகும் அதில்வரும் துன்பமோபெரிதாகும் கரையில்லா
அம்புதிபோல்வருமென் றறிந்திடாமற் பொருந்தி
வம்பனுணர்வுகெட்ட மாடுபோலே வருந்தி [லே

அ சந்ததம்மயக்கத்திலே தாயைப்பு ணர்ந்தொழுகுமச்செயலைக் குறிப்பா
தந்தைஅறிந்தயலார் தமக்குரையாமல் மிக்க
அந்தவிசேஷத்தையுள் அடக்கிப்பேசாதி ருக்க (மேல்

௯ வேற்றொருநாட்சுகிக்கும் சமயத்தில் பார்த்துரையர்மற்சகிக்கும் தகப்பன்
ஆத்திரத்தாலுன்னையிங் கடிப்பேனெனவெகுண்டு
வாய்த்தமகன்காத்தை மாதாபிடித்துக் கொண்டு (சொல்ல

௰ தாய்கெடஇன்பமுறவாய் தகப்பனைக் காய்கிலென்பயன்பெறுவாய்எனக்
தியகாமுகர்க்கன்னை செனகனுணடோவெலநெள்ளித
தோயுமன்னையைச்சீறித் தூரபபிடித்துத் தள்ளி (கள்

கக மண்வெட்டிதனைஎடுத்து தகப்பனென் றெணணிக்கைதனைவிடுத்து காமக்
உண்டமயக்கத்தாலே ஒன்றும்தோணுமல் தாவி
துண்டமிரண்டாய் வெட்டித் துணித்துப்போட்டான்மாபாவி தவமுனி

மாபாதகனைப்பிரமஹத்திபற்றிக்கொள்ளுதல்.

காதகன்தா தையைஇரவிற் செருத்தெ ரித்துக்
கைக்கடங்கும் பொருளையும்தா யையும்கொண் டேகும்

பாதையிலே கள்ளர்மறித் துள்ள தெல்லாம்
பறித்தன்னை யையும்பிடித்துக் கொள இம் மண்ணில்
ஓதுவது தானொன்றை எண்ணத் தெய்வம்
ஒன்றையெண்ணு வதுநிசமாச் சிறந்து போன
தாதைபா தகத்துருவத் துடன்ம கன்பாற்
சாடினன் சாடிவந்து கூடி னானே.

சௌராஷ்டிரம், ஆதி.

பல்லவி.

பாதகத்து ருவாய்வந்து பற்றினானே நேரவே

அநுபல்லவி.

தாதையைவெட் டினபழி தானேவந்து சாரவே — பாத

சரணங்கள்.

௧ கோவெனக்கூ விக்கரத்தைக் கொட்டிவந்த டாமலே
பாவம்பாவம் ஐயோநிழல் பாவைபோல்வி டாமலே — பாத

௨ நல்லசிவ க்ஷேத்திரத்தில்நாடவும்ஓட் டாமலே
அல்லதுயர் தீர்த்தங்கள்கண் டாடவும்விட் டாமலே — பாத

௩ கீர்த்திமிகும் நாமங்களைக் கேட்கவுந்தோ ணாமலே
வாய்த்தபெரி யோரிடத்தில் மன்னிடப்பூ ணாமலே — பாத

௪ பின்னசென்ற வன்கொடுக்கைப் பிடித்துவந் திழுக்கவே
வும்பகலும் தூங்கொணாமல் அடுக்கவே — பாத

மெத்தவடர்ந் திடும்பாத கத்தைக் கண்டு
வெருண்டினியென் செய்வோமென னுலக மெல்லாம்
சுற்றியலைந் தறிவிழந்து மனமு ழன்று
சொல்லரினைக் கொண்டுபா தகன் தனாலே
முத்திபுரம் தனைக்குறுகிக் கொடிய பாவம்
முறுகிடவங் கயற்கணுடன் கடவு ளன்பு
வைத்தொருவே டனும்வேடப் பெண்ணு மாக
மனங்கண்டார் அவன்வருகு முன்கொண் டாரே

காமந்தின்றெரிகூறல்.

இதுவுமது.

வேடனும்வே டப்பெண்ணு மாகத் தோன்றி
விளங்கியகோ புரத்வாரத் தருகோர் பொந்தில்
நாடியம்பும் விலலுமொரு பாற் கிடக்க
நாயொன்று கணடகனைப் புறத்தே காப்ப
நீடியசூ தாடல்புரிந் திடுங்கால் யார்க்கும்
நினைக்கரிய கொடியமகா பாபியிங்கே
கூடிவரு தலைப்பாரென் றுமையைநோக்கிக்
கூறுவார் மாலவிடைமீ தேறு வாரே.

பந்துவராளி, சாப்பு.

பல்லவி.

காமமேபாவத்துக்குக் காரணமாமே

அநுபல்லவி

மாமன வியாதிவ்ய வளரச்செய் திடுவதும் காமமே

சரணங்கள்

உருவிலி யாலே தினம் உயிரலைப் புண்டு மனம்
தருவிச்செல்லிட மினம் தோனறவொட் டாது முனம் காமமே

உ குடியொழுக் கம்கா வாது கொலைசெய்வ தம்கோ ராது
உடலுக்கூ னம்பா ராது உயிர்போவ துந்தே ராது காமமே

ங கள்ளைக்கு டித்தல் லாது கருத்தழிக் கவொண் ணாது
உள்ளக்கா ணவி டாது உருக்கும னமெப போதும் காமமே

ச கொள்ளைகன்னம்தி ருட்டு கொலைகள்ள ருந்தல் தொட்டு
நள்ளுமல் லாதி ருட்டு நரகிற்கி டத்தும் முட்டும் காமமே

## மாபாதகனுக்குபிரமஹத்திநீங்கும்வழிகூறல்.

விருத்தம்.

தையலுக்கிவ் வாறுரைக்கும் போது மாபா
  தகனொருங்கி வருகையில்வே டுருவம் பூண்ட
ஐயனருட பார்வையினாற் சிலபாவம் தேய்ந்
  தறிவுறத்தான் செய்ததெல்லாம் மொழிந்திப்பாவம்
மெய்யுருவாத் தனைப்பிடித்து முன்னெங்கும் போய்
  விலகாமல் இங்குவந்தே னெனவு ரைக்க
வையகத்தி லிங்குவிட்டாற் றீரா தென்றவ்
  வன்பழிதீர்க் கக்கருதி வழுத்து வானே.

அடாணா, ஆதி.

க வாராயுன் றன் பேர்சொன்னவர் வருக்கத்துடன் சூழ்க என்றும்
தீராநர கினிலேவந்து சேர்ந்தாற்போலே வீழ்க

உ கருதிச்செய்த மாபாதகம் கழிப்போரெவர் உண்டு நம
தருளாலுனக்கெளிதிற்றீர அறைவோம்தேர்ந்துகொண்டு

ங விசுவாசமா யருணோதய வேளைக்கெழுந் தாய்ந்து நிதம்
பசுமைத்தளிர் அறுகுகொய்து பசுமாடுகட் கீந்து

ச சிறப்பாயுய ரிம்மாநகர் திருக்கோயிலை நாடி வெளிப்
புறத்தேதொட்டித்தீர்த்தத்தில்முப்பொழுதும்மகிழ்ந்தாடி

ரு கங்கைச்சடை யோன்கர்ப்பக்ர கத்தைவலம் நண்ணி உவர்
தங்கப்ரத க்ஷணம்நூற்றியெட் டனுதினமும் பண்ணி

சு ஐயம்புகுந் தொருபோதன்னம் அருந்தல்செய்திப்பூமேல் துய்ய
மெய்யன்திரு வடியாரிட்ட வேலைசெய்திற் பேரமே

## மாபாதகனுக்கு அநுக்கிரகிக்ககாரணம்கூறல்.

விருத்தம்

இந்நெறி நின்றுல வேறோ டிப்பாவம் அறுமென் றய்யன்
சொன்னதற் கன்னை யிந்தத் தூர்த்தனை யளவில காலம்
துன்னிட வரகிற் போட்டும் தொலையாப் பாவிக்கி ரங்கல்
என்னெனக் கேட்கஅனபுற் றேயவட் கோது வாரே

மத்தியமாவதி, ரூபகம்.

க பழிசெய்யும்நீச ராயினுமெண்ணிற் பயப்படும்பழிக் காளாய் இந்த
அழிமகன்செய்மா பாதகம்தொலை வதுமிலைஇனிக கேளாய்
உ வாய்ப்பவேறொரு வழியுமிலலாமல மாய்வனுக்கதை மாற்றி மண்ணில்
காபபதல்லவோ காப்பதாமெனக் கருணையங்கடல் மூர்த்தி
ங அவனிமீதொன்றுசெய்தலுக்கும்செய் யாமைக்கும்பின்னும்வேறு நன்று
கவனித்தொன்றுசெய் வதற்குமெதற்கும் காரணராகக் கூறும்
ச தேவரீர்நினைத் தாலெபபாதகம் செய்தோராயினும் நல்லோர் அவர்
ஆவதுசெய்வ துமதருளவிளை யாட்டென்றுரைப்ப தலவோ
ரு எனறுளமகிழ்ந் தங்கயறகண இயம்பிடஅனபு நிறைந்து நெடும்
குனறிடைவளர் வேட்டுருபத்தைக் கொணடிருந்தவர்மறைந்து
சு மேகமறைநத இடத்திலமின்னும் விடாதுசெலவது போலே நறும்
பாகுமொழியாள் தொடரவெள்ளியம் பலத்திருநதாரிப்பாலே
எ ஆததாயியும் பார்த்ததிசையித் தாலவாயையன் கேளும் தனக்
கோதியபடிக் கேதவம்செய்ய உறுதியைப்பெற்று நாளும்
அ பண்ணிவரையில மதியம்மூன்றில பாதகம்நீங்கப் பார்த்தான இந்த
மண்ணிலுயரும் தெய்வப்பிராமண வடிவுள்ளபடி யேற்றான்

விருத்தம்.

பாதகம்நீங் கிடமறையோன் ஐயன் தாளில்
பணிந்தேத்தும் போதரசன் முதலோர் பார்த்திக்
காதகனுக் கீசனய னரிக்கும் கிட்டாக்
கருணைவைத்த தேதெனக்கண் ணீர்து ளும்ப
ஓதியன்னை யைப்புணர்ந்தப் பனைக்கொன் றானுக்
குறுபாவம் நீக்கிவீ டளித்தாற் குட்டம்
ஆதிவியா தியைநீக்கல் அத்தீர்த் தத்துக்
கரிதாமோ என்றுரைத்தாங் ககன்றிட் டாரே.

அந்தணன்மா பாதகம்நீங் கிடப்பார்த்துத் தென்
னவனுமமைச் சருமூரு ளார்மற் றோரும்
அந்தரரும் நோக்கியிப்பா தகனுக் கையன்
அருளியதுக் கேதுயா தெனவே கண்ணீர்
சிந்திடவே திருவால வாய்ப்பி ரான்றன்
திருவடியிற் றொழுதேத்தி யுவந்தா ரித்தைச்
சிந்தையிலன் புடனுரைப்போர் கேட்போர் பாவம்
தீர்ந்துஇக பரமிரண்டும் சேர்வர் தாமே.

ஆக விருத்தம் அ, கீர்த்தனை உ, தரு ங, ஆக கங. முற்றும்

உ

சிவமயம்.

இருபத்தேழாவது,

# அங்கம்வெட்டினபடலம்.

அவதாரிகை — விருத்தம்

மாதவ ரேதென்கூடல் வள்ளலோர் மறையோன செய்த
பாதகம் அகற்றிவிட்ட பான்மையை யுரைத்தே னிபபால
கோதறும் கல்வியீந்த குருவின்பத் தினியை மேவக்
காதலகொண் டவனையங்கம் கணடித்த தினிச்சொல் வேனே

## சித்தனென்பவன் குருவுக்கு த்ரோகம்செய்தல்

விருத்தம்.

பூதலத்தைக் குலோத்துங்கன் ஆளும் நாளிற
புறத்திருந்து வயதினிலமூத் தொருவன கூடல்
மாதலத்தில வந்தரனைத் தினம்ப ணிந்து
வாள்வித்தை பழகிவைத்துக் கொணடு வாழ்வோன்
சாதகமா யவனிடததிற் கற்கும் பேர்கள்
தங்களுக்குட் கரையேற்ற முணராப் பாவி
காதகனும் சித்தனென்று மொருவன் யாவும்
கற்கின்றான் குருவுடனெ திர்க்கின் றனே.

கல்யாணி, ரூபகம்.

பல்லவி.

குருத்துரோகிதுர் நடத்தைசெய்தது கேளும் கற்றுக்
கொண்டுண்டவீட்டுக்கி ரண்டுநினைத்தான்எந் நாளும் (குருத்

அநுபல்லவி.

வருத்திவைத்த குருவுக்கிடுக்கத்தை மனத்திலெப்போதும் நினைந்திருக்கின்ற

சரணங்கள்

க ஆயுதவித்தையி லுலேதன்னையாரும் மதிக்கத் தக்க
தானதனுலகம் பெற்றேஆசானினும் கதிக்கத் (த்தை
தியவன்தானு மொருவித்தைக்கூடத்தைச் செய்துபலர்களும் கற்கவும்வாள்வி
ஆயுதகண்டு குருவினும்மேலாக ஐசுவரியமத னக்குவந்துண்டாகக் குருத்

உ இருவராயுத வித்தியுமொன்றாகச் சேர்த்துக் கொள்ள
எண்ணிக்குருவுரை விட்டோடிப்போம்வழி பார்த்துக்
குருபத்னிஅன்னை யென்னுமுறைமாறிக் கூடிச்சுகிக்கக் கருதிமயலமீறிச் (னும்
செருவுறச்செய்து பெற்றதாயைமுன்னம் சேர்ந்தசுகித்தவ னுக்கனுசனென்

ந எத்தனைதொந்தர வுற்றாலும்பூமியைப் போலே பொறுக்
கின்றவனில்லா விடத்தவன்பத்தினி பாலே (திக்கப்
கத்திப்பரியாச வார்த்தைகள்போதிக்க நடைப்பாவைபோ லவள்மோனம்சா
பற்றியடுத்தடுத் தஞ்சாதேநீயென று பதர்ந்துபகர்ந்தசல்வானினம்உண்டு குரு

௪ பிந்தியொருபகல் வந்தவள் அங்கையைப் பிடித்தான் தள்ளிப்
பெருங்கதவை நெடுந்தாளிழுத்தகம் அடைத்தாள் [லே
சிக்கிதைதற்கற்புடையாள் தன்னெறியாலே செநித்துளக்காவல்பூண்டிருக்கமே
அந்தநிலையைவிட்டப்பால் அகன்றிட அனங்கத்தீதன தங்கமெங்குஞ்சுட குருத்

## குருஉருவம்கொண்டஈசன் சித்தனைப்போர்க்குவிளித்தல்.

விருத்தம்.

சித்தனிந்தப் படிசெய்தன் பதிக்கும் சொல்லாள்
சிந்தையில்வைத் திசனையே நினைத்து நொந்தாள்
மெத்தவுமே புறம்பொருவர் செய்த பாவம்
விலக்கிவைக்கும் கூடல்மகா தேவன் தானே
இத்தரையி லுயிர்தோறும் சாக்ஷி யாக
இருப்பதனுற் றெரிந்துசித் தனைத்தெண் டிக்க
வெற்றிபெறும் கிழக்குருப்போ லுருவம் பூண்டு
வெலலுவான் வந்தவன்பாற் சொலலு வானே.

பாசு, ஆதி.

பல்லவி

சித்தனேவெற்றிவாள் வித்தையைக்கற்றதைத் தேரலாம்ஆமே

அநுபல்லவி

சித்தா மெத்தவில்வித்தை கற்று யெமக்கும்நிகர்
உற்று யெனும்புகழ்படைத்தா அல்லவோ அட சித்த

சரணங்கள்

௧ காளைப் பருவம்கொண்டிந் நாளிற் புயவலியைச்
சூழத் திறம்பெற்றது நாளைத் தெரியும் அட சித்த

௨ தாடி நரைத்துமூப்பை நாடியிருக்குமெமைக்
கூடிக் களத்திலமராடிச்செயிப்பாய் அட சித்த

௩ என்தன் வலியும்பெற்ற உன்தன் வலியும்காண
இந்த நகர்ப்புறத்தே வந்து சேரடா அட சித்த

## குருஉருவம்கொண்டஈசனுக்கும்சித்தனுக்கும்சண்டை.

கழிநெடில்விருத்தம்.

பத்தருக்கெளியோ னிவைசொலநாலாம் பாதகன்சரியென மொழிந்தான்
படிக்கவைத்தவருக் கிடர்தபுரிகோன் பாதகம்போலிருள் மூடிச்
சித்தனச்சிதைக்கத் திட்டிபவாள்போற் செங்கதிரு திக்குமுன் றிதனைத்
தின்றவன் சண்டி கையப்பணிந்தேத்திச் சிறந்தகச் சிடையில்வைத் தணிந்து
வெற்றிவாள்கேட கம்தரித்துரைத்த வெங்களம் குறுகுமுன் றாமும்
வீக்கியேயிடைகசச் சணிந்துவெண்ணீறும் விளங்கிடப்புரிசைவா ளேந்தி
நெற்றியிற்கண்ணும் பிறையும்காற்புயமும் நீலகண்டமுமறைத் தெழுந்து
திகழ்த்தியகுரவன் போற்றுளம்மகிழ நேர்ந்தமராடிடச்செய் தனனே

பத்தவராளி, சாப்பு.

பல்லவி

ஆசானுருக்கொண்டு ஐயனுஞ்சித்தனும் அமர்புரிந்தாரே

அநுபல்லவி

வாசாமகோசர மாகச்சினைத்துடன் வன்கையைமார்பிலுத் துங்கமுடன்தட்டி
சரணங்கள் (டுவார் கையில்

௧ எதிர்த்துப்பின்சென் றிருவரும்கோடை இடிபோலொன்றுக்கொன்றதட்
ஏந்தியகேடகத் துள்மறைந்தேயுதித் தேயொளிர்வாளைச்சுழற்றுவார்
மிதித்திடம்வலம் சாரிகைபோய்வீசி வெட்டிவிலக்கித் திரும்பிப்பம்பேசிக்
கொதித்துவீர நகைபுரிந்தேவீரம் கூறியேமாறிமே ரேறியிந்தப்படி ஆசா

௨ ஓடிமுதுகிடுவார்போலேபோய்க்கண் ணுருட்டிவிழித்துவந்துதிப்பார்எடுத்
தோங்கியவாளாலே மார்பைப்பொளிசெய் தோதும்குறிதப்பிக் குதிப்பார்
நீடியிவ்வாறிரு பத்துவிதம்ஓதும் நெறியினிருவரும் போர்செய்திடும்போது
ஆடலைநோக்கும் அனைவோருக்குங்காண ஐயனேவெற்றி யடையுங்குறிதோண

௩ தேசிகனில்லாளை யெண்ணிய நெஞ்சத்தைத் தீதாயுரைத்திட்ட நாக்கைப்
செங்கையைப்பற்றி இழுத்தகரத்தினைச் சேரவேபார்க்கின்றநோக்கை (பினும்
வீசியவாளாலேசொலவிசசொலிவைது வெவ்வேறவைகளைச்சித்ரவதைசெய்து
தீசன்கிரக முடலுமிரண்டாக நிக்ரகம்செய்தியாருமெய்க்கஅவன்சாக ஆசா

விருத்தம்

கருணைவள்ளல் சித்தனைக்கொன் மகன்று ரத்தைக்
கண்டமா னுக்கர்பின்சென் றவனில்லாள் முன்
குருவெங்கே யெனக்கோயிற் புகுந்தா ரென்றக்
குயில்மொழிகூ றுங்காலா சான்வ ரக்கண்
டேரமுடைய சித்தனைச்சங் கரித்திரே ஆங்
குழைக்கானு திங்குவந்தோம் என்ன என்போல்
உருவெடுத்தார் வந்தவனை மாய்த்த தேயோ
ப. பு 100 டு. உங்கபாகன் செயலோவென் றுரைத்திட் டானே.

இதுவுமது.

நாயகனீ துரைக்கஇலலாள் சித்தன் தன்பால்
நவின்றதெலாம் சொலத்தெரிந்தங்கண்டன் தன்பாற்
போயிறைஞ்சக் கண்டுகுலோத் துங்கன் கூடற்
புரத்தவரோ டசனருளைக்கொண் டாடிச்
சேயனனந்த குணனுக்கு முடிசூட டித்தன்
தேவியுட னரனடிக்கீழ்ச சேர்ந்தா னிதை
நேயமுட னோதுவர்கேட் பவர்கள் பாக்கியம்
நீடியிருந் தரனுலகை நாடு வாரே.

ஆக விருத்தம் ௬, கீர்த்தனை ௩, ஆக ௯.

சிவமயம்

இருபத்தெட்டாவது.

## நாகமெய்தபடலம்.

அவதாரிகை — விருத்தம்.

கம்லைகயில் அணிந்த ஈசன் களத்திறசே வகனை ஆட்கொண்
டங்கம்வெட் டிதலைச் செய்த ஆடலை உகரத்தே னிப்பால்
திங்கள்வங் கிசமன் னன்மேற் செலலெனச் சமண ரேவும்
செங்கண்வா ளரவை வெட்டும் திறமையை யினிச்சொல் வேனே.

### அனந்தகுணபாண்டியன் அரசாட்சி.

மத்தியமாவதி, செம்பை.

பல்லவி.

அனந்தகுணபாண்டியராசன்தானே

அநுபல்லவி

என்றும் — கனந்தருகும்செங்கோலைக் கைப்பிடிக்கின்றனே

சரணங்கள்

க ஆதிநாயகனுருவம் போலே விளங்கும்
ஐந்தெழுத்துடனேஉருத்திராக்ஷமணி மேலே
ஓதரும்வெண்ணீறு முதலாலே வேண்டும்
உறுதியேபொருளென்றெண்ணிஉளத்திற்கொண்டன்பாலே அனந்த

உ ஓரைந்தெழுத்தொலிமிகவும் ஓங்கப்
ஒளியாலும்அகத்திருளும் புறத்திருளும் நீங்கப்
பாரும்தன்னுடெங்கும் நலம் தேங்க
பகவன்திருவேடமாக உலகெங்கும் காண்க அனந்த

ந சந்ததமும்சிவதருமம் கதிக்க அன்பும்
தாங்கிமிகத்தேர்ந்தொழுக லாலெவரும்துதிக்கத்
தந்தைமுதல்முன்னோரினும் மதிக்கத் தேடும்
தலையானசீர்த்தியைக்கொண் டாடிநலம் பதிக்க அனந்த

சந்தவிருத்தம்

அவனியை யனந்தகுண வழுதிமுறை கொண்டுயரும் அரசியல்புரிந்து வருநாள்
அகமிரு ளடைந்துசுண மதனிலுமி ழிந்தகுண வமணர்கள்திரண்டு வெகுவாக்
கவலையில முந்தியொரு புலமதில்ம கஞ்செய்பது கடிகையகல்பந்த விடையே
கணமதில கழ்ந்தகுழி நடுவிறகி னங்களடு கனலிடையெழுந்த புகைபோல்
புவனமிசை யம்பரம தனிலுடுவி னங்கள்பல பொறிகளெனவுஞ் சிதறவே
புகலருமக ஞ்செய்ததில் நடுவினிலெ ழுந்தஎரி பொருதிவளர்குண்ட மதிலே
குவடதுஎழுநததென அசுரனக னென்றுபெயர் கொடுபடம்விரிந்த ரவபோல்
குவலயம் நடுங்கவொரு உமனென வெழுநதிவகை குறியுடனெழுந்த ததுவே.

## சமணரேவிய அசுரன் மதுரையை விழுங்கவருதல்.

விருத்தம்

மதியைவகிர்ந் திணக்கினது போலே பல்லும்
வன்சினத்திப் பொறிபறக்க விழித்தெ முக்கு
அதிபசித்தி வடவையிலு மிகக்கொதிக்க
அடங்காத தாகமுமேற் கொளமுன் னின்று
சதிகாரர் தமைநோக்கி உங்கட் காகத்
தக்கபணி யாதெனத்தென் னனையடுத்து
மதுரையுடன் விழுங்கிவா வெனஅப் போதே
வந்திட்டான் அவ்வகைவ ளைந்திட்டானே

சௌராஷ்டிரம் ,ஆதி.

பல்லவி.

ஆசுரனொருவன் அம ராடவந்தனனே

அநுபல்லவி

மாசடைந்திடும்உடல் அமணர்விடுக்க நாக
வடிவதனையெடுத்திப் படியில்ஆலவாய்மீதில் ஆசுரன்

சரணங்கள்

க படியிலிருந் தண்டமட்டும் தோயுமுடல் தெரியவே
பல்லிடுக்கின் துளைவழியே விடம்பெருகிச் சொரியவே
வடவையனல் போலெழுந்து விழியிரண்டும் எரியவே
வல்லிருள்அ டைந்தகுகை யென்னவாயும் விரியவே
அடரும்உமையைத்தேடி ஆர்ந்துமேகங்கள்ண்டும்
இடம்பெருகியமலைக் கிணையாகிமிர்ந்துமண்டும் ஆசுரன்

உ பாதலலோ கத்தில்பில த்வாரம்வெளி காணவே
பாதியுட லழுந்தநிலம் விள்ளுமென்றே தோணவே
மோதிவரும்விழியழல்பார்த்தெதிர்த்தவர்கள்நாணவே
முனைத்துயர்த ருக்கள்முதல் முகஞ்சருகல் பூணவே
பாதபங்களில்தங்கும் பட்சிக்கணங்க ளெழுந்
திதிலகபபடிரு சிறகும்பொசுங்கிவிழ ஆசுரன்

௩ பாரதுநடுங்கஆதி சேடனும் நடுங்கவே
பகலவன் நடுங்கராகு கேதுவும் நடுங்கவே
சீருயரும் அஷ்டதிக்கின் நாகமும் நடுங்கவே
தென்திசைக்க திபதியும் பார்த்துளம் நடுங்கவே
ஆரும்வக் ரதந்தத்தை அதுக்கிநகையைக்கூடி
வீரமுடன் நகர்க்கு மேலைத்திசையைநாடி ஆசுரன்

விருத்தம்.

அசுரன்வரத் தெரிந்தால வாயிலுள் ளோர்
அரசன்முன்போய்ப் பெரியவிட நாக மேலைத்

திசையிலண்ட பிண்டமுடன் விழுங்க வாயைத்
திறந்துவரு வதைக்கொல்வா யெனவஞ் சாமல்
இசைபமுன்யா னையைவிடுத்தோர் ஏவல்தா னென்
றெண்ணிமதி சூடிஇருக் கின்று னென்று
நேசமுடனே சன்னிதியிற் பணிந் தெழுந்து
நிற்கின்றான் தன்குறையு ரைக்கின் றானே.

## அனந்தகுணபாண்டியன்நாகத்தைச்சங்கரித்தல்.

### விருத்தம்.

கொடியவா ளாயடிமை செய்திப் போது
சீர்பாம் பின்னகர்மேல் விடுத்தா ரத்தைக்
கடிவதுநின் கருணையென்று கருது மென்னைக்
காத்தருளிச் செய்வதுநின் கடனென் றோதி
அடிபணிந்த னுமதிபெற்று வெளியில் வந்தே
அம்பும்வில்லும் ஏந்திநெடும் கொடிநின் றூடும்
கூடதிசையைக் குறித்தரசன் வில்லில் அம்பைக்
கோத்திட்டான் அரவையுயிர் மாய்த்திட் டானே

பந்துவராளி, சாப்பு.

பல்லவி

அனந்தகுணபாண்டியன் தானே வாள் அரவைக்கொன்றுசங்கரித் தானே

அநுபல்லவி

மனந்தனில்அரனடி மறவாமலேநினைந்து
தனந்தனியேநடந்து சாமியுபபலங்கொண் டனந்

சரணங்கள்

க படமதால்கதிரோனைமறைத்து திக்கம் பரமெங்குந்திணியிருள் நிறைந்து
திடமுடன் விஷப்பையைப் பிதுக்கி வக்ர தந்தங்களையுதட்டிலதுக்கி
நெடுமூச்செறிந்துபெரி தானவாயைப் பிளந்து
நீபவனமெங்கெங்கும் ஒருங்காகவே வளைந்து
தடையில்லாமலெடுத்து விழுங்கவந்தது போலே
தானவனுருமாறி வாத்தெரிந்துமென் [illegible] அனந்த

உ சிங்கமெனமுழக்கம்தொடுத்துத் தீயனை திமிக்கென்றுகேடிபகவில எடுத்து
புங்கமோடிருதலைவளைக்கி நாணைப் பூட்டிஅக்கினிக்கணை இணைக்கித்
துங்கமுடன் விடுக்கக் கணைகள்முழுதும் உண்டு
துர்த்தன் அவன்வாயாலே கடித்துமிழ்ந்திடக் கண்டு
கங்கையணியும்சுந்த ரேசர் அடி நினைந்து
காத்திரக்ஷிபபதுந்தம் கடனென்றுளம் துணிந்து அனந்த

௩ மின்னும்பிறைவாயம்பென்றோதும் அதை விடுத்தவனுடலதுண்டாம் போ(து)
துன்னுமிடிபோலொலிகீட அனல் சோரியோர்ஆறாக ஓடப்
பின்னும்நெடியஉடல பூமிதனிலே தாழப்

பிளக்குபாயும்கூர்வாளால் நெளிந்துபுவியில் வீழ
முன்னுள்வருகும்ஆலகாலம்போலே நெருக்க
மூடிவருகும்கறையிருள்போலேவிஷம் கக்க அனந்த

## விஷமயக்கம்நீக்கப் பாண்டியன்சுவாமியைவேண்டுதல்.

விருத்தம்.

பகுவாய்நா கம்மடிய விஷம்கி ளம்பிப்
பறந்திடஆ ருள்ளவர்கள் உறங்கினர் போல்
அகநிலைத விர்ந்துவெயர்த் துடல்தி மிர்ந்தே
ஐம்பொறியும் தடுமாறிக் கபமே லிட்டுச்
சகலரும்நா வறண்டுமூச் சொடுங்கிச் சீவன்
தத்தளிக்கப் பார்த்தரசன் உளம் நடுங்கிப்
பகவானமுன சன்னிதியைத் தேடி வந்து
பணிந்திட்டான அபயமெனத் துணிந்திட் டானே.

மத்தியமாவதி, செம்பை.

க முன்னவனே சரணம் ஆதி முதல்வானின் சரணம்
இந்நகர்க்கென றும்அரசா இருப்பவனே சரணம்
உ மூலவித்தில லாமல் வந்து முளைத்தவனே சரணம்
ஆலமுண்டி தேவர்களுக் கபயஞ்செய்தோய் சரணம்
ந எளியவர்கள யாவருக்கும் இரங்கிடுவோய் சரணம்
வளரும்நெற்றிக் கண்ணுடைய வானவனே சரணம்
ச அடுத்துவந்த சலதிதடுத் தாண்டவனே சரணம்
கடுத்துவநத பெருமழைய கலவிடுத்தோய் சரணம்
ரு மதம்பொழியும் வாரணத்தை மாய்த்தவனே சரணம்
நிதம்பெருக இந்நகரை நிலைக்கவைத்தோய் சரணம்
சு நெடுகவந்த ஆபத்தெலாம் நீக்கிவைத்தோய் சரணம்
விடமயக்க மின்றகற்ற வேணுமையா சரணம்

விருத்தம்

தூய்யவனே யேத்தமுடி மதியில் நின்று
சுதைத்துளிவீழ்த் திடப்பாலில் பிறைபோற் சேர
வெய்யவன்முன் இருட்போலே விஷம கன்றார்
மிக்கமலம் பெற்றிடலால் அனைவோ ருக்கும்
ஐயமகன் றறிவுவந்து களிக்கச் செங்கோல்
அனந்தகுணன் பெற்றிருந்தா னிதனைச் சொல்வோர்
வையகத்தில் கேட்பவர் மனோபீஷ் டத்தை
மன்னுவார் சிவனுலகில் துன்னு வாரே

விருத்தம் சு, கீர்த்தனை கூ, தரு க, சுதக்ம் க,

சிவமயம்

இருபத்தொன்பதாவது.

## மாயப்பசுவைவதைத்தபடலம்.

அவதாரிகை — விருத்தம்.

கடையராஞ் சமணரேவும் கட்செவி யதனைக் கூடல்
உடையவன் அருளால்தென்னன் ஒறுத்தவா றுரைத்தே னிப்பால்
மடையர்பார்த் ததற்குப்பின்னும் மாயமாப் பசுவொன் றேவ
விடையிறு லதனைவென்ற விசித்திரம் இனிச்சொல் வேனே.

### சமணரேவலால்மாயப்பசுமதுரைமேல்வருதல்.

கழிநெடில்விருத்தம்.

சொரனுமனந்தகுண பாண்டியன்பாம்பைத் துணித்தபின் பின்வரும்சமணத்
தூர்த்தர்மா றுறங்கண் டோடுமே கம்போல் தொகுப்படைந தோடியேபோன
பலரும்வந்திருள்போலவூரிடம்சேர்ந்து படைத்துமுன்விடுத்தவா ரணம்போல்
பாம்பையும்இன்று செருத்தனர் இனிமேல பண்ணுதல யாதென வோர்ந்து
நலமுறும்பசுவைக் கொன்றிடார் பழிக்கு நாணுலார் ஆகையால் இதுவே
நனறென இசைந்து சூழ்ந்துமுன் போலே நணணியே ஓர்மகம் தனைசசெய்
திலகுமக்கினிகுண டத்திலோர் அசுரன் எழுநதொருகொடியவெம் பசுப போல
எதிர்வரக்கண்டு பண்டுபோல் மதுரைக் கேகெனவிடுக்கவந ததுவே

பநதுவராளி, சாப்பு.

பலலவி.

மாயப்பசுஎழுந் தாலவாயுள்ளோரைப் பாயபுறப் பட்டதே

அநுபலலவி

மாயத்லைதநீளவும் செய்துமதி கெட்ட தீயச்சமணர்கள் சேர்நதுவரவிட்ட மா

சரணங்கள்

க மேடையின்மேலேவி ளங்கும்கொடி போலே
மேகத்தைக்குத்திக்கோத் துப்பெருங்கொம் பாலே
சேடன்முடியும்பொ டியாகமண மேலே
சீறிச்சினந்தடி இட்டேவலி ஞலே மாய

உ சாயும்மெருமூச் செறிந்து பிறக்கவே
சராசரங்களும் ஈபோற் பறக்கவே
காயும்கோபாக்கினிஉ லகம் இறக்கவே
காலாக்கினிவந்த தென்ன நிறக்கவே மாய

ங கூடிப்பறவை மிருகங்கள் வெருண் டோடக்
கொம்பாலெடுத்தெறிந் தேவாயுப்போற் சாடத்
தேடித்தொடர்நதுபல் லோருடல்துண் டாடச்
செய்துயிர்வாங்கி இடிபோல்ஒலி நீட மா

## கடவுள்கட்டளையால் நந்தி விருஷபமாகவருதல்.

விருத்தம்.

பாருமொரு காலன் வருவதுபோல் மாயப்
பசுவரத்தேர்ந் தனநதருண பாண்டியன் கூடல்
ஊருளதக் கோருடனு லயம்பு ருந்தே
உளக்கவலை நீங்குமுறை வேண்டக் கொன்றைத்
தாருடையோன் அருட்கணுல நோக்கி நந்தி
தனையழைத்துத தீப்பசுவைச் செகுத்து வந்து
சேருவாய் எனவுரைக்கக் கேட்டவ் வாறு
திக்கினுன் விடையுருவெ டுத்தின் ருனே

சங்கராபரணம், ஆதி.

பல்லவி

நந்திபகவானவந்தானே பசுவைவெல்ல நந்திபகவானவந்தானே

அநுபல்லவி

சந்ததம்வளரும்சோம சுந்தரமூர்த்தியருளால் நந்தி

சரணங்கள்

க ஏமனும்எதிர்கண்டஞ்சி யேநடுக்கங் கொள்ளவே
மாமலையும்வெஞ்சினத்தீ யாலழன்று பிளளவே
நாமுகம்துழாவக்கடை வாயில் நுரை விளளவே
வியோமமட்டும்தலைநிமிர்ந் தேதுழாவி நளளவே நந்தி

உ நெற்றியில்நிமிர்ந்துமேனி வுறறகொம்பைத்துன்னவே
தொத்தியநவமணிப்பூண் மெத்தவொளி மன்னவே
சுத்தவெண்பிறையைநாகம் சுற்றியதோ வென்னவே
முத்துவெணகதிர்போலசேணம் முதுகிலொளிமின்னவே நந்தி

ங சிறுங்கமாம்பிறையினகிர ணங்களபோற்று லங்கவே
வெண்கவரிக்கற்றைலலா டந்தனில்இ லங்கவே
துங்கமுகவட்டுநித்தி லங்களால்வி ளங்கவே
தொங்கியசதங்கைபிலபக் கங்கலென்றி லங்கவே நந்தி

ச கண்டத்திற்பாய். புராவசைக் கிறைதெனத்தோணவே
தெண்டைநாவசைக்கமுத்துத்தணடையாரும்காணவே
மண்டியகிண்கிணிக்கோர்வை விண்டவொளி நீளவே
வண்டாளசிலம்புகால அண்டிநாதம் பூணவே நந்தி

ரு தாளெடுத்திக்கிலம்பதித் தாசைதுளால மூடவே
நீளுமூச்செறிந்துகொம்பி லேகொடிபோ லாடவே
கோளுறுமுகிலைக்குத்திக் கோர்த்துக்கொண்டுகூடவே
வாளிருகண்ணழல்கொட்ட லேபசுவைச் சாடவே நந்தி

மாயப்பசுஇறந்தது

விருத்தம்.

நந்திபிவ்வா றெழுந்துவெள்ளி மலைகாற் கொண்டு
நடக்கதுபோல் சினந்தாவை நாற்றம் பற்றி
வந்துகிழக் கதுமேற்கு வடக்குத் தெற்கு
மாதிரந்தோ றும்மாறி முடுக்கிக் கொம்பால்
கொநிமுது கிளைக்கிழாத் தள்ளித் தூக்கிக்
குன்றுபோ லெறிந்துவிளை யாடியே தன்
சுந்தரத்தைக் காட்டமலர்க் கணைபட்டாவி
சோர்ந்துவீ ரியம்விடுத்து மாய்ந்த தாமே.

ஆனந்தபைரவி, சாப்பு.

க மாயப்பசுமாளக் கண்டார் ஒரு
மலையாக்கண்டனைவோரும் சந்தோஷங்கொண்டார்
தீயச்சமணர் பயந்தேக நந்தி
தேவன்பேருருவையி டவமலை யாக

உ நிறுத்தியிலிங்கதேகத் தோடே வந்து
நீபவனேசனைப் பணிந்தான் அன் போடே
கறுத்தகந்தரனருள் புரிந்தான் பண்டு
காணுமுருவம்பெற்றிவ இருவென்று பரிந்தான்

௩ அனைவருஞ்சன்னிதி யடைந்தார் பாண்டி
அரசனும்நந்தியைத் தொழுதபின் நடந்தான்
மனதி லன்பருக்கருள சுரந்தார் நந்தி
மகிமையைப்பார்த்துமை யுடன்களித் திருந்தார் மாயப்பசு

விருத்தம்.

இந்தவா றமைந்தமலை மேலி ராமன்
இலங்கைநகர்க் கேகிடவா னரங்கள் சூழ
அந்தமிகுந தம்பியனு மான்சுக் ரீவன்
அனைவருடன் வந்திருந்தா னதுகண டாங்கே
விந்தமடக் கியமுனிவந் தாலவா யின்
விசேஷமுரைத் திடத்தெரிந்தம் முனிவ னோடே
சுந்தரமூர்த் தியைப்பணிந்து முறைபூ சித்துத்
துதிக்கின்றான் மனத்திலன்பு கதிக்கின் றானே.

பேராசிரியம்

இந்தவகைகோதண்ட ராமன்துதித்துயாள் எண்ணிவருகருமநன்றாய்
இசையும்வாறெவ்வண்ணம் அவ்வண்ணமருள்புரிந் திடுமெனப்பணிய ஈசன்
இரவிகுலராமனே கேளெந்தமக்குநேர் இலகுதென்கீழ்த் திசையிலே
ஏகிவாரிதிசேது பெந்தனஞ்செய்துபின் இராவணனை முடிகள்பத்தும்
சிந்திடச்செய்துனது மனைவியுடனேஅயோத் திக்கேகிமுடிபுனைந்து
செங்கோல்செலுத்திவெகு நாளினிதிருந்துமேல் சிறந்தவைகுந்த மதிலே

செல்வாயினிக்கவலை கொள்ளவேண்டாமெனச் செப்புமசரீரி கேட்டுத்
தென்மதுரைநாதனடி தாழ்ந்துபின்விடைகொண்டு திருமனமகிழ்ந்தேகியே
சந்தவேதப்பொருளுரைத்தவன்சொன்னபடி தான்செய்திலங்கையெய்தித்
தசமுகனைவென்றவன் செல்வமெல்லாம்விபீஷணனுக்களித்தெழுந்து
சந்தோஷமாயிராமேசுவரங்கண்டாங்கு சம்புவைப்பூஜைசெய்து
தாழ்ந்துவிடைகொண்டுமீண் டாலவாய்ஐயனைச் சரணம்பணிந்தெழுந்து
அந்தமுடனேதனதுசொந்தநகரெய்தினன் அனந்தகுணபாண்டியனென்போ
அருமைமகனானகுல பூஷணத்தென்னனுக் கரசுரிமையீந்து பகவான்
அடிபணிந்தரனுலகடைந்திருந்தானிதனை அறைபவர்கேட்பவர்கள் தமதிஷ்
டார்த்தங்கள்பெற்றுமேல் அரனுலகிலேமுடிவில அடைவரென் றறிகுவீரே.

ஆக விருத்தம் ௪ கழிநெடில் ௧ பேராசிரியம் ௧ கீர்த்தனை ௨ தரு ௧ ஆக ௧

உ

சிவமயம்.

முப்பதாவது,

## மெய்க்காட்டிட்டபடலம்.

அவதாரிகை — விருத்தம்.

பாவியாஞ் சமணரேவும் பசுவினைக் கடவுள் நந்தி
தேவனால மாயச்செய்த செய்கைமுன் னுரைத்தே னிப்பால்
காவலன் தனக்காச்சேவ கம்பூண்டு மெய்க்காட் டிட்டு
மேவியோ ராடல்செய்த விசித்திர மினிச்சொல் வேனே.

ரீதிகௌளை, ஆதி.

௧ மாதவரேகேளும்குல பூஷணபாண்டியன்இந்த
மண்டலத்தை யாண்டுவரும் போது
சேதிராயனென்றொருவில் வேடனகங் கொண்டுசண்டை
செய்யவிடுத் தான்தனக்குத் தூது

௨ அந்தவகையறிந்துச் சுவந்தரசா மந்தசே
னைபதிதன் னுடனே ஆ ராய்ந்து
இந்தவிஷம்மது பொன்னறைதிறந்துசெம்பொன்
எடுத்தெவள வுவேண்டினும் ஈந்து

௩ இன்னமும்ப திதாச்சில சேனையைச்சே கரம்பண்ணி
எடுத்தெழுதிக் கொள்ளச்சொல்ல அடுத்து
மன்னவன் சொன்னபடியே பொன்னறைதிறந்துளத்த
வாவடங்க வேண்டும்பொரு ளெடுத்து

௪ ஆண்டவன் ஆலயம்புகுந் தாடகத்தா மரையடிந்
தாலவாய்ப்பிரானடியில் போற்றி
ஈண்டெனத ரசனெண்ணும் வாறுமுடிப் பாயென்றும்பொன்
யாவும்ஐயா னுக்காச்செல வாற்றி

௫ வான்னக்குங் கோபுரமும் ஆயிரக்கால் மண்டபமும்
வஜ்ரகோள கையும்விலை யெய்தும்
ஆனகண்டி கையும்முத்துக் கவிகையும் கொடிநிரையும்
ஆதியாப்ப லபலவாச் செய்து
௬ விண்ணவர்க்கா கச்சிலது வேள்வியும் சுவையாருடன்
வேதியர்க்கன் னமும்பிரமத் தியானம்
பண்ணரும் துறந்தவருக் கையமும் வேறுவேறுக்ப்
பலதருமத் துடன்செய்தான் தான்ம்

சாமந்தன் அரசர்களுக்கு ஓலையெழுதுதல்.

தருமநெறி யாற்றிடும்சா மந்தன் சைவ
சாதனமுள் ளோரெவரா னும் கண்டால்
அரனெனவே நினைத்தசனம் அருத்திச் சேஷம்
அருந்தியின்றைக் காயிரம்நா ளைக்கிரண்டா
யிரமிவ்வா றுகவரும் பொருள்க ளெல்லாம்
ஈவதுமன் னவனறிந்த தறிந்து பன்னூட்
டரசருக்கும் வெவ்வேறுப் பரிசிங் தோலை
அனுப்புவான் போல்பவந்த மாற்று வானே.

சௌராஷ்டிரம், சாப்பு.

பல்லவி.

எழுதுசீக்கிரத்திலே எலலோர்களுக்கும் ஓலை எழுது

அநுபல்லவி.

முழுதும்காத் திரக்ஷிக்கும் முத்திபுரே சனைவேண்டி எழுது

சரணங்கள்

பல்லவர் கொங்கணர் வங்கர் பப்பரர் ஒட்டியர் அங்கர்
வில்லவர் சேகயர் கங்கர் மேதினிபுகழும் கொங்கர்க் கெழுது
மச்சரிளர் கர்நாடர் மாளவர் காஞ்சி மராடர்
குச்சரர் சிந்து விராடர் கொங்கணர் கன்னேசிநாடர்க் கெழுது
மகதர் சிங்களர் கலிங்கர் மதுரைகௌடா குலிங்சர்
குருதர் ஆரியர் தெலுங்கர் குருநாடர் வருமா தங்கர்க் கெழுது

மேவியசா மந்தனெங்கும் இவைபொய் யோலை
விடுத்திருக்கும் போதரசன் திங்க ளாறுய்ச்
சேவகர்வா ராதிருக்கத் தெரிந்து நாளைத்
தினமுதிக்கு முன்சேனை யெல்லாங் கொண்டு
வாவெனவே அழைத்துரைக்க அதற்கி சைந்து
மாறிகட மாடிவினை யாடு மாதி
தேவனு லயம்புகுந்து சன்னிதிக் குள்
செல்லுவான் பணிந்தெழுந்து சொல்லு வானே.

விருத்தம்.

அண்ணலே யரசளித்த பொருளெல்லாமென்
றும்பணிகொண் டீரேவன் சேனை யீட்டும்
வண்ணமியா தெனக்கேட்க அடியார் துன்பம்
மாற்றுவதே விரதமாப் பூண்ட நெற்றிக்
கண்ணனருளாலேசே னைகளை நாளைக்
காணலாம் நீயுமர சவைக்கெய் தென்று
விண்ணிலெழுந் தெய்வவாக் கறிந்தா னந்தம்
மீறினான் தனதுகுறை ஆறினானே.

ஆனந்தபைரவி, சாப்பு.

௧ சாமந்தனென்றசே னைபதிஈசனைத் தாழ்ந்துதனதில்லத்துறைந்தான் இந்த
மாமண்டலத்தை விளக்கிடும்சூரியன மைக்கட லுக்குள்ளே மறைந்தான்
௨ மெத்தஇருள்வரப்பார்த்தவனென் றுவிடியும்விடியுமென் றெண்ணினான்பரி
சுத்தமாநித்திரை இல்லாதடிக்கடி தோனறித்தனதிருகண்ணினால் (வரும்
௩ விண்ணினுடுக்களை அண்ணாந்துபார்த்து விடியுங்காலாச்சென றுதளர்ந்தான்
கண்ணுதல்சேனை எழுச்சியைக்காணக் கருதியிரவெலாமளந்தான் (னை
௪ ஆரணந்தேடும்பரஞ்சுடர்தாமொருஅன்பன்பொருட்டருள்பொழிந்துகொ
தாரைமறைத்துத் திருவுருவம்கொண்டு தாமேபுரவிமேல் எழுந்து
௫ தானையுடன்வரக் காணவந்தாற்போலே சாகரத் தாடிஅனபாலே இருள்
ஆனதுகளை அலம்பிவிளக்கம்செய்தாதித்தன் தோன்றிடும்காலை
௬ அட்டாளசுந்தரநாயகன்முன்பணிந்தன்புடன வேண்டிக்கைஇரந்து சந்த்ர
வட்டக்கவிகை நிழற்றிடவேந்தன்மனைக்குள் வரும்போது விரைந்து
௭ மண்டியசங்குகன்னன்முதலானபிர மதகணத்தோட னேகம் பெரும்
குண்டோதரனாதி பூதகணங்களும் கோளுடைக சாளார் ஆக
௮ கூறும்வடிவாள்கோடாலிவில்தோமரம் குந்தம்முதலாக ஏற்க மூ
வாறுபடையுடன் வாயுவினும்கடிதாகப்புறம்பெங்கும் காக்க
௯ நந்திபிருங்கிமுதலவர்புண்டரம் நன்னுதலில்அணிந திலங்கப் பெற்றுப்
பந்திபந்தியாவ டிவாள்பிடித்துப் பரிச்சேவகராவந் திணங்க (இருந
௰ கொற்றவிடையைத்தானேதுய்ய கொய்யுளைக் கோலப்பரியாக்கி மேலே
தொற்றைச்சேவகராமாறிநடிக்கும்ஒருவர்வந்தாரேபின் னாலே
௧௧ பல்லியமள்ளர் புரவியொலிஆரபாரத்துடன்வர லாலே எழு
செல்லொலிமங்கமுன் னாள்நகர்மேல்வந்து சீறியவாரிதிபோலே

சாமந்தன்அரசனுக்குச்சேனைவரும்நாட்டுவிவரம்கூறுதல்.

விருத்தம்.

சேனைவரக் கண்டனசாமந்தன வேந்தன்
திருவடியிற் பணிந்துரைக்க அவன்ம கிழ்ந்தாங்
கானதொரு மண்டபத்தி லேறிச செம்பொன்
அரியணைமீ திருந்துபகை வோரை வெலவும்

தானைவரும் சிறப்பறிந்தெத் தேயத் துள்ளார்
சாற்றெனப்பொற் பிரம்புகையிற் றரித்து நீட்டி
நானிலத்தி லவரிருக்கை யொவ்வொன் ருக
நாட்டுவான் அணியணியாக் காட்டு வானே.

சௌராஷ்டிரம், சாப்பு.

பல்லவி.

மன்னுசேனையின் தன்னாட்டிற்சில தென்னுலேசொல்லக் கேளாய்

அநுபல்லவி.

கன்னுவலர்கள் தந்நாவுக்கினி தெந்நாளும்பெற வாழும் மன்னு

சரணங்கள

கொங்கணரிவர்ஐய சொல்லும் சிங்களர்இவர் ஐய இவர்
அங்கரவர் கலிங்கரவர் தெலுங்கரிவர்கள் ஐய மன்னு
மச்சரர்இவர் ஐய இவர் குச்சரரிவர் ஐய அவர்
இச்சகத்துளோர்மெச்சும்வீரர்கள் நிச்சயமாகும்ஐய மன்னு
பல்லவரிவர்ஐய இவர் வில்லவரிவர் ஐய இவர்
கொல்லரிவர்கள்மல்லமர்செய்து வெல்லுவரிவர்ஐய மன்னு

இன்னவா றுரைக்கவெகு தேசத் தாரை
இங்கழைத்த ததிசயமென் றரசன் சொல்ல
உன்னதரும் பொருள்முழுதும் கணக்கில் லாமல்
உதவினதால் வந்தனரென் றுரைக்கப பின்னும்
மன்னுமிப்ப டையிற்பரிமே லேறு றைச்சே
வகராக நிற்பவர்யா ரென்று கேட்கத்
துன்னியஇச் சேனையில்யா ரென்ற றிந்து
சொல்வதெனச் சாமந்தன் சொல்லி னானே.

பூரி, ஆதி.

சாமந்தனிவ்விதம்புகன்றான் அவர் தம்மைஇங்கேஅழைப்பியென்றான்
காமன்தனை வென்றவனபாலே வரக் கண்டரசனுவந்தன்பாலே
ஆடைமுதலளிக்கக்கண்டு உள்ளத் தன்புவிடான்பொருடடாள் கொண்டு
கூடிவந்தமர்க்கும் அளித்தான் தாமும் கூடத்தரித்துமனம் களித்தான
ஆனவயப்பரியைஓட்டிக் கதி ஐந்தும்தனிநடத்திக்காட்டிச்
சேனையுடன்பொருதும்போது வேடச் சேதிராயன்புடவிமீது
வேட்டையாடையிற்புலி யாலே மாண்ட விதத்தைத்தூதர்சொல்லமேலே
ஈட்டுமுகமலர்ச்சிஅடுத்தான்சேனைக்கிறைவனுக்கும்வரிசைகொடுத்தான

பரிசிந்த வாறுகொடுத் திடவே சேனு
பதியுவந்தச் சேனையைமெய்க் காட்டுத் தர்து
விரைவினிலே தங்கள்தங்கள் இருக்கை செல்ல
விடைகொடுப்பான் போல்நிற்க ஆங்கே நின்ற

நால வாய்ப்பிரான் மனித ரூபம்
சிறந்தசே வகருடனே மறைந்திடப் பார்த்
தாசன்ஐய முறநோக்கி யிதுநம் கூடல்
ஐயன்விளை யாடலென்றே அறிந்திட் டானே.

இதுவுமது.

கண்டுகண்ணீர் வரப்புளக முறத்தனக் கெக்
காலும்உயிர்த் துணையாம்சா மநத னைப்பார்த்
தண்டர்பிரா னேஉனக்கே எளிதில வந்தானை
ஆனதினால் எமக்கவனே யாக நீயே
உண்டெனவே வரிசையளித் துளக்க ளிப்புற்
றுலகியலைச் செய்துதென்னன வாழ்நதா ளித்தைக்
கொண்டுரைபபோர் கேடபவர்அ பீஷ்டம் பெறறுக்
கொளவர்பினபு சிவனுலகிற குடிகொள் வாரே.

விருத்தம் அ, கீர்த்தனை உ, தரு ரு, ஆக கக. முறறும்.

சிவமயம்

முப்பத்தொனறாவது,

## உலவாக்கிழியளித்தபடலம்.

அவதாரிகை —விருத்தம்.

செழியன்முன் பரிமேறறுமோர் சேவக னுகிமூன்று
விழியுளோன் மெய்க்காட்டிட்ட விதஞ்சில துரைத்தே னிப்பால்
மழைமறுத் தயர்வுகொள்ளம் மனனனுக் குலவாச செம்பொற்
கிழிகொடுத் தாடல்செய்த கீர்த்தியை யினிச்சொல வேனே.

### குலபூஷணபாண்டியன் அரசுபுரிதல்.

காம்போதி, ஆதி.

பலலவி.

குலபூஷணபாண்டியன் ராஜ்யபாரஞ்செய்த கொள்கைகேளும்முனி வோரே

அநுபலலவி

பலபூவெடுத்தீசன பாதந்தனி லணிந்து
மலபூசனைசெய்திடும் நடத்தையிலே துணிந்து (குல)

சரணஙகள்

க நவிலும்வ்ருதஙகளுக்குட் சிரேஷ்டமென் றன்பினாலே
நயந்துசோமவார வ்ருதம்தொடுத் தொருககாலே
சிவவ்ருதமுள்ளதெலலாம் தப்பாம லேமெனமேலே
திரிகரணமுமொன்றாச் சேர்ந்துசெய் தானிப்பாலே (குல)

உ ஈன்றாள்பசித்திருக்க அன்னதானத்தில் மனம்
இசைந்திடுவதுபோலே சதுர்வேதப்பொரு ளினம்

ஆன்றமறையவரை யிகழ்ந்திட்டதாலே கனம்
அகன்றுமழையில்லாமல் போச்சுதேநெடுந் தினம் கு
படிக்குடபயிர்விளைப்போர் தமக்குமன்ம் வெறுக்கப்
பசும்புல்நுனிகருமைற் பல்லுயிரும் மறுக்கக்
குடிக்கத்தண்ணீரில்லாமல் வளங்களெல்லாம் சிறுக்கக்
கூடல்நாடெங்கும்பஞ்சக் கோலம்கொண்டு வறுக்கக் கு
மறையோர்க்குரியவேதம் முதல்மறந்து திருந்த
வானோர்முனிவோர்முதல் வேள்விசெய்ய வருந்தப்
புறநாடணைந்திழிந்த தொழில்செய்தன்னம் அருந்தப்
புகலும்குடியும்அவ்வா றகலும்எண்ணம் பொருந்தக் கு

விருத்தம்.

இந்நிலையா வரும்வருந்தத் தெரிந்து வேந்தன்
இந்துவா ரத்திலம்பொற் கஞ்சத் தாடி
அன்னைமீ னாக்ஷிசுந்தரன்முன் பேகி
அங்கைகுவித் தனைத்துயிர்க்கும் உயிராய் நின்றோய்
மன்னுயிரெல் லாம்பசியால் நோதல் என்னை
வருத்துவதால் மிகக்கலங்கி யேவந் தேன்உன்
தன்னருளால் என்குறைநீக் கிடுவா யென்று
தனதிருகை விரித்தெழுந்து சாற்றி னானே.

இதுவுமது

மன்னவனிவ் வாறிரக்கத் தவறு கொஞ்சம்
மனம்கொண்டு வாய்பேசா திருக்கப் பார்த்துத்
தன்னிடம்சென் றீசனருள் பெற நினைந்து
தரைமீதில் உறங்கஅவன் கனவின் கண்ணே
பொன்னவிர்சங் கக்குழையும் திருவெண் ணீறும்
புனைந்துசரி கோவணமும் தயங்கக் காட்டி
அந்நிலையே சித்தவடி வம்பூண் டாங்கே
அடுக்கின்றார் சாமிசொல்லத் தொடுக்கின்றோ ரே

மத்தியமாவதி, ஆதி.

வாழும் பாண்டியமகிபா மணி மாலைதொடு மார்பா நம்மை
சூழும் பலநாளா வேண்டித் துதிக்குங்குல தீபா
அனகாபுவிக் கரசேஉல காண்டாய்வெகு நாளா யதில்
இனியோர்குறை உனக்குண்டதை இசைப்போம்கொஞ்சம்கேளாய்
வீட்டின்திரு விளக்கைவிட்டுவெளிக்குப்பந்தம் போலே விரதப்
பட்டித்தினம் புரிந்தேமகம் இகழ்ந்துவிட்ட தாலே
சதுராகமக் கிசையும்சிங்கா சனமாவது மறையே இவ்
அதுவாதிரு மதுபாதுகை யாய்க்காண்பதும் மறையே
மேலும்நமக் கேறும்துய்ய விடையாவதும் மறையே இ
காலுக்கும்நூ புரமாயொலி கதிக்கின்றதும் மறையே

சு அசையாமலே தரிக்கின்றகோவண மாவது மறையே அதி
விசுவாசமாயதிகம்முடை விழியாவதும் மறையே
எ மூலமுதலாகின்றகம் மொழியாவதும் மறையே நெடு
மாலோடயன் தேடுமெந்தம் வடிவாவதும் மறையே
அ மலக்காதேகம் ஆக்ஞாசக்தி வடிவாவதும் மறையே விதி
விலக்காஞானம் பொருத்திச்சகம் விளக்குவதும் மறையே
கூ குலவும்பல உயிர்க்கும்போகம் கொடுக்கின்றதும் மறையே பல
பலபேதங்கள் போக்கும்விதி பகருவதும் மறையே
ய தகைகொண்டமைப் பிரியாமுத்தி தருகின்றதும்மறையே வளர்
அகிலாண்டமும் செலுத்தச் செங்கோலதுவானதும்மறையே

பாண்டியனை யாகாதிசத்கர்மம்செய்ய ஆக்ஞாபித்தல்.

சித்தரிந்த வாறுரைத்துப் பின்னு மந்தச்
செழுமறைகட் குறுதியா குவரச் சொலலுக
கொத்தபடி கலிநோய்சிந் திடவேள் வித்தி
யோங்கவளர்த் தெம்மிடத்தி லன்பெக் காலும்
வைத்துயர்வே தியராலே செய்யும் வேள்வி
மழைக்கேது வாகுமிவர் தம்மை மைந்தா
அத்தகைமை யோரைநற்றி டாதா லிவ்வா
றுச்சென்றார் கேட்பாயோர் பேச்சென்றாரே

பரசு, சாப்பு.

பல்லவி

பாண்டியபூ பதியே வேண்டுவாய் சுருதியை

அநுபல்லவி

பாண்டியபூ பதியே யினம்தேடிப் பலதருமமும்நாடிப் பண்ணுவாய்நீடிப் பாண்

சரணங்கள்

க நன்மகம்செய் மறையோர் தமைக் காணு
கமைப்போல வரப்பேணு நன்மையைப் பூணு பாண்
உ தருமநூல் வழியே மனம் சார்ந்து
தழைக்குஞ்செங் கோலேர்து சத்திடம் சேர்ந்து பாண்
ந வாசவனு தியருக் கவிர் பாகம்
மறையோர்செ யும்யாகம் மழைக்கு யோகம் பாண்

விருத்தம்

திருவருட்கொண் டிவையுரைத்துத் தங்கட் பாளம்
செறிந்தவுல வாக்கிழியொன் றீந்திப் போதிவ்
வரியகிழி தனிலெவள வெடுத்திட் டாலும்
அவ்வளவுக் குக்குறையா திருக்க லாகும்

பொருளிதனைக் கொண்டுனது வறுமை யெல்லாம்
போக்கெனவே யவன்கவலை நீங்கும் வண்ணம்
கிருபனுக்குத் திருநீறிட் டகத்தி லன்பு
நிலைந்திட்டா திருவுருவம் மறைந்திட் டாரே

## குலபூஷணன்பொற்கிழியைப்பூசைசெய்தல்

விருத்தம்.

மறைந்திடுமுன் கனவும்நன வாகத் தானே
வணங்கியெழுந் தீசனடி போலே யம்பொன்
நிறைந்தகிழி யைத்தலைமேல் வைத்து வந்து
நின்றொருமு கூர்த்தமள வுங்கூத் தாடி
அறைந்தகழ லமைச்சர்படைத் தலைவ ராதி
யனைவருக்குங் காட்டியறி வித்து வேந்தன்
சிறந்துயர்சிங் காசனத்தி லேற்றிச சிந்தை
தேற்றுவான் கடவுளெனப் போற்று வானே.

பரசு, ஆதி

பல்லவி.

பூசனைசெய் தானே குலபூஷணன் றானே

அநுபல்லவி

ஈசனரு ளுங்கிழியைவைத் தெங்கும்புகழ்ந்திடச் சங்கமுழங்கிடப்

சரணங்கள்

வாய்ந்தவேதங்கள் சொலிக்கவேபல வாத்தியங்களும் ஒலிக்கவே
ஆய்ந்தபூமாலை யணிந்து தூபதீ பாராதனையுப சாரா திகளுடன்

௨ கங்கையணியும் சோமசுந்தரக் கடவுளேயெனத்திடமுடன்பணிந் (லமும்
தெங்கணும்புகழ்தங்குமைந் தெழுந் தெண்ணிப்ரதக்ஷணம்பண்ணித்ரிகா
பூசனை (கும்

௩ அம்பொற்கிழியை யவிழ்த்தந் தணர்க்கும் ஆவலுடனசெய்வேள்விகளுக்
தென்புடனகொடுத்தியாவர்களுக்குஞ்செல்லுஞ்செலவுக்கீந்தெல்லைவரை
பூசனை (யாமற்

௪ அடியவருக்குக் கொடுக்கக்கொடுக்க அளவுக்குக்குறை யாமலெடுக்க
முடிவில்லாத்பி ரமானந்தம்போலே முத்திபுரந்துள்ளோர்திருப்தியடைந்திட
பூசனை

விருத்தம்

இன்னவகை பூசைசெய்துக் கிழிப்பொன் றாலே
ஈசனுக்குத் திருப்பணிகள் முதலாச் செய்து
முன்னர்குறை யாதந்திக் கடலை மொண்டு
மொண்டுகுல பூஷணமே கந்தான் பெய்ய

மன்னியதெய் வத்தருமப் பயிர்க ளோங்க
வாரிதியைக் குடித்துமுகில் சொரித லாலே
கன்னிநா டளகைநகர் போலே யாரும்
கதித்திட்டார் தழைத்தோங்கி மதித்திட்டாரே
புமது
கலைவளர்கண் டன்புகழைத் துதிப்போர் வையா
கரணர்மகத் திக்கலைவாழ் விப்போர் தூய
மறைவல்லோர் மறைமுடிச்சொல லாய்வோ ருண்மை
வழங்குமிரு திகளுணர்வோர் முதலா நீங்கா
துறைதலிறும் பாண்டியநா டளகை போலே
ஓங்கியே வளர்ந்ததிதைப் படிப்போர் கேட்போர்
குறைவிலாநிறைந்திருக்கும் பொருளா ரூதித்துவம்
கூடுவா ரின்பமிக நாடுவாரே.

ஆக விருத்தம் அ, கீர்த்தனை ச, தரு க, ஆக கரு. முற்றும்.

உ
சிவமயம்.
முப்பத்திரண்டாவது,
வளையல்விற்றபடலம்.
அவதாரிகை — விருத்தம்

பூதநாயகன் தென்னற்காப் பொற்கிழி யதனை யீந்தே
ஆதரித்தாடல செய்த அதிசய முரைத்தே னிப்பால்
மாதிருவிளங்குகின்ற வசியர்பெண் களுக்கா அந்த
வீதியில் வளையல்விற்ற விதஞ்சில தினிசசொல வேனே.

## ஈசன்காபாலியாகத்தாருகாவனத்திற்குவருதல்.
விருத்தம்

சீருயர்பா ண்டியகுலபூ ஷணன்செங் கோலைச்
செலுத்திவரும் நாளையிலே முன்னாட் டெய்வ
தாருகா வனத்துமுனி மடவார் கற்பின
தகைமைதனை யளவறிந்து பார்க்க வென்றே
மாரனைநெற் றிக்கண்ணாற் பொடிசெய் திட்ட
மறவ னொரு காபாலி யாகத் தானே
பேருயரும் திருவால வாயை விட்டுப்
பேர்ந்திட்டான் அவ்வனத்தைச் சார்ந்திட் டானே.

சௌராஷ்டிரம், சாப்பு.
பல்லவி
தேவதேவோத் தமன்தாரு காவனம்வந் தானேபாரும்
அநுபல்லவி
பூவயன்மால் தேடரிய சேவடிநி லம்படியத்

சரணங்கள்
பாதபங்கயத்தின் பாலே பாதுகைதொட் டொருக்காலே
ஓதுமன்மதனதன் றுலே உற்றதவம் பூண்டாற் போலே தேவ
ஒண்மதிமுகம் விளங்க உடம்பெங்கும் நீறிலங்க
உண்மகிழ்ந்து கொண்டுதங்க முடனேபார்த் தோர் மயங்கத் தேவ
வேதகௌபீனம் தாங்க மென்கனிவாய் ஊதி மோங்க
மாதவர்நினைப்பைக் காண்க மாரீசம்பூண் டையம் வாங்கத் தேவ

## முனிமங்கையர்மயல்கொண்டுசுவாமியைப்பின்றொடருதல்.

விருத்தம்.
வள்ளலெனு மாலவாய்ப் பெருமான் கோடி
மன்மதா கிருதியாக வருகும் போதே
உள்ளரிய காற்சிலம்பி னொலியும் ஊதை
ஒலியும்கைத் துடியொலியும் செவிக்கே றக்கண்
டுள்ளமதைப் பிளந்துநிறை கலைநதி மூக்க
ஒண்டொடியா ரனைவர்களும் பலிகைக் கொண்டு
கள்ளவிழ்கூந் தலும்வளையும் கலையும் சோரக்
காண்கினுர் மையல்மிகப் பூணகின் றூரே

பரசு, ஆதி
பல்லவி
மங்கையர்பின்றொடர்ந்தார் தவமுனி மங்கையர்பின்றொடர்ந்தார்
அநுபல்லவி
மங்கையைப்பாகத்தி லெப்போதும்வைத் தவன்
மாமுடிமீதொரு பெண்ணைமறைத் தவன்
செங்கையிலேதுடி பெற்றுவணம் வந்து
சேர்ந்துதநங்கிடை தேய்ந்துதள் ளாடிய மங்கை

சரணங்கள்
௧ வாக்குமனத்துக்க கோசரமாகிய
மதவடிவம்பெற்ற தேவனைக் கண்ணூரப்
பார்க்கவென்றுசைமுன் பற்றியிழுத்திடப்
பாவோட்டமாத்தாரு காவனத்தி லுள்ள மங்கை
௨ இல்லினைபுறம்வந்த ருந்தவரேபிட்சை
இந்தாரும்இந்தாரும் என்று தரவுடன்
நில்லும்நில்லும்என்று சொலலித்தண்ணீர்மிக
நீடியவோடைகண் டோடிய மான்போல மங்கை
௩ கையில்வளையும் நழுவஉடுக்கும்
கலையும்நழுவத் தலையில்முடிக் கின்ற
செய்யமலரும் நழுவமயல்பூண்டு
தேனைக்கண்டோடும்வண் டானவைகள் போல மங்கை
௪ புன்சிரிப்புற்ற முகங்கண்டவரைப்
புணரநினைத்தாப ரணமுதல் ஏந்தி

பஞ்சசரனாலே நெஞ்சம்துளைபட்டுப்
பள்ளத்தைக்கண்டோடும் வெள்ளத்துக்கொப்பாக — மங்கை
வைத்தகண்வாங்காமல் பார்த்துமனம்திருப்தி
வாராமலேநமஸ் காரம்புரிந்துசெங்
கைத்தலத்திற்சில வஸ்துக்களும்பெற்றுக்
காற்றுள்ளபோதேநெல் தூற்றிக்கொள்வார்போல மங்கை

௬ ஆண்டவன்தேகத்தைத் தீண்டினாற்போதுமென்
றங்கையிற்சர்க்கரை யும்கொண்டுளத்தாசை
பூண்டிருபக்கமும் பின்பக்கமும்சென்று
புத்தமுதத்தைஈ மொய்த்தது போற்சுற்றி மங்கை

௭ சாமியைக்கட்டி அணைக்கச்சமீபத்தைச்
சாருமுன்னேநெடுந் தூரம்செல்லத்தங்கள்
மாமோகத்தால்வரும் காமம்வெளிப்பட
மன்னியஆனந்தம் தன்னை மனத்துற மங்கை

௮ பாலும்நெய்யும்தயி ரும்தேனும்நல்ல
பழங்கள்முதலா வழங்கஅவர்மெய்யில்
சாலவும்பூமழை போலிறைத்துப்பூர்ண
சந்திரனைக்கண்ட சகோரங்கள் போலவே மங்கை

## முனிமங்கையர் சுவாமியோடு சரசவழக்காடுதல்.

விருத்தம்

தூய்யமுனி மடந்தையரிவ் வாறு சோம
சுந்தரனைத் தொடர்ந்தவர்க ளேந்தி வந்த
ஐயமுடன் கையம்பொன் வளையும் பெய்வார்
அகத்திலுறும் நாணுமரை நாணும் சோர்வார்
செய்யுமத னம்புடனே மலர்க்கண் ணம்பும்
திரண்டெழுந்த கொங்கையின்மேற் சொரிய மிக்க
மையலடங் காதுபர வசமாச் சித்தை
வாடியே சரசவழக் காடு வாரே.

கல்யாணி, சாப்பு

௧ காமகோடிசுந்தரரேகருணைசெய்தெங்கள் கைவளைதாரும்பெரியோரே தவ
மாமுனிமடவீரேயுங்கள்கந்தரத்தல்லோ மற்றதுள்ளதென்றறிவீரே (யோரே
௨ உடும்புவேண்டாம்கையைவிடுமென்றாலபோற்றாருமுடுக்கும்கலையைப்பெரி
மெத்த — இடும்புகள்பேசுவீருங்கள் முகமதியில் இருக்குதஃதென்றறிவீரே
௩ இளைத்தவேளைதெரிந்துதவுதல்போலிடை திடைகண்டினங்கீர்பெரியோரே
அதுபளிச்சென மின்போலாவீருங்களுக்கிடைகணாலபார்க்கக்காணுதறிவீரே
௪ இலவுகாத்தகிளிபோலானோம்பண்டுருவளித் தினிவிடைகொடும்பெரியோ
ரே வம்பு — குலவாமலேபேசுமடவீர்கடலிலேசென் றுறங்குவதனையறிவீரே
௫ கல்லோர்போலிருக்கிறீரல்லாமல்எவளாவும் நடுவுழக்கில்லைபெரியோரே

௮ சிந்தைதளர்ந்தம் மடந்தையர்கூடல் திருநகரந்தனில் வாழும் மிக
அந்தமிகுந்த வணிகர்குலத்தில் அவதரித்தார்பின்பு கேளும் (தார்வளர்க்

௯ கண்ணுக்குளைமும் வடிவுநிறைந்தும்பர் நாட்டுள்ளபெண்கள் போல்வளர்ந்
தெண்ணரும்பேதைப் பருவம்சென்றல்கு லிருபாலகன்றிடத் தளர்ந்தார்

## சுந்தரேசர்வளைச்செட்டியாகவருதல்.

### விருத்தம்.

பெருந்தவக்கன் னியர்கள்வந்து வசியர் வீட்டுப்
பெண்களாய் மருங்கொசியத் ததும்பி யன்னைக்
தரும்புமுலை வளர்ந்தேறும் பருவ நோக்கி
ஆலவாய்ப் பிரான்பழைய கதைநி னைந்து
கரும்புயல்மே னியனறியாத் திருத்தா ளிந்தக்
காசினிப்பெண் முடிசூட வளைவிற் பார்போல்
சுரும்பிசையும் குழல்மடவீ ரணக்கூப் பிட்டுச்
சொல்லுவார் ஆவணத்திற் செல்லு வாரே.

கௌளிபந்து, ஆதி.

பல்லவி

வளையோவளையென்றுல வாயீசன்வந்தான்

அநுபல்லவி

வளமாம்வேதார்த்தம் சொலலும் மணிவாய்திறந்து வளை

சரணங்கள்

௧ கங்கைமறைத்துநீல கண்டம் மறைத்து உரக
கண்ணமும்மழுவும் மானும் மறைத்து ஒருபால்
மங்கைமறைத்து விடை வாகம் மறைத்து நெற்றிச்
செங்கண்மறைத்துச்சடைத் திங்கள்மறைத்து வளை

௨ சுத்தவெள்ளைவஸ்திரம் அரையில் தரித்து அதுபோல்
உத்தரீயமுமேலோ முங்காய் விரித்து விளங்கும்
மெத்தவெண்பட்டிடையில் சுற்றி வரித்துக் கொஞ்சம்
விருத்தவைசியர்போல வேஷம் பரித்து வளை

௩ சந்தனப்பூச்சும்கையில் தாம்பூலம் மின்ன முகத்தில்
சிந்தும்குறுவேர்வையைச் சிறுநகம் தன்னை வழித்துப்
பைந்தொடியார்கள்மேலே படவேணும்என்னத் தெறித்து
வந்துதிலதம்நெற்றி மத்தியில் மின்ன வளை

௪ கடகாங்குலிகுண்டலா பரணம் அணிந்து கரத்தில்
குடையும்தாளிலேபாத குறடும் புனைந்து முனிவர்
மடவாரிடமுன்பெற்ற வளையை மகிழ்ந்து தோளில்
அடியார்அணியும்மாலை யாகச் சுமந்து வளை

விருத்தம்.

கங்கைவே ணியனிந்த வாறு வந்த
  கன்னியரே வளைகொளுமென் றுரைக்கும் போது
பொங்கிடும் கரோலிகே ட்டெழும யூரம்
  போலெழுந்து மாளிகைவாய்ப் புறத்தே வந்து
செங்கையினை யிடவருவா ரெனவே தங்கள்
  திருமனத்தைத் தாம்புரிய வருகின் றாரைக்
கொங்கைகளுங் கிடஇடைதன் ளாடச் சூழ்ந்து
  கொண்டிட்டார் வசியர்பெண்கள் கண்டிட் டாரே.

வளையல் அணிந்துகொண்ட மாதர்கள் செய்கைகூறுதல்.

இதுவுமது

கண்டவுடன் கட்டிமுத்த மிட்டுக் கொள்ளக்
  காதல்கொண்டு நாணமுதல் நான்கும் நீங்க
வண்டிசையும் குழல்சரிய மனம் உழன்று
  மருவிவிளை யாட்டுக்கா அமையச் சூழ்ந்து
தண்டைசிலம் போலகண்டா பரணம் காஞ்சி
  தரித்திடினும் வளைக்கில் லாதே போனால்
ஒண்டொடியார் தமக்கழகுண் டாகு மோவென்
  றுன்னுவார் வசியரிடம் துன்னு வாரே.

எதுகுலகாம்போதி, ஆதி.

ஆதிபகவன் தானே வளையோ வளையென் றுரைத்
  தாவணம்வரக்கண்டார் சிலமாதா
காதுடன்வாதாடும் வேல்விழியார் சித்திரம்போல்
  கண்ணிமைக்காமல்பார்த்தார் சிலமாதர்
தய்வுசெய்தெம்கைக்கேற்ற வளைபோடவேண்டு மென்றே
  தளிர்க்கையை நீட்டிவந்தார் சிலமாதர்
கயல்விழிகைப்பிடிக்கும் கரத்தால்விரல்நொடிக்கக்
  கருத்தில்ஆனந்தம் கொண்டார் சிலமாதர்
ஐயனிடும்வளையை உடைத்துப்பின்வேறுவளை
  அடுக்குமென் றுவந்தார்கள் சிலமாதர்
கையில்வளைபூட்டுதல் போலாசைபூட்டமோகக்
  கடலில்விழுந்தாடினார் சிலமாதர்
அனங்கன்கணை துளைக்க வருந்தியெமக்குவளை
  அடுக்குமென்றோடிவந்தார் சிலமாதர்
முன்னங்கொள்வளைநழுவல் வாங்கிவேறிடுமென்று
  முகிழ்த்துக்கைநீட்டிவந்தார் சிலமாதர்
வளையும்கலையும்சோரச் செய்வதிவ்வளைபோல்முன்
  வரக்கண்ட தில்லையென்றார் சிலமாதர்

இளையகன்னியரேகல் வளை இந்தாவென்னவெமக்
கெமக்கென்றடிவந்தார்கள் சிலமாதர்
ஏதையாதேகம்மயிர்க் கூச்செறிவதிவ்வளை
எவ்விடத் துள்ளதென்றார் சிலமாதர்
போதைநிகரும்தங்கள் தங்கள்கையைநீட்டுவோர்
போலவுனை நீட்டிவந்தார் சிலமாதர்
செங்கைதொட்டடையன் வளை யிடுகிறுற்போலஅதே
தியானமாக விருந்தார் சிலமாதர்
தங்களாசையைத்தாய்க்கும் தெரியாமலேஅகத்தில்
தானேமறைத்திருந்தார் சிலமாதர்
தினமும்வரவேண்டுமென் றுரைக்கநல்லதென்றையன்
செப்பக்கண் டுள்மகிழ்ந்தார் சிலமாதர்
புனையும்வளைக்குவிலை பெறுமெனநாளைவாங்கிப்
போவோமென் னமகிழ்ந்தார் சிலமாதர்
வீடுதோறும்வளையோ வளையென்றுரைக்கக்கேட்டு
விரகத்துடன்பின்செல்வார் சிலமாதர்
கூடிவரத்தொடர்ந்தார் உடலும்நிழலும்போலக்
கோயில்மட்டும்பின்செலவார் சிலமாதர்

விருத்தம்

ஒருவணிகரானவள்ளல் போயங்கு மாளத்
துள்ஒளிசேர் திருவுருக்காண் பித்தார் பின்னே
வருமடந்தை யரும்பலரும் கண்டு முன்னம்
வளையலிட்ட வணிகர்மங்கை பாகராமென்
றிருதயத்தில் வியந்துவகை வெள்ள மூற்றுற்
றெழுந்தருமி ழியைப்போலத் ததும்பிக் கண்ணீர்
பெருகவதி வாழ்ந்துகளிப் படைந்தார் அந்தப்
பெரும்பதியுள ளவரும்அவ்வா றடைந்திட் டாரே.

வணிகர்பெண்கள் ஐயன்மலர்க் கையால் தொட்டு
வளைபோட்ட மூலமவர் கருப்பம்கொண்டே
அணியணியாப் புத்திரரைப் பெற்று வாழ்ந்தே
அந்தத்தில் சிவபதம்சேர்ந் திருந்தா ரிப்பால்
குணமுடையம் மைந்தர்கள்பே றனைத்தும் பெற்றுக்
கொண்டிருந்தா ரிதையுவந்து படிப்போர் கேட்போர்
மணமுறவாழ்ந் தவர்முடிவிற் சிவலோ கத்தில்
மகிழ்ந்தேனை அடிநிழலில் வசிப்பர் தாமே.

ஆக விருத்தம் [illegible], கீர்த்தனை [illegible] ஆக [illegible]

[illegible]

சிவமயம்

முப்பத்துமூன்றாவது

## அட்டமாசித்தியுபதேசித்தபடலம்.

அவதாரிகை — விருத்தம்.

முத்தியை விளக்கும் கூடல் முக்கணன் வசியர் வீதி
மத்தியில் வளைபகர்ந்த வணம்சில வுரைத்தே னிப்பால்
பத்திபூண் டிறைஞ்சும் யக்ஷப் பைந்தொடிமாருக் கஷ்ட
சித்தியை யுபதேசித்த திறன்மையை யினிச்சொல் வேனே.

### சுந்தரேசர்தெட்சிணாமூர்த்தியாகஇருந்தல்.

விருத்தம்.

திங்கள்வங் கிசக்குலபூ ஷணன்செங் கோலைச்
செலுத்திவரும் நாளையிலே முன்னொருண்மை
தங்குமறை துதிக்கஇசைந் தால வாயில்
சத்தபா தலம்பிளந்து முளைக்கும் மூல
லிங்கமே பராபரனு கவும்பின் னுண்டாம்
லிங்கமெலாம் பரனுக விளங்கு மீசன்
ஒண்கயிலை தனில்வடவா லின்பாற் றனு
உருக்கொண்டான் தென்முகமா யிருக்கின்றானே.

பந்துவராளி, சாப்பு.

பல்லவி

தெக்ஷிணாமூர்த் தியாத்தேவ தேவனிருந்தானே

அநுபல்லவி

பக்ஷமாவெள் ளிலைச்சுருள் பார்வதிகொ டுத்தல்சீக்கித் — தெக்ஷி

சரணங்கள்

பிருங்கிசக்திமுதலாகப் பெருங்கணத்தோ ருமன்பாக
வருஞ்சனகாதியோக மாதவத்தோரும் முன்பாக — தெக்ஷி
தவமிகுத்தவருய்யத் தாளிறைஞ்சிக்கண்ணீர் பெய்ய
சிவகதையாகும் ஐய்ய செங்கரும்பருந்தச் செய்ய — தெக்ஷி
தருமாகமமும்நல்ல தத்துவஞானமும் புல்ல
அருமையாம்நூலுள்வல்ல அரியபொருளைச் சொல்ல — தெக்ஷி

விருத்தம்

தெக்ஷிண மூர்த்தியிவ் வாறிருக்கும் போது
தேசமெங்கும் திருவெண்ணீ றணிந்துள் ளத்தில
பக்ஷமுடன் சிவபூசா நியமம் பூண்டு
படர்ந்தசடை முடித்தவப் வாதி தோறும்
அக்ஷமா லையுந்தரித்தே மூர்த்த முன்னுள்
ஆறிரண்டு கையுனுக்கு மூலையிர் இட்.

யக்ஷமடந் தையரா று பேரு முன்வந்
திணங்கினார் திருவடியில் வணங்கி னாரே.

## அட்டமாசித்தியடையப்பார்வதியைப்பூசிக்கச்சொல்லுதல்.

இதுவுமது.

வணங்கியெழுந் திருகைவிரித் தடியேஞ் சென்ம
வாரிதிநீக் கிடுங்கருணை நிதியே சைவக்
கணத்துலவும் ஸ்வாமியஷ்ட சித்தி போதிக்,
காத்தருளு மெனவிரக்க மடியில் மேவும்
மணங்கமழும் குழலிமலை மகளை நீங்கள்
வந்தனஞ்செய் தனுதினமும் துதித்துப் பூசித்
திணங்குமெனத் திருக்கரத்தை நீட்டியே யன்
பீட்டுவார் மொழிந்தவர்க்குக் காட்டு வாரே

சுருட்டி, ரூபகம்

பல்லவி.

இவளைப்பூ சைசெய்கு வீரே அஷ்டசித்தியும் எளிதில டைகு வீரே

அநுபல்லவி

நவநாத ஸ்வரூபியாம் நாமேயவளேயாக
அவளைச்சித் திகள்வாழும் அஷ்டசித் தியாச்சூழும் இவளை

சரணங்கள்.

௧ சித்திமுத் தியைப்பரிக்கு கொடுக்கும்பரா சத்தியென் பதுதெரிகது
புத்திவாக் குமெய்யொன்றும் போதமுடனே நின்று
அத்வைதை யிவளென்று அரியமலர்கைக் கொண்டு இவளை

௨ அகிலபுவனதாரி நித்யகல்யாணி ஆகும்நாதவோங்காரி
சகலதுக் கமும்போக்கும் சந்தோஷத் தைஉண்டாக்கும்
பகருமாதுக்கந்தீர்க்கும் பரிபூரணியாய் வைக்கும் இவளை

௩ ஆதிசத் திமிரந்தரி வேண்டியசித்தி அருளும் திரிபுரசுந்தரி
ஞானாரூபிணி [illegible] ரூபிணியாய்
வேதன்மா லும்பணியா விமலையென் [illegible] ஆதியா இவளை

## இயக்கமாதர்களைப்பார்வதியாகச்சபித்தல்.

விருத்தம்.

குருபரஞ்சோ தியுமிவ்வா றஷ்ட சித்தி
கொள்ளுவதற் குபாயமுரைத் தவர்மே லன்பு
பெருகுமனம் கொண்டபதே சித்தா ரந்தப்
பேதையரவ் வாறநுஷ்டிக் காமற் றங்கள்
கருமவசத் தால்மறந்தார் பின்பக் குற்றம்
காரணமா யவர்தம்மை நோக்கி மண்மேல்
கருநிறங்கொள் கல்லாகப் போவீ ரென்று
காய்ந்திட்டார் சாபமப்போ நீதிட் டாரே

அடாணா, ஆதி

பல்லவி.

பாறையாகப்போகக் கடவீரே ஆறுபேரும் வேறேவேறேயாகமடவீரே

அநுபல்லவி

தேறும்பாண்டியராஜ்யம்அதிலே ஸ்ரீபட்டமங்கைகிராமந்தனிலே பாறை

சரணங்கள்

க மேகமண்டலம் வரைக்கும்உயர்ந்து விரிந்தஇலைக ளாலேநிறைந்து
சாகையோசனை தூரம்பரந்து தழைத்திடும்வட தருக்கீழ்இருந்து பாறை

உ காயும்சருகும் பழுப்புநிறையக் கனிகளுதிர்ந்து உடலம்மறையச்
சாயும்பக்ஷிகள்கூடியறையத் தருக்கள்செடிகள்முளைத்தங்குறையப் பாறை

ந கொள்ளுமுல்லைக் கொடியுஞ்செறுத்துக் குமுதங்காந்தம்மேலே துறுத்து
உள்ளும்புறம்புந் தமத்தைப்பொறுத்து உங்களுருவம் மறுத்துக்கறுத்துப்

சுந்தரேசர்ஸ்ரீபட்டமங்கைக்குவருதல்.

விருத்தம்

பாறையாச் சபித்திடவும் இயக்க மாதர்
பயந்திதுநீங் கிடுவதெப்போ தெனவும் பத்து
நூறுவரு டமும்நீங்கு காலெம் கண்ணால்
நோக்கியிச்சா பந்தீர்த்துச் சித்தி யெட்டும்
கூறுவோ மெனப்பட்ட மங்க லத்தில்
குன்றாக ஆலடியிற் கிடந்தார் சொன்ன
வாறுநாட் கழிந்து பின்னுங் கயன்மால் தேடும்
மதுரேசன் குருவடிவாய் வந்திட் டானே

மாளவி, ஆதி

பல்லவி.

அந்தஸ்ரீபட்ட மங்கையிலேசோம சுந்தரர்வந்தனரே

அநுபல்லவி

சிந்தையிலன்புபெருகத் திருவாலவாயுறைவா
அந்தமுடனேதக்ஷி ணாமூர்த்தியாக அந்த

சரணங்கள்

க மூவிரண் டெக்ஷமடவார் மூளுஞ்சாபந் தீர்க்க
ஆவலுடன்கடைக்கண் ணருள்கொண்டு நோக்க அந்த

உ கொங்கவிழ் கார்தளமெய்தல கொடிமுல்லைகள் நீடிப்
பங்கபமுதற்பூத்த பாறையை நாடி அந்த

ந கரும்பாறையும்பசும்பொன் கதிர்போலொளியோங்க
வரும்பானுமுன்னிருட்போல் வசையது நீங்க அந்த

ச மாலயன் தேடவரிய மலர்த்தாள்நிலம் படிய
ஆலமரத்தடியில் அருள்மழை பொழிய அந்த

ரு சிஷ்டர்கள்புகழ்ந்தோது திருவிளையாடல் கண்ண
அஷ்டசித்தியும்பரிந் தனுக்கிரகம் பண்ண அந்த

## யட்சகன்னிகைகளுக்கு அஷ்டமாசித்தியுபதேசித்தல்.

விருத்தம்.

வாழுமிறை யோன்வரச்சா பத்திரந் தெட்ச
  மாதர்தவக் கொழுநனெப்பண் ணுருவாய்த் தானில
தாழுமவர் குகற்குழலை யூட்டி னத்தால்
  தமதுமைபோல் சென்னியில்தன் கையால் நீவிக்
கேளும்அணி மாமகிமா லகிமா வோங்கும்
  கிரிமாப்ராத் திப்ராகா மியமீ சத்வம்
சூழும்வசித் துவமிவையெட் டாகு மென்று
  சூட்டுவார் அருளபுரிந்து காட்டு வாரே.

காம்போதி, சாப்பு.

க ஏகமனதாயிருந்தறிவீருமக் கின்னமும்சொல்வோமின்னாரே மகா
யோகியர்க்காகின்ற அஷ்டமாசித்தியின உண்மையைக்கேளுமின்னாரே

உ ஆனாலும்சின்ன வுயிர்தோறும்தாம்பரமாணுருவாகி மின்னாரே சென்று
தானாயிருக்கும்சிறுமையணுமாவாத் தாமறிவீர்களமின்னாரே (ஒன்றி

௩ பொறைகொண்டாறு தத்துவத்துள்ளும் புறம்பும்விடாமல் மின்னாரே
நிறையும்மகிமை யைமகிமாவென்று நிசசயிப்பீர்கள் மின்னாரே

ச சலமில்லாமலே போலிருக்கும்யோகி தன்னையெடுத்தாலமின்னாரே மெத்த
இலகுவானது லம்போலேதோணுவ திலகிமாவா மின்னாரே

ரு சாரும்பரமாணுப் போலிருக்கும்யோகி தன்னையெடுத்தால்மின்னாரே மிக
பாரம்பேர்லொத்தது வேகிரிமாவென்று பார்த்தறிவீர்களமின்னாரே

சா விரும்பிஆழும் பிலத்தினிலேநின்று வேதனுலகில் மின்னாரே சென்று
திரும்பியும்பிலத் துக்குவருகின்ற திரமேபிராத்திமின்னாரே

எ வானமீதேறப் பரகாயத்திற்செல்ல வாஞ்சித்தபோக மின்னாரே யாவும்
தானிருக்குந்தலத் தெண்ணியவாறு தருதல்பிரகாமிய மின்னாரே

அ ஈசனைப்போல்வேழுத்தொழிலுந்தன திசைபோற்செய்துமின்னாரே எழு
வாசியுடையோன முதறகோள்பணிசெய்ய வாழவதீசத்வ மின்னாரே

கூ புட்களவிலங்கவு ணர்மனிதர்பல பூதங்களோடு மின்னாரே எட்டுத்
திக்கினருநதன் வசமாகக்கொள்கைவ சித்துவமாகு மின்னாரே

நித்தனிந்த வாறுரைத்தெகதமைவி டாமல்
  நினைத்திடும்யோ கியரிவற்றை விரும்பா ரேனும்
இத்தரையில அவரைநிழற் போல்வி டாமல்
  எப்போதும் அவர்மகிமை விரித்துக் காட்டும்
சித்தியெட்டும் தெளிகதறியும் வாறி யக்கத்
  தெரிவையருக் குபதேசம் செய்தப் போதே
முத்திபுரந் தனைநாடி யெப்போ தும்போல்
  முறைகொண்டார் மூலலிங்கத் துறைமின்றாரே,

இதுவுமது.

தேவதே வேசனுப தேசஞ் செய்த
சித்தியைமுன் னுரைத்தபடி தேவி தன்னைப்
பாவனைசெய் தம்மகிமை யாலா காசப்
பாதைசென்றம் மடவார்கள் ஆறு பேரும்
மேவரிய கயிலையிலவுக தப்போ தும்போல்
வீற்றிருந்தா ரிக்கதையை மொழிவோர் கேட்போர்
பூவுலகில் பலபலசித் திகளும் பெற்றுப்
பொருந்துவார் புகழ்பெருகத் திருந்து வாரே.

ஆக விருத்தம் க, கீர்த்தனை ௬, தரு க, ஆக கஅ. முற்றும்.

———0———

சிவமயம்

முப்பத்திநாலாவது,

## விடையிலச்சினையிட்டபடலம்.

அவதாரிகை — விருத்தம்.

அஷ்டசித் தியைஇயக்கர் அரிவையர்க் குபதேசித்த
திட்டம துரைத்தே னிப்பால் சென்னிக்கா வடக்கு வாயிற்
சட்டமாத் திறந்தடைத்துத் தம்விடைக் குறியிட் டீசன்
இஷ்டமா யாடல்செய்தற் றிசைந்ததை யினிச்சொல வேனே.

### காடுவெட்டிச் சோழன் அரசாட்சிகூறுதல்.

விருத்தம்.

சோமகுல பூஷணன்கா லையிலே முன்னாள்
தோன்றுமுகா தியிலேகாம் பாலைச் சூழும்
தேமருவும் வனமழித்தா லயமுன் போலே
திருப்பணிசெய் தானடியார்க் கடிமை யாகச்
சோமவா ராதிகோன் பிழைத்துக் காஞ்சித்
தொன்னகரில் வாழுமக்கா ரணத்தி னாலே
பூமருவுங் காடுவெட்டிச் சோழ னென்றே
போற்றுவார் யாவர்களும் சாற்று வாரே.

மணிரங்கு, சாப்பு.

பல்லவி

காடுவெட்டிய சோழன்அரசியல் கைக்கொண்டிருந்தானே

அநுபல்லவி

பாடும்வண்டொலிக்கிசைந் தாடுமயிலு லாவும்
பச்சைப்பொழில்கள்சூழுங் கச்சிநகரில்வாழும் காடு

சரணங்கள்

சித்தனடியவர்களுக்குத்தமனேயும்பத்தி நிறைந்துமகிமைசிறந்து மெத்த
மெத்தமணக்குஞ்சந்த னதிகுசுமவகை மீதிலாசையைத் துறந்து துய்ய

புத்திதெளிந்தவரத்னுபரணமூதம் பூணுவதனை மறந்து பரி
சுத்தவிபூதிருத்ராட்சத்தைமெய்க்கணியாகத்
துணிந்தவயவந்தோறும் அணிந்தறிவு பிறந்து காடு
சிவனடியார்களுக்கறுசுவையோடன்னந்தினமும்பரிந்துகொடுத்துமூன்று
புவனம்புகழும்ஏகாம்பரநாதர்திருப்பணி புதிதுபுதிதாத்தொடுத்து அருந்
தவமானதுசிவ விரதமல்லாமல்மற்றோர் தவத்தில்மயக்கம்விடுத்து எழு
பவநாசர்திருத்தாளே தனக்குத்துணையென்றவர்
பாலன்புடனேபூசா காலந்தோறுமடுத்துக் காடு (பண்ணி பர
வேதாகமந்தோறும் விளங்கும்பொருளிதென்றுவிரும்பிச்சோதனையைப்
காதனேபரதத்வ மாகுமெய்ப்பொருளாக நாடிமனதிலெண்ணிக் கேளும்
ஆதிசிவபூசையும் ஐந்தெழுத்தையும்நிய மாதியாகவே நண்ணி இரு
காதென்னும்வாயாலே ஈசன் கதையமுதைக்
கருத்துக்கினிமையென்றே திருத்தியாவுண்டிம்மண்ணில் காடு

விருத்தம்

காஞ்சியிலே சோழனிவ்வா றிருக்கும் நாளிற்
கம்பநதி யாடவரு முனிவோ ராலே
தீஞ்சுவைத்தே னும்பாலும் கலந்துண் டாற்போல்
திருவால வாய்மகிமை யறிந்தப் போதே
வாஞ்சைகொண்டப் போதுசுந்த ரேசன் தாளில்
வணங்கிடுவோ மென்றுளத்தில் அன்பு பூண்டு
தான்சயனித் தன்னினைப்பே நினைப்பாச் சாக்ரம்
தள்ளுவான் கிடந்துதுயில் கொள்ளு வானே

## சுந்தரேசர்உத்தரவால் சோழன் மதுரைக்குச்செல்லுதல்.

செம்பியனிவ் வாறுதுயி லும்போ தாங்கே
சித்தராய்க் கதம்பவன நாதர் தாம்வந்
தெம்பதிக்கு வரக்கருதும் அரசே நீவே
றிலக்கணம்பூண் டொருத்தனுத் தனித்து வெள்ளி
அம்பலத்தில் வர்தெமைநீ யிறைஞ்சு வாயுன்
அகத்திலொன்றி னுக்கும்அஞ்ச வேண்டா மென்று
தம்பதிக்கே கிளர்விழித்தவ் வாறு செய்யத்
தலைப்பட்டான் சிவனடிக்கு விலைப்பட் டானே

கல்யாணி, சாப்பு.

பல்லவி.

தான்
காஞ்சிபுரத்தைவிட்டுப் புரம்வந்தான் சோழன் கன்னிபுரத்துக்கருகினில்வந்

அநுபல்லவி.

காஞ்சிபுரம்விட்டுக் கரணமொருமைப்பட்டு
வாஞ்சையுடனிருட்டு வரக்கண்டுள்மகிழ்திட்டுக் காஞ்சி

சரணங்கள்

அரன்திருநாமமே வாளாக அய்யன் அருளேவழித்துணைக்கேளாக
வருகஅன்பெனும்பரி மாமேலிசைந் திலங்க
பெருகுஞ்சிவஞானமே பிரகாசமாய் விளங்கக் காஞ்சி
வானைத்தொடவளரும் கன்னலும் கூடத் தாறுைத்தெழுந்துயரும் செந்
நெனபூமியினிடை ஆழிசேரும் அனேக (நெலும்
மாநதிகளுந்தாண்டி வழிக்கொண்டொருத் தனைக் காஞ்சி
உணங்கும்செடிநெருங்கும் பாலையும் கல்லும் இணங்கும்மலையும் கடுஞ்
கணம்பெற்றமைச்சர்சேனை காலாளையும் விண்டு (சோலையும்
மணங்குலவும்கதம்ப வனத்தன்சொற்படி யண்டும் காஞ்சி

## வையைநதிபெருகியதுகண்டுசோழன்வருந்துதல்

விருத்தம்

சோழனிந்த வாறுவையை நதிவ டக்குத்
துறைக்குவரும் போதுகொதித் தெழுந்து பொங்கிக்
கேழிலகுந் தருக்களனே கம்வே ரோடே
கீண்டெடுத்துப் பெருகிவெள்ளம் வரப்பார்த் தேங்கிச்
சூழவரு முடிவொருக்கா லத்து மில்லாச்
சோமசுந்த ரேசர்திரு வடியிற் சென்று
தாழுவதற் கிடையூறி தாச்செனை றெண்ணித்
தயங்கினை மிகவருந்தி மயங்கி னுனே.

புன்னுகவராளி, சாப்பு.

க மாதவரேபெறற்க லத்திலறுசுவை வைத்துண் ணும்போ திரு தண்ணீர் வர
ஓதிவிலக்குவர் போலிந்நதித்தண்ணீர் உற்றுத்தடுத்ததென் றெண்ணி
உ ஓடியபாம்பைத்தடைக்கடடினுற்போல் ஒடுங்கிக்குறுகுறுத்திருநதா னிம
நாடிவந்தித்தைவி லக்குவதாரென்று நைந்துமனம்வெறுத்திருநதான் (கு
ங பாண்டியனல்லாமல் வையையுங்கூடப் பகையாப்பெருகின தாலே விடிந்
தாண்டவனைத்தொழ லாகுமென்றுளதற் கட்டிவருகுதென் மேலே
ச கோலையிழந்தகு ருடனைப்போற்றனிக் கொண்டபரதவித்தானே இது
ஆலத்தையுணடவன் சோதனைதானென்றெவன் றய்யனைக்கைகுவித்தானே
ரு என்னுக்குளெண்ணெய்போல் எங்குநிறைஜக தீசன்திருவுளத்தறிந்தான்
வெள்ளத்தைநோக்கிநடுங்கியபத்தன்மெலிவையகற்றிடவினைந்தான் (வையை
சா கனறுக்கிரங்கி வரும்பசுப்போல்முன் கனவினில்வந்ததுபோலே வெள்ளி
மன்றுள்நடிக்கும் ஜகதீசனசித்த வடிவத்தைப்பூண்டாரிப் பாலே
எ உள்ளக்கருத்திலைவள்ளலறியுமென் னுண்மைவெளிப்படவாய்த்தார் வந்து
பள்ளத்தைநோக்கிவரும்வையைவற்றும் படிக்கருட்கண்ணுலேபார்த்தார
தம்மைமறைந்துருகும்சோழன்பக்கத்தில்சாமிமுன்போலவந்துதித்தார் கண்டு
செம்மக்குருடனுக் குத்தெய்வம்கண்தந்த செய்கைபோலேமனம் களித்தான
கூ வற்றியவையைக் கரையிருக்கும்சோழ மன்னவனைக்கூட்டிக் கொண்டான
உத்தரவாசல் திறந்துநகரத்துக் குள்ளேயிருவரும் சென்றார் (கொண

## காடுவெட்டிச்சோழன்துதி.

விருத்தம்.

வருத்தமுறும் சோழனையிவ் வகையாக் கூட்டி
வந்துபொற்று மனைதன்னி ராடச் செய்து
பருத்தொளிரும் சொர்ணவிமா னத்துள் வாழும்
பராபரனு மியதமையும் பணிவித் திப்பாற்
சரத்தொடக ரத்தையுமீன் றனைத்துங் காக்கும்
சபராக்ஷி யையுந்தொழச்செய் திடவும் நோக்கித்
திருத்தமுடன் சித்தரைத்தாழ்ந்தெழுந்து சிந்தை
தேறுவான் மகிழ்ந்துதுதி கூறு வானே.

எதுகுலகாம்போதி, ஆதி.

பல்லவி.

சாமிசோம சுந்தரப்ரபோ கூடல்வாழும் சாமிசோம சுந்தரப்ரபோ

சாமியடியேன் நேமகப்படியே முடித்திட்டபர்ந்
தாமனேசெய்யும் வாமனே சரணம்

சரணங்கள்

க நீளுமறையெங் நாளுங்கண்டறியா அங்கயற்கண்
ணளிணங்கும ணளனே சரணம்
உ சாத்திரமறை வாய்த்திடுமுனிவோர் தங்களுக்குவே
தார்த்தமொழிந்த மூர்த்தியே சரணம்
ங பாவஉடலம் ஓய்வில்லாதெடுத்தேன இனிமேலப்படி
மேவிடாதருள் தாவய்யா சரணம்
ச மண்ணிலிருந்து விண்ணளவுயரும் இவ்விமானத்துள்
நண்ணிவருமுக் கண்ணனே சரணம்
ரு உன்தனடியில் வந்துதாழ்ந்ததால் இவ்வுடலொன்றே
சொந்தமாமெனக் கெந்தையே சரணம்

## விடைக்குறிவைத்திருத்தல்கண்டுபாண்டியன்சந்தேகித்தல்.

இந்தவிதம் துதித்துப்பல் வரங்கள் வேண்டும்
இராசனைப்பார்த் தெமைத்தெரிசித் திடநீ யிங்கு
வந்தவகை பாண்டியன்கண் டாற்பொல் லாங்கு
வருநுமென்றக் கணம்வந்த வழிக்கொண் டேகிச்
சுந்தரஞ்சேர் சித்தர்வவயை வடபால் மட்டும்
துணையாவந் தவனுதலிற் திருநீ றிட்டுச்
சிந்தைமகிழ்ந் தனதிருக்கை யடைவா யென்று
செப்பிடத்தேர்ந் தவனுமதற் கொப்பி னனே.

ரீதிகவுளை, சாப்பு.

௧ சித்தர்வளவனைச் செல்லென்றவன்மனம் தேற்றினார் மீண்
டேத்தரவாசற் கதவைமுன்போலவே சாத்தினார்
௨ சாத்தியபின்விடை முத்திரைவைத்துடன் நடந்தார் ஒளி
வாய்த்தபொன்மேருவி லோங்கும்விமானத்துள் அடைந்தார்
௩ கங்குலின்கையைக் குறைப்பானெனும் வலியாலே பல
செங்கரம்நீட்டித் தினகரன்தோன்றஇப் பாலே
௪ ஈசன்விடைக்குறி வைத்திருக்கின்றதைக் கண்டார் கண்டு
வாசற்றிறப்போரி தேதென்றுசந்தேகங் கொண்டார்
௫ பின்னுள்ளவாசல்கள் மூன்றிலும்போய்க்குறி நாடினார் நாடி
முன்னுள்ளவாதிருக் கக்கண்டரசன்முன் ஓடினார்
௬ வேந்தேவடவாசல் மீனக்குறியாமோ மாற்றினார் மாற்றி
வாய்ந்தவிடைக்குறி வைத்தனர்என்றதைச் சாற்றினார்
௭ அக்கணம்மன்னனும் வந்தவ்விடைக்குறி நோக்கினான் துணிந்
திக்குறிவைப்போர் எவரென்றுளத்தையந் தாக்கினான்

## சுவாமி விடைக்குறிமாற்றியவிபரம் பாண்டியற்குத்தெரிவித்தல்.

விருத்தம்.

இந்தவிதம் அரசனுள முழந்தையங் கொண்
டெழுந்தரண்மனைக்குள்வந்து விசாரிக் குங்கால்
வந்ததுபோ னதுவொன்றும் வெளியா காமல்
மனமருண்டே பூணுமலர்ப் பாயும் நீங்கி
அந்தரணி மேற்சயனித் திருக்கும் போதே
ஆலவாய்க் கடவுள்அவன் கனவிற் றுமே
வந்துசித்த ரூபமுடன் இருந்தை யத்தை
மாற்றுவார் உண்மைசொல்லித் தேற்று வாரே.

மாஞ்சி, ஆதி

பல்லவி.

சோழனுக்காகநாம்செய்த சூழ்ச்சியறிவாய்மன்னா சோழ

அநுபல்லவி

வாழுங்குலபூஷணனே மாமதுரபாஷணனே சோழ

சரணங்கள்

௧ ஆத்திமலர்த்தொடையானை அன்பகத்திலுடையான்
அடியவர்க்கநுதினமும் அளித்துவருங்கொடையான் சோழ
௨ கச்சியிலமுன்னாலே காடழித்தெம்பாலே
பட்சமாத்தொழுதெக்காலும்பத்திபூண்டானதனாலே சோழ
௩ எந்தமடிநினைத்து இரவில்வந்தான்தனித்து
இந்தவடவாசல்திறந் தெமைத்தரிசனஞ்செய்வித்து சோழ
௪ மீளவுமேவிடுத்தோம்தாளைமுன்போல்தொடுத்தோம்
காளைமுத்திரைவைத்திட்ட காரணஞ்சொல்லஅடுத்தோம் சோழ

விருத்தம்

சாமிசித்த ராகியிவ்வா றகத்தி லுள்ள
சந்தேகம் தனைத்தெளிவித் தகன்ற பினனே
மாமனத்தி லேயமகன் றெழுந்த ருண்டு
வணங்கியெழுந் துடன்குலபூ ஷணனுந் தென்னன்
கோமனைவிட் டகன்றெளியோர் தமக்கா ளீசன்
கொண்டுசெய்த திருவிளையா டலையா வர்க்கும்
வாய்மலர்ந்து வெளிப்படுத்தித் தெளிவித் துள்ளம்
மகிழ்ந்திட்டான் உரைத்துரைத்துப் புகழ்ந்திட் டானே.

இதுவுமது

சித்தமகிழ்ந் துடன்குலபூ ஷணன்தா னேந்தும்
செங்கோலு மணிமுடியுங் கொடையு மீன்ற
புத்திரனு மிராஜேந்திரன் தனக்கீந் தீசன
பொன்னடியிற் பணிந்துவிணை யோடேகி வாழ்ந்தான்
மெய்த்தவத்தோ ரேயிதனைப் படிப்போர் கேட்போர்
விளங்கும்வனத் தாலுண்டாம் பயம கன்று
நித்தியமங் களகரமா யுபாதி யற்றே
நீடிப்பின் சிவனடியை நாடு வாரே.

ஆக விருத்தம் ௰, கீர்த்தனை ௪, தரு ௨, ஆக ௧௬. முற்றும்.

உ

சிவமயம்.

முப்பத்தைந்தாவது,

## தண்ணீர்ப்பந்தல்வைத்தபடலம்.

அவதாரிகை — விருத்தம்.

சுந்தரன் றனியேவந்து சோழனை விடுத்தவ் வாயில்
வந்துதா னிறுக்கிமுத்திரை மாற்றிய துரைத்தே னிப்பால்
சந்ததம் போற்றுந் தென்னன் தன்படைக் காகத் தண்ணீர்ப்
பந்தல்வைத் தருளிக் காத்த பான்மையை யினிச்சொல் வேனே.

### காடுவெட்டிச்சோழன்செய்தவஞ்சனையைக்கூறுதல்

பைரவி, ஆதி.

பல்லவி

காடெறிந்த சோழனுசெய்த காரணங்கேளுமுனிவோரே

அநுபல்லவி

நாடுங்குலபூஷண பாண்டியராசகுமாரன்
ராஜேந்திரபாண்டிய ராஜனெனுங்கம்பீரன்

நீடும்புகழுடையோன் சுந்தரமூர்த்திதாளில்
நிதமும்வணங்கியர சியலைநடத்துநாளில் காடே

சரணங்கள்

க வரவரவெளிப்படை யாய்த் தானே கதம்ப
வனத்திலவருகமெள்ளத் தொடுத் தானே இப்பால்
உருசைகணடபூனை உறியைஉறியைத் தாவும்
உவமைபோலடிக்கடி அடுத் தானே ஈசன்
சரணம்பணிந்துவரும் போதுபாண்டிய னுக்குத்
தரும்வரிசையனுப்பிக் கொடுத் தானே அந்த
வரிசைகளுங்கைக்கொண்டவ்வழுதிதனக்கனுப்பும்
வரிசையும்பெற்றுத்தூது வரப்போகவிடுத் தானே காடே

உ பின்னுஞ்சோழன்சயந்தத் தென்னனுக் குத் தனது
பெண்ணைக்கொடுக்கத்தூது புரிந் தானே தான
சொன்னபடிக்கவனும் சம்மதிக்கின்று னென்று
தூதுவர்வந்துசொல்லத் தெரிந் தானே பாண்டி
மன்னவனுக்கிளைய ராஜகேசரி யந்த
வகைகண்டாலவாய்விட்டுப் பிரிந் தானே அண்ணன்
தன்னையறியாமலே தானந்தப்பெண்ணைக்கொள்ளச்
சதுரங்கத்துடனகாஞ்சிப் பதிவரப்பரிந் தானே காடே

ங நாற்றிசையும்படையோ டடுக்கும்ராச சிங்கனை
நாடியெதிர்சென்றழைத் திட் டானே உடன்
வாய்த்தஅரண்மனைக்குள் ளேயாசனத் திருத்தி
வரிசைசெய்துபசரித் திட் டானே பண்டு
மூத்தவனுக்கிசைத்த பெண்ணைப்பின் னவனுக்கு
முயன்றுமணம்நடப்பித் திட் டானே தனக்
கேற்றமருகனுக்கவ் வரசுரிமை யளித்து
ராசேந்திரனைப்பிடிக்கத் தான்சம்மதித்திட்டானே காடே

சோழன் போர்க்குவந்தது கண்டு பாண்டியன் சுவாமிமுன்

சென்றுமுறையிடுதல்.

விருத்தம்.

மருமகனு மிராசசிங்க னுடனிவ்வாறு
வனமெறிந்த சோழனிசைந் தமரை நாடி
முரசறையத் திரண்டுகரி பரிதேர் காலாள்
மொய்த்திடவே யெழுந்துமது ராபு ரத்தின்
அருகினிலே ரிரண்டுயோ சனைக்கிப் பால்வந்
தடைந்திடும்போ தொர்ந்தரிஞல் அறிந்து தென்னன்
திருவால வாயையன் கோயி லுக்குள்
செல்லுவரன் பணிந்துமுறை சொல்லு வானே.

ஆனந்தபைரவி, ஆதி.

பல்லவி

சாமிகாடெ றிந்தசோழன் றானேயிந்த மாநகர்மேற்
சண்டைக்காரம் பஞ்செய் தானே

அநுபல்லவி

சாமிசோம சுந்தரரவுன் தன்னடிய னுமென் மேலே
மாமழைக்கொ தூங்கவந்து மனைக்குவழக் காடல்போலே சாமி

சரணங்கள்.

முன்னேறிசி வேலையில்வந் துன்னடியைச் சார்ந்தானே தன்னகர் சேர்ந்
பின்னுமுன் திருவடியைப் பேணியடிக் கடிவகது (தானே
அந்நிலையெ னக்குசித மானவஸ்துக் களும்தந்து சாமி

உறவுபோலவேயிருந்து குளவிபோலேகொட்டினுனேஉண்மைபோற்பகட்
உறையிலடங் குங்கத்திபோல உள்ளத்தில்வஞ்சகம்வைத்து [டினுனே
முறைபிசகிக் கடைசியில் மோசத்தொழி லிநினைத்து சாமி

அளாந்தறத்துக் குள்ளுமாகப் பாவத்துக்குப் புறம்பாயே அன்றுநின்றநீயே
களவனுக்குட் கைகொடுத்த காரணம்போற்செய்தாய் மூந்த
உளவனிலலா மலெங்காவ தூரழிவதுண்டோ யென்தன் சாமி

விருத்தம்.

ராசபுரந் தரனிவ்வா றுரைக்கக் கூடல்
நாதனரு ளாலுனது சேனை யோடே
பூசலிட வருமவரோ டெதிர்த்து நின்று
போர்புரிவாய் வெற்றியுன்பா லுண்டா மென்னும்
வாசகமொன் றாசேகே ளென்று காச
வாணியுரைத் திடச்செவிக்கொண டன்பு பூண்டு
தேசுலவும் தனதிருக்கை யடைந்தா னந்தம்
தேக்கினுன் விடியுங்கால் நோக்கி னுனே

சோழனுக்கும்பாண்டியனுக்கும்உயுத்தம்.

இதுவுமது

கங்குலிந்த வாறகலும் போதா சாசம்
கண்விழிக்கு முனைக விழுந் தெழுந்து
புங்கமுடன் நித்யகன்மம் செய்து ராச
புரந்தரபா ண்டியனவிமா னத்துள் வாழும்
கங்கைவே ணியற்பூசை செய்தெ ழுந்து
கடுகிவரும் சேனையுடனா சோழ ராசன்
அங்கமுடன் பொரநிற்கும் அமர்க்க ளஞ்சென்
றடுத்திட்டான் சண்டைசெய்யத் தொடுத்திட் டானே.

சௌராஷ்டிரம், ஆதி.

பல்லவி.

சோழராசனும் பாண்டியராசனும் தொடுத்தா ரேசண்டை

அநுபல்லவி. (காலே

சோழராசன்படை மேலூரத்தாலே துலங்கும்பாண்டியன்சேனை கலந்தொருக்
குழுமலைபரவும் ஆழியின்மேலே தொடர்ந்தவந்தொருநதி அடர்ந்ததுபோலே

சரணங்கள்

பேரிதடாரிமல் லாரிகள் இருவரும் அடிக்க செயமிகுந்த
வீரியம்பேசியே பட்டுக்கள் கட்டியம் படிக்க விண்ணிலிருந்து
பாரிலிறங்கிடும் விழுதுகள்போற்கொடி பிடிக்க மனந்துணிந்து
போரிடுவோர்புய மீதினிலே தும்பை முடிக்க நீருண்டகாள
மேகத்தைப்போலேயொலித் தேகத்திலார்ப்பரித்திடுவார் தீயினுமுக்ர
மாக்கடுத்திடிபோல் வீரத்துடனே சிரித்திடுவார் அமரிற்றங்கள்
தேகத்தினுக்குமான மேயணியாகத் தரித்திடுவார் சினங்கொண்டதி
வேகத்துடனுதட்டில்மேற்பல்லழுத்திப் பொருத்திடுவார் இருதிறத்தோர்
தங்கள்படைநெருங்கி வந்தொன்றுக்கொன்றுகைக லந்தார் பொல்லாதிராச
சிங்கனதட்டக்கண்டு தென்னன்படைகொஞ்சம் பயந்தார் பயந்ததுகண்
டங்கையறைந்துகைத் தடுத்துச்செனனிபடைமி குந்தா ரப்போதுதென்னன்
கங்கைவேணியைத்திரி கரணமும்பொருந்தநி னைந்தான் நினைக்குமுன்னே
கன்னிநாடன்படைதான்கொஞ்சமாகக்கருதுஞ்சோழன்படைதனக்குமுன்பாக
பன்னகாபரணன்அருளில்நன்றாகப் பார்க்கும்போதொன்றுனந்த மாயெதிராக

சோழ

உ பேரியொலியுமத மழையைச்சொரியும்கெசத்தொலியும் மலைபோல்வரு
தேரினொலியும்பரி சேர்ந்துகனைத்துவரு மொலியும் மறவர்தங்கள்
போரினொலியுந்தோளிற்புடைத்துவரும்வீரர்களொலியும் இவைகளுடன்
ஓரொலியாகவே விளங்கிடும்வாரிதி யொலியும் அடங்கிநிறகச்
சிலையெடுப்பவருடன் சிலையெடுப்பவர்திரண்டெதிர்த்தார் மல்லயுத்தத்தில
மலைபயில்பவருடன் மலைபயில்பவர்கள்வந் துதித்தார்சஸ்த்ரமெடுக்கும்
கலைதெரிந்தவருடன் கலைதெரிந்தவர்வந்து குதித்தார் வேலையெறிந்து
கொலைபுரிபவருடன் கொலைபுரிபவர்மிகக் கொதித்தார் மும்மதம்சிந்தும்
கரிநடத்துவருடன் கரிநடத்துவருமே கூட கதுப்பயினற
பரிநடத்துவருடன் பரிநடத்துவர்சென்று சாட தேர்களாகிய
கிரிநடத்துவருடன கிரிநடத்துவரெதி ராட மிகச்சொலிக்கும்
எரியின்மேல்வரும்வாயுவெனக்கைகலந்துபோராடப் பாசத்துடனே
கூற்றெழுந்துமேல் வருகினும்சென்று கூடியொருகைபார்ப் போமெனநின்று
ஆற்றலுடையகாலாள்கள்திரண்டு ஆலமும்வடவையும்போலொன்றுக்கொன்று

சோழ

ந தென்னன்படைவிடுக்கும் வாளிக்கெதிரேதப்பித் துய்வார் உய்தவர்தின்
பின்னும்விடுக்கும்அம்பும் விலலும்அறுக்கவேறம் பெய்வார் எய்கையிலுரம்
தன்னினுமைழயுமம்பைப்பிடுங்கிக்கொண்டுகர்ஜனை செய்வார் அந்தவாளிகொண
டொன்னலர்தலைகளை யரைக்கீரைபோலவே கொய்வார் சோழன்படைமேல
சோனைமழைபோல்வாளி தொடுத்துச்சொரிந்துநின்று தள்ள அவர்விடுக்கும்
ஆனவம்புக்கெதிரே தப்பித்தொதுங்கிநின்று கொள்ள நெருப்புக்கக்கும்

கூளலம்பைத்தனுவிற் கூட்டியடுத்தெரிந்து விள்ள இப்புடிமநறன்
சேனைத்தலைவர்சென்னி சேனையைத்தவிடெனத் தெள்ள ரணகளத்தில்
தாளறுந்தவர்தலை தகர்ந்துமுண்டமாயுருள் வாரும் இரிகிதர்த்த
தோளறுந்தூரமெங்கும் துளைபட்டுயிரகலு வோரும் துதிக்கையற்று
·மாளுங்கரியில்வரும் சோரியோரரறுகவே சேரும் அதனைக்கண்டு
கூளிகழுகலகை கூடிக்கொண்டிரைக்காக நேரும் இரதவகையா [ரிட்டு
இடைவிடாமறசேனைகள்தலைப்பட்டு இணைகதொருவர்க்கொருவர்சினந்தெதி
அடல்புரிந்துருரி யோதயங்தொட்டு ஆக்கைநிழலடிக்குள் அடங்குமம்மட்டும்
சோழ

## வேனிலின்வெப்பத்தால்சேனைகள்வருந்தியதுகூறல்·

விருத்தம்.

தென்னவன் சோழனோடே செருக்களத் தமர்செய் யுங்கால்
தன்னடித்தான்மிதிக்கும் ததியெலங் கெங்கும்வெப்பம்
துன்னவே முதிர்வே னிற்கால் சூழநீர் விரும்பிச் சேனை
சின்னபின் னங்களாகத் தெறிபட்டார் முறிபட் டாரே.

தோடி, ஆதி.

பல்லவி.

சுற்றிக்கொண்டது கிரீஷ்ம காலத்துவெய்யில் பற்றிக்கொண்டதெங்குமே

அநுபல்லவி

சுற்றிக்கொண்டலெங்கும் தோய்ந்துகொள்ளவேயீசன்
நெற்றிக்கண்ணிலுண்டாகும் நெருப்புக்கிணையா வீச சுற்றி

சரணங்கள்

௧ எந்தநதியும்நீர் மாறவே வானும் இந்தவுலகுஞ்சு டேறவே மிகும்
அந்தரத்தோரும்வெப்ப மீறவே உயர் மந்தாகினியும்காய்ந்து வீறவே
ஞாலமழன்றுபிளக்க பிலத்துடனே கோலுமலைகள்பிளக்க செழித்தமலர்ச்
சோலைமரங்கள்பிளக்க இதல்லாமலும் மேலும்விண்டலம்பிளக்க உக்கிரங்கொ
பானுவெங்கதிர்மிகவூடவே தாக மானதெவர்க்கும்வந்துநீடவே பசர் (காண்டு
கானலைநீரென்றெண்ணியோடவே சுடும் வேனிலின்சூடுடனேகூடவே
தீயரைச்சேர்நல்லோரும் தீயவரானவர்போலே
தூயநிலவுங்காற்றும் சுடும்படிக் கொருக்காலே சுற்றி

௨ குஞ்சரத்தின்மதங்கள்நீங்கவே செருக் குஞ்சினமுமகலவாங்கவே அமர்
அஞ்சிறகுடுங்கிமன மேங்கவே தலை துஞ்சிரடக்கும்நடை தூங்கவே
காற்றினுமிகுந்தோட்டம் புரிந்துகதி வாய்த்தகுதிரைக்கூட்டம்நாக்குவறண்டு
ஏற்றநடையினீட்டம் சிறுதென்றல் போற்றளர்வொடுவாட்டம் பெற்றுநடக்க
காய்ந்தவலகைத்தேரி லாரவே சூறை தோய்ந்தகாலெனும்பாக னூரவே வேனி
வேர்தனெழுந்தெழுந்து சேரவே கன லார்ந்தகணைதொடுக்கச் சோரவே (ல்
ஆனவிருமன்னரும் அமரைவிட்டுத்துறக்கத்
தானைகலந்துதண்ணீர் தண்ணீரென்று பறக்கச் சுற்றி

௩ இரக்கமேயின்றிவாழுவார் இடத் திரக்கவேசென்று சூழுவார் என
வ்ருத்தங்கொண்டுழன்றுவீழுவார் கள்ளி மரத்தடிபுகுந்துதாழுவார் (லவேளரி
தம்மினுமெலிந்திருப்பார் பக்கத்திற்சென்று செம்மையடையநினைப்பார் போ
லெம்மையாலெரிமுதற்போய் உக்கியிருக்கும் பொய்மரத் தருகுறப்போய்.
ஒன்றுவரல்லார் — கரியின்நிழலுறத்தொ டங்குவார் தேர் பரியின்நிழலிலேமை
டங்குவார் குடை — விரியும்நிழலுக்குள்மு டங்குவார் வட்டப் பரிசைநிழலுக்
குள்ளடங்குவார் — செல்லிடம்வேறில்லாமல் செருக்களத்திலேநட்ட
கல்லுமுதலாநிழற் கருதிபோடவு முட்டச் சுற்றி

## சுந்தரேசர்பாண்டியன்சேனைக்கருகுதண்ணீர்ப்பந்தல்வைத்தல்.

ஓதரிய வேனிலிவ்வா றழற்றும் காலை
உயிரனைத்தும் ஈன்றளிக்கும் தாய்மீ னாட்சி
நாதனெவர்க் குஞ்சமனாய் நின்றோன் தன்னை
நம்பியதென் னன்படையைக் காக்க வேண்டி
வேதமது நாற்காலா அங்க மாறும்
விட்டசட்ட மாப்பீடம் எழுத்தைந் தாமேற்
சீதளவெண் மதிவிரித்து நடுவே வந்து
திக்கின்றான் நீர்ப்பந்தல் வைக்கின் றானே

கல்யாணி, சாப்பு.

பல்லவி

பாண்டியராசன் படைக்கருகே நாடினாரே தண்ணீர்ப்
பந்தலைவத்தருள் செய்துவிளையாடி னாரே

அநுபல்லவி

நீண்டவனும்அய னும்தேடிக்காணாத நித்தம்வளர்சிவன் முத்திபுரநாதர் பாண்

சரணங்கள்

௧ புண்டரம்தங்கிய நெற்றியும்குண்டலம் பூண்டசெவியின் மலரும்தரித்தடி
முண்டகமேலொற்றைக் கிண்கிணிநாத முழங்கப்புலித்தோ லுடையும்விளங்க
பாண்டி (ள்ளம்

௨ பார்த்தவர்கண் ணுமனமும் திருப்பப் படாமதுட் கொள்ளும்சிறுநகையுமு
வாய்த்தகருணைப் பெருக்கமுந்தோன்ற மறைக்குள்மறைநதோர் அருந்தவராக
பாண்டி (ண்டேயொருவருக

௩ கொன்றைச்சடைக்கங்கை நீராலேபூரித்த கும்பத்தைச்செங்கையிற்கொ
கொன்றாய்ப்பலர்க்குப் பலவாய்த்தமர்கொண் டொழுகவிட்டுத்தண்ணீர்த்தா
பாண்டி கம்தவிர்த்திடப்

## சோழன்சேனைதோற்றோடுதல்.

விருத்தம்

பன்னகா பரணனங்கே வைத்த தண்ணீர்ப்
பந்துலுக்குள் வந்தடைந்து வாசந் தோய்ந்த

கன்னிருண் டிளைப்பகன்று வலிமை பெற்று
ராசேந்திர பாண்டியன்றன் படைகொர்ச் சித்துப்
பொன்னிநா டன்படைமே லேறிச் சீறிப்
போர்முன்போற் செயதிடவா ரிதியு டைந்த
தென்னவே வருந்திநின்ற படைக ளோட்டம்
எடுக்கின்றார் தமைத்தொடர்ந்து முடுக்கின்றாரே.

மோகனம், சாப்பு. (தார்

க தென்னன்படைமுதிர்ந் தடித்தார் சென்னி சேனைமுறிந்தோட்டம் பிடித்
பின்னேதொடர்ந்துபற் கடித்தார் பல பேரைக்கைகால்முத லொடித்தார்
உ செப்பியசோழனைத் தகைந்தார் ராஜ சிங்கனையுங்கூட வளைந்தார்
கைப்பிடியாப்பிடித் துவந்தார் பாண்டி காவலனைமுன்புகொண் டுவந்தார்
௩ பாண்டியன்சோழனைக் கண்டான் மோசம் பண்ணும்தம்பியுடனே நின்றான்
மீண்டிருவோருடன் சென்றன சங்கை வேணியனைமுனபுரைக் கின்றான்
௪ உந்தன்கருத்தினுக் கேற்கச் செய்வ தோதவேணுமென்று கேட்க
சிந்தைக்கொத்தபடி யாக்கச் சிட்சை செய்யெனறனைவர்க்கும் தாக்க
௫ ஆகாயத்திற்சொனன தறிநது மகிழ்நதய்யன்றிருவடி பணிந்து
வாகாஅரண்மனை புகுந்தான் ஜய மஙகளம்பாடவே உவந்தான்

விருத்தம்.

சோழனை இவ் வாறுவென்ற வனைய ழைத்துத்
துய்யபரி யானைமுதல் அளித்துன் னூரில்
வாழெனவிட் டிராசசிங் கனைய ழைத்து
வரும்பொருளிற் சிலதிநது வேறு வைத்துக்
கேழிலகும் இராசேந்திரன் வீற்றி ருந்தான்
கேட்பரிதோ துவர்பசிதா கத்தி னாலே
சூழுதலற் றிசைவிசய முதலாப் பூண்டு
தொல்வினையற் றானுலகிற் றுலங்கு வாரே.

ஆக விருத்தம், அ, கீர்த்தனை ௫, தரு ச, ஆக கச முற்றும்.

———0———

சிவமயம்

முப்பத்தாறாவது,

## இரசவாதஞ்செய்தபடலம்.

அவதாரிகை —விருத்தம்.

அத்தன்பாண் டியர்கோன்சேனை யதனிடைத் தண்ணீர்ப் பந்தல்
வைத்தவன் றன்னைக் காத்த மகிமைய யுரைத்தே னிப்பாற்
பத்திபூண் டாடும்நாட்டியப் பாவையா ளொருத்தி தன்பாற்
சித்தம்வைத் திரதவாதம் செய்தவா றினிச்சொல் வேனே.

## பொன்னனையாளென்னும் ருத்ரகன்னிகையின் தன்மைகூறல்.

விருத்தம்

கன்னிலத்தை யிராசேந்திரன் ஆளுங்காலக்
நாட்டிலவையை மருங்கிற்பூ வணமென ரூதும்
அங்ககரி லுற்றசரா சரமி லிங்கம்
ஆகநினைத் துடுக்களுங்கோள களும்வி லங்க
மன்னிவளர் கடவுளைச்சூ ரியனிந்திராதி
வானவர்பூ சித்துவர மடைந்தா ரநத
முன்னவன்கோ யிற்கடிமை பூண்டொ ருத்தி
முறைகொண்டாள உளத்திலன்பு நிறைகின் றாளே

ஆனந்தபைரவி, ஆதி

பல்லவி

கன்னியொருத்தியவள தன்னொழுக்கமுமுள்ளக் கருத்தையுஞ்சொலக்கேளும்

பொன்னனை யாளென்றுபேர் பூண்டத்தலத்திலீசன்
சன்னிதி யிலெப்போதும் தனியெடுக் கின்ற ருத்ர கன்னி

சரணங்கள்

க வண்டிசையுங்குழலாள் அண்டருக்குமன் பாலே
மயக்குறவாதரிப்பாள் கடலமுதினைப் போலே
கண்டுமொழியாள்வீணை கொண்டிசைந்தொருக் காலே
கானம்பண்ணுவாளின்னம் கேளும்மென மேலே ருத்ரகன்னி

உ பரதநூலிற்சொல்லும் படிக்கிசைந் தாடுவாள்
பைந்தொடியார்குலமும் பெருமையுஞ் சூடுவாள்
அருமையரம்பையரில் மிகுத்தெழில் கூடுவாள்
அல்லாமலொழுக்கத்தால் அவருக்கும் நீடுவாள் ருத்ரகன்னி

ந மன்னிவரும்நாள்தோறும் விடியுமுன் எழுகுவாள்
மாதேவனை நினைத்து நன்னீரில் முழுகுவாள்
அன்னபூரணிக்கன்பன் அடியிணை தொழுகுவாள்
ஆதரவுடன்விரதமா யொழுகுவாள் ருத்ரகன்னி

ச ஆண்டவனுக்குமுன்னே நாட்டியம் பொருந்துவாள்
அடியாரேபொருளாக அர்ச்சித்து வருந்துவாள்
வேண்டுமறுசுவையூண் அருத்தியே திருந்துவாள்
மிஞ்சியதைநிய மம்கொண் டருந்துவாள் ருத்ரகன்னி

## சுந்தரேசர்பூவண நகரில்சித்தராகவருதல்.

விருத்தம்.

ஏமையன்பை யுலகறியப் பூவ ணேசன்
இரணியத்தால் தமதுருச்செய் யென்று வட்குத்

நீர்மருள்த் தெரிந்தவகை க்ருவாற் செய்து
  தனக்குமாள் தோறும்வரும் பொருளை யீந்தும்
சேமமுடை யடியார்க்கல லால்மிஞ் சாதால்
  நினைத்துமுனனம் பொற்கிழிதென் னனுக்கீந் தி
மாமதுரே சனைவேண்ட அவ்வா றேபூ
  வணகரிற் சித்தராய் வருகினா ருரே.

மத்தியமாவதி, ஆதி

பல்லவி.

சுந்தரர்வந்தனரே சாமிசோம சுந்தரர்வந்தனரே

அநுபல்லவி.

கந்தமிகும்பூவணம் வாழுமேமை பரிந்து
சிந்தையிலநினைந்தவ ரந்தருக வெழுந்து (சுந்தரர்)

சரணங்கள்

க துய்யபூதியணிந் தெழில்பரவிய மெய்யும்
  கையில்விபூதிப்பையும் காட்டிக்கொண்டருள்செய்யும் (சுந்தரர்)
உ கட்டுவாங்கமலர்க் கையிற்தரித்து யோகப்
  பட்டமிடையிற்றங்கப் பரிந்தேமையாள முன்பாக (சுந்தரர்)
௩ உடையுங்கோவணமும் ஒழுங்காயசைந் திலங்கப்
  படிகமாலையும்பூண்டு பதுமமுகந் துலங்கச (சுந்தரர்)

பொன்னனையாள்சித்தருக்குத் தன்மனக்குறையைக்கூறுதல்

விருத்தம்

சுந்தரரிவ் வாறுபூ வணத்தில் நோன்பு
  தொடுத்திருக்கும் பொன்னனையாள் மனையை நாடி
வந்தளவில் லாமலங்கே யமுத ருந்த
  வருமடியா ரோடொருவ ராகக்கூடிச்
சிந்தையில்வே றெண்ணமடைந் தக்கூட் டத்தில்
  சேர்ந்திருந்து துய்யவமு
புந்திமகிழ்ந் திள்நகைமேற் கொண்டே யன்பு
  பொருந்திட்டார் தனித்தொருபா லிருந்திட்டாரே.

வசந்தபைரவி

சுந்தரரிவ் வாறுவர்தொ ருபால் இருந்தார் அங்கே
வந்தமுத ருந்தினரெல் லோரும் நடந்தார்
சித்தரைய டிச்சியர்கண் டுதொழு கின்றார் அமுது
பெற்றிடவெ ழுந்தருளும் அய்யனே யென்றார்
உங்களெச மானியெங்கே யென்று தொடுத்தார் அவளை
இங்கழையு மென்றருளிச் செய்து விடுத்தார்
அக்கணஞ்சே டியரேமை யாளிடஞ் சென்றார் ஒரு
தக்கவர்வந் திருக்கின்றார் என்று புகன்றார்

ரு 'அந்தமொழியேமையறிந் தக்கணம் வந்தாள் பவ
பந்தமகற் றிடும்சித்தர் பாதம் பணிந்தாள்
சு சித்தனடி யாரென்றெண்ணியுள்ளங் களித்தாள் உவமை
அற்றவருக் கர்க்கியபாத்தியா சன மளித்தாள்
எ எத்தவஞ்செய் தேனிங்குற வென்று நோக்கினாள் மொழிந்து
சித்தர்மேனி யும்அழகும் சேர நோக்கினாள்
அ புன்னகைய ரும்பநின்றஞ் சலிசெய் திட்டாள் சித்தர்
தன்னகம கிழ்ந்தருளும் கண்வலைப் பட்டாள்
கூ அய்யாவுள்ளே வரலாமென் றன்பு பொழிந்தாள் அடியேன்
உய்யவுமக் கேற்கச்செய்வே னென்று பரிந்தாள்
ய ஏமையிந்த வாறுபச ரிக்கத் தெரிந்தார் சித்த
சாமியவள் மேலேயருள் நோக்கம் புரிந்தார்
கக உன்னிடையைப் போலுன்பேர ழகினில் நல்லாய் கொஞ்சம்
என்னகார ணத்தினால்இ ளைத்தது சொல்லாய்
கஉ கூறெனச்சித் தவுருவம் கொண்ட மெய்யனே கேளும்
வேறொருகுறை யுமெனக் கில்லை அய்யனே
கங எங்களையன் திருவுருத் தங்கத்தினாலே செய்யத்
தங்குமாசை யாற்கருவு ருச்செய் தேன்மேலே
கச என்கையிலே நாள்தோறும்வ ரும்பொரு தன்னால் தொண்டர்
தங்கள்பூசைக் கேசரிக்கட் டுதென்று சொன்னாள்
கரு எண்ணியப டிமுடிக்கக் கங்கை யணிந்தார் என்ன
பண்ணுவாரோ வென்றுமலர்ப் பாதம் பணிந்தாள்

விருத்தம்.

சித்தரைத்தாழ்ந் தேமையிவ்வா றுரைக்கு மின்சொற்
திருந்தியதே னெனச்செவிக்கே றிடவ ருந்தும்
புத்தமுதைப் போலவளன் புறுதித் திக்கப்
பூரணா னந்தமுடன் கருணை கூர்ந்து
முத்தநகை யேயிளமை யாக்கை செல்வம்
மூன்றுநீர் மேலுதிக்குங் குமிழி போலே
மித்தையெனக் கண்டறிந்து சிவதர் மத்தை
விரும்பியிழைத் தாயெனப்பின் விளம்பு வாரே

சித்தர் நவலோக நங்களைக்கனகமாக்கி அளித்தல்.

அதிகமாம் சிவதாமங் சிவார்ச்சனைநற் சிவபூசை அடியார் பூசை
இதனிலொன்றுக் செ . கம் ஆனதறிந் தடியார்க்கே யீந்தாய் பின்னும்
மதியணிவோன் திருவுருவம ச்ணசினைத் தனையதற்குன் மனையி லுள்ள
உதவியில்லா நவலோகம் யாவுமிங்கே கொடுவாவென் றுரைத்திட் டாரே.

ஆனந்தபைரவி, சாப்பு.

க சாமியிந்த வாறுரைக்க ஏமை மகிழ்ந்தாள் திரு
மாமனைக்குள் ளதிவேக மாகப் புகுந்தாள
உ வங்கஞ்செம்பிரும்புவெள்ளி பித்தளைதரா உள்ள
வெண்கலமு தம்பலவும் குதிர்குதிரா
ங தேயுமிடை யாள்பரப ரென்றெ டுத்தாளே கொண்டு
போயிருக்கும் சித்தர்முன்கல் லென்று வைத்தாளே
ச வைத்தபல்லோ கத்தையும்வெவ் வேறு குறித்தார் கேளும்
சுத்தநீறெ டுத்ததின்மேற் சித்தர் தெறித்தார்
ரு இத்தைநீயி ராவெரியி லிட்டெடு பேர்ன்றும் எடுத்
தத்தையேகொண் டீசனுருச் செய்யென் றுசொன்னார்
சு இன்றிரவுக் கிங்கிருந்த முத ருந்துவீர் நான்உ
வின்றபடி செய்திடம னம்பொ ருந்துவீர்
எ மண்டிருள்பு லருமுன்போ மென்று புகன்றான் நில
கண்டரம்மொ ழிக்கிசைந்தி டாம லகன்றார்
அ மானேகூடற் சித்தர்யாமென் றோதி மறைந்தார் மறைந்து
போனபின் மதுரைஎம்பி ரானென றறிந்தாள்
கூ வாய்த்தவரே கச்சிறித யர்ச்சிலைப் பூண்டாள் கவலை
மாற்றினளென றேபெருமகிழ்ச்சியும் நீண்டாள்
ய சித்தர்சொல்லைப் புத்திபூர்வ மாக நினைத்து வன்னி
மத்தியிலே வைத்தனள்பல் லோக மனைத்தும்
கக ஈசனடி யையடைந்தோர் காட்சி யைப்போலே எல்லாம்
மாசகன்ற சொர்ணமய மாச்சொ ருக்காலே

விருத்தம்.

சித்தர்சொன்ன வாறுலோ கங்க ளெல்லாம்
செம்பொன்னு விளைந்திடலால் ஏமை நோக்கிச்
சித்தமகிழ்ந் தருவிலரா னுருவஞ் செய்து
திருவழகைப் பார்த்துச்சுந் தரனே யென்று
பத்திமிகுந் தள்ளிமுத்தம் கொண்டேன் னன்பிற்
பழகியபி ரானுகப் பிரதிஷ்டை செய்து
நித்தமுதல் நடத்திச்சின் னாளவாழ்ந் தின்பம்
நிறைந்திட்டாள் சிவபதத்தி லுறைந்திட் டாளே.

இதுவுமது

அய்யனைச்செய் தேமையர்நா யகன் கபோலத்
தள்ளிமுத்த மிட்டதகக் குறியுஞ் சொன்ன
செய்யகா ரணக்குறியும் கொண்டு செம்பொன்
திருமேனி வேறுகி விளங்கி நாளாம்
பொய்யுகத்தோர் தமக்கேர்க்கத் தக்க தாகப்
பொருந்திநின்றார் இக்கதையைப் படிப்போர் கேட்போர்
வையகத்தி லேதுயர மகன்றின் பத்தை
மன்னியிருந் தானுலகிற் றுன்னு வாரே.

ஆக, விருத்தம் அ, கீர்த்தனை உ, தரு உ, ஆக உ. முற்றும்.

சிவமயம்.

முப்பத்தேழாவது.

## சோழனைமடுவில்வீட்டியபடலம்.

அவதாரிகை—விருத்தம்.

பொன்னனை யாளுக் காகப் புராந்தகன் இரத வாதம்
தன்னைமுன் செய்து வந்த சரித்திர முரைத்தே னிப்பாற்
சென்னியை மடுவி லாழ்த்தித் திருவடி நம்பும் பாண்டி
மன்னனை யுமரிற் காத்த மகிமையை யினிச்சொல வேனே

ஆனந்தபைரவி, சாப்பு.

க அருந்தவர்களே பாண்டிநாடா சாட்சியைச்செய்து வரும் ராஜ
புரந்தரபாண்டியன் சிவனுலகத்திற் புகுந்திட்டான்பின்பு கேளும்
உ அவன்மகனிரா ஜேசபாண்டியன் அனுதினமும்அன் பாலே கதம்
பவனாதனைப் பணிந்தவனியைப் பாலித்தானே இப் பாலே
௩ ராஜகம்பீர னென்றவன்மகன் ராஜ்யம்வகிக்கின் றானே கிராம
தேசமெங்கினும் ஈசனைத்தொழச் சிவப்ரதிஷ்டைசெய் தானே
௪ பாண்டியவம்சப்ர தீபனென்றவன் பாலகனொருக் காலே ஆ புவி
ஆண்டநேகநாள் இருந்தானுல கடைந்திட்டான்அதின் மேலே
ரு புரந்தரசித்தன் அவன்மகனிந்தப் புவிவகித்திசை பூண்டான் நலம்
பொருந்திடும்அநு மாலையாவரும் பூசைசெய்துல காண்டான்
௬ பத்திமிகுந்த பாண்டிவம்சப தாகனென்றவன் பாலன் சொல்லும்
இத்தரணியில் யாரையும்சிவ பக்தராக்கிய சீலன்
எ கருத்துமுஞ்சுந்த ரேசபாதசே கரனென்றவன்கு மாரன் வெகு
திருத்தமாகவே பலர்புகழ்ந்திடச் சிவபத்திமிகுந் திரன்

விருத்தம்.

பத்தபரி பாலனஞ்செய் சுந்த ரேச
 பாதசே கரபாண்டிய ராச னென்போன்
பத்திரதம் நூறுனை ஊரைக் நூறு
 பரிபதினு யிரங்காலாள் இவர்கட் காக
எத்தனைபொன் செலவாமோ அதுபோய் மிச்சம்
 இருந்தபொருள் அனைத்தும்விமா னத்துள் நாடிச்
சித்துருவாய் விளங்குகின்ற சிவனுக் கேற்பச்
 செலுத்துவான் புண்ணியத்தை வலுத்து வானே.

காம்போதி, சாப்பு.

க இந்நிலத்தைதப்பாண்டி மன்னவர்கோன்வகித்தாண்டான் கூடத்
பன்னகபூஷணன் றன்பணிக்கேயன்பு பூண்டான்
உ கண்டிகைவச்சிரமு டிமுதலாபர ணங்களும் சந்த்ர
மண்டலமடமேம் வளர்ந்தயரும்கோபு ரங்களும்

ரு அல்லாமலின்னம் அநேகவிதஞ்செய்து போக்கினன் கனக்
இல்லாமலேபணி யெல்லாம்புதிதாயுண் டாக்கினன்
அ மத்தசிரோமணி யென்றிவ்வுலகத்தின் மீது புகழ்
பெற்றுத்தருமப் பயிரைவளர்த்திடும் போது
இ தென்னவன்சேனைச் சிறுமையைச்சோழன றிந்தான் அவன்
தனனுடனேயம ராடமனத்திலதி னைந்தான
சு ஆவலுடனேயோ ராயிரம்வாம்பரிக் குந்தான் ஒரு
சேவகனுக விருதணிந்துகொண்டெ ழுந்தான்
எ கூடியநால்வகைச் சேனைப்படையுடன் கூடினன் கடல
சீறிவருவது போலேமதுரைமேல நாடினன்
அ நாடிவருவத றிந்துதென்னனபயந் தோடினன் கல்கை
சூடிமுனறனகுறை சொலலிப்பணிந்துமன் றாடினை
கூ உன்பலத்தாலுல காள்வதறியாமல் நண்ணினன் அவன்
தன்பலத்தாலென்தனசேனையைலேசாகவெண்ணினன்
ய காவிரிநாடன் பெருஞ்சேனையோடென்தன பாலே வட
வாவனல்போலே வனைந்தரனென்றோதவினை மேலே
கக யுத்தமதிலநாம்வருவோஞ்சயமுனக் குணடாம் எனறோர
உத்தரவீசன ருளாலெழுந்திடக் கண்டான்

விருத்தம்

வானிலெழு மொழிகேட்டு நாதன் றனில
வணங்கிமுக மலர்ந்துவகந்து முரசியமகச
சேனைகள்சூழ்ந் திடநடுவே பரிமேற் கொண்டு
செப்பரிய சோழமனன னுடனே மேவும்
தானேயெனும் கடலுடனே யாறெ திர்க்கும்
தன்மையைப்போ லெதிர்க்கஅவர் தங்கட் கெல்லாம்
மீனவர்கோன படைகடற்போல் தோன்றிற் றுஙகே
மேலேதான் ஈசனருளாலே தானே.

சுந்தரேசர்வேடுருவம்கொண்டுவருதல்.

விருத்தம்

தென்னவர்கோன் சேனையைப்பார்த் திந்த வண்ணம்
செம்பியர்கோன் சேனையதிர்த் திருக்கும் போது
வன்னமிகு மேருமலை வில்லை தாக
வாசுகிநா ணாகவெடு மாலம் பாகப்
புன்னகைவெங கனலாகப் பூண்டு முன்னாள்
புரமெரித்த ஆலவாய்ப் பெருமான் றனே
துன்னவலைரசெயித்திடவே டுருவம் பெற்றுங்
குதித்திட்டான் அமர்க்களத்திற் குதித்திட் டானே.

மத்தியமாவதி; ஆதி.

பல்லவி.

வேடுருக்கொண்டுவந்தானே தென்னனுக்காக வேடுருக்கொண்டுவந்தானே

அநுபல்லவி

நீடிய அரிபிரமர் கூடியதேவர் முனிவர்
தேடியவெள்ளியம்பலத் தாடியதேவாதிதேவன் வேடு

சரணங்கள்

க வேதமேபரியாவிளங்க ஏறியேமுடி மீதுமயிற் றோகைஇலங்கக்
காதிலணிதந்தத்தோடின் காந்திமதிபோலே மின்ன
ஓதரும்வெண்முத்துமாலை யுரத்திலுடுக்கவோவென்ன வேடு

உ அங்கிதலைப்பாகுஞ்சூட்டி தங்கக்கடகம் முன்கையில்து லங்கமாட்டித்
திங்கள்வங்கிசத்தரசன் சேனைக்கனு கூலனாகச்
செங்கதிர்க்குலத்துதிக்கும் சென்னிக்கொருகாலனாக வேடு

ஈ ஆலமுண்டதுமுன்னாலே கழுத்தில்தங்கி மேலெங்குங்கலந்தாற்போலே
நீலமேனியுஞ்சிவந்த நேத்திரமுட னெடுத்துக்
காலவன்னிபோற்கர்ச்சித்துக் கையிலொருவேலெடுத்து வேடு

விருத்தம்

தேவதே வோத்தமனிவ் வாறு வேடத்
திருவுருவம் பூண்டுபொன்னி நாடன் முன்சென்
றுவனுடன் சார்த்தூலம் போலே கர்ச்சித்
தார்ப்பரித்தா யிரம்பரிக்கு மட்டும் நீயோர்
சேவகனென் றெனினைத்து வந்தா யல்லோ
செபபவொண்ணாப் பரிக்கொருசே வகன்யா மென்று
கோவமிகுந் துரைத்ததிடி போற்கா துக்குள்
கொண்டிட்டான திடுக்கெனவே நின்றிட் டானே

மத்தியமாவதி, சாப்பு.

க மாதவரேகூடல்வாழும் லோக நாதன்மகிமையைக்கேளும்
ஓதரும்வெண்பரிமேலே வேடுருவுடன்சோழன்முன்னாலே

உ மின்னலிலங்கிடக்கூடிச் செல்லும் மேகத்தைப்போலவேகாடி கையிற்
சொர்ணமயவேலையெடுத்தான வல்ம் சுற்றியேயுங்காரித்தடுத்தான்

ஈ ஆயிரம்வாசிக்குத்தீரனே வீர னென்றெண்ணியிருந்தானே நோக்கிக்
காயம்நடுங்கமெய்மேலே பயங் கைக்கொண்டினியிவ்வேலாலே

ச மாளுவதிங்குமெய்யாமோ நம் வல்லபமெல்லாம்பொய்யாமோ கொல்லும்
ஊழிதேயென்றொருக்காலே வெருண் டோட்டம்பிடித்தானிப்பாலே

ரு காமனைவென்றவன்மனறந்தா னது கண்டுவழுதிபின்றொடர்ந்தான் சோழ
மாமன்னனோட்டத்திலமாற்றான் பின் வருகிறானென்றுபார்த்தான் (மு

சு வேடன்மறைந்துங்கண்டான் பயம் விண்டான்வழுதியைக்கண்டான்தன்
கூடல்னவும்தூரத்திருன் பயம் கூர்ந்துமதுராபுரத்தினை

௭ காற்றென்றுமுடுக்கலாலே அனைதக் கண்டெரிசாடினைப்போலே
ஆத்திமலர்த்தொடைசூடினான் பிற காலேதூரத்தமுன்னோடினான்
௮ மாநதர்க்குள் விரைந்தெழுந்தான் பச்சி மத்திசையகழில்விழுந்தான்
தானதுதேர்ந்தகஞ்சூழ்ந்தான் பரி தன்னுடன்சோழனும்வீழ்ந்தான்
௯ தீனதயாபரன்கதிக்கும் அருள் செய்வதினாற்கடலுதிக்கும்
ஆனைபோலெழுந்தான்தென்னன் அதில் ஆழ்ந்துபோனான் சோழமன்.

விருத்தம்.

சென்னியிந்த வாறுபிலத் தளவு மாழ்ந்த
செழுங்கிடங்கில் ஆழ்ந்தவிந்து போனா னிப்பாற்
பின்னவன்தேர் கரியபரிபூண் டுகிலநி றைக்கும்
பேழைமுத லானதெலலாம் கவர்ந்து கூடல்
முன்னவனுக் கேற்றவணி யெல்லாம் நலகி
முத்திபுர நாடரசான டிருந்தா னித்தைச்
சொன்னவரும் கேட்டவரும் பகையை நீங்கிச்
சுகமனுபித் தாநுலகில் துலங்கு வாரே

விருத்தம் கூ, கீர்த்தனை க, தரு ரு, ஆக ய முற்றும்

———0———

சிவமயம்

முப்பத்தெட்டாவது.

## உலவாக்கோட்டையளித்தபடலம்.

அவதாரிகை—விருத்தம்.

சம்புவே லேந்திச் சோழன் றனையகழ் மடுவிற் றள்ளி
நம்பிமீ னவனைக் காத்த நலஞ்சில துரைத்தே னிப்பால்
பின்புழ வோர்க்குள் மிக்க பெருமையும் அறனும் பூண்ட
அன்பனுக் குலவாக் கோட்டை யளித்தவா றினிச்சொல் வேனே.

## நல்லான்வரலாறுகூறல்.

விருத்தம்.

படிபுகழும் புடிசோழ சுந்த ரேச
பாதசே கரனுண்டு வருநாள் வெள்ளைப்
பொடியணியும் பரமனுக்கா ரணத்தி னுச்சி
போல்விளங்கும் ஆலவா யுறையு மேழிக்
கொடியுடைய வேளாளர்க் குள்ளே கீர்த்தி
கொண்டறத்தி னெறிதவறா தியற்றி நாளும்
அடியார்க்கு நல்லானென் றெங்கும் பேருள்
ளவனென்பான் பத்திமிகுந் தவனென் பானே

சரணங்கள்

திருமுனிவருந்திருமறையுமூன்று கடன்வாங்கிவைத்தெனண்டர்
தம்மூனைக்குறையாமல் அன்புடனே செய்து
தினமுங்கடன்இடைக்காமல ஸநித்தவிரதத்துக் குறதி
கெடுப்பவகையில்லாமல் மெய்யையொறுத் தானே இல்ல
கொடுப்பவரேவினைவுங்கடன் கொசிப்பவரையும் தடுக்கில்
குவலயத்திலதைவிலக்க எவருண்டென் றெண்ணி
அடுத்தவர்கள் துன்பங்களைத் தடியார்க்கசன மருத்தும்
அந்நியமுந்தடைப்பட்ட தென்னசெய்வோ மென்றே இல்லா

அடியார்க்கசனமூட்டி யல்லாமலுண் ணாத
அருந்தவத்துக்குயிர்த்துணையாம் தருமசீல யுடனே
முடியாதபட்டினியாக் கிடந்துநெருசம்புண் ணாக
மூண்டபசித்தீமிகவும் ஈண்டியுடல புழுங்க இல்லா

உழுவார்க்கழுகுவிருக் கோடுண்டலென்பது குறைய
உலையிலிட்டமெழுகுபோலே உருகிப்பர தவித்து
அழுதிராப்பொறிக்குத் தெய்வமேதுணை யாமென்
றரியுவயிற்றைப்பசியா லெரியக்கட்டிக் கொண்டு இல்லா

ஊறுமணற்கேணிபோலே தருமமேசெயந தருமென்
றுலகிலுள்ளபெரியவர்கள் உரைத்தமொழி பொய்யோ
கூறுமீசன்பண்ணுந்திருக்கூத்துக்குநாமென்ன செய்யுங்
கூடுமென்றறிந்துமுகம் வாடியினம் வருந்தி இல்லா

## நல்லான் சுந்தரேசரைத்தன்வறுமைநீக்கவேண்டுதல்.

விருத்தம்.

இல்லாள்தன் னுடனடியா ருக்கு நல்லான்
இந்தவிதம் வருந்திநொந்தே நிலைமை சற்றும்
இல்லாத பொய்யுடம்போ டிருந்திம் மண்ணில்
இனிப்பெறும்பே றேதுளதென் றேங்கிப் பட்ட
தெல்லாம்நம் மய்யனுக்குச் சொல்லிப் பின்னே
இவ்வுயிரை யொழிப்பதுவே கரும மென்றங்
கல்லாருங் கந்தரன்முன் னடைந்துக் கத்தை
அடுக்கின்றான் பணிந்துசொல்லத் தொடங்கினன் றானே.

ஆரபி, திரிபுடை

பல்லவி.

வந்துசொல்வாய்

அநுபல்லவி.

அந்தரத்தவருய்யநஞ்சமு தாகவருந்தியமெய்யனே
உன்தனடியவர் பூசைக்கிடையூறு யென்தன்வயல்விளை வய்யனே கு
றைத்தவிதமென்ன தய்யனே வந்து

க உய்யும்வகைகடன் கொடுக்கத்தகவர் ஒருவருமில்லர் நண்ணுகின்றேன்
வையகத்திலே கடன்கொடுக்கின்ற வல்லவரிருக்கும் வகையும் புகழ்
செல்லும்அவர்குடிப் பேரையும் வந்து

உ எட்டும்மதிநதி சூட்டுமெய்யனே எனக்குக்கடன்கொடுப் பவர்களைக்
காட்டிடாவிடில் மனைவியோடுயிர் கழித்திவ்வுடற்சுமைமாற்றுவேன் தருமங்
களைச்செய்யா தகுறை யாற்றுவேன் வந்து

ங ஈவில்லாமலே புவிக்குப்பாரமா இருக்குந்தேகியைப் போலவே
பூவிலென்னையும் ஈகையில்லாமல் புல்லனுக்குவைத்து ஞாயமோ சாமி
அல்லநீதென்ன ஞாயமோ வந்து

விருத்தம்.

தொண்டருக்கு நல்லானிவ் வாறு வேண்டச்
சோமசுந் தரக்கடவுள் அருளி னாலே
அண்டமதில் ஒருமொழியே ளாளர் மன்னு
அரிசிப்பை யொன்றுனகத் தமைத்தோ மத்தைக்
கொண்டுபூ சித்ததில்நாள் தோறு மொள்ளக்
குறையாதன் பருக்கீந்தே யறத்தைச் செய்திம்
மண்டலத்தில் வீற்றிருந்தென் மலர டிக்கீழ்
மன்னுவா யெனக்கேட்டு மகிழ்ந்திட் டானே.

## நல்லான் அரிசிக்கோட்டையைப்பெற்று தருமங்கள் செய்தல்.

இதுவுமது.

இப்படியே யந்தரத்தில் உரைத்தி டத்தேர்ந்
தின்பமடைந் தடியார்க்கு நல்லான்வேதச்
சொற்பொருளைப் பணிந்தில்ல மடைந்து முன்னுள்
தொகுத்ததவப் பயன்றிரண்டு தோன்றிற் றென்ன
ஒப்பிலன்பர்க் கானாளும் கதியைப் போலே
உலகறியக் கோட்டையைப்பார்த் தரிவை யோடும்
அப்பொழுதே பூசனைசெய் தரிசி யைக்கொண்
டடுக்கின்றான் யாவருக்குங் கொடுக்கின் றானே

பரசு ஆதி.

பல்லவி

அடியவர்க்குநல் லான்சிவனருள் அரிசிக்கோட்டையைத் தனக்குலவாத
ஆஸ்தியாக்கொண் டறஞ்செய்து மகிழ்ந்தானே

அநுபல்லவி

படிபுகழும்த ருமசீலையெனும் பத்தினிதன்னுடன்நித்தமுந்தப்பாமல் அடி

சரணங்கள்

முமதிருடும்சோமசுந்தரர் தாமளிக்கின்றகோட்டையை கன்
மனமிருந்தசந் தனம்புகைசுடர் புனிமலருடன்தினமுமருச்சித் தடி

௨ வழக்கப்படிக்குவிளக்கமாமடி சிறுக்குமதற்குவேண்டும் பல (முக்—தடி
வகைப்படுங்கரு விகட்குமேயது விலைப்படுத்திக்கொண் டகத்தினில்மகி
௩ கொணடலைப்போலே தொண்டர்களுக்கும் பண்டிதர்மறையவர்க்கு மன்பு
கூர்ந்தைம்புலத்திலார்ந்தவர்க்குளம் வாய்நதெவர்கட்குமீகதநுதின மடி

விருத்தம்.

அன்பனடி யார்க்கினியா னிந்த வண்ணம்
அனைவருக்கும் வேண்டியதீத தளகே சன்போல
தன்பிரிய மனைவியொடும் புத்திர பௌத்திரர்
தங்களொடும் சுற்றத்தார் தமர்க ளொடும்
அம்புவியில இன்பமுடன் வாழ்ந்தந் தத்தில்
அரனுருப்பெற் றுனிதனை யறைவோர் கேட்போர்
இன்பமடைந் தல்லலகன் றிசையைப் பூண்டே
இருநிலத்தி லுபாதியற்றே யிருப்பர் தாமே.

விருத்தம் ஏ, கீர்த்தனை ச, ஆக கக முற்றும்.

———0———

உ

சிவமயம்.

முப்பத்தொன்பதாவது,

## மாமனுகவந்துவழக்குரைத்தபடலம்.

அவதாரிகை—விருத்தம்.

காமனை யெரித்தோன் றொண்டர் களுக்கினி யான்றன் பத்தைத்
தாமறிந் துலவாக் கோட்டை தந்தவா றுரைத்தே னிப்பால்
தேமலர் முல்லைத் தாரார் சிறுதகை வணிகற் காக
மாமனு வழக்கு ரைத்த மகிமையை யினிசசொ லவேனே.

## தனபதியின்செய்திகூறுதல்.

விருத்தம்.

தென்னவர்கோ னனசுந்த ரேச பாத
சேகரனிவ் வுலகாளும் நாளிற் கூடல்
தனனிலுறை வணிகருக்குட் குபேர னொப்பாம்
தனபதியென னும்பெயரோன் துணைவி யாகும்
அன்னநடை சுசீலையென்பாள அவளோ டில்லத்
தகமகிழ்நது வாழ்ந்திடுநாள மைந்த ரில்லா
தின்னலுடன் இருவருமக் குறையே மேற்கொண்
டெண்ணினார் மனவருத்தம் நண்ணி னாரே

பெலகரி; ஆதி.

பல்லவி.

தனபதிசெய்திகேளும் தவமுனிவோரே

அநுபல்லவி

தனபதிபோற்செழிக்கும் சம்பன்னனுக்களிக்கும் தனபதி

சரணங்கள்

க பிள்ளைப்பேறில்லாமையாலே பெருமைகுன்றிமென் மேலே
உள்ளத்தில்மொரதொருக்காலே ஒண்டொடிதன்னுடன் பாலே தனபதி

உ தங்கைமகனைத்தாம்பெற்ற தனயனாககொண டுற்ற
மங்கைகைக்கொடுத்தான்சுத்த மனையாளவாங்கி மிகுத்த தனபதி

ங கண்டிகைசுட்டியும்பூட்டிக் கைவளை குண்டலம் மாட்டித்
தனையரைஞாணும்கூட்டித் தழைக்கசெய்தான்சீராட்டி தனபதி

விருத்தம்

தனபதிசந் ததியில்லா தவனு னும்
தன்மனையா ளிடத்திலஉற்ற வாஞ்சை யாலே
அனுசையிடத் தனுதினமும் பூசல் செய்ய
அவளுமொரு நாள்கோபித் தனனு வந்த
மனமகிழ்ச்சி யேனவிளங்கும் பிளளை யிலலா
மாபாவி யுனக்கிருமை வரும்பே றெலலாம்
என தருமை மருமகனு லன்றோ வென்றே
யேசினுள் நேர்ந்தபடி பேசி னுளே.

தாயத்தார்தனபதியின்பொருளெல்லாம்அபகரித்தது.

இதுவுமது

தங்கையிந்த வாறுரைக்க வெட்கம் பூண்டு
தனபதியின் ஒருசென்மத் துக்கா னும்
அக்குழந்தைப் பேறடையத் தவஞ்செய் வோமென்
றயன்பொருளெல் லாமருகன் றனக்கே யாக்கி
மங்கையுடன் சென்றான்பின வராது கண்டு
வலிமையினல் இலலாத வழக்குப பேசிப்
பங்குடைய தாயத்தார் அநீத மாக்கைப்
பற்றினர் பொருள்முழுதும் சுற்றி னரே.

சாவேரி, ஆதி.

பல்லவி

பாரும்பாரும்தாயத் தார்கள்மிகுந்து தன பதிமுதலைக்கொண் டாரே

அநுபல்லவி

பாரும்விளைநிலம் அடிமையா பரணம்
பசுக்கள்நவமணிகள் கணக்கிலலாத தனம்
செரும்பெட்டிகள்யாவும் இழந்துகண்ணீர் வடிக்கச்
சிறுகரிந்தபுட்போலே சேயும்தாயும் துடிக்கப் பாரும்

சரணங்கள்

க அகதிக்குத்தெய்வந்துணை யலலாலவேறுண்டோவென் றனையுமகனும்நுய (ராலே
அகமெலிந்தேழைசொல் லம்பலமேறுமோவென்றுலவாயரின்முன் னுலே
புகலுமடியவர்க்கோர் ஆதாரமாவிளங்கும் புண்ணியாவெனப்பணிந்தன்
சகமதற்குத்தந்தைதா யாவீர்எங்கட் கன்னையும் (பாலே
தகப்பனும்அனறேவென்றே முறைகூறவொருக்காலே பாரும்

உ என்மகனையெனக்கு முன்னேனமகனிலலாமல்எவரும்காணத்தகுதியாகவே
தன்மகனுகப்பெற்றிப் பாலேகாணிபொன்மனை சகலமும்எங்கள்வச மாகவே
தன்மனமகொண்டளித்து மனைவியுடன்றவத்தை நாடிச்செயவேணுமென் றே
வனமையினுலேதாயத் தார்களவைக வெல்லாம் (கவே
வவ்விஞரெனறுசொன்ஞள் பின்னுமகூர்மையாகவே பாரும்

ந ஒருத்திநானெனக்கய்யா ஒருமகனிவனென்றும்ஓதறியாவேழையல்லாமலே
கருத்தறியாதசிறி யோனெங்களுக்குவேறு களைகணுத்தாங்குவாரில் லாமலே
வருத்தமுற்றேமேயுயிர்க் குயிராய்நிறைந்தோயெந்த வரலாறுங்கா ணுவாய்
அருடகடலேநீயன்றி யாரிருக்கின்று ரெனறே (சொல்லாமலே
அடிபணிந்தோதிவீழந்தாள அகம்வேறுசெலலாமலே பாரும்

## தன்பொருளைத்தரும்படிவணிகமகள்ஞாதிகளைத்தடுத்தல்.

விருத்தம்.

அடிபிடிவழக்காச் செய்துதா யத்தார் அரும்பொருள் கவர்ந்திட வருந்தி
அன்னையும்மகனும் சாமிமுன் னுரைக்க அவரரு ளாலுறங் கிடுங்கால்
விடிவரைஞாதி களைமதித் தவையில் வேந்தன்மே லாணையிட் டிருத்தவ்
வேளைவந்துனது வழக்கைநாம் தீர்த்து விடுகிறே மெனக்கன வதனில்
வடிவுறுமறையோன்போ லுரைத்தகன்றார் மகிழ்ந்தெழும்தெளியருக் குத்தெய்
வந்துணையெனப தறிந்தன னைனு வணஙகிவந தகம்புகுந் துரைத்த
படியெழுந் தீசன் கோயிலமுன் பணிந்து பலர்களுமறு கட்புஞா திகளின்
பக்கம்வந்தெமதுபொருள்களைக் கொடுத்தப்பாலேபோமெனத்தடுத்தனளே.

கௌளிபந்து, ஆதி.

பல்லவி

அன்னியாயஞ்செய்து கொளும்ஞாதி களேயெம்பொருளைத்தாரீர்

அநுபல்லவி.

மன்னவனுணை தன்னையேயிட்டேன பின்ஞெருபக்கமும் செலலவுமொட்டேன்
அன்னமுதலாப்புசிக்கொட்டேன் அன்னி

சரணங்கள

க அடியெடுத்தொருபால்நாட்டக்கூடாது அடுப்பிலேநெருப்புமூட்டக்கூடாது
படிவாச லும்தாணடக்கூடாது அன்னி (சார்வீர்

உ அழுக்காறுடையவர் ஆகவேசேர்வீர் ஒழுக்கமிருநதர்மச் சபைக்குள்ளே
வழக்குத்தீர்நதபின் அப்பாற்போவீர் அன்னி

## சுந்தரேசர்வழக்குத்தீர்க்கமாமனாகவருதல்

### விருத்தம்

இந்தவிதந் தடுக்கையில்ஞா திகள்வனுக் கொண்
டிழுக்குரையால் வைதுதள்ளி யடித்தோட் டுங்கால்
வந்துதர்மச் சபைமுன்னே முறையோ வென்று
மாதுரைக்கத் தெரிந்தறத்தார் அவள்பின் னோடே
தந்திடுஞ்சே வகருடனே சென்று மாற்றார்
தலைமயழைத்துக் கொண்டுவந்தாள் வரும்போ தாங்கே
புந்திதனி லாலவாய்ப் பெருமா னன்பு
பூண்டிட்டான் தனபதிபோல் தோன்றிட் டானே.

மோகனம், ஆதி.

பல்லவி.

மாமனாகவந்திட்டானே வழக்குத்தீர்க்க மாமனாகவந்திட்டானே

அநுபல்லவி.

சேமிதாநுமல ரயனுந்தேடரிய மாமதுரையில்வளர் சோமசுந்தரமூர்த்தி மா

பரசு, ஆதி.

க தங்கமாங்கா திற்குண்டல மின்ன வரைநிகர்த்த
தோளிலங்கதம் பளப ஒளன்ன இருளகற்றும்
கங்கணமுன் கையிலொளி துன்ன உருத்திராட்சக்
கண்டிகை திருக்கழுத்தில் மின்ன மதுவையுண்டு
பங்கயத்திதழினு றங்கும்வண்டுகள் போலே
தங்குமணிமோதிரச் செங்கைவீசிமென் மேலே
தங்கையையும்சேயையும் தள்ளிவிட்டோர்முன் னாலே
சிங்கவேறுபோல்வீதி லங்கடந்தன் பாலே மாம

உ திருமுகமாகுத்தாமரை வாடிப் பிள்ளைக்குச்சதி
செய்ததாயாதிகள்மேலே பூடி உடனேதமக்
குரியதிருமகன்மேலே நாடித் தண்ணளிநயந்
துளமகிழ்ச்சிதனை மிகக் கூடி நீதிதெரிந்த
அரசனில்லையோபெரி யோரில்லையோ சிறந்த
அரசனசெங்கோலுங்கொடி தாச்சோநூல்கள்மொழிந்த
உரியதெய்வமுங்குடி யோடிப்போச்சோ வுயர்ந்த
தருமமும்போச்சோவென்று தருமச்சபையில் முந்த மாம

ஙட பாதகத்தாயாதிமார்கள் கண்டு விம்மிதமுடன்
பகட்டுமனவலியிழந்து பண்டு தீர்ந்தவழக்க
நீதமாச்செய்தோமென்றுள்ளம் பிணடு அச்சமுநாணும்
நெருங்கியேதமைவிழுங்கக் கொண்டு நட்டுவிழிக்க
ஆதாவுடனேதம் மருமகனை நேரிட்டுச்
சோதரியுடனுரைத் தேதழுவிக்கை தொட்டு

இருவர்வழக் கையுமேற்கொண் டனுவர நித்தாயுக்
திவற்றில்ஞா திகள்வழக்கே இழுக்கென ஜேத
வெருவியவ ராடெடுத்த கள்ளன போலே
விழித்தவரிற் சிலர்கள்தன பதியல் லென்று
திருமுறுகாய்ப் பேசியடை யாளங்கேட்கச்
சீறுவார் மற்றதனைக் கூறு வாரே

மோகனம், சாப்பு

பல்லவி.

முறையோடே அடையாளம் மொழிந்தார்

அநுபல்லவி.

மறையின்பொருளுரைக்கும் மதுரைநாயகன்நெறி முறை

சரணங்கள்.

க தந்தையன்னை மாமனும் மாமி தாயாதிதமக்குமுன் னுண்டானோர் இரும்
மைந்தர்களுடன்பிறந்தோரும் பந்து
மனைவியைமுதலான அனைவர்கள்பேரும் முறை

உ குலமுறைநடத்தைசொரூபம் நிறங் குடிப்பிறப் பளவோசை வரும்லாப
தலைமுறையோர்கள்பிரதாபம் சத்தியம் (லோபம்
தயவுதாட்சண்ணியம் பயம்பச்சாத்தாபம் முறை

ங செல்வம்வயதளவுதாரம்தொழும்தெய்வபத்தியொழுக்கம்தருமம்விஸ்தாரம்
கல்விநடுநிலைமைதீரம்பட்டங்
காணிநலமைபெலம் முதலாங்கெம்பீரம் முறை

அடையாளம் இந்தவண்ணம் உரைத்திடக் கேட்
டரியதன பதிவணிகர் இவர்தா மேயென்
றுடையதுரைத் திடத்தாயத் தார்வ ழக்கில்
ஓரமடைந் தரசனெறுப் பானென் றெண்ணி
கடைமிகுந்தில் லுக்குப்போய் வருவே னென்றும்
நான்குளத்துக் கேகியிந்தோ வந்தே னென்றும்
இடையிலவை மாருதங்கண் டெழுமே கம்போல்
ஏகினர் சிதைந்தொளித்துப் போகி னரே

இதுவுமது.

ஞாதிகள்நீங் கிடச்சபையோர் தனப திக்கே
நற்பொருள்முற் றும்சேர்த்தா வணம்வ ரைந்தாங்
கோதிடப்பின் னதைவாங்கி மைந்த னுக்கீந்
துலகீசன் மறைந்திட்டான் சுந்த ரேச
பாதசே கரன்மகிழ்ந்தி சனைப்போற் றித்தன்
பாலகனும் வரகுணற்கு மகுடஞ் சூட்டி
நாதனடி சேர்ந்தனனீ துரைப்போர் கேட்போர்
நலம்பொருந்திச் சிவனுலகில் நண்ணு வாரே

ஆக விருத்தம் ம, கழிநெடில் க, கீர்த்தனை ரு, தரு க, ஆக மஎ. முற்றும்.

சிவமயம்.

நாற்பதாவது

## வரகுணனுக்குச்சிவலோகங்காட்டியபடலம்.

அவதாரிகை—விருத்தம்.

முதலிடை யீறில் லாத முக்கணனை வணிக னாகி
எதிர்வழக் காடி வெற்றி யிசைத்தவா றுரைத்தே னிப்பால
பதிவர குணனைச சூழும் பழிதொலைத் தால வாயில
கதிதரும் சிவலோ கத்தைக் காட்டிய தினிசசொல வேனே

### வரகுணபாண்டியன் அரசாட்சி.

விருத்தம்

நிஷ்டையிலே முக்கணனைபால அன்பு பூணடு
நெறியறிந்து தவஞ்செய்முனி வோரே கேட்பீர்
இஷ்டமிகு மிசமான னிரவி யிந்தோ
டெரிவானம் நிலஞ்சலிலங் காலென் றோதும்
அஷ்டமூர்த் தியின்வடிவும் தானா யோங்கும்
ஆலவாய்ப் பிரானைமன மெய்வாக் கொத்துச
சிஷ்டர்புகழ் வரகுணபாண் டியன்முக் காலும்
சிந்திப்பான துதித்தடியில வந்திப் பானே

முகாரி, ஆதி.

பல்லவி

வரகுண பாண்டியன்புவி யாண்டான் மகுடஞ்சூடி வரகுண

அநுபல்லவி

வரமிகவருளுஞ்சுந் தரபாதசேகரபாண்
டியனுதவியபுதல்வனெனுந் திருவுள வரகுண

சரணங்கள்

வேதமு தறகொண டொருக் காலே உள்ளகலைகள்
ஓதியு ணர்ந்தறிவி னாலே பலகாரியமுய்
நீதிதவிராமலமென மேலே செய்கையாலமலர்
மீதில்வ ளரயனைப் போலே விளங்கிப்பினனும்
பூதலமன்னவர்தன் பாதந்தொழவிசயம்
சேர்தலினாலேபுரு கூதனிலுநதுலங்கும் வரகுண

புகலுங்கற் புடைமையைச சூடிப் பங்கயமலர்
மகளிரைப் போலநெறியில் நீடி வருமிலலாளோ
டிசுபோக முறைமையைக் கூடி வாழ்கையினாலே
முகிலவணணனுமென் றிசை நாடிச் சுகித்துப்பினனும்
மிகவெழிலபரவிய மகிமையி னாலிரதி
மகிழானும்இவனுக்குநிகரோவென விலங்கும் வரகுண

௩ முறைமாறிக் கொண்டெப்போதும் தோற்றி இகல்புரியும்
பொறிகரா ளுதிபகை மாற்றி மொழிதப்பாமல்
அறிவால்முற் றுமுணரும் கீர்த்தி கொண்டதாலெங்கும்
நிறையுமீ சனென்றியாரும் ஏத்திச் சொல்வதலலாமல்
நிறைவுதருமெய்யொளி பெறுவதினுலகில
கறையிருள்கடிபகல இறையவன்போலவிளங்கும் வரகுண

௪ சதகெச துரகப தாதி பெலம்பெற்றோங்கும்
நிதியிலகு பேரணியும் ஒயாதி பூண்டுதெளிநத
மதிமான னுதினமும் பாதி மதியணிந்தே
மதுராபு ரேசன்அடி மீதில் பத்தியுடனே
நிதமுந்தொழுதுபல துதிகள்மொழிந்தறிவு
முதிரவுவந்துகூடற் பதியில்நிதம்விளங்கும் வரகுண

விருத்தம்

மேதினியிவ் வாறாண்டு வரும்காலோர் நாள்
வேட்டையின்மேற் காதலகொண்டா ரணியஞ் சென்று
போதகம்வெம் புலியேன முதலா யாங்கே
புக்குவிலங் குகளோடத் துரத்தி மாலைப்
போதளவும் வார்சிலையில் கொடுங்கூ ரம்பைப்
பூட்டியனே கம்வேட்டை யாடி வேந்தன்
வாதனிலுங் கடும்பரிமேல் ஆல வாய்க்கு
வருகின்றான் மனத்துவகை பெருகின் றானே.

ஆனந்தபைரவி, ரூபகம்.

மதிகுலசிகா மணியெனத்திகழ் வரகுணன்வேட்டை யாடிக்
வனவாம்பரி தனிலேமன மகிழ்கதேகூடல் நாடி
கதியுடன்வரும் வழியிலேதாகம் கடும்பசிநடை யாலே
களையாயொரு மறையோனுறங் கையிலேயவன் மேலே
அயமடிகடு வுரத்தில்வைக்கவே யாருயிர்இழக் தானே
அறியாமலே தனதாந்திரு அரண்மனைபுகுந் தானே
உயிரகலுமவ் வுடலைக்கண்டெரி யோர்விழியுமுன் னெடுத்தார்
உலகாள்பவன் தலைவாயிலந் தோவென்றிடத் தொடுத்தார்
அதையறிந்துதென் னவன்றனதுளத் தருண்டமைச்சரோ டெடுத்து
அறவோர்கையில் பொருளீந்துகர் மாதிசெய்ய விடுத்து
சதிதரும்பழி தனைநினைந்தகம் தனில்வெகுதுய ரடைந்தான்
சாரும்மந்திரி மாரும்பர தவிக்கவுள் ளுடைந்தான்

வரகுணபாண்டியன்பாபசாந்திசெய்தல்.

விருத்தம்

வரகுணனிவ் வாறுவலைப் படுமான் போலும்
வன்னிதனி லேவிழுந்த வெண்ணெய் போலும்
உருதல்கண் டமைச்சரபுரோ கிதர்கள் சூழ்ந்தே

ஓகோஇப் பழியறியா மையினால் வந்துன்
அருகுமலா லிதுநீங்கும் வண்ணஞ் சாந்தி
அதிவிரைவிற் செய்யவேண் டுமென வைவைக்
கரைதனிலோர் சாலையெடுத் துடனே செய்யக்
கருதினான் யாவருடன் பொருதி னானே.

துசாவந்தி,

பல்லவி.

பாவசாந்திபண்ணினானே பிரமகத்தியாதி பாவசாந்திபண்ணினானே

அநுபல்லவி.

தேவதேவநீலகண்டன் சேவடிபணியும்தொண்டன்
காவலர்தமக்குமிண்டன மாவரகுணவுத் தண்டன் பாவ

சரணங்கள்

வேதியர்க்கன்னமாராய்ந்து அறுசுவையோ டேதினந்தினமும்மீந்து
பூதனம்பசுத்தொடுத்து ஓதுமுறைமை யடுத்து
ஆதரவுடனெடுத்து ஹேதுநினைந்துகொடுத்துப பாவ

அகமருஷணத்தினாலே திலம்நெய்யோமம் சகலமுஞ்செய்துமென்மேலே
புகலுமைங்கவ் வியமுண்டு வகைபலதானமுங் கண்டு
நிகரில்லாப்புகழைக்கொண்டு தொகையிலாப்பொருளை விண்டு பாவ

மூவருருவாகவாழும் அரசைநிதம் ஆவலாய்வளைந்துகேளும்
கோவிருகொம் பில்நீர்பெய்து ஆவலோடன்னீருண்டெய்து
பூவறுகுதேடிக்கொய்து ஆவினுக்கருந்தச் செய்து பாவ

வரகுணபாண்டியனைபிரமகத்திபிடித்துக்கொள்ளுதல்

விருத்தம்.

சாந்தியிந்தவாறுமுறை யோடே தக்கோர்
சாற்றுதலுக் கிரண்டுபங்காத் தனத்தை யீந்து
வாய்ந்துசெய்தும் அம்மகா பாவத் துக்கு
வலிநீங்கா மையினாலே மேலிட் டேறுக்
காய்ந்தநெய்யிற் பற்றியத்தீ தூமந் தன்னைக்
காட்டியழ லெழுந்தவகை ப்டாலே தோன்றி
வேந்தனரு கேயுருவத் துடனே வந்து
விடக்கண்டான தன்னைவளைந் திடக்கண் டானே.

கல்யாணி, ஆதி

பல்லவி.

தந்திக்கொண்டுபிரம கத்திவரகுணனைச் சுற்றிவந்ததுகேளும்நற்றியே

சுற்றித்தலைமயிர்வி ரித்துப்பு கையெழுமு
கத்தைக்கொடுவக்கிரதந் தத்தையளித்துத்தத்தித் தந்தி

சரணங்கள்

க முன்னேசென்றாற் பின்னே முடுக்கும் இருபக்கமும்
மோதிநிழல் போலேகூடக் கூட அடுக்கும்
முறுக்கும் மீசையைத்தொட்டே யுறுக்குங் குகைபோலவாயைத்
திறக்குஞ் செக்கலிகொட்டிக் குறுக்கும் நெடுக்குமாக
முதிர்ந்தமலைநேருருவந்தத்திடி அதிர்ந்ததெனவா ஞெலியும்செய்திவை (தத்தி

உ வாரும்பிள்ளா யென்று சொல்லும் சீக்கிரத்திலே
வன்பழிதா வென்றுவாயை வாயை மெல்லும்
வாங்கும் பெருமூச்செறிந் தோங்கும் வெகுதூரத்தில்
காணும் பக்கத்திலேவந் தோங்கும் கையையெறிந்து (ம் தத்தி
சிறந்தவொருவன் முசலங்கொண்டுகை அறைந்தழுதுபின் நகையுஞ்செய்தின

௩ கிட்டிவந்து கையைப் பிடிக்கும் இழுக்கும்விடும்
கெம்பிக்கெம்பி வந்ததம்பிப் பல்லைக கடிக்கும்
கேளுந் திசைகள்தோறும் சூழும் உருப்பிசகித்
தாழும் நெருப்புப்பொறி வீழும் கண்ணையுருட்டிக் (தத்தி
ளம்பியெழுமுன் படரும்பின்குதி கொளும்பெரியமை யுடலோடிவ்வகை

பிரமகத்திநீங்க வரகுணபாண்டியன்சாமியைவேண்டுதல்

வலியபழி சூழ்ந்திடத்தென னவன்மா சுண்ட
மணிபோலும் பாம்பினவாய் மதியைப் போலும்
மலமுறத்தேர்ந தந்தணர்பார்த் தரசே யுன்றன்
றஸ்தகத்தில் விதித்ததற்கா லவாய்ப்பி ரானை
வலமுறநா ளொன்றினுக்கா யிரத்தெட் டெண்ணி
வருகிலிது நீங்குமென்று ரந்த வாறே
விலகுமென்றே ரந்தணனீ லைந்து நாளில்
விதித்திடக்கேட டய்யன்முன்போய் விளம்பி னுனே.

எமுனுகல்யாணி, ஆதி.

பல்லவி.

போலேயெ மாபாதகமும் போக்கடிப்பாயே

அநுபல்லவி. (துபோலே
மாலயனோ டோலமிடும் கோலத்தைக்கண்டு நஞ்சையுண்டு காத்திர்பண்டு அ

சரணங்கள்.

க ஆதியிலே வேதியன்மா பாதகம் தீர்த்தாய்
பின்னுங்காத்தாய் கதி சேர்த்தாய் அதுபோல

உ இந்திரனைத் தொடர்ந்தபழி சிந்திட நீயே
எதிர்த்தாயே தொலைத் தாயே அதுபோலே

௩ அண்டியமார்க் கண்டனுக்காச் சண்டன்முன்நின்றாய்
உதைக்கின்றாய் ட்சணம் வென்றாய் அதுபோலே

விருத்தம்.

வருந்திமன்ன னிவ்வாறீ ரைந்து வைகல்
 வனைந்திடப்பார்த் தய்யன்விண்ணின் றரசே யெம்மைப்
பரிந்துநிதம் வனைவதற்கோர் அசுவ மேத
 பலனிலுமேற் கொண்டோம்இப் பழியோ வென்றால்
விரிந்தபடைச் சோழன்அமர்க் கடுப்பான் நீயும்
 வெகுண்டெழுந்த வனைத்துரத்திப் பிடிப்பாய் போற்சென்
றிருந்தெதைமயாம் அருச்சிக்கும் தலஞ்சென் றுற்போம்
 என்றுதான் சொன்னதுவாக் கொன்று தானே.

காம்போதி, சாப்பு.

க தேவதேவனருட்பெற் றேவரகுணத்தென்னன் பணிந்தான் பணிந்
தாவலுடனிருக்கை மேவியிருந்துமன துவந்தான்

உ சிலநாட்செனறபின்சோழன் சலதிபோற்படையுட னெழுந்தான் கூடல்
தலமீதுபாண்டிகா வலன்மேலமர்புரிய வனைந்தான்

ங அந்தவகைதென்னனறிந்தமர்புரிந்துவி லக்கினன் பெருஞ்
சிந்துவினுக்குளொரு மந்தரமெனவேக லக்கினன்

ச கலக்கச்சேனையுடனே மலைத்துச்சோழன்முதுகிட டோடினன்தென்னன்
வலுத்துக்குதிரைமேற்சென் றுரத்துப்பிறகேபற்றிச் சாடினன்

ரு நிறையும்மலர்களிரு புறமும்துலங்கும்பொன்னி கூடினன் புகழ்
நிறையுந்தைமதிப்பூசத் துறைகண்டுளமகிழ்ச்சி சூடினன

சு புண்யதேசமும்மேலும் புண்யதினமுநேரக கண்டான் கூடப்
புண்யஸ்தலமுந்துய்ய புண்ய காலமுந்தெரி கின்றான்

எ சங்கற்பவிதிமுறை யங்கத்துடனேமொழிந் தாடினன் மனச்
சஞ்கையறவேலகு அங்கத்துடனய்யனைத் தேடினன்

வரகுணபாண்டியன் துதி

விருத்தம்.

மாநதிதோய்ந ததன்தெற்கா லயத்தின் கீழ
 வாசல்கடந் துட்புகத்தன பழிபா வங்கள்
ஆனதுடன் புறங்கிடக்கச் சுருதியாம் வண்
 டதுபுறஞ்சூழ்ந் தரற்றமரு திடையில் வாழும்.
தேனைவிழி வாயங்காந் தருந்தித் தாழ்ந்து
 தியடுத்த நவநீதப் பாவை போலே
தானுருகிச் செயலுரையற் றுணர்வாய் நின்று
 சாற்றுவான் வரகுணன்றேர்ந தேத்து வானே.

ஆனந்தபைரவி, ஆதி.

பல்லவி

இருபாதிதியேசரணம் ஏனைத்தொடர்பு ழிபாலந்தீர்த்தோய்சரணம்

அருபல்லவி வளர் கிருபா
கிருபாகிதேராஜத சபாபதியே தொண்டர் உபாதிநீக்கிடும்ஸ்வரூபா மருதில்
சரணங்கள்
பராபர புராதன ஹரா சூல பாணி கொன்றை வேணி நாக
தராசோமசேகரா திரிபுர ஹரா சங்கரா சுந்தரா மருதில்வளா கிருபா
வேதாவும்தாமோதரன்விண்ணுதாதியென்னும்விண்ணவர்கள்நண்ணரிய
பாதாஉமைமாதா லீலாவிநோதா சுபோதா நன்னீதா மருதில்வளர் கிருபா
மாலாப் பலநூலாய்ந்திடு மேலார்புகழ் மாமிருக்தசாமகான
லோலாபத்த பாலா கால காலா னுகூலா திமூலா மருதில்வளர் குபா

இப்படிக்குத் துதிக்கநெடு கிலுமென் பத்த
ரேறேநீள் வாயலிலே பிரமச் சாயை
நிற்பதநிற் செலவேண்டாம் மேலைவாயால்
நீங்கிநங்கூடலுக்கேகென் றுகா சத்தோர்
சொற்பிறக்கத் தெரிந்துமரு தினைவ ளைந்து
சூழ்ந்தவாய் தோறுமடிக் கடிவீழ்ந் தேத்திப்
பொற்புறுமேல வாயல்செல்வான் தன்பே ராலே
புதிதாக்கோ புரந் தென்னன்புனைவித் தானே.

திருமணிக்கோ புரமுதலாத் திருப்பணிமென் மேலே
தென்னவர்கோன் தனபெயராற் செய்தெழுநிப் பாலே
பரவியதென் றிசைகுறித்துப் பயணம்செய்தன் பாலே
பரன்கோயில் வழிதோறும் பணிந்தேயொருக் காலே
புகழ்பெருகும் மதுரையென்னும் பொன்னகர டைந்தான்
போக்கரிய பழிதொலைத்த புண்ணியனைப் பணிந்தான்
வகைவகையா மேறகட்டிசா மரைதுவசங் கவிகை
மாமுடிகோ ளகையணிகள் வஸ்திரங்கள் சிவிகை
பத்தியுடன் இதுமுதலாப் பரிந்துபரிந் திந்தான்
பார்புரநதே யாறிலொரு பங்கெடுத்து வாழ்ந்தான்
அத்தனடி யாரறவோ ரனைவருடன் அடுத்தான்
அரனபுகழைச் செவிக்கமுதா யனுதினமு மடுத்தான்
விருத்தம்
வழுதியிவ்வா றிருக்கையில்வே தாக மாதி
வழுத்துவதிற் பெரிதுருத்ர லோக மென்றே
மொழிவதுகேட் டப்பதியைக் காண வேண்டும்
மோகமுடன் சேல்விழிநா யகன்முன் சென்றே
எழுபவநீங் கியவடியார் சூழ நீவீற்
றிருந்திலகும் சிவபுரத்தைக் கண்டேன் பாதந்
தொழுவதற்கோர் கருத்தெனக்குண் டென்று சொல்லத்
துணிவின்றுள் அன்புடனே பணிகின் றானே.

வரகுணனுக்குச்சிவலோக

இதுவுமது

வரகுணன்வேண் டியபடிநஞ் சிவலோ கத்தை
மதுரையிலே காட்டிவைப்போ மென்றே அய்யன்
திருவுளத்தி லோர்ந்திடுங்கால் கோடி திங்கள்
திரண்டுதித்தாற் போலுதிக்கச் செய்து நாதன்
பரிவுடனந் தியையழைத்தெம் பாலன் புற்ற
பாண்டியற்கு நமதுலகைப் பண்பாக் காட்டென்
றருளினு ரந்தவண்ணம் நந்தி தேவர்
ஆங்கவற்கு விதிப்படியே யறிவித் தாரே.

மத்தியமாவதி, சாப்பு

க சுருதிமாலயன் தேடியுங்காணுத சோதிர்மயானந்த மாகவிளங்கிய
பருதியாளுஞ் சிவபுரத்தையுற்றுப்
பாண்டியனே நேராய் மனத்தன்பு பூண்டிதனைப் பாராய்

உ பத்தைந்திருபது யோசனைவாசிக்கும் பங்கயப்பூவிதழ்நூ றுயிரத்துடன்
சித்தஞ்செழித்திருக் கும்மலரோடைகள்
நீடுவதும் நேராய் பலநதி யோடுவதும்பாராய்

௩ சுரும்பிசைக்கிணை யாகவேநாரத தும்புருவேழிசை கூடியவீணைகொண்
டிரும்பும்நீரா யுருகவிசைக்கின்ற
இன்னிசையும்நேராய் மொழிகின்ற நன்னிசையும் பாராய்

௪ பொன்னரவிந்தத் தடமும்மரதகப் பூஞ்சோலையும்அமு தவாவியும் ஒளி
தன்னில்மிகுந்திருள் ஓட்டிடவானவர்
தங்கும்பதம்நேராய் சிறந்துவி ளங்குமிதைப்பாராய் (யும்

௫ இலங்கும்பாற்கடல் போல்நீரகழு மெயிலும்பொற்கோபுர மும்மணிவீதி
துலங்கும்கொத்தள மும்நிரையாகிய
சூழிகையும்நேராய் உயர்நதிடும் மாளிகையும்பாராய் (ள்தொறும்

௬ வெம்பியநால்வகை யுண்டியுமாடலும் வீணையும்சாந்தும்பொன் னூரமும்நா
ஐம்புலத்துக்கும் விருந்தாகவேகொண்
டருந்துவதைப்பாராய் சித்திரம்போற பொருந்தியதைப்பாராய் (யும்

௭ தங்குமுருத்திர மின்னூருடன்ருத்திரர் சார்ந்திருக்குமுயர் மாளிகைப்பந்தி
புங்கமிகுஞ்செல்வ முங்கலையில்லாப்
போகத்தையும்நேராய் அவர்பெற்ற யோகத்தையும்பாராய்

௮ புண்டரீகாட்சன் பதமிதுவேதன் புரமிதுருத்ரத் தலைவர்பதியிது
எண்டிசையிலுள்ள காவலர்தங்கி
இருப்பதிதுநேராய் மனதில் விருப்பமுடன்பாராய்

௯ அடுத்துநீராடி வெண்ணீறணிந்தர னுலயம்சென்று விளக்கிமலர்கொய்து
தொடுத்தரனபுகழ்கேட்டுவந்திங்கு
சுகிக்கின்றனாநேராய் ஸாலோகத்தி ருக்கின்றதைப்பாராய் (டிய்யனை

௰ சத்திபூரணி ன்னும் புறம்புமொன்றாகவே ஷோடசோபசாரத்தோடேயும்

பத்தியுடன்கர ணங்குவித்தர்ச்சனை
பண்ணினவர்கோராய்ச் சாமீபத்தை நண்ணியதைப்பாராய் (
கக காற்றினல்வன்னியை மூட்டியிடைபிங் கலைநடுப்பாதை யெழுமதியி
ஊற்றமுதுண்டு நம் மீசன்வடிவை
உளங்கொண்டவர்நேராய் சாரூப வளங்கொண்டதைப்பாராய் (
கஉ பகவன்மூலம் மகம்செய்தவேதியர் பாரிவர்நீர்ப்பந்த லாதியாம் த
புகழ்மறந்து நிராசையினாலே
புரிகின்றவர்பாராய் வினையைப் பிரிகின்றதைப்பாராய் (
கங உறுதிநீறணி மெய்யினரைந்தெழுத் தோதியநாவினர் ஈசன் புகழ்
முறைமையுள்ளவர் வினைவலியை
முடுக்கவந்தோர்பாராய் இங்குவந் தடுப்பதனைப்பாராய்
கச தவளநீறட்ச மாலையணிந்தவர் தங்குறியுங்குல மும்குறிக்காமலே
சிவனென்றெண்ணும்அன் பாலேபிறவிநோய்
தீர்ந்தவர்கள்நேராய் இவிடத்தில் சார்ந்ததனைப்பாராய் (தின்ன முதுட்டி
கரு தொண்டருக்காவன செய்தோரரனெனத் தொண்டரைப்பூ சைசெ
தொண்டர்பணியே தவமாயுயர்ச்சியைச்
சூட்டினவர்நேராய் எழுந்திங்கு நாட்டினதைப்பாராய் (ப்வித்
கசு ஆலவாயீசனுக்காலயஞ்செய்வித் தணியவும்செம்பொற் பணிகளும்
ஞாலத்தையாண்டிங் கடைந்தவுள்வங்கிஷ
ராசர்களும்நேராய் நமதய்யன் நேசமுற்றார்பாராய்

## வரகுணன்சிவலோகநாதரைத்தரிசனம்செய்தல்

விருத்தம்.

நந்திவேத் திரங்கொண் டிவ்வண் ணஞ்சிவ லோகங் காட்டிச்
சிந்தையில் அன்பு பூண்ட திருத்தொண்ட ரெதிர்வந தேத்த
அந்தமா தியிலான் முன்சென் றறியென விடுக்கத் தென்னன்
வந்துமா முடிமேற் செங்கை வைத்தவ னெதிர்கண் டானே,

தோடி, ஆதி

பல்லவி

தேவதேவேசனைக் ககண்டானே கண்டுமகிழ்ந்து
தென்னர்கோனைந்தங் கொண்டானே

அநுபல்லவி.

கூவுமறைசைவாக மாதிவடிவம் நீடக்
கொண்டிருபக்கத்திலும் நின்றுவந்தேத்திக்கூட
ஆவலுடன்தும்புரு நாரதரிசை பாட
அரம்பையராடத்தேவர் பதங்கிடையாமல் நாட

சரணங்கள்

தந்திமுகமைந்தனும் தாருகனைப் பொடித்த
கந்தனுந்தக்கன்வேள்வி கலைத்தவீரபத் திரனும்
தந்தம்முடிமாலைத்தேன் றுளிற்சிந்தத் தொழுது
பத்தியாகநின்றேவற் பணிவிடைசெய்து நிற்கத்

உ தொங்குந்தானையொதுக்கித் துணைக்கைகொண்டுவாய்பொத்திப்
பங்கயன்மால்தங்குறை பகர்ந்தேயொதுங்கிநிற்க
அங்கமுடனிந்திராதி யஷ்டதிக்குப்பாலரும்
கங்கில்நின்றுதாஞ்செய்யும் காரியக்குறைசொல்லத் தேவ

ங தண்டும்வளைதடியும் தரித்துப்பல்லையதுக்கி
மண்டும்பைசாசத்தலை வருமல்லாதொருகோடி
சண்டனஞ்சவேசூலம் தாங்கிப்பூதருங்கூடிக்
கொண்டுதலைவாசலிற் குவிந்துகாவலாய்நிற்கத் தேவ

ச சித்தசாரணர்கந் திருவர்கருடர்தோளில்
வைத்தயாழினர்வான வர்தானவரியக்கர்
உற்றமாதவர்நாக லோகர்கிந்நரரின்னம்
சுற்றயோகியர்முதல் சூழ்ந்தெல்லோரும்பரவத் தேவ

ரு இருவினையறுத்தெம்மை யிரட்சியெனத்தமனபிற்
பெருகிவருங்கருணைப் பேரமுதையானந்த
அருவிவரும்விழிவா யாலுண்டுடல்குளிரத்
திருமுனிவர்சங்கர சிவனென்றேதிமுழங்கத் தேவ

சு தூயவரந்தப்பாமற் றொழுதுவேண்டுமியாவர்க்கும்
ஈயும்வரன்முறையால் ஈந்திடத்திலெப்போதும்
தாயுமையாள்முகத்திற் றவளநகையரும்ப
ஆயிரங்கதிர்வீசும் அரியாசனத்தின்மேலே தேவ

விருத்தம்.

வரகுணனிவ் வாறுசிவ லோக நாதன்
மலரடிகண் டிறைஞ்சியுரோ மஞ்சிலிர்ப்ப
உரைகள்தடு மாறிடவே கருணை யாகும்
உததியிலன் பாறிழுக்க மிதந்து போகிக்
கரையிறந்த வானந்த வமுதை யுண்டு
கரணமுமைம் புலன்களுந்தன் வசமாக் கிக்கொண்
டரியபே ரன்புடம்பு பூண்டு தன்னே
ராக்கணடான் பின்புபண்டு போற்கண் டானே.

இதுவுமது

பின்புமது ராபுரமாக் கணணிற்கண் டெம்
பிராட்டியுடன் பிரானும்பண் டிருந்த வண்ணம்
பண்புயர்சுந் தரமூர்த்தி யாக்கோ யிற்குட்
பதிந்திருக்கப் பார்த்தீசன் அருளால் வந்த
தன்பெருமை யாய்ந்துவகை மனங்கொள் ளாமற்
றனதன்போ டிசைந்துவெளிப் பட்டாற் போலே
கண்புனல்த தும்பிடநாக் குழறத் தாழ்ந்து
கதிக்கின்றான் அஞ்சலித்துத் துதிக்கின் றானே

நிலைமண்டில ஆசிரியப்பா

அரகரசிவனே யாண்டவா சரணம்
புரகரவுரகம் பூண்டவா சரணம்
ஆலவாய்விளங்கும் அண்ணலே சரணம்
மாலயன் அறியா வள்ளலே சரணம்
என்னைவந்தருட்டும் இடும்பழிமாற்றி
அன்னைபோற்கருணை அளித்தவா சரணம்
கண்டிடாச்சிவலோ கந்தனைக்காட்டி
பண்டுபோலருளும்கிரு பாநிதே சரணம்
முடிவிலா நரகில் மூழ்கவைக்காமல்
அடியனுக்காரன் பளித்தவா சரணம்
தொல்பிறப்பேழும் தோற்றம்நாலாகும்
பல்பிறப்பகற்றும் பரமனே சரணம்
உலைவிலா வினைவே ரறுத்கியேசந்திர
குலமதைவிளக்கும் கோவே சரணம்
அங்கமாயடியார்க் கருள்சிவபுரத்தை
எங்களுக்கறிவித் திசைத்தவா சரணம்

விருத்தம்

ஏத்திநின்ற வரகுணனய் யனுக்குப் பொன்பூண்
இசைத்திருந்தா னெனக்கேட்டம் முனிவோ ராங்கே
வாய்த்தகும்ப முனிவனைப்பார்த் தன்னுள் இந்திரன்
வன்பழியன னையைப்புணர்ந்தப் பனைக்கொல் பாவம்
தீர்த்ததென் மதுரையிலே நடந் திருக்கத்
தென்னவன்றன் பழியையிடை மருதூர் தன்னில்
போய்த்தணித்த காரணமியா தென்று கேட்கப்
புந்திமகிழ்ந் ததின்விபரம் புகலு வாரே

இதுவுமது

குன்றைவில்லி தனதடியார் பாத கத்தைக்
கூடலிற்செய் யாதொழுகும் படி நினைந்து
வென்றிவர குணன்பழியை மருதூர் தன்னில்
விலக்கிவைத்தா ரென்றிடக்கேட் டகங் களித்தார்
அன்றுதொட்டு மதுரைசிவ புரமெனப் பேர்
ஆனதிந்த லீலைதனை படிப்போர் கேட்போர்
கொணறபழி பாவமகன் றமரில் வெற்றி
கூடியிருந் தாருலகில் நாடு வாரே

விருத்தம் ௰௬, அகவல் ௧, கீர்த்தனை ௬, தரு ௪, ஆக ௨௭, முற்றும்



நாற்பத்தோராவது;

## விறகுவிற்றபடலம்

அவதாரிகை—விருத்தம்

மறுவளா கண்டன் பாண்டி மன்னனுக் கால வாயில
முறையினுல் சிவலோ கத்தைக் காட்டலே மொழிந்தே னிப்பால்
பொறைமிகும் பத்திர னுக்காப் பூமிசை நடந்தா னாகி
விறகுவிற் றுடல் செய்த விசித்திர மினிச்சொல் வேனே.

### ஏமநாதன்மதுரைக்குவருதல்.

விருத்தம்.

இத்தரணி முழுதும்வர குணத்தென் னன்கோல்
ஏந்திமக வான்போலே விளங்கும் நாளில்
உத்தரத்தி லிருந்தேம நாத னென்னும்
ஒருவீணு கானவல்லோ னென்றெங் கெங்கும்
மெத்தவெற்றி கொளும்விருது பட்டுக் கூற
மிகவீறு டனேசோழ னிடத் திருந்து
சித்தனருள் பெற்றமன்னன் சபையிற் செலல
நேர்ந்திட்டான் மதுரைநகர் சேர்ந்திட் டானே.

மத்தியமாவதி, ஆதி.

பல்லவி

ஏமநாதன் வந்திட்டானே பாண்டியராசன் கோமனை புகுந்திட்டானே

அநுபல்லவி.

பூமியிலுள்ளமன்னவர் மாமிகுஞ்சபையிற் சென்று
மேன்மையாப்பெற்றபரிசை யேமிகப்புகழ்ந்துவந்து ஏம

சரணங்கள்

க எழிலுடன்வீணையெடுத்துத் தழுவியேசு ருதிசேட்டி
வழுதிகாதி லேயின்னிசை பொழியும்அ முதம்போலூட்டி ஏம
உ தென்னவன் மகிழ்ந்துமுடி தன்னையசைத் துப்புகழப்
பொன்னிழை மணிப்பூணாரம் உன்னதமா கப்பெற்றிட ஏம
ந ஆனைகுதி ரைகள்முதல் ஆனபரி சுகள்பெற
மானமேற்கொண் டுகானததில் வல்லவாய லர்கள்சூழ ஏம

விருத்தம்.

ஏமநா தன்வந் தேவழு தியின்பால் இசைந்திசை புரிந்துசம் மானம் (வில்
ஏற்றொரு விடஞ்சென் றிசைவலார் தம்போல் இல்லெனச் செருக்குறு மள
கோமகன் றனது பத்திரனை யழைத்துக் கூர்ந்தேம நாதனுக் கிணையாக்
கொண்டுநீ பாட வல்லனோ வெனலுக் கூடல்நா யகன்றிரு வருளால்
யாமிசை பாடி யவன்விரு துடன்வீ றிழந்திடச் செய்குவே மெனவே
இனியிசைநாளைப் பாடலா மெனத்தேர்ந் தில்லில்வந் திருந்திடும் போது

மாமணிவீதி வீதியா வந்த வாணர்கோன் தமரிசை கேட்டு
வரும்பெய ருரைக்கும் வண்மையா லுளத்தில் மலைத்ததி சயித்திருந் தனனே.

## சுந்தரேசர்விறகுவிற்கவருதல்

விருத்தம்

பாணர்கோன் பத்ரனிவ்வா றறிந்து நாளைப்
பாடிவெல்ல தெவ்வகையென் றெண்ணி யன்பு
பூணுமது ரேசனைத்தாழ்ந் தடியேற் கின்று
பூங்கருணை செய்வாயென் றிரங்கில் வந்தான்
நீணும்வருத் தத்துடன்வந் திரந்தோன நெஞ்சில்
நினைந்தவண்ண மேமதா தனைச்செ யிக்கத்
தோணியொரு விருத்தவடி வம்பூண் டன்பு
தொடுக்கின்றான் விறகுசுமை யெடுக்கின் றானே

பரசு, ஆதி

பல்லவி.

விறகோவிற கெனச்சொல்லிக்கொண்டு வீதியில்வந்தான் தொண்டர்
வேண்டும்படிக்கே யருளும்திருவால வாயில மர்ந்தான்

பிறையணிமுடி வருந்திடச் சுமை
பெரியதென்றும் உலர்ந்ததென்றும் பின்னும்
திறமாமின்றே யெரியுமென்றே சொல்லித்
திண்ணமுடன்நாலாம் வர்ணவுருப் பெற்று விறகோ

சரணங்கள்

க தலையிலணியும் வெண்பிறையிது தானோ வென்ன இடை
தனில்வலப்பக்கத் தொருகொடுவாளைச் சொருகிமின்ன
அலையமுக்கடைந் தரையில்விளங்கக் கஞ்சன்திருமால்தேடிய
மூலரடிக்குப் பழஞ்செருப்புந்தொட்டு வண்ணமயிற்றோகை பின்னேசெருகியே
விறகோ

உ கிழிசலாயொரு பழயகௌசிலை போர்த்தி அங்கத் தோளிற்
கேளும்புராதன மாயொருவீணையை மாட்டித்தொங்கத்
குழையணிந்திடும் இருசெவியிலும் குண்டலம்போற்றறிக் கின்றபசுங் காயும்
தழையுங்கேசம் சரியச்சுமையடை தன்னைக்கொடியாலே பின்னி வைத்தணிந்து
விறகோ

௩ செறிந்தவிந்தனம் எடுப்பவன்போல்முன் சென்னியதுங்க பின்
சென்னிமேலேநெடி தாகியபங்கி பறிந்து பிதுங்க
சிறந்தசோதி மாலையைத்தமது திருவுரத்திரு பாலுமணிந்துகொண் (வைத்து
டறைந்தகங்கைக்கும் மெய்யுறைமங்கைக்கும் அறிந்திடாமல் திருமுடிமேல்
விறகோ

௪ ஆக்கையிளைத்தா காரமில்லாமல் என்புதோனக் கண்டோர்
அகங்கனிந்தன்பு தோன்றியேவந்தி ரங்கிக்காண
ஏர்க்கும்திருவ தனத்திலேவெயர் வெழும்பமலர்வாய் குவித்தொலியிட்டு
வாக்குமனத்துக்கெட் டாததிருத்தாளை மாநிலப்பெண் தவத்தாலேமுடி சூட
விறகோ

௫ எடுக்கவரிய சுமைக்கனங்கொண்டி ளைப்பினாலே மெள்ள
இறக்கிநெடுமூச் செறிந்துகற்சுமை தாங்கிமேலே
அடுக்கமடுநீர் குடித்தலைச்சூ டாற்றியிருகாத் தாலுமடிக்கடி (விறகோ
எடுத்தெடுத்தெடுத் தேந்தி யேந்திமிக ஞாயாமணியாக வேவிலையைச் சொல்லி

விருத்தம்.

இந்தனமிவ் வாறுசுமந் தடுத்துக் கேட்போர்க்
கிசையாத விலைபகர்ந்தே ராச வீதி
சந்துமுடுக் குகள்தோறும் சென்று சென்று
சதுமுகன்மால் தேடரிய முக்கண் மூர்த்தி
புந்திமகிழ்ந் திசையில்வெல்லும் ஏம நாதன
புக்கமனைத் தலைக்கடைவா சலையே நாடிச்
சிந்தையுவந் திந்தனமூட் டையுடன் வந்து
சேர்ந்திட்டான் மாலைவரத் தேர்ந்திட் டானே.

கெண்டை, சாப்பு.

௧ நீலக்கழுத்தன் விறகுசுமையை றக்கினான் அப்போ
மாலைப்பொழுதென்னும் மங்கையுருவம் ராக்கினாள்
௨ தங்கணவன்பிரி வாற்றாமையாற்கண்ணீர் வடிய செய்ய
புங்கயங்கூம்பப் பருதிமேலைக்கடல் படிய
௩ மங்கைமணாளன் வருமுன்னழைப்பது போலே வாயைச்
செங்குமுதங்கள் திறக்கமதிவர மேலே
௪ வண்டினந்தம்பெடை வாய்த்தேனருந்தியே யடுக்க வந்து
தண்டாமரைப்பள்ளி யிற்சயனித்துக்கண் படுக்க
௫ வானரக்கூட்டம் மரத்தின்முழைக்குள்ளே யொருங்க பல
ஆனினங்கன்றுக்கி ரங்கிமனைதோறும் நெருங்க
௬ ஓதியவோலைக் கணக்கொலிக்கின்றது மோயச் சேரும்
காதலர்நெஞ்சத்திற காமனெரிகணை பாய
௭ பட்சிகள்வாய்புதைத் துப்பேடைதன்னுடன் விளங்க இரு
பட்சமதாலே யணைத்ததிகூட்டிலவந் திணங்க
௮ கூவியவாரிதி யாகும்கரும்படம் மூடம் பூமி
தேவிதுயில்வது போலேயிருள்மெள்ள நாட

விருத்தம்

மாலைவரத் தெரிந்தொருபால் விறகைச் சார்த்தி
வைத்தடுத்த திண்ணையிற்சார்ந் திளைப்பாறும் றிக்கொண்
டேதும்வீ ணையையெடுத்துப பாடினான் கேட்
டேமநா தனும்இசைபா டுவரியா ரென்றுநே

ஆலமுண்டோனை முன்னேவந்து நீயா ரென்றான்
அரிபிரமன் முதற்றனக்க டிமையாட் கொள்வோன்
ஆலவாய்ப் பத்திரனுக் கடிமை யாளென்
றறைகின்றான் தொண்டருளத் துறைகின் றானே.

சுந்தரேசர்வீணாகானம்பண்ணுதல்.

பத்திரன்கீழ்க் கற்பவர்அ னேகம் பேரால
பாடக்கேட் டியானும்சில பாட லானேன்
புத்தியிலலா வெனைநோக்கி வயது மூத்தாய்
புரியுமிசைக் காகாவென் றவனி கழ்ந்தான்
இத்தொழில்பூண் டெனதுதரம் வளர்க்க லானேன
என்ன இசை வளநதெரிந்த வேம நாதன்
சித்தமுழுந் தினியொருகாற் பாடென் றோதத்
திரும்பியும்அவ் வாறய்யன் செப்பு வானே.

ஆனந்தபைரவி, திரிபுடை

பலலவி

வீணா கானம்பண்ணி னானே ஜெகதீசன் வீணா கானம்பண்ணி னானே

அநுபலலவி

கோணமலே தந்திரியோடிசை கூடையிற்றளிர் கொண்ட திலவண்டுகள் (வீணா
பார்ணூர்ந்திடும் நாதமுந்தனித்தனிப் பகுத்தறிவோரும் அறியாமல் மயங்கிட

சரணம்

க உதரங்குழியல் அழுமுகங்காட்டல் ஓங்கும்புருவம் கோணலதலையாட்டல்
பதியுமிடறு தடித்தலகணணுட்டல பற்கள்தெரியும் படிக்குப்பாரா ட்டல (ரும்
இதுவன்றிவாயங் காத்தலெனசசொலலுமிவ் வெட்டுமெவ யவத்தொழிலால
அதுசெயிரறப்பாடககணடியாவரும் அமரர்களைப்போலேயிமைக்காமற்கேட்க

உ வெள்ளைமந்த மாயெழுமோசை வெடிகுரல்மூக் கடைத்தல்கீ ழோசை
உளளம்செரிந் திரட்டிக்குமோசை உரைக்குந்நெறியைக் கடநதபேரோசை
விளளும்பெருமூச்சோடலிளைத்தலிதவிதமாகும்துள்ளலென்றிவ்வயாமெட்டு
துள்ளியபாடல் தொழிற்குற்றம்நீககியேஉசிதமுசித மாகமதுவொழுக

வீணாகானம்

ங மந்திரமத் திம்தாரமிணைந்து வாகுடன்துளளல் தூங்கலகண்டறிந்து
சிந்தைதிருநதி மெலிவதுதெரிந்து சிறப்புடனு ரஈயந்துளம கிழ்ந்து ஆ
உத்தியிலிருந் தெழுமிசையோடமு தொழுகவேபாட லோசையும்வழுவாமல
அத்தமுடனே விருந்தெனக்காதுகொண்டி யாருமருந்திச் துதிக்கவருள்புரிந்து

ச பாதபங் களுஞ்சலிக்காமல் பருப்பதத்தரு வியுஞ்சலிக்காமல்
ஓதமிகுக்கடலுஞ்சலிக்காமல் ஓம்கிறந தியுஞ் சலிக்காமல் ஆ
வேதனுமாலும்பரமானந்த வேலைபடிய விணணவர்கோனுடல் (வீணாகா
லவிழி போலவே காதுகள் விளங்கப்பெற்றோ மிலேயே யென்று வருந்த

விருத்தம்

சந்தமுட னிந்தவண்ணம் கானம் பண்ணிச்
சராசரமுந் திசையுநதன் மயமா யாக்கிச்
சிந்தையுமக் கழமுருக வேம நாதன்
செவிவழியா லைம்பொறியும் புகுந்திடச் செய்
தந்தரிமி ஷந்தனிலே பத்ர னோவல்
ஆளாகவுந்தவரெப் போதும் பேலே
இந்தனபா ரத்துடனவ் விடம்விட டிம்மென
றேகினர் பழயவடி வாகி னரே

ஏமநாதன்பாபந்துஒட்டம்பிடித்தல்.

இதுவுமது

செழித்தவள்ளல் மறைநதிடபபார்த் தேம நாதன்
சிந்தைதளர்ந தெழுந்தருணடித் தேவ கானம்
வழுத்தியது முக்கணனே யல்லால் வேறோர்
மானிடரா லாமோவென றதிச யித்துப்
பழுத்தகிழ மகனபாட்டிப் படியா னலப்
பத்திரனபாட டெப்படியோ வென்றே சூழகத
குழுக்களுக்குவ குலேகுலேந திடவச சத்தைக்
கூடினன் இருளவழிக்கொண் டோடி னனே

நாதநாமககிரியை, ஆதி.

பல்லவி.

எடுத்தானேயோட்டம் ஏமநாதன விடுத்தானேகூட்டம்

அநுபல்லவி.

மடக்கியபலகலை அடக்கிய பேழையும்
தொடுத்தபணிப்பேழையும் எடுத்தவன்றனியே எடுத்தானே

சரணங்கள்.

க நற்றியவீணைய விழ்த்துவெடுத்தது சுற்றிலும்வைத்தவி டத்திலேகிடக்க
முறறியமானமும் உற்றிடும்அச்சமும் பறறிபிழுத்திட உத்தரம்நோக்கி
எடுத்தானே (கயராக

உ கவிகையொருவழியும் சிவிகையொருவழியும்கவரியோர்வழியுமாக் குவிகை
சவரியோர்ஓர்வழியும் அபிமபரோர்வழியும்உவகையிழந்துபா தவித வித்
எடுத்தானே (தலைய

பாணபத்திரன்துதி

விரைந்தேம நாதனிவ்வா றகன்றான் கூடல்
விமலனன்றே பத்திரன்சொற்பனத்தில வந்து
பரிந்துவிற கெடுத்துன்றன் அடிமை யென்றே
பாடினேன் கேட்டகன்று னென்று கூறத்

தெரிந்துவினைக் கரியசொற்கேட் டெனெ ழுந்து
செங்கதிரோ னுதிக்குமுன்னே யைந்சேர்ந் தன்பு
சார்ந்தமன்றப் பொருள்யடியைக் கண்ணுற் றானைத்
துணிந்தெழுந்து பணிந்திரங்கிச் சொல்லு வானே.

ஆனந்தபைரவி, சாப்பு

பல்லவி

இந்தகோவந்தேன் சாமீ அடியேனகுன்ற மிரக்கவந்தேன் சாமி

அநுபல்லவி

மதிக்கொழுந்தையணியும் மதுராபுரநாதனே
கதிக்குமெதற்குமூல காரணனுவனே நாடி

சரணங்கள்

க காரிருள்நெருங்கிய கானகத் தடிக்கவோ
காஷ்டம்பிளந்துகைக்கொப்பளித்துநோவெடுக்கவோ
ஆரணத்தரும்பொருள் மொழிந்தசெங்கனி வாயால்
அடியேன்மூலமாயிழி வானசொல் விடுக்கவோ

உ நீண்டவன்முதலான சகலதேவருந் தேடி
நிகமமாகியகிரிச் சிகரங்களுங் கூடி
காணடரியவொண்ணுநின் கமலத்தாள்நடந் துளம்
காலவெனவெளெழும்பாத்தேய வோவிரைந்துனைத்தேடி

ங இசைகொளும்விதிக்கும் எட்டாதமுடி மேலே
ஒச்சமாகவிறகு சுமைசுமந்தொருக் காலே
தச்சணடித்ததலை வாசல்தோறும் திரிந்து
உச்சிகுழியவோநான் நச்சிவந்ததுன் பாலே

ச ஆதிமடுமுடிவும் கடந்துநின்றமெய்ஞ் ஞான
ஆனந்தபோதசித்தி யானந்தமய மான
சோதியதனைமறைத் தொருமணிதனைப் போலே
சுமைசுமந்துடல்வருந் திடவோவுரைக்க

கன்னிபுரே சனைத்துதித்து வந்து பத்திரன்
காவலனைப் பணிந்திடப்பார்த் தேம நாதனை
தன்னையழை யெனத்தூதர் போய்க்கா ணுமல்
சார்ந்துவிசா ரித்திடகேற் றிங்கி ருந்தான
பின்னேயொரு கிழவனிங் கவஞ்சு மந்து
பெயர்பெருகும் பத்திரனுக் கடிமை யென்றே
பண்ணிசைவீ ணையையெடுத்துச் சுருதி கூட்டிப்
பாடினனு எனசிலர்சொல லாடி னரே

இதுவுமது.

பாடியபின் னடந்ததறி யோம்இன் றைக்குப்
பயந்தோட்ட மெடுத்தானென் றிடக்கேட் டொற்றர்

ஓடியர சனுக்குரைக்க அனுமானித்தாங்
குற்றிருக்கும் பத்திரனை நோக்கி என்ன
பேடிபிடித் தேமமா தன்போம் வண்ணம்
பிரயத்தினம்மீ யாதுசெய்தா யெனவுங் கொன்றை
சூடியருள் ளாலேநடந் ததெலாம் சொல்லத்
தொடுக்கின்றான் மன்னனைத்தாழ்ந் தடுக்கின்றானே.

நிலைமண்டிலவாசிரியப்பா

மன்னவாநேற்றுன் மலரடிவணங்கிப்
பன்னகாபரணன் பதம்பணிந்தெனது
குறையிரந்திருக்கை கூடிநானிருக்கக்
கறையிருளினிலென் கனவில்வந்தீசன்
சாடியுன்பொருட்டிக் தனச்சுமையெடுத்து
வாடியுன்மாற்றான் மனைப்புறமடைந்து
வீணையையெடுத்து மீட்டியாம்பாட
நாணமுற்றேம நாதனோடினனென்
றின்னவாறுரைத்தே யேகினன்விழித்தென்
மன்னவாநடந்த வகையிதென்றுரைக்க
ஒற்றர்கள்போய்வந் துரைத்ததும்பாண
பத்திரன்கண்டசொப் பனமுமொத்திடத்தேர்ந்
தீதுநங்கூடல் எம்பிரான்செய்த
சூதெனத்தெளிந்து தொல்புவியாள்வோன்
பத்திரன்அன்பையும் பகவான்அருளையும்
உத்தியாலியோசித் தவனுடனெழுந்து
மதுரைநாயகனை வணங்கிநின்றேத்திச்
சதிருடன்பாடும் தனதுபத்திரனை
மத்தமாமீதில் வாத்தியமொலிக்க
வைத்துமாநகரம் வலம்வரச்செய்து
மனமுவந்திடுதல் வரிசையும்செய்து
தனதுளமகிழத் தரணிபன்பின்னும்
அரியயன்முதலா ஆட்கொளும்தேவன்
உரியநும்மாளா வுருவெடுத்தங்கே
உறுகுறைமுடிக்க வுற்றனனதனால்
ஏவோரும் ஏவலாளுமக்கே
லென் ஆண்டவர்நீரே
ஓதியவடியேன் உமக்குநானினிமேற்
றொன்முறைவழக்குச் சொல்லலாவதுவோ
எனமனக்குறையொன் றிருக்குதின்றுமுதல்
வேதநாயகன்பால் விரும்பிநீர்பாடல்
ஓதுதல்கடனென் றுரைத்தனுப்பினனே.

விருத்தம்.

காவலனாற் பெற்றபூ ணுடை யாவும்
கற்றறிந்த நாவலர்மா னவர்யா வர்க்கும்
ஆவலுடன் பகிர்ந்திந்து வரிசை யாக
அடுத்துவரும் சுற்றத்தா ருடனும் சேர்ந்து
மாவரிசை பெற்றிசைவல் லார்கள் சூழ
மனமகிழ்ந்து பத்திரனிற் புகுந்தா னித்தைக்
கூவுவர்கேட் பவர்அபீஷ் டமியா வுங்கைக்
கொள்ளுவார் அரனுலகில் ளள்ளு வாரே

ஆக விருத்தம் கஉ கழிநெடில் க அகவல் க கீர்த்தனை ரு தரு க ஆக உ௰

உ

நாற்பத்திரண்டாவது.

## திருமுகங்கொடுத்தபடலம்.

அவதாரிகை — விருத்தம்

மானணிமதுரா நாதன் வருமேமநாதன் றன்னைக்
கானமார்ந்திசையால்வென்ற கதைசிலதுரைத்தே னிப்பாற்
சேனைசூழ்சேரனுக்குத் திருமுகங்கொடுத்துப் பாணர்
கோனவன்றனக்குச்செம்பொன் கொடுப்பித்ததினிச்சொல்வேனே

## பத்திரன்பலருக்கும்பொருள்வழங்கல்.

விருத்தம்

வரகுணபாண் டியன்நாளி லேம நாதன்
மதமடக்கும் பத்திரனந் நாட்கொண் டேதன்
அரசனுடை திருமனையிற் சென்று பாடு
வதனைவிட்டிந் திரவிமா னத்துள் வாழும்
பரமன்கோ யிலைத்தேடி நிதமுஞ் சென்று
பணிந்தேத்தி முக்காலும் பாடிக் கொண்டு
வருகையிலே யாவருக்குங்கொடுக்கில் வாஞ்சை
வைக்கின்றான் தினம்பிரதிகொ டுக்கின்றானே.

மாஞ்சி, சாப்பு.

பல்லவி

பத்ரன்கொடுக்கத்தொடுத்தான்கேளும் பாடும் பாணர்முதலனைவர்க்குநாளும்

அநுபல்லவி

இத்தொழிலேயல்லாமல் மற்றோர்தொழிலும்தனக்
கேதுவில்லாமலீசன் பாதந்தனிற் பணிந்து பத்ரன்

சரணம்

தனபால்வறுமையின்புண் டாகக்கண்டான் கூடச்
சாம்பமூர்த்தியுடனே சொலிக்கொண்டான்

# திருமுகங்கொடுத்தபடலம்.

அன்புக்குரியவனை தற்கிசைந்து பாண்டி அரசன்றன் அரண்மனைக் குட்புகுந்து
செம்பொன் அறையிற்பொருள் திருடிப்பாடும்போதெல்லாம்
முன்புகாணிக்கைவைக்க முடிப்புமுடிப்பாவாங்கி பத்ரன் (நாள்
௨ மெய்யாபரணங்கள் தனைச்சிலநாள் தூய்ய வெண்சாமரைப்பிடி களைச்சில
செய்யபொற்கலவனை களைசசிலநாள் *சொர்ண சிம்மாசனத்தகட் டினைச்
பையப்பையவே இந்தப் படியெடுத்தெடுத்தய்யன் (சிலநாள்
மையறுசிவேலையில் வழங்கவழங்கவாங்கி பத்ரன (சொல்லாமல்
௩ வாய்ந்தபொருள்தருவோ ரலலாமல வேறே மனிதரொருவருக்கும்
காய்ந்தசெருப்பினிலிட் டேயுருக்கிப் பல கண்டதுண்டமாக நறுக்கிச்
சார்ந்தவர் இரந்தவர் தனைகைபார்த்துண்பவர்க்
ஈந்துபிறர்க்குமாறு தீந்துட்கவலை தள்ள பத்ரன்

விருத்தம்

பத்திரனிப் படிகொடுப்பக் கொடுப்போன் பின்னப்
பரிசுமறுத் திடலாலே போய்ப்போய்த் தாழ்ந்து
சித்தமுழந் தொக்கவுட னெக்க வாடிச
சிறுமையடைந் திருக்கஅவன் கனவின் கண்ணே
சித்தராய் வந்தரசன் கோசந் தன்னில்
திருடியளித் தனமுன்போல எம்பா லன்பு
வைத்தவனீ தறிகதிடில்காப் போர்க்குத்தண்டம்
வருமெனவே மொழிந்துபின்னும் வழுத்து வாரே.

## பத்திரன்திருமுகங்கொண்டுசேரன்நகர்க்குச்செல்லுதல்.

இதுவுமது

காவலுமுத் திரையும்பூ ணாரணும் சிறப்பக்
கவர்ந்துகவர்ந் தீந்தகள்வன் சேர னென்னும்
காவலன்பே ராலேயொரு திருமு கத்தைக்
கவியாக வரைந்தளிப்போ மெனஅவ் வாறே
மேவுமறைப பொருளுரைத்த வாக்கினலே
விளம்பியவா றெழுதிஈக துடன்ம றைந்தார்
ஆவலுடன பத்ரன்விழித் தெழுந்தா னந்தம்
அடைந்திட்டான் அப்படியே நடந்திட டானே.

சாவேரி, சாப்பு

பல்லவி.

சேரன்மாநகர்குறித் தெழுந்தான்பத்திரன்திருவாலவாயோனைப் பணிந்தான்

அநுபல்லவி.

பாரும்திருமுகத்தைப் பட்டாடைமேல்வைத்து
நாரிபாகனைகோயில் வலம்வந்திவேகமாச் சேரன்

சரணங்கள்

அலைகடலேயுடை போலேபூணும்நிலமகள்தனக்குமென் மேலே
மலையேமுலைகளாக மாமுகத்திலெழுதும்
திலதமாகவேயிந்தச் செகத்திற்புகழ்சிறந்த சேரன்

௨ நன்மைசேர்திருமகளாக்கமும்நீதிமழுவாதபோர்மகளாக்கமும்
தென்மொழிவடமொழிச் செஞ்சொல்மகளாக்கமும்
தர்மமகளாக்கமும் தப்பாமலே சிறந்த சேரன்
படர்ந்திடுமருதமும் முல்லையும்நெய்தல்அடர்ந்தெழுங்குறிஞ்சியும் கொல்
கடந்துபலவின்சுளைக் கனிகாலில்இடறிட (லையும்
கடந்துநடந்துமலை நாடிடையிற் சிறந்த சேரன்

விருத்தம்.

திருமுகம்பெற் றெழுந்துசே ரன்பு ரத்தைச்
சேர்ந்தொருநீர்ப் பந்தலில்வந் திருந்தா னன்றே
இரவினில்வந் தவ்வரசன் கனவிற் கூடல்
எம்பிரான் தனதுசித்த வடிவங் காட்டி
யொருமையுடன் நமதுதிரு முகம்வாங்கிக் கொண்
டேனிடத்தில் இருநிதியம் பெறவெம் பாலின்
றருமையுடன் பாடிவரும் நமது பத்திரன்
அடுக்கின்றான் எனறுபின்னும் தொடுக்கின் றானே.

பத்திரனுக் கரும்பொருளீந் ததிவே கத்தில்
பயணஞ்செய் தனுப்பியென மறைந்தார் சித்தர்
கொற்றவன்றன் னுறக்கமகன் றமைச்ச ரோடே
கூர்ந்திரவில் கண்டகன வுரைத்த போதே
முத்திபுர நாதர்திரு முகங்கொண் டிங்கு
முயன்றுவந்த தாரெனவே தூத ராலே
வித்துவா னிருககுமிடந் தெரிநதை யத்தை
விண்டிட்டான் கண்ணாரக் கண்டிட் டானே

கல்லியாணி, ஆதி.

பல்லவி.

கண்டானேதிரன் சுவாமிஸ்ரீமுகம் கொண்டானேசேரன்

அநுபல்லவி.

தண்டளித்திலங்கிய தண்ணீர்ப்பந்தலிலே
தந்திரிக்கிழவன்றன் செந்திருக்கரத்திலே கண்டான

சரணங்கள்.

க தேடித்தேடித்தனது சேனைகாவலருடன்சென்றெதிர்கொண்டுவந்து நாடி
(ச்சூடிட்
திரிகரணமுமொன்றாக் குவித்துச்செங்கைக்கமலம் சென்னியிலமேல்விளங்க
பாடிப்பாடித்திருக்கூத் தாடியாடித்தடிபோலப் பணிந்துபணிந்துமுன்னே நீடி
பண்ணுந்தவப்பயனென் றெண்ணித்தேனையருந்திய
பாண்மிழற்றும்வண்டுபோல் தானுவந்துகொண்டாடிக் கண்டான
(கொண்டு வந்து
௨ செங்கையிரண்டும்விரித் தேந்திவாங்கித்தனது திருக்கண்ணிலொத்திக்
தேனொழுகுமலரும் பூமாலையைப்போலவே திருமுடிமீதிலே பணிந்து

கண்களிரண்டினிலும் இருந்துபோனந்தக்கண்ணீர்துளித்திடப் பரிந்து
காயமுழுதுந்தடித் தோங்கிமயிர்க்குச்செழக்
கதம்பவனேசர்திருக் கையெழுத்துத்தெரிந்து கண்டான்
௩ முத்திபுரேசனியா மெழுதியனுப்புந்திருமுகஞ்சேரமரபாலன் காண்க
முகில்போற்புலவருக் குதவும்நின்பாலேயெம்பால் முதிரும்பேரன்பன்கலி நீ
பத்திரன்நம்மிடத்திசை பாடிவருபவனுன்பால்வருகிறான்புக ழோங்க (ங்க
பரிந்தேயிருநிதியம் கொடுத்தனுப்பென்றெழுதும்
பாடலைக்கண்டானந்தம் கூடிமகிழ்ச்சிதேங்க கண்டான்

விருத்தம்.

சேரனிந்த வாறுதிரு முகத்தைப் பெற்றான்
செம்பொன்னின் தளிகையில்வைத் தானை யேற்றித்
தாருலவும் பத்திரனை முன்வைத் துப்பின்
தானிருந்து சகலவிரு துகளுஞ் சூழ
நாரியரெண் மங்கலங்கொண் டெதிரே தோன்ற
நன்னகரை வலஞ்செய்வித் தரணு வெண்ணிச்
சீருயர்நன் னீராட்டித் தவிசின் மேலே
சேர்க்கின்றான் பூசனைசெய் தேற்கின் றானே

ஆனந்தபைரவி, சாப்பு

க அம்பொன்னாசன மீதி லிருத்தினான் பூசைபண்ணி
அறுசுவையுடன் அன்ன மருத்தினான்
உ செம்பொன்னிறச்சந் தனத்தைப் பூசினான் நறும்புகைமுதல்
திருமுகத்துக்கு வாசம் வீசினான்
௩ வெற்றிலையடைக் காய்தக் கோலமும் பொற்றளிகையில்
விதிமுறைப்படி யீந்தெக் காலமும்
௪ நித்தனெழுதும் திருமு கத்திலே பூசைசெய்து
நெஞ்சந்தனிலு வந்தட்ச ணத்திலே
௫ பொன்னறைதனைத் திறந்து காட்டினான் காட்டியீதுள்ள
பொருளெல்லாமும தென்று சாட்டினான்
௬ முன்னவனடி யாரே யாகுவீர் ஆதலாலிப்பொன்
முழுதும்நீரே கைக்கொண் டேகுவீர்

விருத்தம்

சேரனிந்த வாறுரைக்க நீரு வந்து
செய்ததுவே போதுமெனப் பொற்பூ ணுடை
வாரணமா முதலளித்தே முடிபின் சென்று
மகிழ்ந்தனுப்ப வும்திரும்பி மதுரை வந்து
காரிபா கனைப்பணிந்து கொணர்ந்த பொன்னை
நாவலர்தொட் டியாவருக்கும் அளித்தான் பத்திரன்
யாரிதையோ துவர்கேட்போர் அவர்கள் சம்பத்
தடைந்தீறில் சிவனுலகை யடைவர் தாமே
ஆக விருத்தம் அ, கீர்த்தனை ௩, தரு ௧, ஆக ௬௨, முற்றும்.

நாற்பத்துமூன்றாவது.

## பலகையிட்டபடலம்

அவதாரிகை —விருத்தம்

கூடலெம் பெருமான்பத்திரன் குறையினை யகற்றச்சேரன்
மாடொரு திருமுகத்தை வரைந்திந்த துரைத்தேனிப்பால்
கூடவோ ரிரவிலன்பு கூர்ந்தவன் றனையிருந்து
பாடெனப் பலகையிட்ட பான்மையை யினிச்சொல் வேனே

### பத்திரனுக்கிடையூறாகமழைபொழிதல்.

விருத்தம்.

வரகுணன்னா ளையிலேபத் திரன்சே ரன்பால்
மாநிதியம் பெற்றுமது ரேசன் றானில்
திரிகாலும் பணிந்தர்த்த சாமத் தும்போய்த்
தினம்விடையின் பின்னின்றே படிப்பா னோர்நாள்
இரவினிலம் பிகைதிருப்பள் ளியறைக் கையன்
எழுந்தருளும் போதிடையூ றேதும் றானும்
வருவதுல கறியவிளை யாட்டால் மாரி
வரக்கண்டான் எங்குமிருள் தரக்கண் டானே.

பந்துவராளி, சாப்பு.

பல்லவி

மழைசொரியையில் அய்யனை வந்திக்க வந்தானே பத்ரன்

அநுபல்லவி

தழைப்புமாலயன்தேடியகொன்றையந் தாமனுக்கன்புசெய்மாமுனிவோர்களே
மழை

சரணங்கள்

க தடித்திறலிரு கண்கள்பிதுங்கச் சாருந்திசைதெரி யாமலிருக்கத்
துடித்துக்கொண்டுவிடவாய்ப்புயங்கம் சோர்ந்துசுருண்டு நடுக்குற்றுப்பதுங்க
மழை

உ வரையிறகரிந் தோனேவலாலே வருணன்முன்னுள் முடிக்கமென்மேலே
வாரிவிடுத்த முகிலேழும்போலே வளைந்துகொண்டதெ னவொருக்காலே
மழை

ங ஆழியைத்தூக்கியெடுத்தொருமிக்க ஆகாயந்தன்னிற்கவிழ்த்ததையொக்க
வீழும்பெருந்தாரை யெங்குங்கதிக்க மிக்கவிருப்புத்தூண் போலேதடிக்க
மழை

ச கல்லார்மனம்போல் அகம்புறம்மூட காணுமுன்பின்னும் இருபாலுமூட
அல்லாமற்கீழ்மேலும் தோணுமல்மூட அங்கந்தெரியாமலேயிருள்மூட மழை

விருத்தம்

மழையினால் நனைந்ததுபூ மாரி யாக
மகிழ்ந்துதிருக் கோயில்வந்தி சனைப் பணிந்தே

அழகுடைய வீணையவிழ்த் திடவத் தின்பின்
அம்புயத்திற் சாத்திநின்று சதிகூட் டுங்காற்
பழுதகலும் தந்தியொலி மழுங்கச் சேற்றிற்
பதமழுந்தக் குறுக்குவலி வாங்க மீன
விழிமயிலோ டப்பனந்தப் புரத்துள் வந்து
மேலைவிற்பத் திரன்பாடி விளங்கி னானே.

இதுவுமது

இத்தகையாய் பாடுமிசை செவிக்கே றுங்கால்
எம்பிரான் கருணைகொண்டம் பரத்தில் நின்று
பத்திரா வெனக்கூப்பிட் டுதன்மேற் றங்கிப்
பாடுகென்று மணிப்பலகை யிடப்பார்த் தாங்கே
பத்தியுடன் சாமிசொலலுக் கஞ்சி யப்பொற்
பலகையின்மேல வேறியிசை பாடிப் பின்பு
சித்தமுவந் தவிடம்விட்டப் பலகை தன்னைச்
செங்கைதனில வேந்தியில்லிற் சேர்ந்திட டானே

பூரி, சாப்பு

சாமிதிருவடி பணிந்தான் பத்திரன் தன்னிருக்கைநாடி நடந்தான்
மாமேகம்மின்னுடன நீங்கஅகல் வானம்பிரகாசம்பெற் றோங்க
முன்புமுனியாலேவறந்த போது முத்தும்மணிகளும் நிறைந்த
அம்புதிபோலவே புடுக்கள் உதித் தம்பரத்திலொளி விடுக்க
தீயவிருள்வலி யிழந்து ஓடச் செங்கதிரோன் விழித்தெழுந்து
ஆயிரம்கைவிரித் தோதும் திரை யாழிநீந்திவரும் போது
இத்தரையாளும்சம் பனனன் இசை ஏற்கும்வாகுணத் தென்னன்
பத்திரன்அய்யனைப் புகழ்ந்து மணிப் பலகைபெற்றது தெரிந்து
உண்ணம்பத்திரனை வாழ்த்தி சாமி தந்தபலகைமேலேற்றி
பட்சமுடன்அன்பை நண்ணி கூடல் பரனிவனேயென் றெண்ணி
ஆனநகைமணிப் பூணும் பொன் னுடையிலங்கிதலை நீணும்
மாநிதியத்துடன் தந்தான் நல் வரிசையானடத் திவர்தான்

விருத்தம்.

பகவனூற் பலகைபெற்ற பத்திரனுக்கிப்
படிவழுதி வரிசைசெய்யப் பெற்றுக் கோயில்
அகமடைந்து நாற்காலும் வணங்கி யில்வந்
தமைநதிருநதான் இப்பால்ராச ராசனுக்கே
மங்கிபுரப்ப நீதுவர குணன்சா ருபம்
மன்னிடவே சிவபுரஞ்சேர்ந் திருந்தானித்தை
புகலுவர்கேட் பவர்செல்வம் சௌக்கியம் வாழ்நாள்
பொருந்துவர்பின் அரனுலகில்திருந்துவாரே

ஆக விருத்தம் ௫, கீர்த்தனை ௧, தரு ௧, முற்றும்.



நாற்பத்துநான்காவது,

## இசைவாதுவென்றபடலம்

அவதாரிகை — விருத்தம்

இறையவன் பாணபத்திரன் இசையைக்கேட் டவர்க்குத்தாமே
நிறைமணிப் பலகையீந்த நிலைமையை யுரைத்தேனிப்பால்
மறுபடி யவன்றன்கற்பின மகிமைசேர் இல்லாள்தானோர்
விறலியை யிசைவாதாடி வென்றவா றினிச்சொல்வேனே.

விருத்தம்.

ராசரா சத்தென்னன் செங்கோ லேந்தும்
நாளிலவன் றேவியஞ்ச ளாட்சி யென்பாள்
ஈசனுக்கன் புடையபத்ரன் மனையா ளுக்கும்
இறைவனுக்கன் புடையவொரு இசைவல் லாட்கும்
பூசலிசை யாதுறவே றிசைவல் லாளைப்
புறத்திலிருந் தழைக்கவவள் புரிந்த வண்ணம்
மாசகலும் பத்திரையைச் செயிக்க வேண்டி
மன்னனொரு விறலிதனை வருவித் தானே

சௌராஷ்டிரம், ஆதி.

க இராசராசபாண்டியன் ஈழ நாட்டிலின்னை வருத்தினான்
ஆஞ்சயோடவள்மேலன்புற் றுதரயோ டிருத்தினான்
உ வந்தவளரசனிரு மலரடி வணங்கினாள்
பந்தமாயெக்களிப்புடன் பாடுதற் கிணங்கினாள்
௩ வல்லகிமீட்டிச்சுருதி வகைதெரிந்து கூடினாள்
சொல்லுமேழிசையுடனே சோபிதமாப் பாடினாள்
௪ பாடினிகானத்தில்மனம் பதிந்தரசன தோகினான்
கூடியவள்மேலேமையல் கூர்ந்துமதி போக்கினான்
௫ பத்திரையைநகம்மூடன்போய்ப் பகர்ந்திடென்று கூறினான்
உத்தரங்கேட்டதுக்கவ ளுரைத்தனக்கு மீறினாள்
௬ நாமவளுக்குச்சார்பாக நவிலினும்வி டாமலே
நீமடிபிடிவழக்கா நிறுத்தடியெ டாமலே
௭ நாலுபேர்முன்றலைகுனிந்து நாணமதுண் டாகவே
மேலும்வாயில்வந்தபடி விளம்புநீமின் டாகவே
அ என்றுசொலநீந்தவளை யிருக்கைசெல்லென் றனுப்பினான்
நன்றுநாளைவந்திடென்று ராசராசன் விருப்பினால்
௯ கற்புளபத்திரையையழைத்தக் கணம்அவட்குச் சொதினான்
இப்போதொருத்திபாடவந் திருக்கிறாளென் றோதினான்
௰ இங்கவளுடன்பாடுதற் கேற்குமோவென் றுரைக்கவே
கங்கைவேணியருளுமென் கற்புமிறைந் திருக்கவே
௧௧ பாடிவெல்வேனெனறுசொல்லி பத்ரையிற்சென் றிருந்தனள்
நாடியவளைவிடுத்து ராசராசன் இருந்தனன்

விருத்தம்

மற்றநாள் விறலியிரு வரையும் பாண்டி
  மன்னனழைத் திசைகேட்கு முன்னி ழத்தில்
உற்றவள்பத் திரையைப்பார்த் திகழ்ந்து வீணைக்
  கோதியநூல் முறைப்படியுத் தரங்கள் சொலலி
மற்றெனுடன் பாடுகிலலை யாகில மெத்த
  வழுவுனக்கா மென்றுரைக்கக் கேட்டுக் கற்புப்
பெற்றுயரும் பாடினியாங் கவளைப் பார்த்துப்
  பேசுவாள சபையதிய லச வாளே

இதுவுமது.

பெருக்கமுறும் கலவியும்வா தின்மே லூக்கப்
  பெருமையும்பல லோர்விரும்பும் அழகும் பூண்ட
செருக்குடைய நின்னொடுமன னன்முன் வாது
  செய்யும்பூ சலுக்கெதிர்நா னலவேன் கண்டாய்
தருக்கமிடு முன்போலமா னம்விற் றண்ணும்
  தாசியரே யுனக்கெதிரா மெனகேட் டாககே
விரைக்குழலா ளிருவருக்கும் ஞாயஞ் சொலலி
  விலக்குவான் போலரசன துலக்கு வானே

பந்துவராளி, ஆதி

க ஈசன்மகிமையை யுங்களிதயமுவந்து கேட்பீர் மெய்த்தவோரே ராச
ராசனிருபாடி னிகருமிராசிபோல விலக்கியபின்மெய்த்தவோரே
உ பாடினியிருவரையும் பாங்க ளென்றுமொழிந்தான் மெய்த்த...வெற்றி
சூடினவருக்கிளைத்தோர் தொண்டுவேலை செய்வதென்றான் மெய்த்தவோ
ங மன்னவன்சபதமிரத் வண்ணமுரைத் திடக்கண்டு மெய்த்தவோரே ஈழந
தன்னிலிருந்து வந்தவள்தலைஎடுப் போடேனே மெய்த்தவோரே
ச வீணைஎடுத்தேழிசையில மீட்டிபபா டத்தொடுத்துமெய்த்தவோரே முடி
பூணுமன்னவன்செவியில புத்தமுதெனச்சொரிந்தாள மெய்த்த வோரே
ரு பத்திரையெனும்பாடினி பாடத்தொ டுத்துவந்து மெய்த்தவோரே சபை
யுற்றிடும்பலர்கள்கா தி லும்மமுதம் போற்சொரிந்தாள் மெய்த்தவோரே
சு தென்னவன்மனக்குறிப்பி தெனஅறியாம லவைகுள்ளோர் மெய்த்... பத்ரை
தன்னுடைகானத்ததைத்தானே சகலபேரும்புகழ்ந்தார் மெய்த்தவோரே
எ பின்னுமரசன்விறலிபிரசங்கத்தை மெய்க்கக்கண்டு மெய்த்த... மண்ணிற்
கொற்றவன்சொலலும்படிக்கே கூறுவதியல்பல்லவோ மெய்த்தவோரே
அ ராகமதுவுண்டமன்னன மனறுதீந்தறியாமலே மெய்த்தவோரே இன்றைக்
கேகினாளைக்குவருவீர் என்றவர்க்குத்தரவீன்றான்மெய்த்தவோரே
கூ பாண்டியன்மனதிசையைப் பரிசுதேபரிந்ததாம் மெய்த்தவோ...எண்ணி
மீனடவிறலிபஞ்சணை மீதிலஅகங்கொண்டிருந்தாள் மெய்த்தவோரே

விருத்தம்.

பத்திரைவர் தாவயுஞ்சென் றய்யன் பாதம்

பணித்துக்கண்ணீர் சொரியத்தென் னவனுக் கோல்கொண்
டித்தலத்தை யாளும்பாண் டியனென் றன்பால்
இசைகேட்டக் கிரமஞ்சொலப்பின் யாருஞ் சொன்னார்
சத்தியமா யுரைப்பவரா ரென் றிரக்கத்
தையலே நாளைவெல்வா யெனவிண் ணின்றோர்
சத்தமெழ திடத்தெரிந்தி சனை வணங்கித்
தனதுமன மகிழ்ந்திருக்கை தனிலவந் தாளே

இதுவுமது

இருக்கையிலே மறுநாள்முன் னாடபோல மின்னார்
இருவரையும் அழைத்தரசன் பாடக் கேட்டுப்
பெருக்கமுடன் முதலுளிற் சொன்ன வாறே
பேசிடத்தேர் தவைருரும்அவ் வாறே சொனனார்
மருக்கமழும் குழலாள்கற் புடையாள பாண்டி
மன்னவனை நோக்கிமடி நிலைமை நூலை
திருத்தமுட னுங்கதுணர்ந்தோய் கேளா யென்று
செப்பிடவாங் கறிவுடையோர் ஒப்பி னரே.

சௌராஷ்டரம், ஆதி

பல்லவி.

மகராசராசபாண்டிய மன்னனேநிசம்சொல்வாய்

அநுபல்லவி.

செகமெக்கும்மனுவழியே செஙகோலசெலுத்திவரும் மகராச

சரணங்கள்

க ஈசன்முனபோய்பாடுவோம் இருவர்பாடலுங்கேட்டு மகராச
உ இன்னவள்வென்றாளென்றும் இவள்தோற்றுப்போனளென்றும் மகராச
௩ அனியாயம்நீயேசொன்னால அவையோர்சொலலக்கேட்பானேன் மகராச

விருத்தம்

கற்புமிகும் பாடினியிவ் வாறுரைக்கக்
காவலனப் படியேசெய் வோமெனக் கேட்
டிற்புகுந்தி ருந்தனர்பின் னுளவேந் தன்கோ
யிற்புகுந்த மைசசரிசை வல்லார் தம்மோ
டற்புதமண் டபத்திலிருந் தவரைத் தூதர்
அழைத்திடவே பத்திரையை யாமே யின்னுமக்
கெப்படியும் வென்றிடலா மெனலங் கைப்பா
டினிவந்தாள் பேரவையந் தனிலவந் தாளே

ஆய்ந்தரிய கற்புளபா டினியின் னேபோ
அவையிலவந்தாள் ஆங்கொருவ வலர்போற் கூடல்
வாய்ந்தபிரா னுஞ்சபையில் வந்தாற் றுன்முன்
வந்தபா டினியிலசைபா டக்கேட் டாங்கே

சார்ந்தவர்கள் ஒன்றுமுரைக் காதிருந்தார்
தவமிகும்பா டினிவீணை தன்னைத் தோளில்
ஏந்தியிசை யோர்ந்தால வாய்ப்பிரானை
யேத்தினுள் பலர்புகழ வாழ்த்தி னுளே

ஆனந்தபைரவி, ஆதி

பல்லவி.

சாமியுன்தன்மகிமைகண்டெந்தவிதம் சாற்றிமுடியுமய்யா

அநுபல்லவி.

சாமியகிலசரா சரத்தும்பொதுவாய் நீயே
சாட்சியாயிருந்தரசாடசிசெய்துவிளங்கும் சாமி

சரணங்கள்

க அங்கைநீரும்பத்திரமும் ஏந்தியுனையர்ச்சித்தோர்க்
கரியயனிந்திரபத மருள்செய் தளிப்பாயுன்னைச்
செங்கையிலேகபாலம் தரித்துபவதீபிட்சாந்
தேகியென்றிரந்தாயென் றேசுவார்க்கென்னசொல்வேன் சாமி

உ மாதரைக்கண்டுமயங் காதவர்க்கேவீடென்று
வாய்ந்தமறைப்பொருளை ஆய்ந்துமொழிந்தாய்நீயே
பாதியுடற்பெண்ணுரு வாகினையென்றுபிறர்
பழித்தாலவர்க்குவதல் எடுத்துநானென்னசொல்வேன் சாமி

ந. மாயையிடமாச்செல்லும் விருத்திவலியடக்கி
மனனுயிர்க்குமுத்தியை யருள்வாய்தனிவள்ளலே
நீயேமுத்திபெறுவார் போலேவிரதயோக
நெறியடைந்தாயென்பாருக் குறுதிநானென்னசொல்வேன் சாமி

ம

இடவவா கனன்மதுரைப் பிரானை யேத்தி
இசைநூலி லோதும்வண்ணம் பொருந்த வாய்ந்து
மிடறுவீங் காள்விழியி மைக்கா தந்தும்
வெளிப்படாள் புருவமேல் திமிராள் கன்னம்
துடிகொள்ளார் பத்திரைமா ளிடர்கா துக்கோ
ஈரர்செவிக்கும் நாவில்வினை யமுத மாக
அடைவுடன்பா டக்கேட்டுக் குறாக லத்தை
யார்ந்திட்டார் மண்டபத்திற் சார்ந்திட் டாரே

இதுவுமது

தென்னவன்கை தவனெனும்நா மத்துக் கேது
தெரிவிப்பா னுகவிசை பாடக் கேட்டும்
முன்னுரைத்த படிமொழிய நினைத்தி ருந்தான்
முக்கணன்முன் னருளால்அவ் வெண்ணம் நீங்கத்

தன்னிதய மகிழ்ந்துபொது வாக நோக்கித்
தவமிகும்பா டினிதானே வென்று ளென்று
சொன்னதுகேட் டத்தவண்ணமேச பைக்குள்
தோற்றினார் யாவர்களும் சாற்றி னாரே.

தரு

௧ பாண்டியன்சாட்சிசொல்லியிப்பாலே ஈழப் பாடினிதிருக்கழுத்தின்மேலே
ஈண்டியதவப்பாடினி மாது தன்னை இருத்தெனவே இருத்தும் போது
௨ ஆண்டவனுருக்காவலன்கண்டான் ஈண்டதற்புதமற்புதமென்றீதென்றான்
(பயந்தான்
பூண்டவைகாணமின்போலேமறைந்தான் யாரும் புகழ்ந்தனர்தென்னன்கண்டு
௩ அய்யன்திருவிளையாட்டிதென்றார் மிகஆச்சரியங்கொண்டுவந்து நின்றார்
துய்யவடியாரன்பையும் நோக்கிச் சோம சுந்தரனருள்திறமும் தூக்கி
௪ தங்கள்கண்ணினாலேநீர் துளித்தார் ஆனந் தம்பெருகும்வாரிதி குளித்தார்
இலங்கைப்பாடினிமேலிருந் தாளை மன்னன் இறக்கிவித்தவளுக்குமன் னாலே
ஆணிமுத்தாரங்கள்முதற் றொடுத்தான் செம்பட் டாடைவரிசைகள்மிகக்கொ
ளாணியேயின்றபாடினிக்குந்தான் உவகை நண்ணிடச்சிலவரிசைதந்தான் (முத்த
௫ காவலர்போலேவந்துரையாடிப்பின்னே மறைந்துவிமானத்துக்குள்ளேகூடி
தேவியோடிருப்பவரைப் பணிந்தான துய்ய செம்பொனாமுதற்கொடுத்துவ
(தான்

விருத்தம்

மைப்படிகண் டனுக்கிவ்வா றீந்து வேந்தர்
வலியெல்லாந் தெய்வத்தின் வலிமுன னில்லா
தப்படித்தெய் வஞ்செய்யும் வலியெல் லாமுன்
னவன்வலிமுன் னில்லாதென் றுரைப்ப தெல்லாம்
கற்புளபா டினியிடத்தி ரகணடோ மென்று
காவலன்வீற் றிருந்தானி துவைப்போர் கேட்போர்
இப்புவியில் ஆபத்துநீங்கி வெறறி
எய்தியிருந் தாருலகில் உய்கு வாரே

ஆக விருத்தம் ௧௧, கீர்த்தனை ௨, தரு ௩, ஆக ௧௬. முற்றும்.

உ

நாற்பத்தைந்தாவது,

## பன்றிக்குட்டிகளுக்குப்பால்கொடுத்தபடலம்.

அவதாரிகை—விருத்தம்

முன்னவ னருளால்கற்பின் மொய்குழல் தனக்குமாறும்
மின்னையின் னிசைவாதாடி வென்றவா றுரைத்தேனிப்பால்
பின்னக மிரங்கிக்காட்டிற் பிறங்கிய பன்றிக்குட்டிக்
கன்னையா முலையீந்தாவி யளித்தவா றினிச்சொல்வேனே

### விருத்தம்.

மகராச ராசனுல காளும் நாளில்
வைபைநதித் தென்கரையில் குருதீர்த் தத்தில்
மகவான்விண் ணவரேத்த வால முண்டு
மணிமிடற்றில் சாட்சியா வைத்தோன் வியாழ
'பகவான்மெய்த் தவஞ்செய்ய வேவ ரங்கள்
பரிந்தீந்து குருநாத னெனப்பேர் பூண்டு
சகவாகன்அயன்பரவ விளங்கும் நாளிற்
காணுவீர் மனத்திலன்பு பூணு வீரே

ஆனந்தபைரவி, ஆதி.

க முக்கணனுக் கன்புடைய முனிவர்களே கேளும்
மொழிந்தகுரு தீர்த்தமென்னும் முதுநகரில வாழும்
உ தக்கவனோர் வேளாளன தன்பெயர்சு கலனே
தனதுமனை யாள்சுகலை தனனொடுவாழ் பவனே
௩ அவர்களுக்கீ ராறுமைநதர் அழகழகாப் பிறந்தார்
அருமையுடன் வளர்க்கையிலதாய் அப்பனுமி றந்தார்
௪ அவியவேபின் வேடரைசசேர்ந் தரியவனம் புகுந்தார்
அக்கிரமஞ்செய் தொழுகியிரண் டறுவருமி குந்தார்
௫ இத்திறங்கொண டொருபுதர்க்குள் ளேயவர்கள் சென்றார்
இந்த்ரனுக்கா சான்றவமங் கிருந்தியற்றக் கண்டார்
௬ கைத்தலங்கொட் டிச்சிரித்துக் கலலவர்மேற் பெய்தார்
காயமதி லேயழுந்தக் கருதித்தவஞ் செய்தார்
௭ தவமழிமைக் கிடராகச்செய் சல்லியம்தெ ரிந்தார்
சாதித்தொழில் மறந்துழலவோர் தமகள்மேற்சி னந்தார்
௮ அவனியுழ வோரேபன்றி யாவீரென்று சபித்தார்
அப்பனுமன் னையுமிறந்தே யலைவீரென்றைந் தவித்தார்
௯ இப்படியாச சபித்திடப்பன் னிருவரும்ப யந்தார்
எங்களுக்கிச சாபந்தீர்வ தெப்போதென்று பணிந்தார்
௰ மைப்படியுங் கணடனிரு மலரடியை நினைந்து
மாகோபம் தணிநதவர்மேல் மனதிரக்கம் புனைந்து
கக உமக்குமது ரையிலவளரும் ஒருவன்வந்தே யன்னை
யுருவெடுத்து முலைப்பாலீந் துயிரளித்துப் பின்னே
கஉ அமைச்சர்களாச செய்வனதென்னன் அருகினிலே பன்னாள்
அமைந்த தறபின் சிவனுலகை யடைவீரென்று சொன்னார்

## பாண்டியராசன் வேட்டையாடுதல்.

### விருத்தம்.

குருமொழிகேட் டவிடம்விட்டப் பன்னிரண்டு
குமரர்களும் குருதீர்த்த மெனுமீ தாருக்

கருகில்வனத் துள்ளபன்றிக் கெல்லாம் வேந்தன்
ஆக்குறுங்கோ லப்பேடை வயிற்றிற் சென்று
குருளையாய்ப் பிறந்திருக்கும் நாளிற் றென்னர்
கோனொருநாட் படையுடன்வேட் டையைக்குறித்துத்
திருவால வாயைவிட்டவ் வனத்தில் வந்து
தேடினன் மிருகவேட்டை யாடி னனே.

பந்துவராளி, சாப்பு.

பல்லவி

வேட்டையாடினதைக்கேளும் பாண்டியராசன் வேட்டையாடி

அநுபல்லவி.

வேட்டையாடினதைக்கேளும் காட்டகத்தனிலேவாழும்
வெம்புலிகலைமானினம் கும்பலாத்தங்கும்நிதானம்
வேடர்கள்தெரிந்துகொண்டு ஓடிவந்துரைக்கக்கண்டு
வேட்டைக்காரரெல்லாம்கூடிக் கூட்டமாகவிரைந்தோடி
விலங்கினத்தையொதுக்கி மலங்கநிலைகலக்கி
வெருட்கொண்டிடவிரட்டி யுருக்குவலையைக்கட்டி
வெற்றிமாலைதனைச்சூடச் சுற்றிலும்படைசூழ்ந்தோட
வீரமுடனேதுணிந்து வாரணத்தின்மேலிருந்து

சரணங்கள்.

சுற்றிலுமுழக்கம்வாய்த்து மெத்தவொலித்திடப்பார்த்துச்
சொலிக்கக்காய்ச்சியவேலை வலுக்கப்பாய்ச்சினற்போலே
துளைக்கச்செவிக்குட்பட்டுக் களைத்தசனம்போல்நட்டுத்
தோல்விவந்ததெனப்போட்டிப் பார்வையனேகமாக்காட்டிச்
சூரமிகும்புலிக்கூட்டம் தீரமிகும்பன்றிக்கூட்டம்
சொக்கிவிழுமான்கூட்டம் மிக்கவேபயத்தில்நாட்டம்
சூழநிற்பவர்முன்னாலே கேளுமவைகளின்மேலே
தொனிக்கும்விலமணியாட்டிக் குனித்துக்கயிற்றைமாட்டிச்
சுகிகணைதாக்கிவிட்டார் செருக்குமான்கள்
உடலைப்பண்ணுக்கிவிட்டார் காலதலைமூளை
தொண்டையிலும்வரும்ரத்தம் மண்டியோடுவதல்லாமல்
தும்டமிருகத்தின்சோரி அஷ்டகெசங்கள்
பட்டதுபோலவாரிக் கொண்டுபெருகத்
தொப்பெனவேவிழுந்துவா யைப்பிளந்தாவியொடுங்கத்
துடிக்குஞ்சிலதுமிருகங்கள கண்ணிலையப்பலகால
கடிக்குஞ்சிலதுமிருகங்கள் பொறிகலங்கிச்
சோங்கிவிழுந்துபயம் தேங்கியோட்டமெடுக்கத்
தொடுக்கும்சிலதுமிருகங்கள பக்கத்திலேவந்
தடுக்குஞ்சிலதுமிருகங்கள் வலையைத்தாணடித்
துள்ளிவிழுகையில்நாய்கள வெளவென்றுகடித்துடபினனே

தொடரச்சிலதுமிருகங்கள் ஓடவும்பின்னே
அடரச்சிலதுமிருகங்கள் இப்படியாகத்
துணிந்தவீரர்களவேலாற் றணிந்திறந்துபோகச்
சொச்சமுள்ளசிலமிருகங்கள் வலைக்குட்டலை
வைச்சதங்கேசிலமிருகங்கள் சூழ்ந்துவலையைத்
தொட்டிருந்தபேரைவிட்டு எட்டியிருக்கின்றவர்மேல்
தொத்திவிழுஞ்சிலமிருகங்கள் சிலரோடேயெ
திர்த்துவிழுஞ்சிலமிருகங்கள் முட்டிவலையைத்
துளைத்தகலும்புலிகள் துளைத்தகலும்வராகம்
துளைத்தமிருகமனேகம் அதனைச்சுற்றி
வளைத்தவீரரனேகம் பின்னேதொடர்ந்து
சொல்லினுங்கடித்துச்சாடிக் கொலைகையில்விழுந்தமிருகம்
தொகைசொல்லிமுடியாது தப்பிப்போனதின்
வகைசொல்லிமுடியாது மகிமையிரு
துண்டமாப்பிளந்துதெளிக் கொண்டதும்பாற்கொம்புடைய
தூங்கலினகாதுகளிலே வேலாற்குத்தி
வாங்கிடவேயதனிலே இருந்துதிரஞ்
சுரந்துகொண்மலையிலே பரந்தவெரியைப்போலே
தோணுமகலடவியெங்கும் அந்தப்படியே
காணும்நெடும்படவியெங்கும் வீரரொலியும்
துடியின்னொலியும்வாளால் மடியுமிருகவொலியும்
சோகுசோடாய்மாவொலியும் அதனைத்தொடர்ந்
தோடுகின்றநாயொலியும் ஆகாசத்தில்
தொனிகளுங்கருமேகத்துக் கிணைத்துவிளங்கும்போது
தோற்றிமேலைத்திசையிலே பாண்டியனிளப்
பாற்றவந்திருக்கையிலே அந்தவனத்தில
சூகரங்களுக்கிறைவன் ஆகவேபுதருக்குள்ளே
தோய்ந்தபன்றியைநாடி பலபன்றியும்
சேர்ந்தொருமிக்கக்கூடி எங்களரசே
சுவஸ்தமாயிந்தவனத்தில இத்தனைநாளினுமொரு
தொந்தரவுங்கண்டறியோம் உன்னதிராலேயர்
சிந்தனையுங்கொண்டறியோம் இப்போதொருல
துப்பமதிகுலமன்னன் அய்யனேசேனையுடனே
தோணிமிருகவேட்டையாடினான் வில்லைவளைத்து
நாணிறுக்கிக்கணைசாடினான் பலமிருகங்கள்
தொலைந்துபோனதல்லாமல் வனந்தெங்கள்மெய்யெங்கும்
துளைத்ததென்னென்றுசொல்வோம் நமதுகூட்டம்
இளைத்ததென்னென்றுசொல்வோம் என்றுபணிந்து
சொல்லவுங்களித்துப்போரில சொல்லவும்தென்னனைப்படையைக்
கொல்லவும்அமர்க்களத்தில வெல்லவும்நினைத்துவர

உ வாரகமெல்லாங்கூடிவந்து வாரகராசனைப்பணிந்து
வந்துரைப்பதனைநோக்கிச் சிந்தையெக்களிப்போடேகி
மங்கையாம்பன்றியைப்பார்த்து நங்குழந்தைகளைக்காத்து
வைத்துநீயிங்கேபொருந்து இத்தொலையில்வரும்இந்து
வங்கிஷத்தாசனோரில இங்குவிட்டெழுந்துபோரில
வாகுபெலமுடன்வெல்லப் போருவேனென்றுசொல்ல
மாநிழலமரம்விண்டு பிரிவதுமுண்டோவென்று
வாகுயிரைவிட்டகன்று தேகமிருக்குமோவென்று
வருந்திநின்றுரைத்தழுது கணவனுள்ளங்
கரைந்திடும்படிதொழுது மனைவிவேண்ட
மைந்தரைப்பிரிந்தப்பாலே அந்தமுள்ளபரிமேலே
மகிழ்ந்திருவருமேற வராகவீரனைப்
புகழ்ந்தெசசரிக்கைகூறப் பல்வகைச்சாதி
வங்கவராகம்திரண்டு நூற்படையாகவேசென்று
வழுதிபடைமேற்சீற மன்னவன்கண்டு
விதிகளிற்பொறிதூற வருகுமுன்னே
வரிவில்லவளைத்துமள்ளர் சொரியுங்கணைகள்பட்டு
மாண்டதங்கேசிலதேனம் உரத்திலம்பு
பூண்டதங்கேசிலதேனம் தேகத்திலதின்று
வாரிவாரியாப்பெருகும் சோரியோராறாகவோட
மதிந்ததுசிலதேனம் மணிக்குடல்கள்
சரிந்ததுசிலதேனம் எனபுதகர்ந்து
வழும்புமூளைபறிந்து எழும்பவொண்ணுமல்மண்ணில
மடிந்ததுசிலதேனம் சாதுகள்முதல்
ஒடிந்ததுசிலதேனம் இப்படியாக
மன்னவேகொன்றிடக்கண்டு பின்னுளளபன்றிவெகுண்டு
மண்டியேபடையிற்பாய்ந்து துணிந்துசெய்த
சண்டைபொன்னசொல்வேன்காய்ந்து பனறிகளெலலாம்
வனசமர்வெறிபிடித்து நெஞ்சிலேபடபடத்து
மள்ளரிற்சிலரைமுடித்து முண்டமாயுடல
துளளவேசிலரைமடித்துக் கெறசனையுடன்
வளையுங்கொம்பினாலெற்றித் துளையமார்பிலேகுத்தி
வாயினாலேஇரத்தங்கக்க
சாயவேயுதைத்துநோக்கச் சரீரமெங்கும்
மரணவலிப்பெடுத்துக் கரணம்போட்டுவிழுந்து
மாய்ந்தாரேசிலபேர்கள நெஞ்சுபிளந்து
காய்ந்தாரேசிலபேர்கள் இதுவலலாமல
மஸ்தகம்பிளந்தபேரும் கைத்தலம்பிளந்தபேரும்
வலக்கைகள அற்றபேரும் தனித்திலங்கும்
இலக்கைகள்அற்றபேரும் தொடைகளற்று

வாழ்நாள்சிதைந்தபேரும்   ஊழ்நாளமைந்தபேரும்
   வாள்களொடிந்தபேரும்   மலைகள்போலே
   தோள்களொடிந்தபேரும்   காலொடிந்தோரும்
மன்னியில்மரங்கள்பட்டு   தன்னுயிரகலுமுன்னே
   வைப்பினிலேவிழுவோரும்   சிலசிலர்கள்
   குப்புறவேவிழுவோரும்   பலவிதமாய்
வாதைகொண்டிப்படிச்சேனை   சேதம்வரக்கண்டரசன்
   மந்திரியில்சிலபேர்கள்   மனக்குறிப்ப
   றிந்தெழுந்தார்சிலபேர்கள் வெகுண்டெமன்போல்
வல்லிருப்புலக்கைவீசிக்   கொல்லுகவிருதுபேசி
   வராக்கண்டேனவீரன்   கர்ச்சனைகொண்டு
   சரக்கென்றெழுந்திரன   கூடவேநிற்கும்
மானமிகுந்தபெண்பன்றி   சேனையெல்லாம்போச்சுதினி
   மான்வதுபெருமையென்று   தப்பிப்பிழைத்துப்
   போவதேகருமமென்று   மொழியப்பார்த்து
வல்லகலைகள்தெரிந்தும்   நல்லறிவுபெற்றிருந்தும்
   மாதரறிவென்பதெல்லாம்   பேதைமையாகும்
   ஆதலாலநீசொன்னதெல்லாம்   உனதனுக்கேற்ற
வண்ணமுரைத்ததல்லாமல்   எண்ணறிவுடையோர்க்கெல்லாம்
மண்ணினிலிழுக்காவந்து   நண்ணிடுமென்றேயுரைக்க வேட்
ஏனராசனுக்குச்சொந்த   மானபெண்ணைமொழிந்த
தெண்ணியிருசிங்கங்கூடித்   தண்ணீருண்கையில்நாடி
இடையிற்சென்றொருஏனம்   தடையினறிச்சலபானம்
இனித்துண்பதுசாரகம்   தனித்திரண்டுவராகம்
ஏரிநீருண்கையிற்சிங்கம்   சாருமோநமதுத்துங்கம்
இப்படியிருக்கவுன்தன்   சொற்படிநடக்கவெந்தன்
இருதயந்துணியுமோ   பெருவீரந்தணியுமோ
என்பலங்கண்டறியாமல்   முன்பின்னையுங்குறியாமல்
   ஏராதவார்த்தைசொன்னால் வசைபோடொக்கல்
   பாராமல்மொழிந்தாலென்னும் ஆகிலுநகேளும்
இந்துகுலமன்னன்வீரன்   சிலந்திடவெனக்குத்தீரம்
   இல்லாமற்புவிமீது   அவனையேநாம்
   வெல்லாதிறந்தபோதும்   கடல்வளைந்த
இத்தரையுள்ளவரைக்கும்   பொய்த்திடுமுடம்பொழிந்தும்
   இசையுடம்பழியாதுண்டோ   வித்திலம்போலே
   திசையெங்கும்பரவுமன்றோ   ஆனதாலேநீ
இங்கிரென்றுரைத்தகற்றி   நங்கையேனத்தைநிறுத்தி
   எரிபறக்கவேகொதித்துப்   பாண்டியனுக்குச்
   சரியாகவேகுதித்து   வராகவீரன்
இங்கிலந்துளைத்துப்பிலக்   தன்னைவெளியாக்கிநிமிர்ந்

தெழும்புந்துகளினாலே விண்ணைமறைக்கக்
கிளம்பிவந்தெதிராலே வரவும்வில்லை
எடுத்துவளைத்துக்கணை தொடுத்துப்பெருமழைபோல்
இலக்காகவெய்துசொரிந்து விடக்கண்டுள்ளம்
மலைக்காமல்முறித்தெழுந்து சிலகணையை
எம்பிவாயினாலேப சும்புல்லெனவேகடித்
தெறிந்தது சிலகணையை காலாற்றேய்த்து
முறித்திடச்சிலகணையை வாலினாலே
இன்னமுள்ளகணையையும் சின்னபின்னமாநொறுக்கி
எதிர்கொண்டுவரக்காய்ந்து மனம்பொறாமல்
மதிகுலத்தவனோர்ந்து ஆனையின்கையில்
இருப்புலக்கைகொடுத்து வரக்கண்டுபன்றிவீரன்
இடிபோல்முழங்கியொலித்து துதிக்கையிளங்
கிடவேகொம்பினாற்கிழித்து விடக்கண்டுதேர்
ஏறிநேமியைச்சுழற்றிச் சீறிவிடவுமகற்றி
இரதக்காலிலேபாய்ந்து தகர்த்துடைக்க
பரியினமீதிலேவாய்ந்து தென்னவனவேலை
எடுத்தெறிந்துமுன்னே யடுத்துப்பரியில்விரைந்
தேகிக்கொம்பினாற்குத்தவே குடலசரிந்து
போகப்பரியைமோத்தவே தென்னவன்பொறுத்
திப்புலியிலேகுதித்து கைப்படுமிருபபுத்தண்டால்
இரத்தநீரொருக்காலே பெருகநசே
சிரத்திலடிக்கமேலே மணியிழைத்த
இந்திரவிமானத்திலேற அந்தரர்பூமாரிதூற
இருந்திருசெவிகுளிர தேவகானம்
புரிகதிடமனமிளிரப் புத்தமுதுண்டு
இங்கிதம்பெருகும்தெய்வ மங்கையர்களைத்தடவி
இணங்கியுலவைசூழ்ந்து விண்ணுலகுள்ள
கணங்களுடனேவாழ்ந்து இருக்கும்போது
என்கணவன்மாளவிங்கே தங்கியிருப்பதுகற்போ
என்றுவரப்பெண்கதிக அமர்புரியக்
கண்டுதென்னவுளம்பிரமிக்க பெண்ணினத்துடன்
இறைவர்க்கமர்புரிதல் அறனல்லவென்றுசேனைக்
கெசமானெனவேசிறந்தான் சற்சரனென்போன்
விசைகொண்டதனைவளைந்தான் அவனுடனே
எண்ணமில்லாமலேசண்டை பண்ணியவன்றன்னைமண்ணில்
இறந்திடச்செய்யும்காலை அவன்கையிலே
சிறந்ததொண்டத்தினாலே இம்மெனவோங்கி
ஏறடுத்தலையிலடித் தனைதுவுமாணடிடவி
மானமேறிக்கணவன்பால் வானுலகிற்சென்றிருக்க வேட்டை

விருத்தம்

வழுதியிந்த வகைவேட்டை யாடிச் சென்றான்
வராகம்வீழ்ந் ததுமலையா னின்ற துப்பேர்
மொழியலாச் சன்றுதெரிந்த் ததிற்ற வத்தை
முயன்றுபலர் வீடடைந்தா ரென்று ரவ்வா
றிழிவான சூகரரூ பக்குன் றின்மேல்
இருந்துதவஞ் செய்தகா ரணமியார் தென்னப்
பழயகதை யெடுத்தம்மா தவர்கட் குக்கும்
பத்திநுதித் தெழுந்தமுனி பகரு வாரே.

அடாணா, ரூபகம்.

௧ மாதவரேலித் தியாதரனொரு வன்கையில்வீணை கொண்டே யவன்
ஓதியபுலஸ் தியன்தவத்திலுக் கூறுகப்பாடக் கண்டே
௨ பன்றியாகவே சபித்திடக்கண்டப் படியேசாபத்தைப் பெற்றான் பெற்
றென்றெனக்கிந்தச் சாபம்நீங்குவ தென்றவன்பின்பு ரைத்தான்
௩ தென்னவன்வந்து இன்வனத்திலே செறிவிலங்கெல்லா மழியச் செய்து
உன்னைமாய்த்திடப் பின்னிவ்வுருவம் உறுமென்றம்முனி மொழிய
௪ அந்தவாறேவத் திறந்துபண்டு வடைந்தானபுண்ணியத்தாலே பண்டி
ருந்தவிஞ்சயன் வாகமாகவந் திசையமம்மலை மேலே
௫ வாசமாகவே துறந்தவர்கள்த வம்புரிவரெந் நாளும் மது
ரேசரும்அந்த மலையிலேபுவர் நினைக்குவாரின்னங் கேளும்
௬ ஏனவீரனும் பெடையோடவ்வனத் தேயிறந்திட்ட போது தனி
யானபன்னிரு குருளையுந்தவித் ததுச்சொல்லிமுடி யாது
௭ நாடேத்தாய்முலைப் பாலைவேட்டிளம் மைந்தரிழலை விரும்ப மெய்
வாடிவெம்பசி மிகவருத்திட வருந்திவெயிலால் ஒடுங்க
௮ தேவதேவன்வி மானத்திலேறிச் சேலவிழியுடன் வந்தான் அந்த
மாவனத்தனிற் றனிச்சையாலே மகிழ்ந்தாடல்செய்திருந்தான்

விருத்தம்.

கூடியிவ்வா றுடையையர் ஆறி ரண்டு
குருளைகளும் வருந்திடஞ்சென் றின்றான் கோலம்
சூழுறுங் கண்டமைதம் அன்னை யென்றே
சுற்றுதலும் சுத்துதலும் பசியால் மிக்க
வாடுதலும் பார்த்திரங்கி முலையீந் தேன
வடிவமுக மட்டாகச் செய்த கன்றார்
நாடியிதோ துவர்கேட்டோர் சாப தாபம்
நசிப்பதனா றியரானலகிற் சுகிப்பர் தாமே

ஆகவிருத்தம் ௫, கீர்த்தனை ௧, தரு ௨, ஆக ௮, முற்றிற்று.

நாற்பத்தாறாவது

## பன்றிக்குட்டிகளைமந்திரிகளாக்கியபடலம்.

அவதாரிகை — விருத்தம்

பன்னகா பரணன்பன்றிப பாலர்பன் னிருவர்க்காக
அன்னையா முலையீந்தாவி யளித்தவா றுரைத்தேனிப்பால்
பின்னவர் களையமைச்சாப் பிறங்கிடச் செய்தந்தத்தில
உன்னருஞ் சிவலோகத்தி லுறச்செய்த தினிச்சொலவேனே.

## அங்கயற்கண்ணி சுவாமியை ஓர்சந்தேகங் கேட்டல்.

விருத்தம்

திருமுலைப்பா லீந்தபிரான்மறையப் பன்றிச்
சேயர்கள்பன் னிருகதிரோ னுதித்தாற் போலே
பருவதத்திற் றோன்றிப்பல கலைக ளாய்ந்து
பாங்குறவீற் றிருக்குங்கால் கூடல வாழும்
ஒருவனருள் மகிமையைநால் வகையாத் தோற்றும்
உயிரனைத்துக் கும்பொதுவா யிருக்கு முண்மை
இருநிலத்தி லியாவருக்குந் தெரிய வேண்டி
ஏர்க்கின்றாள் அங்கயற்கண் கேட்கின் றாளே.

மோகனம், ஆதி

சாமீயொரு சந்தேகந்தீர்க்கவேணும் சாமீ

அநுபல்லவி.

மேமிதாணும்பரமேஷ்டியுங்காணரிய நித்தியானந்தபரி பூரணராகுமென்றன் சாமீ

சரணங்கள்

சகலலோகநாதனு விளங்குந்தேவரீர்தாமே
சரிக்குமிருகங்களையும் சிருஷ்டித்தீரதப்பூமேல்
அகலுமதனிற்பழகும் அதில்துஷ்ட அதமமிருகத்தின்மேகம்போலே வேஷம்
டகவனேநீபெற்றதப் பன்றிக்குட்டியின்மேலே
பக்ஷமதாகவே [illegible]
ரக்ஷணைசெய்தருளைச் சுவளித்ததென்ன சாமீ

உ துஷ்டமிருகாதியாலே யுண்டாகுந்துன்பங்களைத்
தொலைக்கும் பொருட்டா வேட்டையாடுமன்னீதிகளை
இஷ்டமாயும்மாலே யேற்பபாடா இருக்கக்காண்பதாலே உலகத்தில்
திட்டமாயதுவும் ராஜதர்மமன்றோநீர் செப்பியநீதியும் ஒப்புமையாயிருந்
திப்படிச்செய்யவும்படப்பட்டமூலமென்ன சாமீ

௩ வேட்டையினாலேதுஷ்ட மாமிருகங்களைக்கொன்று
விஜயம்பெற்றோர்க்கதனால் பாபமேஇல்லையென்று
நாட்டிவழக்கமிருக்க உமதுகையில்மனைணிமிருகமும் இருக்க கருணையால்
ஊட்டியவைகளுக்கவ் விலங்கறிவகற்றி உத்தமமேனபாதத்துடனாகிய
கர்த்தமனபோருள் வைத்ததுசொல்லுமென்றன் சாமீ

## சுவாமி அம்மையைநோக்கிச் சொல்லுதல்.

விருத்தம்

எத்தியிவ்வா றங்கயற்கண் கேட்கும் போதே
இவ்வுலகிற் பலபலவே தாக மாதி
சாத்திரமெல் லாம்நம்மைச் சகல ஜீவ
தயாபரனென் றுரைத்துமுறை யிடுகை யாலே
பூத்திடுஞ்சே தனமசே தனமி ரண்டும்
பொருந்தவிசா ரிக்குங்கால் அபேத மாக
வாய்த்திருப்ப தாலனைத்தும் சரியென் றேற்றில்
மல்லுவார் கருணைசெய்து சொல்லு வாரே

பலகரி, ஆதி.

பல்லவி

அங்கயற்கண்ணிநீயே அறிந்திடுவாயே

அநுபல்லவி.

சங்கைநிகர்கந்தரி சாம்பவிநிரந்தரி அங்கயற்
சரணங்கள்.

அன்னைபோய்விட்டதினாலே அழிபசிகொல்லமேலே
கன்றும்வெய்யிலாலமுன்று காட்டிற்றனியேயமுன்று
காயுமேனக்குட்டிகளுக் காயுமாய்முலைகொடுத்துச்
சேயிலுமதிகமாக வேயருள்சுரந்தளித் தோம் அங்கயற்

எல்லையில்லாதபலமும் எண்ணெழுத்துநிலமும்
வல்லமையும்மெஞ்ஞானமும் வழுதிக்கபிமானமும்
வந்தமைச்சராகவேயி ருந்துபல்வளம்பெருக்கி
அந்தமில்நங்கணத்தி னைத்திருக்கவேயளித்தோம் அங்கயற்

யாவருக்குந்தேகம்சொந்தம் எப்படியப்படிக்கெந்தம்
பூவயன்முதலனேகம் பொருந்துஞ்சீவன்கள்தேகம்
புங்கமிருந்தஅவயவங்களைப்போலேஸ்தலவர
ஐங்கமவடிவாமுல கெங்கணும்பிரியமென அங்கயற்

குருவுக்கபசாரித்து கோலமாச்சாபத்தைப்பெற்றுத்
திரிவததுமறுத்துத் திறம்பொருட்டியாமடுத்து
செப்பிணைமுலைப்பால்கொடுத் தெப்போவந்துரக்ஷிப்பாரோ
அப்போதிருமென்றவரா னுக்கிரகப்படிரக்ஷித்தோம் அங்கய

## சுவாமியின்கட்டளைப்படி பாண்டியன்செய்தல்

இதுவுமது

பராபரன் டராபரைக்கில் வாறு தேற்றிப்
பாண்டியன்சொற் பனத்திலவந்து வேந்தே கேளாய்
வராகமலை தனிலாறி ரண்டு பேர்கள்
வராகமுக மாயறிவுந் திருப்போர் தம்மைச்

சராகமா யுன்னிடத்துக் கழைத் தமைச்சர்
தங்களாச் செய்குகவென் றுரைப்பத் தேர்த்து
நாதிபன்கண் விழித்தெழுந்தவ் வாறு செய்ய
நாடினன் மனத்தில்அன்பு கூடி ஞ்னே

சௌராஷ்டிரம், சாப்பு.

பல்லவி.

பத்தபராதீனர் சொற்றவிராமலே பாண்டியன்செய்தானே

அநுபல்லவி.

சுற்றிவிளங்கும் அமைச்ச ருடனேதன்
சொற்பனத்திற்கண்ட அற்புதத்தைச்சொல்லி (பத்த)

சரணங்கள்.

அந்தமலைக்கே யமைச்சரைவிட்டுடன் காண்டு கோல
மைந்தரைக்கூட்டிவரக்கண்டுசந்தோஷம் பூண்டு
சிந்தைமகிழ்ந்தவர் தாழ்ந்திடுதல்பார்த்தன் பீன்று உள்ளு
வந்தேயவர்களை மந்திரியாச்செய்தின்னம் வேண்டும்
விந்தையாகப் பலநல்வரிசையும் மென்மேலும்செய்து த னக்குப்பழகிய
மந்திரர்பெண்களைக் கல்யாணம்செய்வித்து வைத்துலகெக்கும் பிரசித்தமாக (வின்னம்
பத்த

ஈராறுடற்கு முயிரொன்றதாமெனச் சேர்த்து தவம்
சேராவரினும் மதிபோலொளியுடன் கூர்த்து
பூராமனத்துடம் பாடுடனுள்வினை சாய்த்து என்றும்
போதகல்விப் பயன்போல்மகிழ்ச்சிதந் தோர்த்து
காராவின்பாலுஞ் செந்தேனுங்கலந்தன்ன கற்றோருமாகிமதி நுட் பருமாகிச
சீராருஞ்சொல்லால் அயலார்களுங்கேட்கச் செப்பிப்பிறர்சொற்பயனைக்கவர் (ந்திடப்
பத்த

சேர்ந்ததிகாரம் படைத்தோமென்றேயகம் படையார் வவல்
வாய்ந்திடுமக்களைப் போலொதுங்கிப்பணி சடையார்
வேந்தன்பொருளை விஷம்போலநினைத்ததை யுடையார் நிலைச்
சார்ந்தவர்போலக லாதனுகாநெறி யுடையார்
காய்ந்தபராதப்பொருளுடன்சத்துருக் களைவென்றறபொருளையுஞ்சேராமலே
ஆய்ந்தகுடிக ளிறக்கும்பொருளே அரசனுக்கீட்டும் பொருளாகச்செய்திடப்
பத்த

தம்மனக்கொள்கை தனைத்தம்முளங்கொண்டு பரிந்து தூய
நிர்மலமானகண்ணாடி நிழற்போலே தெரிந்து
தன்மமுடனிருந் தாலதிலாள்வினை புரிந்து
தர்மமாகவிருந் தாலந்தக்காரியத்தில் பிரிந்து
அம்முறையாலே தமக்குள்ளவாக்கமும் ஆவியுநீக்கும் படித்துவருகினும்
உண்மனத்தாலும் நினைத்தார்களைத்தனக ஞற்றமந்திரிகளாயு பெற்று மகிழ்ந் (திடப்
பத்த

விருத்தம்

மந்திரியாய்ப் பன்னிருபேர் களுமிவ்வாறு
மாதருமம் புகழீகை விசேடம் நான்கும்
அந்தமுடன் மன்னனுக்குப் பெருகச் செய்தே
அந்திகத்தில் சிவனுலக டைந்தார் தென்னன்
இந்திரலோ கம்புகுந்து வீற்றி ருந்தான்
இக்கதையைப் படிப்பவர்கேட் பவர்கள் நல்ல
மைந்தர்மனை வியைப்பெற்று வாழ்ந் திடுக்கண்
மாற்றியக்கத் தானுலகில் மன்னுவாரே

ஆகவிருத்தம் ௫ கீர்த்தனை ௧ ஆக ௬ முற்றிற்று

௭

நாற்பத்தேழாவது:

## கரிக்குருவிக்குஉபதேசஞ்செய்தபடலம்.

அவதாரிகை — விருத்தம்.

ஆண்டவன் வராகச்சேவ கனான பன் னிருவர் தம்மைப்
பாண்டியற் கமைச்சராகப் பண்ணிய துரைத்தேனிப்பால்
வேண்டிய பாரத்துவாச விகங்கத்துக் கருட்கண்ணோக்கம்
பூண்டுமேன் திரோபதேசம் புரிந்தவா றினிச்சொல்வேனே

### கரிக்குருவியின்வரலாறுகூறல்

விருத்தம்

மகாராச ராசபாண் டியனின் னாட்டில்
வாழ்ந்திருந்தான் அவனீன்ற மைந்த னானோன்
தருமான வனபெலத்திற் சிங்கம் போல்வான்
சத்துருவேந் தர்களுஞ்சென் றடுபோர் செய்வான்
சுகுணபாண் டியனெனப்பேர் பூண்டோ னிந்தத்
தொல்லுலகை யாண்டுவரு கின்ற நாளில்
பகவனடி யாரேகேட் பீரென் றன்பு
பரிந்திளைநூர் ஓர்கதையுஞ் சரிக்கின் றாரே.

செஞ்சுருட்டி, ஆதி.

பல்லவி

மாதவத்தைச்செய்யு மாமுனிவோரே கேளும்

அநுபல்லவி.

பூதலத்தொருவன்வெகு புண்ணியமேசெய்தான்முன்னே மா

சரணங்கள்

௧ [illegible] இயற்றியறம் மறந்தான்
ஆனதாற்கரிக்குருவி யாகவந்து பிறந்தான் மா

௨ காகமுதலெவன்போற் கண்டபடி யடிக்கத்
தேகமெங்கும்இரத்தமாகச் சென்னியாலே வடிக்க மா

